# சடகோபன் செந்தமிழ்




பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார்

## எம்பெருமானார்

பிடிக்கும் பரசமயக் குலைவேழம்
பிளிற வெகுண்டு
இடிக்கும் குரல்சிங்க ஏறனையான்
எழுபாரும் உய்யப்
படிக்கும் புகழெம் மிராமா
நுசமுனி பல்குணமும்
வடிக்கும் கருத்தி னர்க்கேதிரு
மாமணி மண்டபமே.[1]

—பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்

1. திருவரங்கக் கலம்பகம்—எம்பெருமானார் துதி.

# சடகோபன் செந்தமிழ்

(ஆசிரியரின் 74-வது அகவை வெளியீடு)

'அருங்கலைக்கோன்' 'ஸ்ரீசடகோபன் பொன்னடி'
பேராசிரியர்
டாக்டர் ந. சுப்புரெட்டியார்
(எம்.ஏ., பி.எஸ்சி., எல்.டி., பிஎச்.டி.)
*தமிழ்ப் பேராசிரியர்—துறைத்தலைவர் (ஓய்வு)*
*திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி*

*விற்பனை உரிமை :*

பாரி நிலையம்
184. பிராட்வே · சென்னை · 600108

முதற்பதிப்பு : அக்டோபர், 1989.


'வேங்கடம்'
AD-13 (பிளாட். 3354)
அண்ணா நகர், சென்னை-600 040
தொ. பே : 61 55 83.

---

பக்கம் : xxxvi+408=444

---

விலை : ரூ. 42.00

VENKATAM PUBLICATIONS
AD-13; Plot No. 3354
Anna Nagar, Madras-600 040
Phone 61 55 83.

---

அச்சிட்டது : கவின்கலை அச்சகம், கந்தசாமி நகர்,
பாலவாக்கம், சென்னை-600041
தொலைபேசி : 41 71 41

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. (குறள்-215)

நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு (குறள்-953)



சொர்ணாவூர் வைகுந்தவாசி
திரு கே. சந்தானம் ரெட்டியார்

*பிறப்பு :*
*ஏப்பிரல்* 6, 1929

*பரமபதித்தது :*
*ஜூலை* 17, 1981

வைணவச் செல்வரும் ஈத்துவக்கும்

இன்பங் கண்டவரும்

வைகுந்தவாசியுமான சொர்ணாலூர்

திரு. கே. சந்தானம் ரெட்டியார் அவர்கட்கு

## அன்புப் படையல்

திங்கள்நேர் முகத்து நாரணன் அருளில்
திளைத்தவர்; திருமகள் அருளால்
மங்கலச் செல்வம் யாவையும் பெற்று
மகிழ்ந்தவர்; நாதயா முனர்போல்
துங்கமார் பண்பால் பிரபந்தம் யாண்டும்
துலங்குறத் தொண்டுசெய் வள்ளல்;
எங்குல தீபம் பொருவில் சந்தான
ஏந்தலார்க் குரியதிந் நூலே.

# சிறப்புப் பாயிர மாலை

'பாவலர் மணி', 'சித்தன்', 'வைணவமணி'
பல் மருத்துவர்
**வித்துவான் மு. இராதாகிருஷ்ணன்**
புதுவை

1. சுகரென்னும் மாமுனிபோல் பிறந்த போதே
   துறந்தவர்நம் சடகோபர்! அவர்தம் ஆற்றல்
   சகந்தனிலே விரித்திடயார் சதுரர்? அந்தச்
   சாமி,உயர் சேனையர்கோன் அவதா ரந்தான்!
   அகந்தனிலே உன்னுதொறும் அமுதம் பெய்யும்
   அரியதமிழ் இவர்தந்தார்! காரி மாறர்
   பகர்ந்ததமிழ் கேட்பதற்கே ஆண்டு தோறும்
   பத்துநாள் ஓதுக்குகிறார் அரங்கத் தண்ணல்!

2. வண்பொருநை யாற்றின்தென் கரையில் வாய்த்த
   வளவயல்சூழ் திருநகரி எனும்பேர் பூண்ட
   தண்குருகூர் நகருறையும் காரி என்னும்
   தவமுடைய நல்லார்க்கும், பொறைக்கோர் சான்றாம்;
   பெண்குலத்துப் புகழ்விளக்கம் உடைய நங்கைப்
   பெருமாட்டி யாரவர்க்கும் உலகம் உய்ய
   மண்ணிலொரு வைகாசிப் பருவ மாக
   மலர்ந்தவிசா கத்திலிவர் அவத ரித்தார்!

3. அவதாரம் செய்தருளும் நாள்தொ டங்கி
   அழுததிலை, முலையுண்ணும் அவதி இல்லை!
   தவராசன் போல்வாட்ட மின்றி, மௌனச்
   சாமியென இவரிருந்தார்! கண்கள் மூடி;
   இவரிருந்த நிலைகண்டே பெற்றோர் உள்ளம்
   எய்தியதாம் துன்பத்தை எழுதல் ஆமோ?
   நவமணியாய்க் குறுங்குடியுள் நின்ற நம்பி
   நல்லருளும் சதேளன் றயர்ந்தார் பெற்றோர்!

4. பொருநைத்தென் கரையினிலே பொலிந்து நின்ற
 பூரணனின் திருவுளத்தை ஏற்றே ஆங்கோர்
திருப்புளியின் கிளையினிலே தொட்டில் கட்டித்
 திருக்கண்கள் விழியாத இவரை வைத்துக்
குருகூர்க்கு விடைகொண்டார் பெற்றோர்! அன்றே
 குவலயம்நல் லருள்பெற்ற பனிரண் டாம்நாள்!
ஒருமுனிபோல் யோகநிலை கூடப் பெற்றே
 உணர்வொன்றிப் பதினாறாண் டிருந்தார் ஐயர்!

5. வடதிசைக்கண் இருக்கின்ற திருக்கோ யில்கள்
 மாண் பெல்லா மறிந்தவற்றை வணங்கச் சென்ற
திடமுடைய மதுரகவி அயோத்தி தன்னைச்
 சேவித்துத் திரும்பிடுமோர் இரவு தன்னில்
கடலெழுந்த பகலவனின் ஒளிபோல் விண்ணில்
 கண்டனரோர் பேரொளியைத் தெற்குத் திக்கில்!
"சுடர்இதுவேன்? காடெரியும் ஒளியோ? அன்றிச்
 சுற்றியுள்ள சிற்றூர்தான் எரியும் தீயோ?"

6. எனவியந்தார்! பின்னிரண்டு மூன்று நாட்கள்
 இவ்வாறே ஒளிகாட்ட "இதுவென்—தேர்வோம்"
எனவெழுந்தார்! இரவெல்லாம் நடந்து பன்னாள்
 எழிலரங்கம் தனையடைந்தார்! அதற்கும் அப்பால்
மனமடங்காப் பேரொளிதான் இருக்கக் கண்டு
 மாமதுர கவிமீண்டும் நடக்க லானர்!
வனம்,ஆறு கடந்தேபின் குருகை சென்றார்,
 மற்றந்த ஒளியங்கே மறைந்த தோர்ந்தார்!

7. ஊரெல்லாம் தேடிப்பின் அனந்தாழ் வானாம்
 உறங்காத புளியின்கீழ் வீற்றி ருக்கும்
மாறர்தம் யோகநிலை கண்(டு) இவர்தாம்
 மானுடரன் றென்றுணர்ந்தார்!அவர்முன் னங்கோர்

சீருடைய கல்லொன்றை இட்டார், கேட்டே
திருக்கண்கள் திறந்தாராம் குருகூர் நம்பி!
நாருடைய மதுரகவி கேள்வி ஒன்றை
நயமாகக் கேட்டவர்பால் ஞானம் பெற்றார்!

8. "செத்தத்தின் வயிற்றினிலே சிறிய வொன்று
சேர்ந்துபிறந் தாலிந்த வையந் தன்னில்
எத்தைத்தின் றெங்கதுவும் கிடக்கும்?" என்ற
இனியதொரு கேள்வியினை விடுத்தார்; மாறர்
"அத்தைத்தின் றங்கேயே கிடக்கும்" என்றே
அருளினரால்! மதுரகவி கேட்டி வர்தாம்
வித்தகரென் றேஓர்ந்தார்! அவர்பொற் றாளில்
வீழ்ந்தடிய ராயவர்க்குத் தொண்டு பூண்டார்!

9. நம்பெருமாள் என்றரங்கர் தம்மைச் சொல்வர்;
நம்முடைய மாறனையும் கற்று வல்லோர்
நம்மாழ்வார் என்கின்றார் உரிமை யோடே!
நன்மகிழ மலர்மாலை சூட லாலே
நம்பிவகு ளாபரணர் என்பர் மேலோர்!
நாயகியாய்ப் பாசுரங்கள் நல்க லாலே
அம்புவியோர் பராங்குசநா யகிஎன் கின்றார்;
அருள்மாறன், சடகோபன் ஐயர் நாமம்!

10. வேதத்தில் ஒன்றான சாம வேத
விரிவுக்குள் சாந்தோக்யந் தன்னில் கண்ட
கோதற்ற "உத்" என்னும் பகுதி தன்னைக்
குலவின்பப் பாட்டாக்கி—மக்கள் உய்யத்
தீதற்ற நெறிகாட்டித் திருமால் காட்டும்
"திருவாய்நன் மொழி"யாக்கித் தந்தே, இன்றும்
ஓது "திரு விருத்த" "மொடாசிரியம்" மிக்கிங்
குயர்ந்த "திரு வந்தாதி" நான்கும் தந்தார்.

11. இவரிடத்துப் பாடல்பெறத் திவ்ய தேசத்
தெம்பெருமான் பலரிவர்முன் காட்சி தந்தார்!
தவமுடையார் அறியாத சித்த சித்தில்
வரனென்னும் தத்துவநன் னெறிவி ளக்கிப்
புவிமுழுதும் வணங்குகிற சோழ நாட்டுள்
புகழ்மிக்கத் திருப்பதிகள் ஐந்தினுக்கும்
கவிதந்தார்! நால்வேதக் சுருக்காய் நிற்கும்
களிதமிழாம் இவர்தமிழும்! மற்று முள்ள

12. பாண்டியநாட் டுப்பதிகள் தம்முள் நம்மின்
பராங்குசரும் பாடியவை பன்னி ரண்டாம்!
நீண்டமலை நாட்டிலுள்ள ஆறி ரண்டு
நிறைபுகழ்கொள் விண்ணகரம் தம்மில் உள்ள
ஆண்டகையும் இவரிடத்துப் பாடல் பெற்றார்!
அடுத்துவரும் வடநாட்டுத் தலங்கள் உள்ளே
பூண்டஎழில் வேங்கடத்தை முதலாக் கொண்ட
புண்ணியநற் றலமைந்தைப் பொலியச் செய்தார்!

13. ஆழ்வார்கள் பதின்மர்களாம்! அவர்க ளுள்ளே
ஆழ்வாரென் றாலிவரைத் தான்கு றிக்கும்!
ஆழ்வார்கள் உறுப்புக்கள் என்னில் இந்த
ஆழ்வாரோ உயிராவர் என்பர் மேலோர்!
வாழ்வாகக் கருதுகிற திருமால் தன்னை
வணங்கிடவேநாம்சென்றால்,"உமக்கு வாழ்வி(கு)
ஆழ்வாரே" என்றவரைத் தூக்கி நாமும்
அருள்பெறவே சடாரியெனத் தலையில் வைப்பார்!

14. ஆதித்தன் ஓர்சுடராம்! அடுத்த தான
அவதார இராகவனாம் பகல வன்தான்!
சோதியெனும் கண்ணனுமோர் கதிர்என் பார்கள்!
சொலுமிந்த மூவர்களும், சடகோ பர்தாம்

மேதினியில் செஞ்சடையராய் எழுந்த பின்னர்
விஞ்சு சடர்முன் மின்மினியாய்ப் பொலிவி ழந்தார்!
ஓதுமவர்க் கேகாத உள்ளி ருள்தான்
உடையநங்கை மகனார்க்கண் டொதுங்கிற் றையா!

15. இங்கிவர்தம் தமிழ்கொண்டே கற்று வல்லோர்
எளிதாக மறைநிலங்கள் தெளிகின் றார்கள்;
தங்கிஅதில் உளநயங்கள், சாத்தி ரங்கள்
தமையெல்லாம் சான்றோர்தம் உரையுள்
கொண்டார்!
இங்கவற்றைப் பாலைப்போல் யாரும் கொள்ள
எளிதாக—இனிதாக—அளித்தா ரெங்கள்
பொங்குபுகழ்ச் சுப்புரெட்டி யாராம் தோன்றல்;
புலமைமிகும் தமிழ்வலவர் இவர்யா ரென்னில்!

16. சிவவாக்ய ரெனும்பேர்கொள் சித்தர் இங்குத்
திருமழிசைப் பிரானாகி, ஆழ்வார் தம்முள்
யுவராச ராய்விளங்கும் தன்மை போல,
உவமையிலா நம்சுப்பு ரெட்டி யாரும்
சிவநெறியி லேநின்றும் விசிட்டாத் வைதச்
செந்நெறியில் ஆழங்கால் பட்டே நின்றார்!
நவமான வைணவநூல் பலவும் தந்த
நற்புலவர் இவர்ப்பற்றிச் சிலசொல் வேனே!

## வேறு

17. நற்றமிழ்த் துறைகள் என்னும்
கடல்களைக் கடந்த நல்லார்!
விற்பனர் வியக்கும் வண்ணம்
விரிவுரை ஆற்றும் சூரர்!
கற்றவர் அவையை நீங்காக்
கல்வியர்! கவிகள் தேரும்
பெற்றியர்! அவைவி ளக்கும்
பெருமையும் பெற்ற சீலர்!

18. “அருங்கலைச் கோன்” என் கின்ற
அரியதோர் பட்டத் திற்கே
உரியவர்! கணமும் சோரா(து)
உழைத்திவர் உயர்வு பெற்றார்!
பொருளினைப் பெரிதென் றெண்ணாப்
புண்ணியர்! உலகம் வாழ
அருளினால் பன்னூல் தந்தார்!
ஆரிவர் திறம்தேர் வாரே!

19. பல்கலை ஆய்ந்து, நூல்கள்
பற்பல தந்து தம்மை
வெல்பவர் இன்றி நிற்கும்
மேன்மையர்! விரிந்த கேள்விச்
செல்வராம் இவரோர் ஆசான்!
செந்தமிழ் இவர்பால் கற்றோர்
நல்லராய் வல்ல ராக
விளங்குவர் நானி லத்தே!

20. கலைகளின் களஞ்சி யத்தைக்
கனிச்சுளை யாக்கித் தந்த
பலகலைச் செல்வர்! நல்ல
பதிப்புக்கள் வரஉழைத் தோர்!
தலைமுறை பலவும் வாழத்
தத்துவம் சமய மோடு
விலைமதிப் பில்லா நூல்கள்
விளக்கமாய்த் தந்த மேலோர்!

21. நஞ்சட கோபர் செய்த
செந்தமிழ் நமக்குத் தேனாய்
விஞ்சிய புலமை யாலே
விரித்தளித் துள்ளார்! அர்த்த

பஞ்சக மான இந்தப்
பண்புநூல் நுணுக்க மெல்லாம்
செஞ்சுடர் எனவி ளக்கம்
செய்துநற் றமிழர்க் கீந்தார்!

22. அகப்பொருள் தத்து வங்கள்,
அகம்கவர் தோழிப் பாக்கள்
தகவுடைத் தாய்ப்பாட் டின்னும்
தண்டமிழ்ச் சுவைகள் பொங்கும்
மக(ள்)அருட் பாட்டு, வேத
மந்திரப் பாடலெல்லாம்
வகையுற உரையிட் டிங்கே
வானமு தாகத் தந்தார்!

23. சித்தசித் தீச னென்று
செப்பிடும் தத்து வங்கள்
புத்தியுள் நிற்கும் வண்ணம்
பொலிவுறக் காட்டி, நங்கள்
வித்தகர் சடகோ பர்தம்
திருவுளம் விளங்க வைத்தார்,
எத்தனை தரம்உண் டாலும்
இனித்திடும் அமுத மொத்தே!

24. "மாசறு சோதி" தன்னில்
மடலெடுத் தினிமை தேக்கும்
பாசுரக் கருத்தை நேர்த்தித்
தமிழினால் பலரும் கொள்ள
ஆசற விளக்கும் சுப்பு
ரெட்டியார் ஆயி ரத்துள்
மீசுர மாக நின்ற
ஒருவராய் மேன்மை உற்றார்!

25. தூதெனில் மாறன் சொன்ன
தூதுதான் தமிழில் மேலாம்!
ஓதுமத் தூதில் காணும்
உள்ளுறை நயங்கள் தம்மைத்
தீதறக் காட்டி, ஞானம்
சிறந்தநல் லனுட்டா னங்கள்
மேத(கு)அப் பறவை தன்னின்
விரிசிற கிரண்டென் கின்றார்!

26. அன்னமும் கிளியும் வண்டோ
டருங்குயில் மயில்கள் பூவை
என்னுமிப் பறவை யெல்லாம
பறவையோ? இல்லை, இங்கே
நன்னயத் தாழ்வார் நாத
முனிக ளாசாரி யர்கள்,
முன்னைய சான்றோர் என்ற
மேலவர் முழக்கம் தானும்

27. இப்புவி மாந்தர் நெஞ்சில்
இடங்கொளும்; யாரும் கொள்ள
ஒப்பிலாச் சடகோ பர்தம்
உளத்தினை—அருங்க லைகோன்
எப்பினில் வைப்பாய் நாட்டுக்
கிந்தவிந் நூலின் மேன்மை
செப்பிடற் குரியன் யானோ
சேடனே விளக்க வல்லான்!

28. கண்ணனைக் குருகூர் வள்ளல்
காதலால் பாடிச் சென்ற
வண்ணங்க ளாயி ரத்தின்
வகைகளை அலசி, யாரும்

உண்ணுதற் கேற்ற நீராய்
உரையிடு ரெட்டி யாராம்
அண்ணலின் புகழிங் காழ்வார்
புகழுள வரையி ருக்கும்!

29. உலைவிலா துழைப்ப தொன்றே
உயர்நெறி யாகக் கொண்டு,
பலகலை நூல்கள் தந்த
பன்மொழிப் புலமை யாளர்
நலமிகு சுப்பு ரெட்டி
யாரெனும் நம்பிக் கிங்கே
''தலையலால் கைம்மா றில்லை''
என்பரே தமிழச் சான்றோர்!

30. பற்பல பரிசு பெற்றார்;
பல்கலைக் கழகத் தார்கள்
விற்பன ரிவருக் கீந்த
மேன்மைகள் எண்ணி லாத!
சொற்றிறம் வல்ல சுப்பு
ரெட்டியா ரென்னும் தோன்றல்
நற்றமிழ் நன்னூ லின்னும்
ஆயிரம் நல்கி வாழ்க!

31. மூச்செலாம் தமிழ்தான் இந்த
மூதறி வாளர்க் கென்பேன்;
பேச்செலாம் இலக்கி யந்தான்!
பிறழ்ந்தொரு நாளும் ஐயர்
''ஆச்செலாம்'' எனஓய்ந் தாரில்!
தமிழ்ப்பயிர்க் கருளும் கங்கைப்
பாய்ச்சலாம் இவரின் தொண்டு!
வாழிய இவர்பல் லாண்டே!

28, இலால் பகதூர் தெரு,
புதுச்சேரி-1
18-7-'89

மு. இராதாகிருட்டிணன்
—'சித்தன்'

# அணிந்துரை

**பேராசிரியர் டாக்டர். தி. வைத்தமாநிதி**
எம்.ஏ., பி.டி., பிஎச்.டி.

'**சடகோபன் செந்தமிழ்**' என்னும் இந்த 'நன்னூல்' பேராசிரியர் டாக்டர் **ந. சுப்புரெட்டியார்** அவர்கள், தமிழ் கூறும் நல்லுலகிற்கு, இப்போது, புதிதாக ஆக்கித் தந்துள்ள ஒன்று. பேராசிரியர் அவர்கள் பயன்மிக்க பல நூல்களை, எழுதிப் பெரும் எழுத்துப் பணியாற்றியுள்ளவர்கள். அவர்கள் தந்துள்ள நூல்கள் தம் பொருளாலும், பொருளைச் சொல்லும் வகையாலும் தரத்தில் உயர்ந்தவை என்ற பாராட்டை அறிஞருலகிடமிருந்து பெற்றவை. அத்தனையும் சிறப்பானவையே. அவர்களது உயர்நிலைப்பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகத் தலைவர் ஆகிய, பேராசியப் பணியில் ஈடுபாட்டோடு, தம்மிடம் பயில்வோரைத் 'திருத்திப் பணி கொண்ட' அநுபவத்திற்கும், தமிழ் இலக்கிய, சமய இலக்கிய நூல்களில், அவர்களுக்குள்ள ஆழ்ந்த புலமைக்கும், தெளிந்த பார்வைக்கும் எடுத்துக் காட்டுகளாக விளங்குபவை. அத்தகைய அறிவு சான்ற பெரியாரின் எழுத்தாற்றல், இப்போது **சடகோபன் செந்தமிழ்** என்ற நூலை மிகுந்த ஆர்வத்துடன் தமிழ் உலகிற்கு அளிக்கின்றது.

**சடகோபன் செந்தமிழ்** பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களது அடிமனத்தில், அநுபவமாகப் பல நாட்கள் படிந்து, படிந்து, அன்னாரின் மனம் முழுவதையும் நிறைக்க முயல்கின்ற வொன்று இலக்கிய ஆக்கம் பெற்று எழுத்து முயற்சியாகிவிட்டது என்றே தோன்றுகின்றது. ஏனென்றால், சைவ மரபினரான அவர்கள் வைணவ நெறி

யின் தலைவராம் 'வேதம் தமிழ் செய்த வித்தகரான'' நம்மாழ்வாரின் பாசுரங்கள் தேக்கித் தரும் இறையநுபவத்திலும் 'ஈரத் தமிழிலும்' மனத்தைக் கொடுத்த அந்தந் தாராளம் இந்த நூலில் பயில்வதைப் பார்க்கின்றோம்.

அவ்வப்போது இந்நூலின் பகுதிகளிலும் அடிக்குறிப்புகளிலும் சடகோபன் வாழ்வோடும் 'மொழி' யோடும் தொடர்புள்ள செய்திகளுக்குச் சைவத்திலிருந்து ஒப்புமை காட்டும்போது இதனைப் புரிந்து கொள்ளுகின்றோம். அந்த ஒப்புமை தரும் முயற்சியின் பின்னால் அவர்களது மனதுக்குள்ளேயே, ஓங்கி வளர்ந்துள்ள ஒரு சிந்தனை,

> ''வைணவத்தில் இந்த நிலையும், அதைச் சொல்லும் தமிழ்ச் சுவையும் வேறோர் ஒப்பின்றி உயர்வது போலுள்ளதே!'' என்பது.

அவர்கள் நூலின் தொடக்கத்திலிருந்து முடிவுவரை, இந்த உணர்வு நிலைபெற்றிருக்கின்றது. அதனால்தான் அவர்கள் நம்மாழ்வாரின் வாழ்க்கை வரலாற்றை நூலின் முதல் இயலாகத் தந்துள்ளார்கள். ஆங்கே, வழிவழியாக வந்துள்ள செய்திகளையும், தலபுராணச் செய்திகளையும் ஏற்றுக் கொண்டு, அவற்றின் ''புராணிகத் தன்மை'' வாயிலாக (Mystical quality and language) வலியுறுத்தப் பெறும் என்றுமுள உண்மைகளை இனங்காண முயல்கின்றார்கள். T.S. எலியட் என்ற மேனாட்டு அறிஞர் 'Myth is the emotional equivalent of Philosophy' என்று குறிப்பிடுவார். அதன் பொருளும் இந்த நிலையில் தெளிவாகின்றது. அதிலிருந்து தொடங்கும் சடகோபன் செந்தமிழ் பதினைந்து இயல்களாக, தம் நோக்கான நம்மாழ்வாரையும் அவர் தாயாக விளங்கி ஈன்ற தமிழ் மறையையும் ஒரு சேர இணைத்துப் பயில்கின்ற முயற்சியை எடுத்துக்காட்டி நிறைவு செய்கின்றது. அதனோடு கூட இலக்கியத்திற்கும் சமயத்திற்கும் உள்ள பிரிக்க இயலாத உறவினைக் காட்டும் வகை

யிலும், இந்நூல் நம்மாழ்வாரின் பக்தியில் விளைந்த பாசுரங்களை விளக்குகின்றது. ஆக, இந்தப் பார்வையில் வழிவழியாக வைணவ நெறி பேணி வரும் அடிப்படையை இலக்கிய வழியாக்கி, நூல் உருவாகியிருப்பதை உணரலாம். இதைச் சற்றே விளக்க விரும்புகின்றேன்.

வைணவநெறி நிற்போர் 'பிரமாணம்' (ஆதாரம்), பிரமேயம் (சொல்லப்படும் பொருள்), 'பிரமாதா' (ஆதாரம் கொண்டு பொருளை அளந்தறிபவன்) என்ற மூன்றம்ச அடிப்படையில் தம் கொள்கைகளை வகுத்துக் காட்டுவர். அதன்படி, தென்புலத்து வைணவ நெறியில் அடிப்படைச் சட்டம், தமிழ் வேதங்களான திவ்வியப் பிரபந்தங்களே. அவற்றிற்கு இந்நெறியினர் அளித்துள்ள தமிழ் இலச்சினையே ''அருளிச் செயல்கள்'' என்ற பெயர்.

ஒரு காலம் செல்வாக்கோடு எல்லா நிலைகளிலும் பயன் பெற்றுப் பின், சில காலம் மறைந்த அல்லது விடுபட்ட தமிழ் மறைகளை மறுபடியும் தம் நிலையில் குறைவில்லாமல் வடமொழி மறைக்கு மேலாகப் பயன்படும்படிச் செய்தவர் மணவாள மாமுனிகள் என்ற ஆசாரியர். ''இம்மணவாள மாமுனிவன் தோன்றாவிடில் ஆற்றில் கரைத்த புளியலவோ தமிழ் ஆரணங்கள்'' என்று வைணவத் தமிழ்ப் பக்தியுலகு பெருமையோடு கேட்கும். அந்த மாமுனிகளின் மங்களா சாசனத்தினை — வாழ்த்தினைப் — பலமாக்கிக் கொண்டன அருளிச் செயல்கள். மாமுனிகளின் குரல் வாழ்த்தியது:

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாதுமில் குரவர் தாம்வாழி — ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி!
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

ஆக, அருளிச் செயல்களே, அவை தோன்றிய காலத்திலிருந்தே தென்புலத்து வைணவ நெறியின் பிரமாணம் (ஆதாரம்) ஆயிற்று.

ஆழ்வார்கள் அனைவருமே அர்ச்சாவதாரத்திலே ஈடு பட்டவர்கள். திருக்கோயில்களில் உறையும் உருவத் திருமேனியே அவர்களுக்கு எல்லா இறைநிலையுமாகத் திகழ்கின்றது. பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை ஆகிய ஐந்து நிலைகளையும் திவ்வியப் பிரபந்தங்கள் பேசினாலும், அவற்றின் விசேஷ நோக்கு அர்ச்சாவதாரமே என்று ஆசாரிய ஹிருதயம் என்ற தத்துவ நூல் அறுதியிடும். ஆக, அர்ச்சாவதாரத்தின் நிலைக்களங்களான திருக்கோயில் கள் கண்டுள்ள திவ்விய தேசங்களின் பெருமையைப் பேசுவதே, அருளிச் செயல்களின் பெருமையாகின்றது. அத்திவ்விய தேசங்கள் அல்லது திருப்பதிகள் இந்நெறியின் **பிரமேயம் (சொல்லப்படும் பொருள்) ஆயின.**

அருளிச் செயல்களையும் திருக்கோயில்கள் திகழும் திவ்விய தேசங்களையும் ஒன்றாகவே பரவிப் போற்றிய ஆசாரியர்கள் 'பொலிக, பொலிக' என்ற திருவாய்மொழி யில் (5,2) நம்மாழ்வார் திருவாக்கு கூறுவதுபோல "கடல் வண்ணன் பூதங்களாகப் பொலிந்து வியாக்கியானங்களை ஆக்கித் தந்து, ஆழ்வார்களுடன் சேர்ந்து **பிரமாதாக்கள்** (ஆதாரத்தில் நின்று பொருளை அளந்து ஆய்பவர்கள்) ஆயினர்.

'பிரமாணம்', 'பிரமேயம்', 'பிரமாதா' என்ற மூன்றம்சம் கொண்ட வைணவ சமயநெறிக் கொள்கையை அப்படியே இலக்கியத்தோடு சமயம் பக்தி வழியில் கண்ட உறவாக்கிச் **சடகோபன் செந்தமிழ்** நூலில், பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் விளக்குகின்றார்கள். அந்த விளக்கம் கம்பநாட்டாழ்வாரின் 'சடகோபரந்தாதி' நூலின் ஒரு பாசுரத்தின் பொருளை அப்படியே விரிவாக்கியது போலத் திகழ்கின்றது. பாடல் இதுதான்:

அந்தமி லாமறை யாயிரத்
  தாழ்ந்த அரும்பொருளைச்
செந்தமி ழாகத் திருத்தில
  னேல்நிலத் தேவர்களும்
தந்தம் விழாவும் அழகும்என்
  னாம்?தமி ழார்கவியின்
பந்தம் விழாஒழு கும்குரு
  கூர்வந்த பண்ணவனே(25)

திருக்குருகூர் பண்ணவன், புனிதன், சடகோபன் வேதங் களின் அருமையான சாரத்தை மிகச் செவ்விய தமிழ்ப் பிரபந்தமாகச் சீர்செய்து அருளினார். அஃதின்றேல் கோயில்களில் ஓதுவதற்குரிய "நித்திய நைமித்திக" விழா சிறப்பிற்கான பாஞ்சராத்திர சாத்திர சம்பந்தமான அருளிச் செயல்கள் கிடைக்காவே!

இச்சடகோபரந்தாதிப் பாடல் அறுதியிடுவதுபோல், சடகோபன் அருளிய அனைத்துப் பாசுரங்களும் சாத்திரத் தகுதியுடையனவே. இன்னும் வைணவத் திருக்கோயில் களில், குறிப்பாக ஆழ்வார் திருநகரி, திருவரங்கம், ஸ்ரீவில்லி புத்தூர் ஆகியவற்றில் திவ்வியப் பிரபந்தங்கள் "நித்திய நைமித்திகங்களில்" சிறப்பான இடம் பெற்றுத் திகழ்கின் றன. இவற்றிலுள்ள தோத்திரப் பகுதியும்கூட, மற்றைய சமய, தோத்திரப் பாடல்களிலிருந்து வேறுபட்டு, பாடல் களைப் பாடுவோர் — 'சேவிப்போர்' — நிலையில், அவர் களது ஆன்மாநுபவத்தையும் அவற்றில் கலந்து வரும் நிலையில், சாத்திரமாகிவிடும் தகுதி பெறுகின்றன. பக்திப் பனுவல்களின் ஏற்றமே, அவற்றைப் பயில்வோர் அந்தப் பாடல்களில் தோயும் அநுபவமாகும். மேனாட்டு அறிஞர் நார்மன் கட்லர் என்பார் தமது நூலில்[1] இந்தப் பாங்கினை

1. Norman Cutler: *Songs of Experiences: The Poetics of Devotion.* pp 10-11

அருமையாக விளக்கி இப்பாடல்கள் தம் ஒலித்தொகுதியினால், இசையின் தன்மையினால், பொருளைத் தவிர்த்தும் கூட பயன்தர வல்லவை என வைணவ உலகு கருதி வந்து பயன்படுத்தும் முறையை நுட்பமாகக் காட்டுகின்றார்.

ஆக, சடகோபரின் செந்தமிழ் என்பது திருந்திய வேதமே. குறையறிவுடையோரால் கலக்கப் பெற்ற 'சுருதி', நல்ஞானத் துறை சேர்ந்து, தெளிவுற்று ஆழ்பொருளைக் காட்டுகின்றது என ஆசாரிய ஹிருதயம் என்ற நூல் எடுத்துக் காட்டுவதும், சடகோபரந்தாதி குருகூர்ப் பண்ணவன் விளைத்த தமிழ் வேதத்தின் திருந்திய செந்தமிழ் எனப் போற்றுவதும் எவ்வளவு பொருத்தம் என்பதன் விளக்கமாகின்றது நம் பேராசிரியர் அவர்களது நூல்.

பேராசிரியரின் இந்நூலில் முதல் ஐந்து இயல்கள் முன்னர் விளக்கிய 'பிரமேய'த்தைப் பற்றியலவ. அதாவது அங்குச் சொல்லப்படும் பொருள், திவ்விய தேசப் பெருமை, நம்மாழ்வார் பாடல் பெற்று மங்களாசாசனம் பெறும் திருப்பதிகளே முதலிலே விளக்கம் பெறுகின்றன. திருவரங்கம் தொடங்கி — சோழ, பாண்டிய, மலைநாடு, வடநாடு — உள்ளிட்ட ஆழ்வார் மங்களாசாசனம் பெற்ற முப்பத்தாறு திவ்விய தேசங்களைப் பற்றியவை. சில எடுத்துக்காட்டுகளையே தந்து, ஆழ்வார் அந்தந்தத் திருப்பதி எம்பெருமானிடம் கொள்ளும் உறவினையும், ஈடுபாட்டினையும், அவர் பாசுரம்வழி நம் அநுபவமாக மாற்றும் அற்புதம் எப்படி நிகழ்கின்றது என்று பேராசிரியர் அவர்கள் விளக்குகிறார்கள்.

அவர்களது விளக்கத்திற்குத் துணை நிற்பன பெரிய வாச்சான் பிள்ளை, நம் பிள்ளை ஆகியோரின் வியாக்கியானங்களும் 'ஆசாரிய ஹிருதயம்', 'ஸ்ரீவசனபூஷணம்' 'முமுட்சுப்படி' போன்ற இரகசிய கிரந்தங்களையும் வழங்கப்படும்

தத்துவ நூல்களும், நேற்று வரை நம்மிடையே வாழ்ந்து பெரும் சமயப் பணியாற்றிய பிரதிவாதி பயங்கரம் அண்ணங் கராச்சாரியார் சுவாமிகளது திவ்வியார்த்த தீபிகை உரையும் ஆகும். இவை தவிர, பேராசிரியர் தமக்கே உரிய ஆழ்ந்த தமிழ்ப் புலமையையும், காட்டி — தொல்காப்பியம், திருக்குறள், ஒரு சில இடங்களில் கம்பராமாயணம் — ஆகிய வற்றிலிருந்தும் ஆதாரங்கள் தந்து, சடகோபன் செந்தமிழ் ஆற்றலை எடுத்துக்காட்டுகிறார்கள்.

பேராசிரியர் இப்பாசுரங்களை வியாக்கியானங்கள் உதவியினால் விளக்கும்போது, அவர்கள் உள்ளம் தோய் கின்ற படியை, விரிவஞ்சி, இரு எடுத்துக் காட்டுகளால் சுட்டுவேன்.

பாண்டி நாட்டுத் திருப்பதிகளில் திருப்புளிங்குடி எம் பெருமானிடம் ஆழ்வாரின் அநுபவத்தை விளக்கும்போது (பக் 69, 70, 71) "உன்தாமரைக் கண்களால் நோக்காய்" என்ற சொற்களில் பொருள் தரும் இடம் சிறப்பானது. அங்கேயுள்ள அடிக்குறிப்பும் (குறிப்பு-20) பேராசிரியர் எவ்வளவு அநுபவிக்கின்றார் என்பதைக் காட்டும். இப்படிப் பல சந்தர்ப்பங்களில் இந்த வியாக்கியானங்களிலும், பாசுரங் களிலும் ஈடுபட்டு, தாம் விளக்க முற்படும்போது, வைணவத் திற்கே உரிய கலைச் சொல்லைப் பயன் கொள்கின்றார்கள். எப்படி? இப்போது நாம் இந்தப் பாசுரங்களின் பொருளில் 'ஆழங்கால் படுவோம்' என்று கூறித்தான்!

'அருளிச் செயல்கள்' 'அகப்பொருள் தத்துவம்', 'தோழி', 'தாய்', 'மகள்' பாசுரங்கள் என்ற தலைப்புகளில் 6 முதல் 10-வது முடிய ஐந்து இயல்களில் வைணவ நெறியின் 'பிரமாணம்' என்ற அம்சத்தின் விளக்கமாகத் தருகின்றார்கள்.

'அருளிச் செயல்கள்' என்று தலைப்பிட்ட இயலில் நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களின் சாராம்சத்தைத்

தந்து, அவை வேதப் பொருளின் வடிவமே என்று வியாக்கியா னங்கள் காட்டும் உண்மையை உணர வைக்கின்றார்கள். பேராசிரியர் அவர்கள் முதல் இயலில், நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களும் எண்ணிக்கை அளவில் நான்கு வேதங்களுடன் சமதையாகக் காட்டப்படுகின்றனவேயன்றி அந்தந்த வேதக் கருத்துகள் எப்படி நம்மாழ்வாரின் அந்தந்தப் பிரபந்தங்களில் கிடைக்கின்றன என யாரும் தொகுத்துத் தரவில்லை என்று குறைப்படுகிறார்கள். ஆனால், ஆறாவது இயலிலிருந்து, பதினைந்து முடிய இவர் கள் பயன்படுத்தும் வியாக்கியான மேற்கோள்களிலேயே வேதம் குறிப்பிடும் மெய்ப்பொருள் இலக்கணங்களும் விளக்கங் களும் பயில்வதைப் பார்க்கின்றோம். அதனால்தான் அந்த மெய்ப்பொருள் உறவினைச் சங்ககாலத் தமிழின் அகத் துறைப் பொலிவோடு 'அகப்பொருள் தத்துவம்', 'தாய்', 'தோழி', 'மகள்' பாசுரங்கள்'' என்ற இயல் விளக்கங்களில் பேராசிரியர் அவர்களே சமயப் பொருள் அற்புதமான இலக்கியப் பொருளாகி மனித அநுபவமாகத் தரப்படு கின்றதை அறிகிறோம். தவிர, பேராசிரியரின் நூலில் ''இயல்கள்'' என்றே குறிப்பிடுவது ''குருகையர்கோன் யாழினிசை வேதத்தியல்'' என்பதன் எதிரொலிதானே! வடமொழி ஞானம பெரிதும் நிரம்பிய சுவாமி தேசிகன் 'திருவாய்மொழி தெளியவோதி தெளியாத மறை நிலங்கள் தெளியக் கண்டோம்' என்றே சான்று பகர்கின் றார். நூலிலிருந்து ஒருசில சான்றுகள்:

> ''ஆழ்வார்கள் தாமான தன்மையை விட்டுப் பெண் பாவனையை ஏறிட்டுக் கொள்ளுதல் எற்றுக்கு? என்ற வினா எழுகின்றது......ஆழ்வார் கள் பெண் தன்மையைத் தாமாக ஏறிட்டுக் கொள்கின்றாரல்லர். இந்த நிலை (அவஸ்தை) தானே பரவசமாக வந்து சேருகின்றது. புருடோத்

தமனாகிய எம்பெருமானின் பேராண்மைக்கு முன் உலகம் அடங்கப் பெண் தன்மையதாக யிருக்கை யாலும் சீவான்மாவுக்குச் சுவாதந்திரிய நாற்றமே யின்றி பாரதந்திரியமே வடிவாயிருப்பதாலும், இவ்வகைகளுக்கேற்பப் பெண் பாவனை வந்தேறி யன்றே என்று கொள்ளலாம்......ஆழ்வார் பெண் தன்மை யெய்திப் பல திருக்கோயில் எம்பெருமான் களைப் பாடி அநுபவித்ததை அவர்களுடைய திருப் பாசுரங்களில் கண்டு மகிழலாம்'' (பக்.184).

...........இங்ஙனம் ஆழ்வார்கள் பெண்மை நிலையிலிருந்து கொண்டு எம்பெருமானை அநுபவிக் கும்பொழுது, அவர்கள் தோழி, தாய், மகள் என மூவருள் ஒருவரின் தன்மையைத் தாம் அடைந்து கூற்றுகள் நிகழ்த்துவர்'' (பக். 185) இந்தக் கொள்கையினைத் தரும் ஆசாரிய ஹிருதய ஆதாரம்: ''சம்பந்த உபாய பலன்களில் உணர்த்தி துணிவு, பதற்றம் ஆகிய பிரஜ்ஞாவஸ்தைகளுக்குத் தோழி, தாய், மகள் என்று பேர்'' (சூரணிகை 133). சுவாமி தேசிகனும் இதையே ''பக்தி சிருங்கார வித்யா என்பர்'' எனப் பூருவர்கள் எடுத்துக் கொள்வர்.

இந்த ஆதாரத்தில் உள்ள சொற்களையும், பொருளை யும் விளக்கும் வகையிலும் ''தாய், தோழி, மகள் பாசுரங்கள்'' பற்றிய இயல்களை நம் பேராசிரியர் அவர்கள் எழுதியுள்ளார்கள். அவற்றின் எளிமையே, அவரது பெரிய வெற்றி. ஏனென்றால், சமய நெறியின் தத்துவப் பொருளை விளக்கும்போது பலரும் கருத்தியமாகச் சொல்லிப்போவர் பேராசிரியர் அவர்கள் கருப்பொருளையே பருப்பொருளாகக் காட்டுவதுபோல வியாக்கியானங்களின் துணையோடு அருமையாக இந்த இயல்களை ஆக்கியுள்ளார்கள். இந்த

இயல்களில் பகவத் பக்தியாகின்ற பகவத் காமமே பரம புருஷார்த்தம் என்று ஆழ்வார்கள் பாசுரங்கள் மெய்ப்பிப்பதை எடுத்துக் கொள்கிறார்கள். இதைத்தானே,

''சொல்லார்தமிழ் ஒருமூன்றும் சுருதிகள்
நான்கும் எல்லை
இல்லா அறிநெறி யாவும்
தெளிந்த (இரா. நூற். 44)

என்று உடையவர் (இராமாநுசர்) அறுதியிட்டார் என்று திருவரங்கத் தமுதனார் பாடுவார்!

'சேமநல் வீடும், பொருளும்!
தருமமும், சீரியநல்
காமமும் என்றுஇவை நான்குஎன்பர்
நான்கினும் கண்ணனுக்கே
ஆம்அது காமம்' (ஷ-40)

என்றும் நிலை நாட்டினார். தவிரவும், பக்வத் பக்தியாகிற 'இன்பம்' என்ற பரம புருஷார்த்தம் ஒன்றுதான் வழியாக வும், பயனாகவும் இருக்க இயலும். மற்றைய புருஷார்த் தங்களைத் தம்தம் படிநிலைகளில் பயன்களாகவே கொள்ள இயலும். பேராசிரியர் இப்பகுதி இயல்களில் மிகச் சிறப்பான விளக்கங்கள் தந்துள்ளார்கள்.

இயல் 11லிருந்து 15முடிய ஐந்து இயல்களில் ஆழ்வார் களும் ஆசாரியர்களும் பிரமாதாக்கள் என வழங்கப்பெறும் தகுதி விளக்கம் பெறுகின்றது. ''மணிவல்லிப் பேச்சான'' திருவிருத்தத்தில் நம்மாழ்வார் ''விண்ணோர் பிரானார் மாசில் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே'' (54) என்று கூறும் சொற்களை நினைவூட்டி, 11-ஆம் இயலில் மகள் பாசுரங்களில் தூதுபற்றியவையாக வருபவற்றை விளக்கி, பிரமாதாக்களின் வடிவத்தினைப் பொருத்தமாகப் பேசு கிறார் பேராசிரியர். இறைநிலை (பரம், வியூகம், விபவம்,

அந்தர்யாமி, அர்ச்சை) தூது நடைபெறுவதை நம்மாழ்வாரின் பாசுரங்களில் நிகழும் நாடகமாகவே படம் பிடித்துக் காட்டுகின்றார். 12-வது இயலான "இறையநுபவம்" பேராசிரியர் ரெட்டியார் அவர்கள் நம்மாழ்வார் பிரபந்தங்கள் அனைத்தின் சாரத்தைப் பிழிந்து ஆழ்வாரின் பிரபத்தியையும் இன்ப, துன்பங்கள் மன, உடல் நிலைகளில் பரிமாற்றமாவதின் தன்மையையும், உயிரின்கண் உண்டாகும் இன்பம் எது என்றும் காட்டுகின்றார்கள். இந்த இடத்தில் திருவள்ளுவரின் இரு குறள்களைச் (621, 630) சுட்டி, 'அவர்' என ஆழ்வார் குறிப்பிடும் நிலையின் இலக்கணத்தை, நயமாக எடுத்துரைக்கின்றார்கள்.

பேராசிரியர் அவர்கள் நூலில், 6-வது இயலிலிருந்து அவர்களது விளக்கங்கள் வளர்ந்து கொண்டே வந்து, 13, 14, 15-வது இயல்களில் கனமும முழு வளர்ச்சியும் பெற்றுத் திகழ்கின்றன. அவைதாம் 'அர்த்த பஞ்சகம்' 'தத்துவத் திரயம்', 'மந்திரங்கள்' ஆகிய மூன்று இயல்கள். இறைநிலை, உயிர்நிலை, தக்க நெறி, தடையான ஊழ்வினை, வாழ்வினையாகிய வீடுபேறு — இவற்றை 'அர்த்த பஞ்சகம்' என்று வைணவநெறி பேசும். திருவாய்மொழிப் பாசுரங்களின் அடிகளைக் கொண்டே இவையனைத்தையும் சுட்டிக் காட்டுகின்றார் பேராசிரியர். இந்த இயலின் முடிவில், தம விளக்கத்திற்கு அரண் செய்யும் வகையில் பேராசிரியர் குறிப்பிடுகின்றார்:

> "... ...வேதங்கள், இதிகாச புராணங்கள், மகாத்மாக்கள், முனிவர்கள இவர்களின் கருத்துகள் இவற்றில (அர்த்த பஞ்சகம்) அடங்கியுள்ளன என்றும, இவையே திருவாய்மொழிக்கே வியாக்கியானார்த்தமாக அமைந்துள்ளன என்றும் பெரிய வங்கிபுரத்து நம்பியும் அருளிச் செய்வர்" (பக்.359-60) என்று.

தத்துவம், இதம், புருஷார்த்தம் என்று குறிக்கப்பெறும் தத்துவத்திரயத்தினை (திரயம்-மூன்று) திருவாய்மொழிப் பாசுரங்கள் சில கொண்டே நுட்பமாகப் பொருள் சொல்லி தெளிவாக்குகின்றார் பேராசிரியர். "நின்ற ஒன்றை உணர்ந்தேனுக்கு" என்ற திருவாய்மொழி (8 8:5) யில் ஆழ்வாரின் அநுபவத்தைப் படம் பிடித்துத் தருகின்றார். அதற்கு ஒத்த தைத்திரிய உபநிடதப் பொருளையும் நினைப் பூட்டுகிறார்கள் (பக் 363-64). இப்படித்தான் எம்பெரு மானார் அருமைப்பாட்டோடு விளக்கும் உயிர்-உடல் உறவினையும் (சரீர-சரீரிபாவனை) அறிவு மயமான ஆன்மா அறிவுக்கு இருப்பிடமாகும் படியைத் தெளிவதான "தர்ம பூதஞானம்" என்ற கொள்கையினையும் அற்புதமாகத் தெளிவாக்குகின்றார் பேராசிரியர் இந்த இயலில்.

பதினைந்தாவது இயல் 'மந்திரங்கள்' என்பது, நம்மாழ் வாரின் நான்கு பிரபந்தங்களுமே வைணவ நெறி மிக உயர் வாகப் பேணும் மூன்று தலையான மந்திரங்களான திரு மந்திரம், துவயம், சரமசுலோகம் ஆகிய மூன்றையும் எப்படி உள்ளடக்கிக் காண்பிக்கின்றன என்று எடுத்துக் காட்டு களுடன் பேராசிரியர் சுருக்கமாக, ஆனால் விளக்கமாக, முந்தைய இயலொன்றில் ஆன்மாவுக்கு இறைவனிடம் உள்ள சம்பந்த ஞானத்தை — நவவித சம்பந்தமாகக் கூறும் முறையை — நினைவூட்டும் வகையில் அருமையாகத் தந்துள் ளார்கள்.

நம்மாழ்வார் பேசுகின்றார்:

> தேனும் பாலும் கன்னலும்
> அமுதும் ஆகித் தித்திப்ப
> யானும் எம்பி ரானையே
> ஏத்தினேன்; யான்உய்வானே (திருவாய் 4 3:10)

என்று.

> "..................
> எவையும் எவரும் தன்னுள்ளே
> ஆகியும் ஆக்கியும் காக்கும்
> அவையுள் தனிமுதல் எம்மான்" (திருவாய் 1.9;1)

"..............தான் தோன்றி
முனிமாப் பிரம முதல்வித்தாய்
உலகம் மூன்றும் முளைப்பித்த
தனிமாத் தெய்வம்" (திருவாய் 8-10:7)

ஆகிய திருமால் "என் நெஞ்சு நிறையப் புகுந்து" "தன் சொல்லால் தான்தன்னைக் கீர்த்தித்த மாயன்" என்று ஆழ்வார் அழுத்தமாகக் கூறுகின்றார்! ஆழ்வாரின் "நெஞ்சத்துஉள்ளிருந்து இருந்தமிழ்நூல் இவை மொழிந்தது" அவனே என்று ஆழ்வார் பேசுவதுபோல் பேராசிரியர் ரெட்டியார் அவர்களும் நம்மாழ்வாரைத் தம் நெஞ்சத்தில் நிறுத்தி "ஆவி அகமே தித்திப்பாய்" என்று அவர் திருமாலைக் குறித்துச் சொல்வது போலவே சொல்லி **சடகோபன் செந்தமிழ்** என்ற இந்த நூலைத் தமிழுலகிற்கு மறக்க இயலாத படைப்பாக்கித் தந்துள்ளார்கள். ஆழ்வாரின் 'அகம் தித்திக்கும்' அநுபவத்தை நமமுடைய அகத்தில் தித்திக்கும் அநுபவமாக மாற்றுகின்றது நூல். இது, இந்த நூலின் சிறப்பான வெற்றி.

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களது இந்த நூலுக்கு அணிந்துரை எழுதும் தகுதி அடியேன்பால் ஏதும் இல்லை. என் பேராசிரியரான அ சீநிவாசராகவன் அவர் களிடம், தாம் கொண்டுள்ள அன்பாலும், மதிப்பாலும் எளியேனை இந்த நூலின் முதல் பயில்வோனாக இருந்து பயன்பெறப் பணித்தார்கள். அந்த அநுபவத்தையே அணிந்துரையில் சில சொல்ல முயன்றேன்; அவ்வளவே. ஆழ்வார் திருநகரியில் பிறந்து வளர்ந்த என்போன்ற ஒரு தமிழனுக்கு **சடகோபன் செந்தமிழ்** இனிப்பினை நுகர்வது உகப்புத்தானே! பேராசிரியர் அவர்களுக்கு அடியேன் செய்வ தெல்லாம் எனது வணக்கங்களே.

இந்த நூலைத் தமிழ்கூறு நல்லுலகம் நன்கு வரவேற்கும். எல்லாரும் பயிலலாம்; இவ்வின்பத்தை உறுதுயாகத் துய்க்க லாம். அதுவே சடகோபனின் இனிமை என்று கூறி அமை கின்றேன்.

ஆழ்வார்திருநகரி
24-9-1989.

அன்பன்,
தி. வைத்தமாநிதி

# நூல் முகம்

மறைப்பாற் கடலைத் திருநாவின்
    மந்தரத் தாற்கடைந்து
துறைப்பாற் படுத்தித் தமிழா
    யிரத்தின் சுவையமிர்தம்
கறைப் பாம்பணைப் பள்ளியான் அன்பர்
    ஈட்டம் களித்தருந்த
நிறைப்பான் கழலன்றிச் சன்ம
    விடாய்க்கு நிழலில்லையே[2]
—பிள்ளைப்பெருமாள் அய்யங்கார்

பன்னிரண்டு ஆழ்வார்களைப்பற்றியும் அவர்களின் அருளிச் செயல்கள் பற்றியும் எளிய நடையில் நூல்கள் எழுதிப் பொதுமக்கட்குப் பக்தி விருந்தளிக்க வேண்டும் என்ற என்பேரவா நிறைவேறும் பாங்கில் 'சடகோபன் செந்தமிழ்' என்ற தலைப்பில் நம்மாழ்வார்பற்றியும் அவர்தம் அருளிச் செயல்களை விளக்கும் பாங்கிலும் இது ஐந்தாவது நூலாக வெளிவருகின்றது.

இந்தநூல் பதினைந்து இயல்களாக அமைந்துள்ளது, முதல் இயல் ஆழ்வாரின் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாக உரைக்கின்றது. இரண்டு முதல் ஐந்து இயல் முடிய உள்ள இயல்கள் ஆழ்வார் முறையே சோழநாடு, பாண்டி நாடு, மலைநாடு, வடநாடு ஆகியவற்றிலுள்ள சில திவ்விய தேசங்களை மங்களாசாசனம் செய்ததைக் குறிப்பிட்டுப் பாசுரவிளக்கமும் தருகின்றன. ஆறாம் இயல் ஆழ்வார்களின் அருளிச் செயல்களைப்பற்றிச் சுருக்கமாக விளக்கம்

2. திருவரங்கக் கலம்பகம்—நம்மாழ்வார் துதி

தருகின்றது. ஏழாவது இயலில் ஆழ்வார் பாசுரங்களில் அமைந்துள்ள அகப்பொருள் தத்துவம் விரிவாக விளக்கப் பெறுகின்றது. எட்டாவது, ஒன்பதாவது பத்தாவது இயல் கள் திருவாய்மொழியிலும் திருவிருத்தத்திலும் அமைந்த தோழி, தாய், மகள் பாசுரங்களின் தத்துவத்தை விரிவாக விளக்குகின்றன. பதினொராவது இயலில் ஆழ்வாரின் தூது பாசுரங்கள் விளக்கம் பெறுகின்றன. பன்னிரண்டாவது இயலில் ஆழ்வாரின் இறையநுபவம் காட்டப்பெறுகின்றது. பதின்மூன்றாவது, பதினான்காவது, பதினைந்தாவது இயல் களில் முறையே வைணவதத்துவங்களாகிய அர்த்த பஞ்சகம், தத்துவத்திரயம், மந்திரங்கள் ஆழ்வார் பாசுரங்களின் அடிப் படையில் விளக்கம் பெறுகின்றன. பின்னிணைப்புகள் மூன்றும் நூலுக்குத் துணையாக அமைந்துள்ளன.

திருப்பதித் தமிழ்ப்பணியிலிருந்து ஓய்வு பெற்று 1978 சனவரி 14ஆம் நாள் சென்னையில் குடியேறியதிலிருந்து 'தேனாய், கன்னலாய், அமுதாய்'த் தித்திக்கும் ஆழ்வார் களின் பாசுரங்களை 'வாசித்தும் கேட்டும் வணங்கி வழி பட்டும், பூசித்தும் போக்கினேன் போது' (நான். திருவந் 63) என்றவாறு என் காலம் கழிகின்றது. என் ஆராய்ச்சியின் போது ஆழங்கால் பட்ட பாசுரங்களை மீண்டும் மனத்தில் இருத்தி அசைபோடுவதற்குப் பெற்ற வாய்ப்பின் காரணமாக இந்நூல் வெளிவருகின்றது. என் அநுபவம் இப்பனுவலைப் படிப்போரிடமும் ஏற்படுமானால் அதனை யான் பெற்ற பெரும் பேறாகக் கருதுவேன்.

தமிழகத்தில் சுமார் இருபது ஆண்டுகளும் ஆந்திரத்தில் சுமார் இருபது ஆண்டுகளும் பணியாற்றி ஓய்வு ஊதியம் கூடப் பெறாது தவிக்கும் அடியேனுக்கு ஏழுமலையான் ஓரளவு நிதி வழங்கி (நூலின் முட்டுவழியில் சுமார் 50% விழுக்காடு) உதவி புரிந்திராவிடில் இந்நூல் அச்சுவாகனம் ஏறிக் கற்போர் கரங்களில் கவினுறத் தவழ்வதற்குவாய்ப்பே

இருந்திராது. 'செல்வர்க்கு அழகு செழுங்கிளை தாங்குதல்" என்று பேருண்மையை அறிந்து செல்வச் சீமானாகத் திகழும் ஏழுமலையான் 'அகலகில்லேன் இறையும்' என்று அவன் திருமார்பை விட்டு அகலாதிருக்கும் செல்வச் சீமாட்டியைத் தாங்கிக் கொண்டிருப்பவன். இந்நிலையில் நாடோறும் எண்ணற்ற பக்தர்கள் அவனுடைய கருவூலகத்தை நிரப்பி வழியச் செய்து கொண்டுள்ளனர். இந்த உறுபெறுஞ்செல் வத்தை அவன் அடியார்கள்பற்றியும் அவனைப் பற்றியும் எழுதப் பெறும் நூல்கட்கு வரையாது வழங்கும் நிதி உதவித் திட்டத்தில் இந்நூலும் நிதி உதவிபெற்று வெளிவருகின்றது. இந்த 'வேங்கடம் மேவிய விளக்கு' தாயுமான அடிகள், பரகாலன் பைந்தமிழ், வடலூர்வள்ளல், பட்டினத்தடிகள் முதலான பக்திப் பனுவல்கட்கும் நிதி ஒளி காட்டி அவற்றை அச்சேறச் செய்வான் என்ற நம்பிக்கை என்பால் உண்டு. இவனது கருவியாக இயங்கிவரும் திருமலை திருப்பதி தேவஸ் தானத்தாருக்கும் குறிப்பாக திரு I.L.N. சாஸ்திரி திரு K. சுப்பாராவ், திரு N.S. இராமமூர்த்தி ஆகியோருக்கும் என் அன்புகலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டு உதவிய கவின்கலை அச்சகத்தாருக்கும் கவிஞர் நாரா. நாச்சியப்ப னுக்கும்; எழில்கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல். அச்சுக்கட்டை தயாரித்து நான்கு வண்ணத்தில் அச்சிடும் வரையில் பொறுப்பேற்று உதவிய ஓவிய மன்னர் திரு P.N. ஆனந்தன் அவர்கட்கும்; காப்புறை (Lamniation) போட்டு உதவிய மாருதி லாமினேஷன் உரிமையாளர் திரு பார்த்திபன் அவர்கட்கும்; இவ்வளவும் ஆனநிலையில் அழகிய முறையில் கட்டமைத்துக் கற்போர் கையில் கவினுறத்தவழச் செய்த திரு. V. திருநாவுக்கரசுக்கும் என். இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

இந்தப் பக்திப் பனுவலுக்குச் 'சிறப்புப் பாயிரமாலை' வழங்கிச் சிறப்பித்தவர் புதுவைப் பல்மருத்துவர் திரு. மு. இராதாகிருட்டிணன் என்பார். இளமையில் பாவேந்தர் பாரதிதாசனாரிடம் நன்னூல், யாப்பு, சிற்றிலக்கியங்கள் பயின்று கவிதைஇயற்றக் கற்றவர். புதுவையில் பல பெரியார் களிடம் தமிழ் இலக்கியங்கள், இலக்கணங்கள் இவற்றை முறையாகப் பாடங்கேட்டுப் பயின்றவர். வைணவப் பெரியார்களிடம் திவ்வியப் பிரபந்தம் முழுவதும் முறை யாகப் பாடங்கேட்டு உணர்ந்தவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'வித்துவான்' பட்டம் பெற்றவர். பிரெஞ்சு மொழி நன்கு பயின்றவர்; ஆங்கிலமும் நன்கு அறிவார்.

புதுவை அரசுப் பொது மருத்துவ மனையில் பல ஆண்டு பல் மருத்துவராகப் பணியாற்றி ஒய்வு பெற்றவர். இவர் இயற்றிய சித்த மருத்துவம் பற்றிய பல பாடல்களைக் கண்டு மகிழ்ந்த பாவேந்தர் இவருக்குச் 'சித்தன்' என்றே பெயரிட்டு வாழ்த்தியுள்ளார். பாவேந்தரின் 'குயில்' இதழில் இவர் பாடல்கள் வெளிவந்தன. அந்த இதழ்ப் பணியில் தம்மை ஐக்கியப்படுத்திக் கொண்ட பெருமகனார் இவர். இவர் கலந்து கொண்ட பாட்டரங்கங்கள் எண்ணற்றவை. ஆற்றிய சொற்பொழிவுகள்—குறிப்பாகச் சமயச் சொற் பொழிவுகள் கணக்கிலடங்கா. இவர் கலந்து கொள்ளாத வைணவ அரங்குகளே இல்லை எனலாம். இவருக்குக் கம்பனில் ஈடுபாடு மிக்குண்டு. கம்பன்விழாக் கவியரங்குகளில் இவர் கொண்ட பங்கு மிகப் பெரிது.

பல்லாண்டுகட்கு முன்னர் வைணவ சிலர் திரு இரா. தேசிகம்பிள்ளை அவர்களுடன் இணைந்து திருமால் திருநெறி மன்றத்தைச் சிறப்புடன் நடத்தியவர். கடந்த பதினொரு ஆண்டுகளாகப் புதுவை ஸ்ரீமத் இராமாநுஜ நாவலர் சுவாமி கள் மன்றத்தை அதன் செயலராக நின்று சீருடனும் சிறப்பு டனும் இயக்கி வருபவர். இவை தவிர புகழ்பெற்ற புதுவைக்

கல்விக் கழகத்தின் தலைவராகவும், ஸ்ரீவேதபுரீசர், ஸ்ரீவரத ராஜம் பெருமாள் நூல் நிலையத்தின் செயலராகவும் பணி யாற்றிப் பொதுத் தொண்டில் தம்மை உட்படுத்திக் கொண்டவர். இன்னும் புதுவையிலுள்ள பல்வேறு மன்றங் களில் இவருக்குப் பெரும் பங்கு உண்டு.

இத்தனைக்கும் மேலாம 'நல்ல மனிதர்'. 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்ற வள்ளுவத்திற்கு எடுத்துக் காட்டாகத் திகழ்பவர். அடியேன்பால் மிக்க அன்புடையவர்.

இத்தகைய 'மாமனிதர்'—வைணவமாமணி—பல நூல் களின் ஆசிரியர் - இந்நூலுக்குச் 'சிறப்புப் பாயிரமாலை' வழங்கிச் சிறப்பித்தது இந்நூல் பெற்ற பெரும்பேறாகும்; அடியேனின் பேறுமாகும். இப்பெரியாருக்கு அடியேனின் இதயங் கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலுக்கு அணிந்துரை அருளிச் சிறப்பித்தவர் பேராசிரியர் டாக்டர் தி. வைத்தமாநிதி. சுருக்கமாகச் சொன்னால் இவர் வைகுந்த வாசியான பேராசிரியர் அ. சீநிவாசராகவனின் 'இலக்கிய -சமய வாரிசாகத்' திகழ்ப வர். கடந்த சுமார் நாற்பது ஆண்டுகளாகக் கல்லூரியில் இளங்கலை—முதுகலை ஆங்கிலத்துறையில் பேராசிரியராக வும் துறைத்தலைவராகவும் பணியாற்றியவர். பல நூல் களின் ஆசிரியர். அனைத்திந்திய ரீதியில் பல் வேறு கருத் தரங்குகளில் பங்கு கொண்டு ஆய்வுக்கட்டுரைகள் வழங்கி யவர். சில கருத்தரங்குகளைத் தாமே இயக்குநராக நின்று நடத்திப் பல அறிஞர்களின் கவனத்தை ஈர்த்தவர். பல ஒப்பீட்டு இலக்கியக் கருத்தரங்குகளில் பங்கு கொண்டு ஆங்கில—தமிழ் இலக்கிய அணங்குகளின் வனப்பங்களை அறிஞர்கள் முன்வைத்துத் தம் இரு மொழிப் புலமையினால் இரு அன்னையர்களின் புகழை ஒளி பெறச் செய்து வருபவர். கல்வி, இலக்கியம், புதினம், பக்தி இலக்கியம், ஆசிரியம்

போன்ற பல துறைகளில் ஈடுபாடு கொண்டு அவற்றின் மேம் பாட்டைத் தமிழ் உலகுக்கு தவறாமல் அளித்துக் கொண்டு வருபவர். கம்பனில் மிக்க ஈடுபாடு கொண்டவர். ஆழ்வார் அவதரித்த திருக்குருகூர் ''மண்ணின் மைந்தராதலால்'' ஆழ்வார்பாசுரங்களில் இயல்பாகவே ஈடுபாட்டுடன் வைணவ நெறியைத் தம்பேச்சாலும், எழுத்தாலும் ஒளிபெறச் செய்து கொண்டிருப்பவர். தற்சமயம் மதுரை—காமராசர் பல்கலைக் கழக திருக்குறள் ஆய்வு மையத்தில் திருக்குறள் பரிமேலழகர் உரையை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் பணியில் ஈடு பட்டுள்ளார். அரைநூற்றாண்டாக என்பேரன்புக்கும் பெரு மதிப்பிற்கும் பாத்திரமான பேராசிரியர் பரமபதவாசி அ. சீநிவாசராகவனின் அணுக்கத்தொண்டர்; பருந்தும் நிழலும்போல் நின்று அவருடன் இணைந்து பல்வேறு பாங்குகளில் மொழி, இலக்கியம், கல்வி, போன்றதுறைகளில் அரும்பணி ஆற்றியவர். இப்போது சாத்தூர் அருளிச் செயல் ஆய்வகத் தலைவராகவும், நெல்லை மாவட்டக் கம்பன் கழகத் தலைவராகவும் இருந்து கொண்டு சமய, இலக்கியப் பணிகளை ஆற்றிவருபவர்.

இத்தகைய கற்றுத் துறைபோய வித்தகர் பழகுவதற்கு இனியர்; 'பண்புடையார் பட்டுண்டு உலகம்', 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' என்ற பொன்மொழிகட்கு எடுத்துக்காட்டாகத் திகழ்பவர். ஆயினும், 'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்ற வள்ளுவர் வாக்கை அணிகலனாகக் கொண்டவர். வைணவ நெறியின் உயிர் நாடியும் இதுதான். அறிவோர்க்கழகு கற்றுணர்ந்து அடங்கல்தானே நம் முன்னோர் நமக்குக் காட்டிய ஒளி விளக்கு? இத்தகைய பேரன்பர், வைணவ சீலர், பெரும் பேராசிரியரின் அணிந்துரை பெற்றது இந்நூலின் பெரும் பேறு; அடியேனின் பேறுமாகும். அணிந்துரை அருளிய அண்ணலுக்கு என் இதயம் கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

C

பரமபதவாசி திரு. கே. சந்தானம் ரெட்டியார் தென்னார்க்காடு, மாவட்டம் சொர்ணாவூரைச் சேர்ந்தவர். 'குலத்தளவே யாகுமாம் குணம்' என்ற கூற்றுக் கேற்ப நற்குணங்கள் நிறையப் பெற்றவர். திருவரங்கம் பெரிய ஆச்ரமம் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகளின் ஆசிகட்கிலக்கானவர். நல்லோர் கூட்டத்தை என்றும் நாடி நிற்பவர். திருமால் திருவடிக்கே அற்றுத் தீர்ந்த நெஞ்சினர். திருமகள் திருவருள் நிறைந்தவர்; செல்வச் செழிப்புள்ளவர். ஒழுக்கத்தால் உயர்ந்த உயர்குணச் செம்மல். பூதூர் பெரும் புலவர் கி. வேங்கிடசாமி ரெட்டியார் (நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பதிப்பாசிரியர்) அவர்களின் புருஷகாரத்தால் திருவேங்கடத்தான் திருமன்றம் கண்ட திருவருட் செல்வர். நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை நன்கு சோதித்து வெளியிடுவதற்கு நிதியுதவி அளித்து முழுப் பொறுப்பையும் ஏற்றவர், 'செல்வத்துப் பயனே ஈதல்; துய்ப்போம் எனினே தப்புந பலவே' (புறந்-189) என்ற புறப்பாட்டின் பொருளை உணர்ந்த பொன்மனச் செம்மல். ஈத்துவக்கும் இன்பம் கண்ட ஏந்தல். திருவேங்கடவனை நெஞ்சில் நிறுத்திய நெறியினர். அவன் திருவடிவாரத்தில் அவன் பெயரால் நிறுவப்பெற்ற பல்கலைக் கலகத்தில் தமிழ்த்துறையில் இவர் ஓர் அறக்கட்டளை நிறுவி வைணவத்தையும் ஆழ்வார் பிரபந்தங்கலளயும் பரப்புவதில் பெருவிருப்பினர்; அதனைச் செய்யும் முன்னர் திருமால் திருவடியினைச் சென்றடைந்தவர். இவர்தம் குடிவழியினர் அதனை நிறைவேற்றினால் பரமபதத்தில் உள்ள இவர் ஆன்மா பூரித்து மகிழும்; மன நிறைவு கொள்ளும். இத்தகைய அன்பரின் அருந்தொண்டின் நினைவாக இந்நூலை அவருக்கு அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன்; பிரபந்தத்தை நன்முறையில் பதிப்பிக்கக் காரணமாக இருந்த இவர் ஆன்மா மன நிறைவு கொண்டு மகிழும் என்பது என் திடமான நம்பிக்கை.

'நம்மாழ்வார் தத்துவம்' பற்றி ஆய்ந்து ஆய்வுக் கட்டுரையைப் பெரிய அளவில் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டு

டாக்டர் (பிஎச்.டி.) பட்டம்பெற்ற (1969-இல்)[3] அடியேனுக்கு நம்மாழ்வார் பற்றி ஈரத்தமிழில் ஒரு பெருநூல் எழுதி வெளியிட வேண்டும் என்ற பேரவா என்னிடம் அடிக்கடிக் குமிழியிட்டுக் கொண்டே இருந்தது. அதற்கு ஆண்டவன் அருளும் ஆழ்வார் ஆசியும் யான் அடைவதற்கு இருபது ஆண்டுகள் ஆயின. இந்த நூலை யான் வெளியிடுவதற்கு என் இதயத் தேரை நடத்தித் தமிழ்ப்பணி, அறிவியல் பணி, சமயப் பணி ஆற்றுவதற்கு நல்ல உடல் நலத்தையும் மன வளத்தையும் நல்கி அந்தர்யாமியாக என் இதயத்தில் எழுந்தருளியிருக்கும் முத்திக்கு வித்தகன் என்றே கருதி முறையிடும் வேங்கடத்தி அச்சுதனை'[4] மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்கிச் சரண் அடைகின்றேன்.

> முன்னே பிறந்திறந்து
> மூதுலகிற் பட்டவெல்லாம்
> என்னே மறந்தனையோ
> என்நெஞ்சே! — சொன்னேன்
> இனிஎதிரா சன்மங்கள்
> இன்றுமுதல் பூதூர்
> முனிஎதிரா சன்பேர்
> மொழி.[5]
>
> — பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்

ந. சுப்புரெட்டியார்
தொ. பே. 615583

'வேங்கடம்'
AD-13, (பிளாட் 3354)
அண்ணாநகர், சென்னை-600 040
நாள்: காந்தி ஜயந்தி
2-10-1989.

3. திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் (திருப்பதி) மூலம். இந்த நூலைப் பல்கலைக் கழகமே வெளியிட்டுள்ளது.
4. திருவேங். அந். 33
5. நூற். திருப். அந். 3.

# உள்ளுறை

| | | பக்கம் |
|---|---|---|
| | அன்புப் படையல் | v |
| | சிறப்புப் பாயிரமாலை | vi |
| | அணிந்துரை. | xiv |
| | நூல்முகம் | xxviii |
| 1. | பிறப்பும் வளர்ப்பும் | 1 |
| 2. | சோழநாட்டுத் திருப்பதிகள் | 20 |
| 3. | பாண்டிநாட்டுத் திருப்பதிகள் | 47 |
| 4. | மலைநாட்டுத் திருப்பதிகள் | 82 |
| 5. | வடநாட்டுத் திருப்பதிகள் | 120 |
| 6. | அருளிச் செயல்கள் | 155 |
| 7. | அகப்பொருள் தத்துவம் | 179 |
| 8. | தோழிப் பாசுரங்கள் | 193 |
| 9. | தாய்ப் பாசுரங்கள் | 223 |
| 10. | மகள் பாசுரங்கள் | 251 |
| 11. | மகள் பாசுரங்கள்—தூது பற்றியவை | 292 |
| 12. | இறையநுபவம் | 326 |
| 13. | அர்த்த பஞ்சகம் | 346 |
| 14. | தத்துவத்திரயம் | 361 |
| 15. | மந்திரங்கள் | 378 |
| | பின்னிணைப்புகள் | |
| 1. | பயன்பட்ட நூல்கள் | 394 |
| 2. | நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்த திவ்விய தேசங்கள் | 396 |
| 3. | 108 வைணவத் திருத்தலங்கள் | 399 |
| | பேராசிரியர் ரெட்டியாரின் நூல்கள் | 403 |

# 1. பிறப்பும் வளர்ப்பும்

சங்கங்கள் அமைத்து தமிழ் வளர்த்த பெருமை பாண்டி நாட்டுக்குரியது. இத்தகைய சிறப்புடன் திகழும் நாட்டில் திக்கெலாம் புகழும் திருநெல்வேலி மாவட்டத்தைச் செழிப்பாக்குவது தாமிரவருணி என்ற பொருநையாறு. இந்த ஆற்றின் தீரத்திலே திருநகரி எனப்படும் **திருக்குருகூர்**[1] ஒரு

[1] **திருக்குருகூர்**: பெயர்க் காரணம். ஒரு நாள் நான்முகன் நாராயணனை வணங்குவதற்காக வைகுந்தம் செல்லுகின்றார். நாராயணன் நான்முகனை நோக்கி, "அன்பனே, உன்னைத் தோற்றுவிப்பதற்கு முன்னரே தண் பொருநையாற்றின் கரையில் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து அதனையே ஆதிக் கோயிலாகக் கொண்டு வழிபடுவாயாக" என்று கூறுகின்றார். நான்முகன் அத்தலத்தை நோக்கி வருங்கால்தான் பொருநையாற்றில் மிதந்து வரும் வலம்புரிச் சங்கொன்று 'சங்கணித்துறை'யில் (திருவாய். 10.3 : 11) ஏறி அங்குள்ள ஆதிநாதரை வலம் வருவதைக் காண்கின்றார். இங்ஙனம் திருமால் உகந்து இடங்கொண்ட இடத்தில் இருக்கும் ஆதிநாதரை வழிபட்டுச் சத்தியலோகம் திரும்புகின்றார் நான்முகன். திருமாலே குருவாக வந்து உபதேசித்த தலமாதலால் இதற்குக் 'குருகூர்' என்ற பெயர் வழங்கலாயிற்று. இத்தலம்தான் பொருநை ஆற்றங் கரையில் உள்ளது. இஃது இப்பொழுது 'ஆழ்வார் திருநகரி' என்ற பெயரில் வழங்குகின்றது; ஓர் இருப்பூர்தி நிலையம்.

திவ்வியதேசம். இந்த ஊரில் வழிவழியாகத் திருமாலடிக்கே தொண்டுபூண்டொழுகும் குடியில் பிறந்த **காரியார்** என்ற வைணவப் பெருஞ்செல்வர் ஒருவர். இவர் வேளாளர் குலத்தில் வந்தவர் என்பது மக்களிடையே வழங்கி வரும் செய்தி.[2] இவர் நாகர் கோயிலுக்கு அருகிலுள்ள திருவண் பரிசாரம் என்னும் திவ்விய தேசத்திலுள்ள திருவாழ்மார்பர் என்பவரின் அருமைத் திருமகளார் **உடைய நங்கையார்** என்பவரைத் திருமணம் புரிந்து இல்லறமாகிய நல்லறத்தை நடத்தி வந்தார். இங்ஙனம் பல ஆண்டுகள் திருக்குருகூரில் வாழ்ந்துவரும் நாளில் இவருக்கு மக்கட்பேறு வாய்க்க வில்லை.

ஒருநாள் மாமனார் திருவாழ்மார்பர்[3] வேண்டுகோளின் படி காரியார் தமது வாழ்க்கைத் துணைவி உடைய நங்கையாருடன் திருவண் பரிசாரம் வந்து சில காலம் தங்கி யுள்ளார். பின்னர் தம் தேவிகளுடன் தம்மூருக்குத் திரும்புகையில் திருக்குறுங்குடி[4] என்னும் திவ்விய தேசத் திற்கு வருகின்றனர். அங்கு எழுந்தருளியிருக்கும் நம்பி என்னும் திருநாமமுடைய எம்பெருமானை வந்தித்துப்

2. இவர் நாடார் மரபில் வந்தவராகக் காட்டுவார் என் அருமை நண்பர் ஆ. இராசகோபால் நாடார் 'நம்மாழ்வாரும் நாமும்' என்ற தமது நூலில்.
3. திருவண்பரிசாரத்தில் கோயில் கொண்டிருக்கும் எம்பெருமானின் திருநாமமும் திருவாழ்மார்பர் என்பதே. இதன் வடமொழிப் பெயர்தான் சிரீநிவாசன் என்பது.
4. திருக்குறுங்குடி: நான்குநேரிக்கு (வானமாமலைக்கு) மேற்கிலுள்ளது; மலையையொட்டிய பகுதி. திருக் கோயிலில் ஐந்து நம்பிகளும் மலைமேல் ஒரு நம்பி யும் உள்ளனர். இந்தத் திவ்விய தேசம்பற்றிய செய்திகளைப் 'பாண்டி நாட்டுத் திருப்பதிகள்' என்ற நூலில் 18-வது கட்டுரையில் கண்டு தெளிக.

படியாய்க் கிடந்து ''அடியேங்கட்கு 'மகப்பேறு' அளித்தருள வேண்டும்'' என்று வேண்டுகின்றனர். அந்த ஆதிமூர்த்தியும் 'நாமே வந்து அவதரிப்போம்' என்று பேரருள் பொலிந்து அர்ச்சகர் முகமாய்ச் சொல்லியருள்கின்றார். பிறகு அத்திருக் கோயிலில் தீர்த்தம், திருமாலை, திருப்பரிவட்டம் முதலிய வற்றைப் பெற்று திருக்கூரை வந்தடைந்து இல்லறம் நடத்து கின்றனர். குறுங்குடி நம்பியின் திருவருளால் உடையநங்கை யாருக்குப் பேறு ஏற்படுகின்றது. நாளடைவில் பகவானது அம்சமும், கௌத்துவத்தினது அம்சமும், சேனை முதலியாரது அம்சமும் (விஸ்வக்சேனர்) கூடிய ஒரு திருக்குமாரர் வைகாசி விசாகத்தில் வைணவ சமயத்தை நிலைநிறுத்த திருவவதரிக் கின்றார். இது வரலாறு.

(1) இங்ஙனம் சிலகாலம் பிள்ளைப் பேறின்றித் திருக்குறுங்குடி நம்பியை வேண்டி ஆழ்வாரைப் பெற்றெடுத்த வரலாற்றுக்கு அகச்சான்று ஒன்று உள்ளது.

கொடுங்காற் சிலையர், நிரைகோள்,
 உழவர், கொலையில் வெய்ய
கடுங்கால் இளைஞர் துடிபடும்
 கவ்வைத்து அருவினையேன்
நெடுங்கா லமும்கண்ணன் நீண்மலர்ப்
 பாதம் பரவிப் பெற்ற
தொடுங்கா லொசியும் இடையின
 மாள்சென்ற சூழ்கடமே. —திருவிருத். 37.

[கொடுங்கால் சிலையர் - வளைந்த விற்கழுத்தை யுடையவர்கள் - நிரைகோள் - பசுக்கூட்டம்; கொலை - கொலைத் தொழில்; துடி - பறை; படும் - ஒலிக்கும்; கவ்வை - ஆரவாரம்; நெடுங்காலம்; — நீண்ட காலம்; பரவி - வழிபட்டு; பெற்ற - ஈன்ற; தொடுங்கால் ஒசியும்- தொட்டால் ஒடியும்: இளமாள் - இளமகள்; சூழ்கடம் - பாலை நிலம்]

என்ற திருவிருத்தப் பாசுரத்தில் இக்குறிப்பைக் காணலாம். இப்பாசுரம் "**உடன்போக்கு**"[5] என்ற அகத்துறையில் அமைந்தது. இதில் தலைவி தலைவனுடன் செல்லும் உடன்போக்கில் தாய் தலைவியின் மென்மைத் தன்மையும், அவள் தலைவனுடன் சென்ற சுரத்தின் கொடுமையும் நினைந்து இரங்குதலைக் காணலாம். இதில் தாய் தன் மகளைத் தான் பெற்ற அருமைப்பாட்டைக் கூறும் முகத்தால் ஆழ்வாரின் அவதாரச் சிறப்பு குறிப்பாக வெளியிடப் பெற்றுள்ளதைக் கண்டு மகிழலாம். இன்னும் நம்மாழ்வாராகிய தலைவி 'நல்கூர்ந்தார் செல்வமகள்' என்றாற் போல, அரிதாகப் பெற்றுச் செல்வமாக வளர்க்கப் பெற்றவள், மிக்க இளமைப் பருவமுடையவள் என்ற இத்தன்மையெல்லாம் நம்மாழ்வாருடைய சிறப்புகளைக் குறிப்பால் உணர்த்துவன என்பதை உய்த்துணரலாம். இவரைப் பற்றித் தெரிந்து கொள்ள வேறு அகச்சான்றுகளும் உள்ளன.

(2) நம்மாழ்வாரின் பெயர்களில் ஒன்றாகிய 'சடகோபன்' என்பது திருவிருத்தத்தின் இறுதிப் பாசுரத்திலும், திருவாய்மொழியின் பலச்சுருதிப் (திருக்கடைக் காப்புப்) பாசுரங்களிலும் பெருவழக்காக உள்ளது. மற்றொரு பெயராகிய மாறன் ஆறு இடங்களில்[6]

5. **உடன்போக்கு:** தோழியின் இசைவு பெற்றுத் தலைமகளை அவர்தம் பெற்றோர் அறியாதவாறு தலைவன் தன்னுடன் அழைத்துக் கொண்டு, நடத்தற்கரிய வழியிலே நடந்து தன்னூர்க்குச் செல்லுதல். இதன் விரிவான விளக்கம இவ்வாசிரியரின் **'அகத்திணைக் கொள்கைகள்'** (பாரி நிலையம், சென்னை-600108) என்ற நூலில் பக்கம் 180, 190, 207, 372-காண்க.

6. திருவாய். 2.6 : 11, 4.5 : 11 (காரிமாறன்) 4.7 : 11, 4.10 : 11 , 5.2 : 11, (காரியாறன்), 10.2 : 11.

வருகின்றது. தாம் பிறந்த நாடு வழுதி நாடு என்பதனையும் பல பாசுரங்களில் குறிப்பிடுகின்றார் ஆழ்வார்.

(3) நம்மாழ்வாருக்கு மகிழம்பூ மாலை சிறப்பு மாலையாக வழங்குதல் மரபு. 'நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்' (திருவாய் 4.10 : 11) என்று கூறப்பெற்றதனால் இந்த வழக்கு அகச்சான்றாக அமைகின்றது.

இவருடைய அவதாரச் சிறப்பைப் பற்றிப் பேசும் பூருவாச்சாரியர்களின் திருவுள்ளத்தை ஆராய்ந்து பேசுமிடத்துப் பலபடியாகப் பேச இடந்தருகின்றது.[7] இவற்றையெல்லாம் நோக்குமிடத்து, "நித்திய சம்சாரியாய்ப் போந்தாரொருவர் நிர்ஹேதுக பகவத் கடாட்ச விசேடத்தாலே இங்ஙனம் திருந்தினார் என்னும் அதுவே சம்பிரதாய நிர்வாகம்" என்று பெரியோர் பணித்திருப்பதாகக் கூறுவர் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரிய சுவாமிகள்

**சேமம் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ**
**நாமம் பராங்குசமோ நாரணமோ — தாமத்**
**துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கும்**
**உளவோ பெருமான் உனக்கு.**

என்பன போன்ற பாசுரங்களுக்கிணங்க ஆழ்வாரை 'பகவதவதாரம்' என்று கொள்ளுதலே இவருடைய மிக்க பெருமைக்குப் பொருத்தமாக அமைகின்றது.

**திருப்புளியாழ்வார்** : எம்பெருமான் அவதாரம் செய்ததற்கு முன்னதாகவே அப்பெருமானுக்குப் பல்லாற்றானும் அடிமை செய்தலையே உறுதொழிலாகக் கொண்ட திருவனந்தாழ்வான் (ஆதிசேஷன்) இக்குழந்தையின்மீது

7. ஆசாரிய ஹிருதயம்.92 ஆம் சூத்திரத்தையும் அதன் உரையையும் கண்டு தெளிக.

வெயில் மழை முதலியன படாதிருக்குமாறு ஒரு பெரிய புளிய மரமாகப் பொலிந்துநின்ற பிரான் எழுந்தருளி யிருக்கும் திருக்கோயிலின் உள்ளே வெளிச் சுற்றில் அவதரித் திருந்தார் என்பது சம்பிரதாயமாக நம்பி வரும் ஒரு திரு நிகழ்ச்சியாகும்.

திருக்குறுங்குடி நம்பியின் திருவருளால் அவதரித்த திருக்குழந்தை பிறந்தநாள் தொட்டு அழுதரற்றுதல், பால் பருகல் முதலான மக்கள் இயல்பு ஒன்றுமின்றியும் வாட்டம் சிறிதும் இல்லாதும் பரிபூரணராக இருக்கும் அதிசயத்தைக் கண்டு பெற்றோர்கள் ஒரு பக்கம் அதிசயமும் மற்றொரு பக்கம் வருத்தமும் கொண்டிருந்தனர். பிறந்த பன்னிரண்டாம் நாளில், உலகில் ஏனைய குழந்தைகளின் இயல்புக்கு மாறாக இருந்தமையால், அக்குழந்தைக்குப் பெற்றோர் சூட்டிய திருநாமம் மாறன் என்பது. பின்னர் பெற்றோர்கள் சிறிதும் கவலைப்படாமல் திருக்குருகூரில் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்கு எடுத்துச் சென்று பொலிந்து நின்ற எம்பெருமானைச் சேவிக்கச் செய்வித்து அவன் திருமுன் விட்டனர்.[8] அக்குழந்தை அத்திருக் கோயிலி லுள்ள புளிய மரத்தடியில் சென்று அமர்ந்தது. ஆழ்வா ராகிய அக்குழந்தை எழுந்தருளியிருந்த காரணத்தால் அந்தப் புளியமரத்தைப் பின்னுள்ளோர் திருப்புளியாழ்வார் என்று சிறப்பாக வழங்கலாயினர். பெற்றோர்களும் திருப் புளியாழ்வார் அடியிலேயே ஆணிப்பொன்னால் செய்த வண்ணச் சிறுதொட்டிலிலே கிடத்தி வளர்த்து ஓம்பி வரலாயினர். குழந்தையும் பதினாறாண்டு வரையில் கண் விழித்துப் பார்த்தல், பேசுதல் முதலிய செயல்கள் ஒன்று மின்றி இறைவனையே நினைந்த வண்ணம் அமர்ந்திருந்தது.

8. மூலவர் : ஆதிநாதன்; பொலிந்து நின்ற பிரான். தாயார் ஆதிநாதவல்லி, குருகூர் நாயகி. இவர் கட்குத் தனிக்கோயில் உண்டு.

கருவிலிருக்கும் பொழுது ஞானமுடையனவாயிருக்கின்ற குழந்தைகளைப் பிறந்தவுடனே தனது பரிசத்தால் (ஸ்பர்சம் - தொட்டு உணர்தல்) அஞ்ஞானத்திற்கு உள்ளாக்கி அழுதல், அரற்றுதல் முதலியன செய்யும் தன்மையதான 'சடம்' என்னும் வாயு இவரையும் பிறந்த பொழுது தொடுதற்கு வர அப்பொழுது இவர் அதனை ஹுங்காரத்தாலே ஒறுத்து ஓட்டினமையால் இவருக்குச் 'சடகோபர்' என்றும் திருநாமம் உண்டாயிற்று என்று வைணவர்கள் சம்பிரதாயமாகக் கொள்வர். இத்திருநாமமே பின்னர் பெருவழக்காக வழங்கலாயிற்று. இவர் அருளிய திருப்பாசுரங்களின் பதிகங்கள்தோறும் வரும் இறுதிப்பாசுர மாகிய பல சுருதிப் பாசுரத்தில் (திருக்கடைக்காப்புச் செய்யுளில்) 'சடகோபர்' என்ற முத்திரையும் பெறலாயிற்று. இவர் நம் பெருமானால் நம்மாழ்வார் என்று அபிமானிக்கப் பெற்று கடைக்கண் நோக்கிற்கு இலக்காகி மற்றை யாழ்வார் களனைவரிலும் உயர்வு பெற்றதனால் 'நம்மாழ்வார்' என்று ஒரு திருப்பெயர் பெறலாயினர். இதுவே இன்று மக்கள் வாக்கில் பெருவழக்காக நிலை பெற்று விட்டது. தம்பக்கல் திருவுள்ளம் உவந்து பொலிந்து நின்ற பிரான் பிரசாதித் தருளிய மகிழமலர் மாலையைத் தரித்தனால் வகுளாபரணர் என்றும், பிறசமயத்தினராகிய யானைகளைத் தமது திவ்வியப் பிரபந்தங்களில் கூறிய தத்துவார்த்தங்களால் செருக்கடக்கி அவர்கட்கு மாவட்டி என்னும் கருவிபோல் இருத்தலால் பராங்குசர் என்றும் வேறு திருநாமங்களும் இவருக்கு ஏற்படலாயின.

திருமாலின் அவதாரம் என்று சொல்லும்படி விறுபாடுடைய இந்த ஆழ்வார் பல காரணங்களால் ஆழ்வார் களின் தலைவராகக் கருதப் பெற்று அவரை அவயவியாகவும் மற்றைய ஆழ்வார்களை அவயவங்களாகவும் பூருவர்கள்

மெய்ப்பித்தனர். இவருக்குத் திருமுடிநிலை நம் பெருமாள் (அரங்கநாதன்). ஒரு பழைய வடமொழி சுலோகத்தின்படி இவருக்குப் பூதத்தாழ்வார் திருமுடியாகவும், பொய்கை பேயாழ்வார்கள் கண்களாவும், பெரியாழ்வார் திருமுக மண்டலமாகவும், திருமழிசையாழ்வார் கண்ட மாகவும், குலசேகராழ்வார் திருப்பாணாழ்வார் இவர்கள் திருக்கை களாகவும், தொண்டரடிப் பொடியாழ்வார் மார்பாகவும், திருமங்கையாழ்வார் கொப்பூழாகவும், மதுரகவி யாழ்வாரும் எம்பெருமானாரும் (இராமாநுசர்) திருவடிகளாகவும் இருப்பதாகச் சம்பிரதாயமாக உரைப்பர்.

**குருவுபதேசம்:** இப்படிப்பட்ட சடகோபர் பதினாறு வயதளவும் கண் விழியாமல் மௌனமாக எழுந்தருளி யிருப்பதைக் கண்ட பெற்றோர்கள் 'இவர் தம்மைப் போன்ற நிலையுடையாரெவரையும் உலகத்தில் காணாமையால் யாரோடும் பேசாமல் உள்ளார்' என்பதை அறியாமல் 'எம்பெருமான் விஷயத்தில் நாம் செய்த அபசாரம் ஏதேனும் உண்டோ?' என்று கருதிக் கலங்கியிருந்தனர். அப்போது பரமபதநாதனது நியமனப்படி சேனைமுதலியார் என்கின்ற விஸ்வக்சேனர் யாரும் இல்லாதபோது தனிமையில் எழுந்தருளி இவருக்குத் திருவிலச்சினை செய்து எல்லாவித மந்தரார்த்தங்களையும் உபதேசித்தருளினார்.[9]

9. இது போன்ற நிகழ்ச்சி ஒன்று சைவ சமயத்திலும் காணப்படுகின்றது. திருவெண்ணெய் நல்லூரில் 'சுவேதவனப் பெருமாள்' என்னும் பிள்ளைத் திருநாமத்துடன் எழுந்தருளியிருந்த மெய்கண்ட தேவருக்கு வான்வழியாகச் சென்ற பரஞ்சோதி மாமுனிகள் (சத்திய ஞானதரிசனிகளின் மாணாக்கர்) தம் வழி வழி உபதேசத்தைச் செய்து சென்றார் என்பது வரலாறு. இரண்டு வரலாறுகளும் ஒப்பு நோக்கி உணரத்தக்கவை.

நம்மாழ்வார் ஓதாது உணர்ந்த ஞானச்சிறப்புடையவர் என்று அவர் வரலாற்றால் அறிகின்றோம்.

**அறியாக் காலத்துள்ளே**
**அடிமைக்கண் அன்புசெய்வித்து**
**அறியா மாமயத்து**
**அடியேனை வைத்தாயால்''**

[*அறியாக்காலம் - மிக்க இளம் பருவம்; அடிமைக்கண் - தொண்டு செய்யும் தொழிலில்; அன்பு - ஆவல்; அறியா - அறியாமையை விளைவிக்கும்; மாமாயம் - சம்சாரம்*]

என்பது ஒரு பாசுரம். இந்த அகச் சான்றினால் அவர் அறிவு தோன்றுதற்குரியதல்லாத மிக்க இளம்பருவத்திலேயே இறைவனிடத்துப் பேரன்பு கொண்டவராயினர் என்றும், அங்ஙனம் அன்பு கொள்ளுமாறு இறைவன் அருள் புரிந்தான் என்றும் இப்பாசுரப் பகுதியால் அறிகின்றோம். இதனால் ஆழ்வார் ஓதாது உணர்ந்த ஞானச் செல்வர் என்பது ஒருவாறு தெளிவாகின்றது.

**மதுரை கவிகளின் சந்திப்பு**: திருக்குருகூருக்கு இரண்டு கல் தொலை வுள்ளது திருக்கோளூர் என்ற திவ்வியதேசம். 'நவதிருப்பதிகளில்'[10] ஒன்பதாவது (எம்பெருமான் வைத்தமா நிதி: தாயார் கோளூர் வல்லி நாச்சியார்). நம்மாழ்வாரின் அந்தரங்க சீடரான மதுரகவிகள் அவதரித்த திவ்வியதேசம். நம்மாழ்வார் என்ற ஞானசூரியன் அவதரித்த சில ஆண்டு

10. **நவ திருப்பதிகள்**: திருக்குருகூர், திருக்கோளூர், தென்திருப்பேரை—இவை மூன்றும் பொருநை யாற்றின் தென்கரையிலிருப்பவை. மற்றவை ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை (நத்தம்), திருக்குளந்தை, திருப்புளிங்குடி, தொலைவிலி மங்கலம் (இரட்டைத் திருப்பதிகள்) ஆகிய ஆறும் பொருநை யாற்றின் வடகரையிலுள்ளன.)

கட்கு முன்னதாகவே அருணோதயம் போல் அவதரித்தவர்; அந்தண குலத்தவர். பிறந்த நாள் சித்திரைத் திங்கள்; சித்திரை நட்சத்திரம்; வடமொழி, தென்மொழி நூல்களையும் சாத்திரங்களையும் கற்றுத் துறைபோய வித்தகர் இவர். வடநாட்டுத் திருத்தலப் பயணத்தை மேற்கொண்ட இவர் அயோத்தி முதலிய தலங்களைச் சேவித்துக் கொண்டு பரிசுத்த பூமியாகிய அயோத்தியில் சிலகாலம் வாழ்ந்து வரலாயினர்.

அக்காலத்தில் ஒரு நாள் இரவில் இவர் திருக்கோளூர் வைத்தமாநிதியைத் திசை நோக்கித் தொழக் கருதியவர் தென்திசை நோக்கிக் கண் செலுத்தினார். அப்பக்கத்தில் வானுற ஓங்கி வளர்ந்து விளங்கும் திவ்வியமான பேரொளியைக் கண்டு வியப்புற்றார். இப்பேரொளி இரண்டு மூன்று நாட்களிலும் தொடர்ந்து காணப்பெற்றது; அச்சுடர்த் திரள் முச்சுடரொளியிலும் மிக்குத் திகழ்ந்தது. 'தென்திசையில் ஏதோ ஓர் அதிசய நிகழ்ச்சி உள்ளது; அதனைச் சென்று காண்டல் வேண்டும்' என்று எண்ணிய மதுரகவிகள் தெற்கு நோக்கிப் பயணமானார். அன்று முதல் பகலில் உறங்குவதும் இரவில் அப்பேரொளியை நோக்கிய வண்ணம் வழி நடப்பதுமாகப் பல நாட்கள் நடந்து திருக்குருகூரை அடைந்தார். அவ்வூரை அடைந்ததும் அந்த ஒளி காணப் பெறவில்லை. அவ்வூரில் உள்ளாரிடம் 'இவ்வூரில் யாதேனும் அதியச நிகழ்ச்சி உண்டோ?' என்று வினவ, அவர்கள் கூறியபடி திருப்புளியாழ்வாரின் அடியில் எழுந்தருளியிருந்த சடகோடபரைக் கண்டார்.

ஆழ்வார் கண்விழித்துப் பார்த்தல், பேசுதல் முதலிய செயலொன்றுமின்றி மௌனமாக இருத்தலைக் கண்டவர், அவருடைய நிலையை ஆராய்ந்தறிய எண்ணினார். உடனே ஒரு சிறு கல்லை எடுத்து அவர்முன் இட்டு ஒலி உண்டாக்கி

னார். அவ்வொலியைக் கேட்ட நம்மாழ்வார் கண்விழித்து நோக்கினரேயன்றி ஒன்றும் பேசவில்லை. அவருடன் பேசி யறிய எண்ணிய மதுரகவிகள் "செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று வினவினார். அதற்குச் சடகோபர் "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று மறுமொழி பகர்ந்தார்.

**உரையாடலின் தத்துவம்** : 'செத்த' என்பது அசேதன மான உடம்பு. உடல் மூலப்பகுதியின் விகாரமாக உள்ளது; அறிவற்றது. அதனால் அதனைச் 'செத்த' என்றார். 'சிறியது' என்பது உயிர்; ஆன்மா; அஃது அணுவடிவினதாக உள்ளது. அஃது உடம்பு முழுவதிலும் நடைபெறும் நிகழ்ச்சி களை அறிகின்றது; அதனால் அதனைச் 'சிறிது' என்றார். 'பிறத்தல்' என்பது உயிர் தன் வினைகளுக்கேற்ப உடம்பை அடைதல்; 'எத்தைத் தின்று எங்கே கிடக்கும்" என்பது 'அவ்வாறு உடம்பைப் பெற்ற உயிர் எதனை நுகர்ந்து எங்கே இருக்கும்?' என்ற பொருளையுடையது. 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என்பது, 'உடம்பை அடைந்த உயிர் தன் வினைப் பயனைப் புசித்துக் கொண்டு அவ்வுடம்பிலேயே இருக்கும்' என்ற பொருளையுடையது. உயிர்அவ்வப்பிறப்பிற் குரிய வினை முடிந்து ஓயும் வரை அவ்வுடம்பிலிருக்கும் என்பது இதன் கருத்தாகும்.

இங்ஙனம் ஆழ்வார் கூறிய விடையைக் கேட்ட மதுர கவிகள் மிக்க மகிழ்ச்சியடைந்து ஆழ்வாரையே ஆசாரியனாகக் கருதி அவர் திருவடிகளிலே தாளும் தடக்கையும் கூப்பி விழுந்து தண்டனிட்டு அவரது இணையடித் தாமரைகளைத் தியானித்தலும் திருநாமங்களை வழுத்துதலும் செய்து கொண்டு வாழ்ந்திருந்தார். இக்காலத்தில் ஆழ்வார் மதுர

கவிகளுக்கு தத்துவம், இதம், புருஷார்த்தம்'' ஆகியவற்றின் இயல்புகளையெல்லாம் விரிவாக விளக்கி மற்றும் அறிய வேண்டிய உண்மைகளையும் விரிவாக உபதேசித் தருளினார்.

**ஆழ்வாரின் பிரபந்தங்கள் :** இங்ஙனம் ஆழ்வார் உலகியலைச் சிறிதும் சிந்தியாமல் இறைவன் சிந்தனை யிலேயே ஆழங்கால் பட்டிருந்தார். இந்நிலையில் வைகுண்டநாதன் ஆழ்வாரது ஞானக்கண்ணுக்கு இலக்காகிச் சேவை சாதிக்கத் திருவுள்ளங் கொண்டு பெரிய திருவடியின் மீது பிராட்டிமார்களுடன் எழுந்தருளிக் காட்சி நல்கு கின்றான். ஆழ்வாரும் அம்முகில் வண்ணனது திருமேனி யழகினைச் சேவித்துக் கண்கள் ஆனந்த அருவி சொரிய, மெய் மயிர் சிலிர்ப்பு விதிர்விதிர்ப்பெய்தி ஆனந்த வெள்ளத் தில் ஆழ்ந்தார்; அதன் பிறகு நூற்றெட்டுத் திருப்பதி எம்பெருமான்களும் அங்கு எழுந்தருளிக் காட்சி கொடுத்தனர். ஆழ்வார் அவர்களைச் சேவித்தார்; அவர் களது திவ்விய திருக்குணங்களை அநுபவித்து அவ்வநுபவத் தாலுண்டான அன்பு உள்ளடங்காமல் அதனைப் பிரபந்த முகமாக வெளியிட்டருளினார்.

இங்ஙனம் பாடியருளின பிரபந்தங்கள் நான்கு. அவை 1. திருவிருத்தம்: 2. திருவாசிரியம்; 3. பெரிய திருவந்தாதி; 4. திருவாய் மொழி ஆகியவை. இவை முறையே இருக்கு, வேதசாரம், யஜுர் வேதசாரம் அதர்வண வேதசாரம், சாம வேதசாரம் என்று அமைந்துள்ளன என்பது ஆன்றோர்

·1. **தத்துவம் :** மூன்று; அவை சித்து, அசித்து, ஈசுவரன். **இதம்** - வீடு பேற்றிற்குச் சாதனமாக அநுட்டிக்கப் பெறும் பத்தி, பிரபத்தி (சரணாகதி) என்பன. **புருஷார்த்தம் :** புருஷன் - ஆன்மா; அர்த்தம் - பொருள். அதாவது ஆன்மா அடைய வேண்டிய பொருள்; வீடுபேறு.

கொள்கை. இறையநுபவத்திற்குத் தடையாயிருக்கும் இந்த உடல் தொடர்பை அறுத்துத் தள்ள வேண்டும் என்று விரும்பினார் திருவிருத்தத்தில்; சம்சார சம்பந்தம் அற்று ஒரு தேச விசேடத்தில் போனால் அநுபவிக்கக் கூடிய தன்னுடைய மேன்மையையும் நீர்மையையும் வடிவழகையும் இங்கே இருக்கும் காலத்திலேயே அநுபவிக்கலாம்படி தெளிந்த நிலையைச் செய்து கொடுக்க, பிறப்புஅற ஏழ் திருப்பாசுரங்களால் அவ்வழகை அநுபவித்தார் திருவாசிரியத்தில்; இப்படி அநுபவித்த பொருளில் பொருளுக்குத் தகுதியான ஆசை கரை புரண்டோடும் படியை அருளிச் செய்தார் பெரிய திருவந்தாதியில்; ஆமத்தை (பசியின்மை) அறுத்துப் பசியை மிகுவித்துச் சோறிடுவாரைப் போன்று, தமக்கு ருசியைப் பிறப்பித்தபடியையும் அந்த ருசிதான் பரபக்தி, பரஞானம், பரமபக்திகளாய் மலர்ந்து பக்குவமானபடியையும், பின்னர் உடல் தொடர்பும் அற்றுப் பேற்றோடே தலைக்கட்டின படியையும் அருளிச் செய்கின்றார் திருவாய்மொழியில்''[13]

இந்த நான்கு பிரபந்தங்களும் நான்மறைகளுடன் ஒப்பிட்டுக் காட்டியது எண் (நான்கு என்ற எண்) ஒற்றுமை யினாலேயன்றி பொருள் ஒற்றுமையினாலன்று என்பது அறியத்தக்கது.

**அருள்கொண்டாடும் அடியவர் இன்புற**
**அருளினான் அவ் அருமறையின் பொருள்**[14]

12. **பரபக்தி :** இறைவனைக் காணும்போது இன்பமும் காணாதொழியும்போது துன்பமும் அடைதல், **பரஞானம் :** இறைவனைத் தெளிவாக நேரே அறிதல். **பரமபக்தி :** இறைவனுடைய பிரிவில் சத்துக்கேடு உண்டாதல்; அதாவது தான் உள்ளாத் தன்மையின்றியே ஒழிதல்.
13. ஈட்டின் தமிழாக்கம்-ஈடு திருமகள் கேள்வன-மூன்று (பக். 55-56)
14. கண்ணிநுண் .5

**மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள்**
**நிற்கப் பாடிஎன் நெஞ்சுள் நிறுத்தினான்**[16]

என்று ஆழ்வாரின் சீடரான மதுரகவிகள் கூறியுள்ளாரே எனின், அவ்வாறு கூறியது வெறும் உபசாரத்தினாலேயே என்றுகொள்ளலே பொருந்துவதாகும். இதுகாறும் வேதத்தை யும் ஆழ்வார் பிரபந்தங்களையும் அவை நுவலும் பொருளின் அடிப்படையில் ஆய்வு நூல் ஒன்று எவரும் வெளியிட்ட தாகத் தெரியவில்லை.

அக்காலத்தில் வைகுந்ததிலுள்ள நித்திய சூரிகளும் சுவேதத்பவாசிகளான ஸ்ரீவைணவப் பெரியார்களும் காரிமாறப்பிரானது மகிமையை நேரில்காணும் பொருட்டுத் திருபுளியாழ்வாரின் கீழே எழுந்தருளியிருக்கும் இடத்திற்கு வந்து சேர, அவர்களைத் தமது திருவாய்மொழியில் ''பொலிக பொலிக''[16] என்று வாழ்த்தி ஒரு பதிகம் பாடிய தாக ஒரு வரலாறு சம்பிரதாயமாக, வழங்கி வருகின்றது.

இங்ஙனம் நம்மாழ்வார் இறைவனைத் திருவுள்ளத்தில் நிறுத்தி அவனை விடாது நினைந்து இன்புற்றுப் பாசுரங் களைப் பாடிக்கொண்டும் மதுரகவிகளுக்கு உபதேசித்துக் கொண்டும் முப்பத்தைந்து[17] ஆண்டளவும் இவ்வுலகில் எழுந்தருளியிருந்து அதன்மேல் 'அவாஅற்று அந்தமில் பேரின்ப வீடாகிய' பரமபத்தை அடைந்தார் என்பது வரலாறு.

நம்மாழ்வார் திருமால் திருவடியில் எப் பொழுதும் திகழ் கின்றார் என்பது வைணவ சமயக் கொள்கை. அதனால் திருமால் திருக்கோயில்களில் அப்பெருமானைச் சேவிக்கச்

15. கண்ணிநுண் 9
16. திருவாய் 5.2 திவ்வியார்த்த தீபிகை காண்க.
17. ஒரு சிலர் 32 ஆண்டே இவர் இந்த லீலா விபூதியில் இருந்ததாக மொழிவர்.

செல்லும் அடியார்கள் முடிமீது அவர் திருவடியாக வைக்கப் பெறுவதைச் 'சடகோபன், சடாரி' என்று வழங்கி வருவதைக் காணலாம்! 'சடகோபன்' 'சடாரி' என்பன நம்மாழ்வாரின் திருப்பெயர்களாகும்.

சடகோபரை அடைந்தவுடன், அவரிடத்துப் பேரன்பு கொண்டு அவரை ஆச்ரயித்த மதுரகவிகள் அவரையே தெய்வமாக எண்ணி அவர்மீது பத்துப் பாசுரங்களைக் கொண்ட 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற பிரபந்தம் பாடியுள்ளார். இது நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் முதலாயிரத்தில் இறுதிப் பிரபந்தமாக இடம் பெற்றுள்ளது. இந்நூல் எட்டெழுத்து மந்திரமாகிய பெரிய திருமந்திரத்தில் மிக முக்கியமான 'நம' என்ற நடுப்பதத்தின் பொருளை விளக்குவதாகக் கொள்வர் வைணவப் பெருமக்கள்' மதுரகவி கள் இவ்வுலகில் இருந்த அளவும் நம்மாழ்வாருக்குத் திருக் கோயில் அமைத்து வழிபாடெல்லாம் செய்து வரலானார்.

நம்மாழ்வார் அவதரித்த காரணத்தால் 'திருக்குருகூர்' என்ற அப்பெயர் மாறி ஆழ்வார் திருநகரி என்ற பெயரால் வழங்கி வருகின்றது. 'திருக்குருகூர்' என்ற திருப்பெயர் நூல் வழக்கில் மட்டுமே உள்ளது.

**உண்டோ வைகாசி**
**விசாகத்துக் கொப்பொருநாள்?**
**உண்டோ சடகோபர்க்**
**கொப்பொருவர்? — உண்டோ**
**திருவாய் மொழிக்கொப்பு?**
**தென்குருகைக் குண்டோ**
**ஒருபார் தனிலொக்கும்**
**ஊர்[18]**

— மணவாள மாமுனிகள்

18. உபதேச. ரத்ன-15

நம்மாழ்வார் மறைந்த பல ஆண்டுகட்குப் பின்னர் ஆழ்வார் திருநகரிக் கவிஞர் ஒருவர், மிகப்பெருமிதம் கொள்ளுகின்றார்; அவருக்கு எக்களிப்பே உண்டாகி விடுகின்றது. அந்த எக்களிப்பில்,

**இதுவோ திருநகரி?**
**ஈதோ பொருநை?**
**இதுவோ பரமபதத்து**
**எல்லை? – இதுவோதான்**
**வேதம் பகிர்ந்திட்ட**
**மெய்ப்பொருளின் உட்பொருளை**
**ஓதும் சடகோபன்**
**ஊர்?**

என்ற ஒரு வெண்பாவையே பாடி விடுகின்றார். இவர் அருளியுள்ள பிரபந்தங்கள் நான்கும் வேதங்களின் சாரமாகப் போற்றப் பெறுவதை இந்த வெண்பாவிலும் காணலாம்.

இந்தத் திருத்தலத்தின் தல விருட்சம் புளியமரமே. நம்மாழ்வார் இருந்த மரத்தின் பகுதியில் நாடோறும் திருமஞ்சன் வழிபாடு நடைபெற்று வருகின்றது. ஒரே மரமாக உள்ள இது பல பொந்துகளுடன் திகழ்கின்றது. இன்று ஏழு பிரிவுகளாகப் பிரிந்து திருக்கோயில் விமான முழுவதும் பரவி நிற்கின்றது. இது காய்த்த போதிலும் காய்கள் பழுக்காமல் பிஞ்சிலே உதிர்ந்து போகின்றன. இத்தலத்தைச் சுற்றியுள்ள புளிய மரங்கட்கும் இதே நிலை தான். திருப்புளியாழ்வாரின் அடியில் நம்மாழ்வார் இன்று அர்ச்சை வடிவில் காட்சி தருகின்றார். நம்மாழ்வாரின் பூதவுடலை அடக்கம் செய்த இடத்தில்தான் நம்மாழ்வாருக்குத் திருக்கோயிலை அமைத்து நம்மாழ்வாரின் திருமேனியைப் பிரதிட்டை செய்துள்ளனர். திருப்புளி யாழ்வாரைச் சுற்றிய பீடத்தின் மதிற் சுவர்களில் மேல்

வரிசையில் 108 திருப்பதி எம்பெருமான்களின் திருவுருவங்களும் கீழ்வரிசையில் ஆழ்வாராதிகளின் திருவுருவங்களும் அதற்கும் அடியிலுள்ள வரிசையில் யானை உருவங்களும் அமைக்கப் பெற்றுள்ளன. உற்சவ மூர்த்தமான ஆழ்வார் சோபன மண்டபத்திற்கு எதிரேயுள்ள பொன்குறட்டில் எழுந்தருளியுள்ளார்.

வைணவர்கள் 'மாறன்' என்ற சடகோபரையே ஏற்றமுடன் போற்றுவர். கம்பநாடனுக்கு நம்மாழ்வாரிடம் மிக்க ஈடுபாடு உண்டு. இராமகாதை பாடுவதற்குமுன் நம்மாழ்வாரின் திருவடிகளை நினைந்து வணங்கியிருப்பதையும் அஷ்டப் பிரபந்தம் பாடியருளிய திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்காரும் நம்மாழ்வார் துதியைக் காப்பாகத் தமது பிரபந்தங்களில் அமைத்திருப்பதையும் சிந்தித்துப் பார்க்கலாம். கம்பன் 'சடகோபர் அந்தாதி' என்ற ஒரு பிரபந்தத்தையே நம்மாழ்வார்மீது பாடி அவரைப் போற்றியுள்ளார்.

நம்மாழ்வாரிடத்து இராமாநுசரின் ஈடுபாடு அளவில் அடங்காதது. இந்த யதிராசர் திருக்குருகூருக்கு வரும் வழியில் திருப்புளிங்குடி[19] எம்பெருமானைச் சேவித்துவிட்டுத் திரும்பும்போது அங்கு வட்டாடிக் கொண்டிருந்த அர்ச்சகர் பெண்ணை 'இன்னும் குருகூர் எவ்வளவு தொலைவு இருக்கும்?' என்று கேட்க அவளும்,

19. இது நவதிருப்பதிகளில் நான்காவது திருத்தலம். சிவைகுண்டம் என்னும் இருப்பூர்தி நிலையத்திலிருந்துஇரண்டு கல் தொலைவிலுள்ளது. இத்திருப்பதி பொருநையாற்றின் தென்கரையில்உள்ளது. நவதிருப்பதிகளையும் நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார். இந்த ஒன்பதும் திருக்குருகூரைச் சுற்றியே அமைந்துள்ளது சூரியனைச் சுற்றி நவகோள்கள் அமைந்திருப்பதுபோல.

கூவுதல் வருதல் செய்திடாய் என்று
குரைகடல் கடைந்தவன் தன்னை
மேவிநன் கமர்ந்த வியன்புனல் பொருநல்
வழுதி நாடன், சடகோபன்[20]

என்று ஆழ்வார் இத்திருத்தலத்துப் பெருமானைப் பாடும் போது மேற்குறிப்பிட்டவாறு சொல்லிய வண்ணம் 'கூப்பிடு தூரம்' என்று சொல்லியதாகவும், இதனைக் கேட்ட உடையவர் அவனையே ஆழ்வாராக எண்ணித் தரையில் வீழ்ந்து வணங்கினார் என்பதும் வரலாறு.

நம்மாழ்வார் அவதரித்த திருக்குருகூரைப் பற்றித் திவ்வியகவி பாடியருளிய பாசுரம் நம் உள்ளத்தைக் கவர்வ தாக உள்ளது.

வளந்தழைக்க உண்டால் என்?
வாசல் மணந்தால்என்?
தெளிந்தகலை கற்றால்என்?
சீசீ—குளிர்ந்தபொழில்
தண்குருகூர் வாவிச்
சடகோபன் ஊர்எங்கள்
வண்குருகூர் என்னாத
வாய்[20]

[வளம்தழைக்க - வளமாக; கலை - சாத்திரங்கள்;
பொழில் - சோலைகள்; வாவி - குளம்]

என்பது பாசுரம். திருத்துழாய், மணத்துடன் தோன்றுவது போல் ஞானநலத்துடன் திருவவதாரித்த நம்மாழ்வார் பிறந்த ஊர் 'எங்கள் ஊர்' என்று ஒருதரமேனும் சொல்லுதலே வாய் படைத்த பயன் என்பது திவ்விய கவியின் கருத்தாக அமைந்து திகழ்கின்றது இப்பாசுரத்தில்.

திருநகரியைப் பற்றி இன்னொரு செய்தியும் வழங்கி வருகின்றது. பொருநையாற்றின் வடகரையில் 'காந்தீசுவரம்'

20. நூற். திருப். அந் 49

என்ற சிவன் கோயில் உள்ளது. இங்குக் கரூர் சித்தர் என்ற பெரியார் ஒருவர் இருந்ததாகவும், அவரிடம் நாய் ஒன்று இருந்ததாகவும் அது திருக்குருகூர் தெருக்களில் விழும் எச்சில் உணவை அருந்தி வந்ததாகவும் அறிகின்றோம். ஒருநாள் அந்த நாய் குருகூரிலிருந்து ஆற்றைக் கடந்து தன் இருப்பிடத் திற்குத் திரும்புங்கால் வெள்ளத்தின் நீர்ச்சுழலில் சிக்கி உயிர் இழந்ததாகவும், அப்பொழுது அதன் உயிர் ஒளிபெற்று மீளா உலகினை அடைந்ததாகவும், இதனை நேரில் கண்ணுற்ற சித்தர் அழகான பாடல் ஒன்றினைப் பாடிய தாகவும் அறிகின்றோம்.

வாய்க்கும் குருகைத் திருவீதி
எச்சிலை வாரியுண்ட
நாய்க்கும் பரமபதம் அளித்தாய்
அந்த நாயோடு இந்தப்
பேய்க்கும் பலமளித்தால் பழுதோ?
பெருமான் மகுடம்
சாய்க்கும் படிகவி சொல்லும்
ஞானத் தமிழ்க்கடலே.

என்பது அவர் பாடிய பாடல். இந்தச் சித்தரும் நம்மாழ் வாரைப் பாடி அவர் திருவருளைப் பெற்றது நமது நெஞ்சைக் குளுகுளுக்கச் செய்கின்றது. நாமும் மாறன் மலரடியைப் போற்றுகின்றோம்.

வைணவ உலகமும் ஆழ்வார்களின் தலைவராகிய இவரை,

திருக்குருகைப் பெருமான்தன் திருத்தாள்கள் வாழியே
திருவான திருமுகத்துச் செவிபென்றும் வாழியே
இருக்குமொழி என்னெஞ்சில் தேக்கினான் வாழியே
எந்தை எதிராசர்க் கிறைவனார் வாழியே
கருக்குழியில் புகாவண்ணம் காத்தருள்வோன் வாழியே
காசினியில் ஆரியனைக் காட்டினான் வாழியே
வருத்தமற வந்தென்னை வாழ்வித்தான் வாழியே
மதுரகவி தம்பிரான் வாழிவாழி வாழியே

என்று போற்றுகின்றது; வாழ்த்தி வணங்குகின்றது.

## 2. சோழநாட்டுத் திருப்பதிகள்

இன்று வைணவர்கள் எம்பெருமான் அர்ச்சை வடிவாக எழுந்தருளியிருக்கும் திவ்விய தேசங்களை 108 என்று கணக்கிட்டு உரைப்பர். இத்திருப்பதிகள்பற்றி விளக்க எழுந்த ஒன்பது நூல்களில் திவ்யகவி பிள்ளைப் பெருமாள் இயற்றிய நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதிதான் எங்ஙனும் பெருவழக்காக மேற்கொள்ளப் பெற்றுள்ளது. இது நூற்றெட்டுத் திருப்பதிகளை,

> ஈரிருப தாஞ்சோழம்;
> ஈரொன்ப தாம்பாண்டி;
> ஓர்பதின் மூன்றாமலைநா
> டோரிரண்டாம்—சீர்நடுநா(டு)

ஒன்பது நூல்களாவன : 1. திருவரங்கத்தமுதனார் இயற்றிய திருப்பதிக் கோவை 2. 108 திருப்பதி பெருமாள் கோவை (இயற்றியவர் பெயர் தெரியவில்லை). 3. வங்கிபுரத்தாய்ச்சி இயற்றிய நாலாயிரப் பாசுரப்படி 108 திருப்பதிக்கோவை. 4. பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் இயற்றிய 108 திருப்பதி அந்தாதி. 5. குரவை இராமாநுசதாசர் இயற்றிய 120 திருப்பதித்திருப்புகழ். 6. 108 திருப்பதிக் கலித்துறை அந்தாதி (இயற்றியவர் பெயர் தெரியவில்லை). 7. கோ. பட்டாபிராம முதலியார் இயற்றிய 108 விஷ்ணு தல மஞ்சரி. 8.'பலிஜ' இயற்றிய 108 திவ்யதேச யாத்ரா பிரபாவ சந்திரிகா. 9 E.V. Gopalan : Sri Vaishanva Divya Desams. (108 Tirupatis)

ஆறோ(டு) ஈரெட்டு தொண்டை
யவ்வடநா டாறிரண்டு
கூறுதிரு நாடொன்றாக்
கொள்.[2]

என்று திருப்பதிகளை வகைப்படுத்திக் காட்டுவார் திவ்விய க.வி. இதன்படி,

| | | | |
|---|---|---|---|
| சோழநாடு | 40 | பாண்டிநாடு | 18 |
| மலைநாடு | 13 | தொண்டைநாடு | 22 |
| நடுநாடு | 2 | வடநாடு | 12 |
| | | திருநாடு | 1 |

—ஆக 108 திருப்பதிகள்.

இந்த 108திருப்பதி எம்பெருமான்களும் திருப்புளி ஆழ்வாரின் கீழ் எழுந்தருளி இருந்த நம்மாழ்வாருக்குச் சேவை சாதித்த தாக வரலாறு.

சடகோபர் மங்களாசாசனம் செய்த (தம் பாசுரங்களில் எடுத்துக் காட்டிய) திருப்பதிகள் முப்பத்தாறு என்று தெரி கின்றது. இவற்றுள் தனிப்பதிகங்களால் கூறப்பெற்றவை சில[3]. சிலதிருப்பதிகள் பாசுரங்களின் இடைஇடையே எடுத்துக் கூறப் பெற்றவை.[4] ஆழ்வார் பாண்டிய நாட்டில் அவதரித்தவராதலால் பாண்டிய நாட்டுத் திருப்பதிகளையும் மலைநாட்டுத் (கேரளம்) திருப்பதிகளையுமே மிகுதியாக மங்களாசாசனம் செய்துள்ளார். சோழ நாட்டுத் திருப்பதிகள் கள் நாற்பதில் ஐந்தும், பாண்டி நாட்டு மலைநாட்டுத் திருப்பதிகங்களில் இருபத்து ஐந்து திருப்பதிகளும் இவர்

2. நூற். திருப். அந். 6
3. இங்ஙனம் கூறப்பெற்ற சைவத் திருப்பதிகளை பாடல் பெற்ற தலங்கள் என்று வகைப்படுத்துவர் சைவப் பெருமக்கள்.
4. இத்தகைய சிவத்தலங்களை 'வைப்புத் தலங்கள்' என்று வேறுபடுத்திக் காட்டுவர் அப்பெருமக்கள்.

பாசுரங்களில் இடம்பெற்றுள்ளன. ஏனையவை திருவேங்கடம் முதலிய வடநாட்டுத் திருப்பதிகள். மலை நாட்டுத் திருப்பதிகளில் சில இவரால் மட்டிலுமே பாடப் பெற்றவை. திருவேங்கடத்தை மிகுதியாகப் பல இடங்களில் பாராட்டியுள்ளார். திருவிருத்தத்தை ஆழ்வாருடைய முதற் பிரபந்தமாக கருதுவர் அறிஞர்கள். பாற்கடலும் பரமபதமும் நீங்கலாக இந்த லீலாவிபூதியில் உள்ள திருப்பதிகளில் திருவேங்கடத்தையே திருவிருத்தத்தில் முதலில் எடுத்துக் காட்டியுள்ளார். இவற்றை இந்த இயலிலும் வரும் இயல் களிலும் கண்டு மகிழ்வோம்.

முதலில் சோழ நாட்டுத் திருப்பதிகளில் முக்கியமான **கோயிலிலிருந்து**[5] (திருவரங்கம்) தொடங்குவோம். இத்

5. **திருவரங்கம்** (**கோயில்**) : திருச்சி - விழுப்புரம் இருப்பூர்தி வழியில் திருவரங்கம் என்ற நிலையத்தி லிருந்து ½ கல் தொலைவிலுள்ளது. நிலையத்தி லிருந்து எல்லாவித வாகன வசதிகளும் கிடைக்கும். கோயில் பெரிய நகரமாதலின் சத்திரங்கள், தங்கும் விடுதிகள், உணவு விடுதிகள், இராமாநுச கூடங்கள் முதலியன இங்கு உள்ளன. திருச்சியிலிருந்து நகரப் பேருந்துகள் அடிக்கடி வந்து கொண்டிருப்பதால் திருச்சியில் வசதியாகத் தங்கிக் கொண்டு இங்கு வரலாம். இங்குள்ள எம்பெருமான் திருமேனி ஸ்வயமாகவே ஆவிர்க்கப் பெற்றுப் பிறகு தேவர் முதலியோரால் பூசிக்கப் பெற்றது. நம் நாட்டில் இவ்வகை எட்டு உள்ளன. இவை திருவரங்கம், திருவேங்கடம், ஸ்ரீமுஷ்ணம், வானமாமலை, புஷ்கரம், நைமிசாரண்யம, பதரிகாசிரமம், சாளக்கிராமம் என்ற இடங்களில் உள்ளவை. ஸ்ரீமுஷ்ணம், புஷ்கரம் (ஆந்திரம்) இவை ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெறவில்லை. 'பூலோக வைகுந்தம்' என்று போற்றிப் புகழப்பெறும் இத்தலம் ஆழ்வார்களின் 245 பாசுரங்கள் பெற்றது. திருக்கோயில் ஏழு சுற்று களையுடையது; 21 கோபுரங்களைக் கொண்டது. மொட்டைக் கோபுரமாக இருந்த 'இராயர் கோபுரம்' அண்மையில் எழுப்பப் பெற்றது.

திவ்விய தேசத்தை நம்மாழ்வார் 12 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார்.

தண்ணந் துழாய்வளை கொள்வது;
யாமிழப் போம்நடுவே
வண்ணம் துழாவியோர் வாடை
யுலாவும்;வள் வாய்அலகால்
புள்நந் துழாமே பொருநீர்த்
திருவரங் கா! அருளாய்!
எண்ணந் துழாவு மிடத்துஉள
வோபண்டும் இன்னன்னவே

– திருவிருத். 28

[தண் - குளிர்ந்த; வாடை - வடக்கிலிருந்து வீசும் காற்று; வண்ணம் - மாமைநிறம்; வள்வாய் அலகு- கூர்மையான வாயின்நுனி; புள் - பறவை; நந்து உழாமே - சங்கைக் கொத்தாதபடி, பொரு - அலை மோதும்.]

என்பது திருவிருத்தப் பாசுரம். இதில் ஆழ்வார் நாயகனைப் பிரிந்த நாயகி வாடைக்கு வருந்தி இரங்கும் பாசுரத்தாலே தமது மனவருத்தத்தை வெளியிடுகின்றார். ஆற்றாமை மிகுதியால் தலைவனை எதிரில் நிற்பது போலப் பாவித்து முன்னிலைப் படுத்திக் கூறியது இது. அன்றி, உருவெளிப் பாட்டில் கண்ட தலைவனை நோக்கி உரைத்ததுமாகவும் கொள்ளலாம்.

விமானம் 'ஓம்' என்ற பிரவணமாகவும், 'நமோ நாராயணாய' என்ற எழுத்துகள் ஏழு மதில்களாகவும் அமைந்துள்ளதாகக் கூறுவர். 108 திருப்பதிகளில் அதிகமாக ஆழ்வார் பாசுரங்கள் பெற்றவை முதல் திருப்பதியாகிய இதுவே. இத்திருத்தலம் பற்றி நம்மாழ்வார் பாடியவை பன்னிரண்டு பாசுரங்களேயாகும்.

இதில் ஆழ்வார் நாயகி கூறுவது: 'உன்னோடு நேரில் சம்பந்தம் பெற்ற திருத்துழாயானது பிரிவுக் காலத்தில் புணர்ச்சிக் காலத்தை நினைவூட்டி மிகவும் வருத்தப்படுத்தி உடலிளைக்கச் செய்வதும் அதற்கு ஆற்றாது நாம் மெலிந்து வளை இழப்பதும் யுக்தமாயிருக்கலாம். அதுவன்றி 'வாயுவானவன் எம்பெருமானிடத்து அஞ்சிக் கொண்டு (அவனது கட்டளைக்கு உட்படிந்து) வீசுகின்றான்' என்ற உபநிடத வாக்கியத்தின்படியே இயல்பாக உனக்கு அஞ்சி நடக்கும் தன்மையதான காற்று உனது சம்பந்தம் பெற்ற நம்மைச் சமயம் பார்த்து வருத்திக் கொள்ளை கொள்ளத் தொடங்குவது தகுதியோ? என்னை நலியக் காற்றுக்கு என்ன உரிமை உண்டு? அங்ஙனம் ஆகாதபடி என்னைக் காத்தருள வேண்டும்; உன்பக்கல் அன்பு வைத்தவர்களில் எம்மைப் போல வருந்தியவரும் உன்னால் ஆதரவுகாட்டப்பட்டவரும் இதுவரையில் எங்கும் எவரும் இல்லையே'' என்கின்றாள். ''திருத்துழாயானது என்னை எவ்வளவு வேண்டுமானாலும் துன்பப் படுத்தட்டும்; அதற்கு நான் உடன்பட்டிருக்கக் கடமைப் பட்டிருக்கின்றேன்'' என்றது இதில் நோக்குடைய தல்ல; 'காற்று என்னைத் துன்பப் படுத்துவது ஒருபடியிலும் யுக்தமன்று' என்று வற்புறுத்திக் கூறுவதில் நோக்குடைத்து. ''ஒருபுறத்தில் திருத்துழாய் நலியவும் மற்றொரு புறத்தில் வாடை வந்து வீசி நலியவும் இப்படி இரண்டு துன்பங்களுக்கு ஈடு கொடுக்க என்னாலாகவில்லையே!; இந்தத் துன்பங் களுக்கு வாய்ப்பின்றியே எனக்குப் புணர்ச்சியைத் தந்தருளாய்'' என்கின்றாள்.

'வள்வாயலகால் புள் நந்துழாமே பொருநீர்த் திருவரங்கா!' என்ற விளியால் - ''உனது நாட்டுக்கு உறுப்பான தண்ணீரும் தன்னை யடைந்த பொருளை எதிராக வராதபடி திரைக்கையாற் பொருது காத்திடுகின்றதே; உனக்குமாத்திரம் அஃது இயல்பாகாதோ? அடுத்தாரைக்

காக்கும் தன்மை அசேதநத்துக்கே இருக்கும்போது பரம சேதநனான உனக்கு அது மிகவும் இருக்க வேண்டாவோ?'' எனக் குறிப்பிடும் நுட்பம் எண்ணி மகிழ்த்தக்கது. இயற்கையாயினும், தன்னிடத்திலுள்ள நத்தைகளைப் பறவைகள் கூர்மையான வாயலகால் கொத்தாமைக்காக அலைமோதுவதாக வருணித்தது சமத்காரம். உழுதல் - கொத்தித் தின்னுதல். இக்குறிப்பிட்ட கருத்தை உள்ளத்தில் அமைத்துக் கொண்டு பாசுரத்தை மீண்டும் மீண்டும் படித்து சுவையின் கொடுமுடியை எட்ட முயலலாம். தமது முதல் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் முதல் திவ்விய தேசமாகிய **கோயிலை** (திருவரங்கம்) மங்களாசாசனம் செய்யப் பெற்றிருப்பதைக்கண்டு மகிழலாம்.

(1) இந்தத் திவ்விய தேசத்தின்மீது மங்களா சாசனம் செய்தது 'கங்குலும் பகலும்' (7, 2) என்ற முதற்குறிப்புடைய திருவாய்மொழியாகும். இது 'தாய்பாசுரமாக' நடைபெறுகின்றது. இத்திருப்பதிகத்தில்,

**'என்திரு மகள்சேர் மார்வனே' என்னும்;**
**'என்னுடை யாவியே' என்னும்;**
**'நின்திரு எயிற்றால் இடந்துநீ கொண்ட**
**நிலமகள் கேள்வனே!' என்னும்;**
**'அன்றுரு வேழும் தழுவிநீ கொண்ட**
**ஆய்மகள் அன்பனே!' என்னும்;**
**தென்திரு வரங்கம் கோயில்கொண் டானே!**
**தெளிகிலேன் முடிவிவள் தனக்கே (9)**

[என்திருமகள் - எனக்குப் புருஷகார பூதையான் பெரிய பிராட்டி; ஆவி - உயிர்; எயிறு - கோரப்பல்; நிலமகள் - பூமிப் பிராட்டி; கேள்வன் - நாயகன்; ஆய்மகள் - நப்பின்னை; முடிவு - ஆர்த்தி முடிவு]

என்பது ஒன்பதாவது பாசுரம். இத் திருவாய்மொழியில், ''திருத்தாயார் இப்பராங்குச நாயகியைப் பெரிய பெருமாள் திருவடிகளிலே இட்டுவைத்துக் கொண்டிருந்து இவள் அழுவது தொழுவது மோகிப்பது பிரலாபிப்பது அடைவு கெடப் பேசுவது நெடுமூச் செறிவது அதுவும் மாட்டா தொழிவது தன்னை மறந்திருப்பது முதலியவற்றை ஒவ் வொன்றாக எடுத்துச் சொல்லி இவள் திறத்திலே நீர் என்செய்வதாகத் திருவுள்ளம் பற்றியிருக்கின்றீர்?'' என்று கேட்கின்ற படியாய்ச் செல்லுகின்றது இத்திருவாய் மொழி. நம்பிள்ளை யீடு; ''இத்திருத்தாயாரும் எல்லாப் பாரங்களை யும் அவன் தலையிலே போகட்டுப் பெண்பிள்ளையைத் திருமணத்தூணுக்குள்ளே போகட்டுப் பற்றிலார் பற்ற நிற்றல் முதலாகிய அவனுடைய குணங்களை விண்ணப்பம் செய்யா நின்றுகொண்டு ஒரு கால நியதியாதல், ஒருதேச நியதியாதல், அதிகாரி நியதியாதல் இன்றிக்கே எல்லாரும் சென்று பற்றலாம்படி இருக்கிறபடியை அநுசந்தித்து (நினைத்து) தன் பெண்பிள்ளையினுடைய நிலையைத் திருவுள்ளத்திலே படுத்துகின்றாள் இத்திருவாய் மொழியாலே'' என்பது.

இந்தப் பாசுரத்தில், பெரிய பிராட்டியாரைப் புருஷகார மாகக் கொண்டவர்களுக்குப் பலனில் விசனம் இல்லாமை யாலே ''அந்தோ! நான் பெரிய பிராட்டியாரைப் புருஷகார மாகப் பற்றியிருக்க, என் கதி இங்ஙனே யாவதே!'' என் கின்றாள் திருத்தாயார். இங்கு 'என்' என்பது திருமகளுக்கு அடைமொழி என்பது தெளிவு; மார்பனுக்கு அடைமொழி ஆக்கலாகாது. ''அனந்தாழ்வான் தன் பெண்பிள்ளையை 'என்திருமகள்' என்று திருநாமம் சாத்தினான்' என்பது ஈடு.

''என் திருமகள் சேர்மார்பனே யென்னும்'' என்று ஒரு வாக்கியமாகவும், ''என்னுடையாவியே யென்னும்'' என்று

மற்றொரு வாக்கியமாகவும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். அன்றி, முதலடி முழுவதையும் 'என்திருமகள் ஆவியே என்னும்' என்று ஒரே வாக்கியமாகப் பொருள் கொள்வதும் உண்டு. இங்கே ஈட்டில் ஆச்சரியமானதோர் ஐதிகம் காணலாம். பெருமாளுக்கு விண்ணப்பம் செய்யுமவை கேட்கைக்காக நஞ்சீயரை அழைத்தருளித் தாம் அது செய்யா நிற்கச் செய்தே இத் திருவாய்மொழி இயலைக் கேட்டருளா நிற்க, இப்பாட்டளவில் வந்தவாறே, "என் திருமகள் மார்பனே என்னும் என்னுடைய ஆவியே என்னும்" என்று இயலைச் சேர்த்தருளிச் செய்ய அதைக் கேட்டுக் கையுதறி "ஸ்ரீரங்கநாத! என்று அணையிலே சாய்ந்தருளினார் பட்டர்" என்று அருளிச் செய்வர். "அப்போது திருமேனியிலே பிறந்த வேறுபாட்டினைக் கண்டு 'இவர்க்குப் பகவானை அடைவது அணித்தாகிறதோ? என்று அஞ்சியிருந்தேன்" என்று சீயர் (நஞ்சீயர்) அருளிச் செய்வர். இதனை மேலும் விளக்குவேன்.

பட்டர் ஸ்ரீரங்கேச புரோகிதர். இவர் அடிக்கடி எம் பெருமான் சந்நிதியில் உபன்யாசங்கள் செய்யநேரும். அதற்காக முன்னதாகவே நஞ்சீயரை அழைத்து[6] அருளிச் செயல்பாசுரங்களைச் சொல்ல விட்டுச் செவிக்கினியதாகக் கேட்பது வழக்கம். அமுது செய்து கொண்டே ஒரு நாள் கேட்டருள்கின்றார். அப்போது இயல் சேவிக்கின்ற நஞ்சீயர் இப்பாசுரத்தைச் சேவிக்கும் போது "என் திருமகள் சேர்மார்பனே என்னும்" என்கின்ற இடத்தில் நிறுத்தாமல் ஒரே மூச்சில் முதலடியை முழுதும் சொல்லி நிறுத்தினாராம். 'என்னும்' என்பதற்கு 'என்று சொல்லுகின்றாள்' என்ற பொருள்தவிர 'என்று சொல்லப்படுகிற' என்ற பொருளும உண்டாதலால் "என் திருமகள் மார்பன் என்று சொல்லப்

6. நஞ்சீயர் பட்டரை ஆச்ரயித்துச் சீடரானவர்.

படுகின்ற என்னுடைய ஆவியே என்கின்றாள்'' என்று நஞ்சீயர் நிறுத்தினபடி. பட்டர் அந்த இன்சுவையையறிந்து திருவுள்ள முடைந்து குலைப்பட்டார் என்றதாயிற்று. "இவர்க்குப் பிராணன் ஒரு காற்று விசேடமன்று; ஒருமிதுன மாயிற்று. திருமகள்சேர் மார்பனாய்க் கொண்டு எனக்குத் தாரகனானவனே! என்னும்''

(2) **திருக்குடந்தை**[1] எம் பெருமானை மங்களாசாசனம் செய்த ஆழ்வார் பாசுரத்தில் ஆழங்கால் படுவோம். இந்த எம்பெருமானை '**ஆராவமுதே**' (5. 8) என்ற திருவாய் மொழியில் மங்களாசாசனம் செய்கின்றார். இதன் முதற் பாசுரம்,

1. குடந்தை (கும்பகோணம்) : மயிலாடுதுறை - திருச்சி இருப்பூர்தி வழியிலுள்ள ஒரு நிலையம். இத்திரு நகரின் நடுவில் அமைந்திருக்கும் சாரங்கபாணிப் பெருமாள் கோயிலில் எழுந்தருளியிருக்கும் எம் பெருமான் ஆராஅமுதன். இவன்மீது பாடப் பெற்ற 'ஆராவ முதே' எனத்தொடங்கும் திருவாய் மொழியே (5.8) 'நாலாயிரத் திவ்வியப் பரபந்தம்' என்ற பக்திப் பனுவல் கிடைப்பதற்கு ஒரு திறவு கோலாக இருந்தது. இஃது ஒரு சுவையான நிகழ்ச்சி. இத்திருக் கோயில் கும்பகோணத்திலுள்ள எல்லாத் திருக்கோயில்களையும்விட மிகப்பெரியது. கோபுரமும் அப்படியே மிகப்பெரிதாக அமைந் துள்ளது; பதினொருமாடங்களைக் கொண்டது. பெருமாள் சந்நிதியும் முன்மண்டபங்களும் ஓர் இரதப்போல் அமைக்கப்பெற்றுள்ளன. மண்ட பத்தின் நான்கு பக்கங்களிலும் சக்கரங்கள், இரதத்தை இழுத்துச் செல்லும் குதிரைகள் உள்ளன. இதனை நோக்கிய திருமங்கையாழ்வாரும் இக்கோயில் எம்பெருமானைப்பற்றி 'திருஎழுக் கூற்றிருக்கை' என்னும் பிரபந்தத்தை 'இரதபந்தம்' என்ற சித்திரக் கவியாக அமைத்தனர் போலும்! பக்திசாரர் என்ற திருமழிசையாழ்வார் குடந்தையில்தான் தம் இறுதி நாட்களைக் கழித்து பரமபதித்தார்.

ஆரா அமுதே அடியேன் உடலம்
　　நின்பால் அன்பாயே
நீராய் அலைந்து கரைந்து உருக்கு
　　கின்ற நெடுமாலே
சீரார் செந்நெல் கவரி வீசும்
　　செழுநீர்த் திருக்குடந்தை
ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்!
　　கண்டேன் எம்மானே! (1)

[ஆரா - தெவிட்டாத; சீரார் - சிறப்புப் பொருந்திய;
　சவரி - சாமரை; ஏரார் - அழகு பொருந்திய]

என்பது. இந்தப் பாடல்தான் நாதமுனிகட்கு 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' என்னும் பக்திக் கருவூலத்தைக் காண்பதற்கு ஒரு திறவு கோலாக அமைந்தது.

இத்திருவாய்மொழியில் நம் பூருவர்கள் பெரிதும் ஈடு பட்டிருந்தனர். இத்திருவாய்மொழிப் பாசுரங்கள் யாவும் கல் நெஞ்சத்தையும் உருக்குவன. இதனாலன்றோ திருவாய் மொழி முற்றிலும் மறைந்த நிலையிலும் இத்திருவாய் மொழிப் பாசுரங்கள் மேல் நாட்டிலிருந்து காட்டு மன்னார் கோயிலுக்குப் போந்த பாகவதர்களின் நாவில் நடமாடியது. ஆழ்வாரும் தாய்ப்பக்கம் கிட்டி முகம் பெறாத கன்றுபோல் அமைந்து நோவு படுமாப் போலே அவன் சந்நிதியில் தளர்ந்து கிடந்து ஆர்த்தியுடன் கூப்பிட்டு அலமரு கின்றார்.

**ஆரா அமுதே** : கடலில் உப்புச்சாறு (அமுதம்) குடிப் பார்க்கும் தேவயோநியில் பிறக்க வேண்டும், பிரமச்சரியம் அநுட்டிக்க வேண்டும். இத்தனையும் இருந்தால் ஒரு தடவையே உண்ணக் கூடியதாக இருக்கும். வடநாட்டில் லோகசாரங்க மகா முனிகள் என்ற ஒருவர் வசித்து வந்தார். இங்குள்ள ஒருவன் அங்குச் சென்றான். அவனை நோக்கி

முனிகள், "பிள்ளாய், தென்னாட்டில் விசேடம் ஏதாவது உண்டா?" என்று வினவினார். அவன், "திருவாய்மொழி என்ற ஒரு பிரபந்தம் அவதரிக்க, அதனைச் சீடர்கள் மேற் கொண்டு போரக் கொண்டாடிக் கொடுபோக நின்றார்கள்" என்று பதிலிறுத்தான். உடனே முனிகள், அதிலே ஒரு பாசுரத்தைக் கூறுக" என்ன, அவனும் "ஆராவமுதே" என்கின்ற இத்துணையே எனக்குத் தெரியும்" என்று பதிலிறுத்தான். முனிகளும் "நாராயணன் முதலிய நாமங் கள் இருக்க, இங்ஙனேயும் ஒரு பொருள் உண்டாவதே' என்று அதனைக் காண மிக்க ஆவலுடையாராய் "இச் சொல் நடையாடுகின்ற தேசத்துக்குப் போவோம்" என்று அப்பொழுதே புறப்பட்டுப் போந்தார். இஃது ஈட்டில் கண்ட வரலாறு.

ஆழ்வார் அர்ச்சையிலிருக்கும் எம்பெருமானைச் 'செழு நீர்த் திருக்குடந்தை, ஏரார் கோலம், திகழக் கிடந்தாய் எம்மானே" என்று கூறிச் சேவிக்கின்றார் . அதன்பின்னர் 'திருக் கண்கள் மலர்ந்தாலன்றித் தரிக்ககில்லாத அடியேன் இப்படியே பட்டினி கிடந்து போக வேண்டியது தானோ? (2); கழிகின்ற நாட்களெல்லாம் உன் திருவடிகளையே பற்றிக் கொண்டு நடக்கும் படி கடைக்கண் நோக்க வேண்டும் (3); 'நான் உன்னைக் காண்பான் அலப்பு ஆய் (அலமந்து) ஆகாயத்தை நோக்கி அழுவன், தொழுவன்' (4); உன் சரணம் தந்து என் சன்மம் களைவாய் (7); என் அநாதி பாவங்களைத் தொலைத்து உன்னைப் பெறுவதொரு நல் விரகு பார்த்தருள வேண்டும் (6); உடல் தளர்ந்து என் உயிர் சரிந்து போம்போது இளையாது உன் திருவடிகளையே ஒரு மிக்கப் பிடித்துப் போகும்படி திருவுள்ளம் கொள்ள வேண்டும் (8); உன் திருவடிகளைச் சேரும்படி நீயே வழி செய்ய வேண்டும் (5); நான் கண்டு அநுபவிக்கும்படி என் முன் வருதல் வேண்டும் (9);உனக்கு அடிமைப்பட்ட பிறகு

இன்னும் உழல வேண்டுமோ? (10) என்று கூவிக் கூவிக் கண்பனி சோருகின்றார் இந்தப் பாசுரங்களைப் பல முறை படித்து உளங்கரைந்து பெறும் அநுபவம் அலாதியானது.

(3) ஆழ்வார் மங்களாசாசனம் செய்த ஒப்பிலியப்பன் சந்நிதிக்கு வருகின்றோம். மார்க்கண்டேயர் வளர்ப்பு மகள் 'பூமிப்பிராட்டியை' மணப்பதற்கு எம்பெருமான் விண்ணுலகி னின்றும் வந்தபடியால் இத் திருத்தலம் 'திருவிண்ணகர்'* என்ற திருப்பெயர் பெற்றது. மார்க்கண்டேயரும் துளசி தேவியும் தவம் புரிந்த இடமாதலால் 'மார்க்கண்டேய க்ஷேத்திரம்' 'துளசிவனம்' என்ற திருநாமங்களையும் பெறு கின்றன. புராண வரலாற்றுப்படி உப்பிலியப்பன் சந்நிதி; உப்பில்லாத பண்டம் நைவேத்தியம் ஆகின்றது. 'தன் ஒப்பார் இல் அப்பன்' (திருவாய். 6. 3: 9) என்று நம்மாழ்வார் மங்களா சாசனப்படி இத்திருத்தலம் 'ஒப்பிலியப்பன் சந்நிதி என்று திருநாமம் பெறுகின்றது.' திருமங்கை யாழ்வார் இத் தலத்து எம்பெருமானை 'விண்ணகருள் பொன் மலை' என்று உருவகித்து மகிழ்கின்றார்,

8. திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன்சந்நிதி) : இது கும்ப கோணத்திலிருந்து ஆறு கி.மீ. தொலைவு. குடந்தை யிலிருந்து அடிக்கடி நகரப் பேருந்து வசதி உண்டு. தொலைவிலுள்ள சில ஊர்கட்குப்போகும் பேருந்து களும் இச்சந்நிதி வழியாகச் செல்லும். நாகேஸ்வர இருப்பூர்தி நிலையத்திலிருந்தும் இச்சந்நிதியை அடையலாம்; இங்கிருந்து மூன்று கி. மீ. தொலைவு. ஒருசிறு பயணிகள் விடுதி இங்கு உண்டு. நல்ல உணவு விடுதிகள் இல்லை. எனவே, புதிதாக வருபவர்கள் கும்பகோணத்தில் நல்ல விடுதியொன்றில் தங்கிக் கொண்டு இத்திருத்தலச் சேவைக்குப் போதல் சிறந்தது.

இச்சந்நிதிபற்றிய முழுவரலாற்றையும் இவ் வாசிரியரின் சோழ நாட்டுத் திருப்பதிகள் இரண்டாம் பகுதி (10 ஆம் கட்டுரை) காண்க.

திருவிண்ணகர் எம்பெருமானை அநுபவிக்கும் திரு மங்கையாழ்வார் 'திருநறையூர்த் தேனே!' (பெரி. திரு 6. 3: 3) என்று கூறுகின்றார். இதற்குப் பொருள் கூறும் பராசர பட்டர், "திருநறையூர் பெருக்குக்குச் சினையாறு படுகின்றது கிடாய்"! என்று அருளிச் செய்வர் என்பது பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியான ஸ்ரீ சூக்தி, இதன் அழகிய கருத்து அறிந்து கொண்டு மகிழ வேண்டும். திருவிண்ணகர்த் திருப்பதிபற்றிய இத்திருமொழி முடிந்தவுடனே பத்துத் திருமொழிகளால் (100 திருப்பாசுரங்களால்) திருநறையூரை அநுபவிக்கப் போகின்றார் ஆழ்வார். ஆற்றில் பெரு வெள்ளம் வரப் போவதற்கு முன்னே ஆறு பொசிந்து காட்டுவது வழக்கம். அதுபோல 100 பாசுரங்களால் திருநறையூர்த் திருப்பதி அநுபவமாகின்ற பெருவெள்ளம் அண்மையில் இருப்பதனால் அதற்கு முன்னடையாளமாகத் 'திருநறையூர்த் தேனே!' என்று இவ்வாறு பொசிந்து காட்டு கின்றது என்பதாகும்.

நம்மாழ்வார் திருவிண்ணகர்ப்பனை அநுபவிப்பதை நாமும் அநுபவிக்க ஆயத்தமாகின்றோம். ஆழ்வார் எம் பெருமானின் பரத்துவத்தை அர்ச்சையில் காண்கின்றார்.[10] உலகில் தம்மில்தாம் சேராத மாறுபட்ட பொருள் கள் யாவற்றிலும் எம்பெருமான் அந்தர் யாமியாய்ச் சேர்ந்திருக்கும் படியைக் கண்டு மகிழ்கின்றார்; வியக் கின்றார். "வறுமை - செல்வம், நரகம் - சுவர்க்கம், பகை - நட்பு, நஞ்சு - அமுது, என்று ஒன்றோடொன்று பொருந்தாத பொருள்களாய் விரிந்திருக்கும் எம்பெருமான் என்னை அகப்படுத்திக் கொள்ளவே இங்ஙனம் இருக் கின்றார். ஒருவனை அகப்படுத்த நினைத்தார் ஊரை வளையு மாறு போலே (1); இன்பம் - துன்பம் ,கலக்கம் -

10. திருவாய் 6. 3.

தேற்றம், சீற்றம்-அருள், தழல்-நிழல், என்று இவை எல்லா வற்றாலும் கண்டு கோடற்கரியவன் திருவிண்ணகரப்பன் (2); இன்பம் நுகர்ந்திருக்கும் நகரத்திலுள்ளார் - பயிர்த்தொழில் செய்து கொண்டு தேக யாத்திரை நடத்திக் கொண்டிருக்கும் நாட்டுப் புறத்திலுள்ளார், அறிவு - அறியாமை; ஒளி - இருள் பூமி - ஆகாயம் என்று இருப்பவன் திருவிண்ணகர் மேய பிரான் (3) ;புண்ணியம் - பாவம், புணர்ச்சி- பிரிவு, நினைவு- மறதி, உண்மை - இன்மை என்று சிறப்பாகத் தோன்று கின்ற விபூதிகள் யாவும் திருவிண்ணகரப்பன் கருணையால் உண்டாயின (4); வஞ்சனை - நேர்மை, கருமை - வெண்மை மெய் - பொய், இளமை - முதுமை, புதுமை - பழைமை இவை திருவிண்ணகரப்பன் வைத்து வளர்க்கின்ற சோலை கள் (5); மூன்று உலகங்கள் - பரமபதம், மகிழ்ச்சி - சீற்றம், சீதேவி - மூதேவி, புகழ் - பழிப்பு என்ற நிலையில் எழுந்தருளி யிருப்பவன் விண்ண கரப்பன் (6); பரஞ்சுடர் - உடம்பு, உலக உடம்பு, கண்களுக்குப் புலனாகாத் திருமேனி, அவதாரத் திருமேனி, நீண்டநாள் நிலைபெற்றிருக்கும் திருமேனி, வஞ்சனையான காரியங்களைச் செய்பவன் என்று விண்ண கரில் எழுந்தருளியிருப்பவன் திருவடிகளன்றிப் புகல் ஏதும் இல்லை (7); தேவர்க்குச் சிறந்த புகல் இடம் - அசுரர்க்குக் கொடிய யமன், சரண் அடைந்தவர்களைக் காத்தல் - அடையாதாரைக் காவாதிருத்தல் என்ற நிலையில் எழுந்தருளியிருப்பவன் என்னை ஆளும் அப்பன் (8); விண்ணகரான் எனக்கு அப்பன், செவிலித்தாய், நற்றாய்; எனக்குப் பொன்னைப் போன்றவன், மணியைப்போன்றவன் முத்தைப் போன்றவன் (9); நிழல் - வெயில், சிறுமை - பெருமை, குறுமை - நெடுமை, திரிபவை - நிற்பவை, மற்றும் ஆயவை - அவையல்லவை என்ற நிலைகளிலுள்ள விண்ண கரப்பனின் திருவடிகளன்றி வேறு ஒரு பற்றுக் கோடும் இல்லை" (10) என்கின்றார். இந்த மனநிலையில் ஆழ்வாரின்,

என்னப்பன் எனக்காய் இகுளாய்
என்னைப் பெற்றவளாய்,
பொன்னப்பன் மணியப்பன், முத்தப்பன்,
என்னப் பனுமாய்,
மின்னப் பொன்மதிள் சூழ்திரு
விண்ணகர் சேர்ந்தஅப்பன்
தன்னொப்பார் இல்அப்பன் தந்தனன்
தனதாள் நிழலே(10)

(இகுளை—செவிலித்தாய்; தன்ஒப்பார் இல் அப்பன் — ஒப்பிலியப்பன், தாள்—திருவடி)

என்ற பாசுரம் நம்மனத்தில் குமிழியிடுகின்றது. இப்பாசுரத்தில் குறிப்பிடப் பெற்றுள்ள பொன்னப்பன், மணியப்பன், முத்தப்பன், என்னப்பன், திருவிண்ணகரப்பன் என்ற ஐந்து வடிவங்களுடன் எம்பெருமான் காட்சி அளித்ததாக நாம் கருதமுடிகின்றது.

(4), திருவிண்ணகரிலிருந்து (கும்பகோணம்வந்து)திருவையாறு வழியாகக் கல்லணைக்குவரும் பேருந்தில் சென்று திருப்பேர்நகரை[11] அடையலாம். நம்மாழ்வார் திருப்பேர்

11. திருப்பேர் நகர் : கொள்ளிடத்தின் தென்கரையில் உள்ளது. இலால்குடி அருகிலுள்ள அன்பில் என்ற திருத்தலத்திற்கு நேர் தெற்கில் (கொள்ளிடத்தைக் கடந்து) 2½ கல்தொலைவு. கோடைக் காலத்தில் அன்பிலிலிருந்து நடந்தே வரலாம். திருச்சியிலிருந்து நேர் கிழக்கில் 22 கி. மீ. தொலைவில் உள்ளது. கல்லணைவரை பேருந்து வசதி உண்டு. அணையைத் தாண்டி இத்திருத்தலத்தை அடையலாம். கும்பகோணத்திலிருந்து திருவையாறு வழியாகக் கல்லணைக்கு வரும் பேருந்தில் வந்து இவ்வூரை அடையலாம். நானும் என் இளையமகன் இராமகிருஷ்ணனும் (அப்போது—8 ஆம் வகுப்பு காரைக்குடியில் படித்துக் கொண்டிருந்தான்) 1965 செப்டம்பரில் அன்பில் வழியாக ஆற்றைக் கடந்து

நகர் எம்பெருமானை ஆராஅமுதமாய் அநுபவிக்கும் திறம் (திருவாய் 10.8) சொல்லுந்தரமன்று.

'திருமாலிருஞ் சோலை
மலைஎன்றேன்; என்ன
திருமால்வந்து என் நெஞ்சு
நிறையப் புகுந்தான்(1)

என்று எடுத்த எடுப்பில் ஒரு சிறு காரணத்தை முன்னிட்டு எம் பெருமான் தன் நெஞ்சில் புகுந்தபடியை எடுத்துக் கூறி வியக்கின்றார். திருமாலிஞ்சோலைமலை...........புகுந்தான்: என் "ஊரைச் சொன்னாய், என் பேரைச் சொன்னாய். என் அடியாரை நோக்கினாய்.........என்றாற் போலே சிலவற்றை ஏறிட்டு, மடிமாங்காய் இட்டு[12] விஷயீகரிக்குமவனான எம் பெருமானுக்கு" (ஸ்ரீவசனபூஷணம் - 38.) என் பக்கலிலே ஒரு பற்றாசு கிடைத்தது; அஃது ஏதென்னில் : என் வாயில் 'திருமாலிருஞ் சோலை மலை' என்று ஒரு சொல் யாத்ருச்சிக

இத்தலத்தைச் சேவித்ததை நினைவு கூர்கின்றேன். 'இத்திருத்தலம் 'கோயிலடி' என்றும் 'அப்பக்குடத்தான் சந்நிதி' என்றும் வழங்கப்படுகின்றது. 'வக்கான் வாய்முன் கீண்ட மாயன்' என்பது மங்கை மன்னன் இந்த எம்பெருமானுக்குச் சூட்டிய பெயர். இந்திராதேவி, கமலவல்லி—தாயாரின் திருநாமங்கள், எனக்குக் கீழ்வகுப்புகளில் ஆசிரியராக இருந்து தனியாகக் கற்பித்து உயர் நிலைப் பள்ளியில் நாலாம் படிவத்தில் சேர்த்து என்னைக் கல்விக் கரை ஏற்றிய திரு. V. K. அரங்கநாதஅய்யர் கோயிலடியைச் சேர்ந்தவர் என்று சொல்லிக் கொள்வார்.

12. மடிமாங்காய் இட்டு—மாங்காய் எடாமலேயே வாளா வழிபோகின்றவன் மடியிலே, மாங்காயை மறைத்துக் கொண்டு சென்று இட்டு 'மாங்காய் களவு கண்டாய்' என்பது பொருள். இது வலிய ஏறிடுவதற்கு உவமை.

மாக[15] வெளிவந்தது; மற்ற மலைகளிற் காட்டிலும் திரு மாலிருஞ் சோலை மலைக்கு ஒரு சிறப்பு உண்டென்று கொண்டு புத்திபூர்வமாகச் சொன்னேன் அல்லேன், கொக்கு மலை, குருவி மலை என்று பல மலைகளையும் சொல்லிப் போகின்றவரிசையில் "திருமாலிருஞ் சோலை மலை" என்று இதனையும் சொன்னேன். இதனையே ஒரு பற்றாசாகக் கொண்டு அவன் பெரியபிராட்டியாரோடு என் நெஞ்சு நிறையப் புகுந்தான்" என்கின்றார் ஆழ்வார்.

**பேரே உறைகின்ற**
**பிரான் இன்று வந்து**
**பேரேன் என்று என்**
**நெஞ்சுநிறையப் புகுந்தான்** (2)

(பேரே—திருப்பேர் நகரிலேயே; பேரேன்—பேரமாட் டேன்)

என்று புகுந்த நிலையைப் பேசுகின்றார், எல்லா உலகங் களையும் காத்தும்கூட தான் ஒன்றும் செய்யாதவனாகக் குறை பட்டிருந்தான் எம்பெருமான் ஆழ்வார் திருவுள்ளத் தில் வாசம் கிடைக்கப் பெறாமையிலே. தாமரைப் பூவைத் துறந்து தன் திருமார்பிலே வந்து சேர்ந்த பிராட்டியார் 'அகலகில்லேன், அகலகில்லேன்' என்று சொல்லிக் கொண் டிருந்தது போல் தானும் 'பேரேன், பேரேன்' (ஆழ்வார் திருவுள்ளத்தை விட்டுப் பேர்ந்து செல்லமாட்டேன்) என்று சொல்லிக் கொண்டே புகுந்தோன் என்கின்றார்.

"திருப்பேரான் அடிசேர்ந்தமையானது அடியேனுக்கு எளிதான விதம் என்னே!" என்று கூறி வியக்கின்றார்.

13. யாத்ருச்சிகம்—யாத்ருச் சயாம் பவம்—யாருத்ருச் சிகம்; யாரோ ஒருவருடைய இச்சையில் உண் டாவது.

பிடித்தேன் பிறவிகெடுத்
தேன்பிணி சாரேன்
மடித்தேன் மனைவாழ்க்கையுள்
நிற்பதோர் மாயையை(3)

(மனைவாழ்க்கை—சம்சாரம்; மடித்தல் — திரும்புதல்; மாயை—அஞ்ஞானம்)

என்று கூறி இனியராகின்றார். இங்கே ஈட்டில் ஓர் ஐதிகம்; உண்டவுடனே 100 அடி நடக்கவேண்டும் என்பது சாத்திரம். இதனை அநுசரித்து எம்பெருமானார் உணவு உண்டவுடன் மடத்திற்குள்ளே உலாவினார். அப்போது 'திருமாலிருஞ் சோலை மலை' எனத் தொடங்கும் திருவாய்மொழியை அநுசந்தித்துக் கொண்டிருந்தார். 'மடித்தேன்' என்று இதற்குச் சேர மேலே போகாமல் திரும்பியருளினார். இதனைக் கதவின் சந்து வழியாக எம்பார் (உடையவரின் இளவல்) கண்டு 'இப்போது இன்ன திருவாய்மொழி அநுசந்தான மன்றோ திருவுள்ளத்தில் ஓடுகின்றது!' என்றாராம். 'ஆம்' என்று விடையிறுத்தாரம் எம்பெருமானார்.

திருப்பேர் நகர் எம்பெருமான் திருநாட்டையே தந்து விட்டான் என்ற களிப்பால்—எக்களிப்பால்—,

எளிதாயின வாறென்று
என்கண்கள் களிப்ப
களிதாகிய சிந்தையி
னாய்க்களிக் கின்றேன்(4)

(சிந்தை-நெஞ்சு; களித்தல்-பரமானந்தம் அடைதல்)

என்று தன் பரமானந்தத்தை வெளியிடுகின்றார் ஆழ்வார். ''என்உடம்பினுள் புகுந்து புண்ணிய பரிவங்களைப் போக்கியருளினான்''(5); என்பால் எழுந்தருளி வரும்போதே 'இருப்பேன், இருப்பேன்' என்று சொல்லிக் கொண்டே, வந்தான்'', அவனுடைய அபிமானத்தைப் பெற்று அமுதம் பருகினதோடொப்பக்களித்தேன்''(6) என்கின்றார்.

உண்டுகளித் தேற்கு
 உம்பரென்குறை மேலைத்
தொண்டு உகளித்து அந்தித்தொழும்
 சொல்லுப் பெற்றேன் (7)

(உம்பர்-மேலுலகம்; அந்தித் தொழும் உகளித்து-அதிசயித்து; சொல் - 'நம' என்பது)

"இப்படிப் பட்ட அநுபவம் பெற்றுக் களிப்பதைவிடப் பரமபதாநுபவத்தில் என்ன சிறப்பு உள்ளது? (அதில் விருப்பம் உடையேம் அல்லேம் என்பது கருத்து). கைங்கரிய ரசம் அதிசயித்தால் அதன் எல்லையான நிலைமையிலே சொல்லக் கடவதான தொழும் சொல் 'நம்;' என்பது; இது தான் முடிவான பேறு; இதனையும் இங்குப் பெற்றேன்" என்கின்றார்.

கண்ணுள் நின்றகலான்
 கருத்தின்கண் பெரியன்;
எண்ணில் நுண்பொருள்
 ஏழிசையின் சுவைதானே(8)

(கண்ணுள் நின்று-கண்ணை விட்டு; கருத்து-மனோரதம்; எண்ணில்-சிந்திக்கப் புகுதல்)

என்று பேரன்பே வடிவெடுத்தவனாய், ஏழிசையின் சுவையே உருக்கொண்டவனாய், தன்னை விட்டு ஒரு நாளும் நீங்க மாட்டாதவனாய்த் தன்னுள் புகுந்த படியைப் பேசுகின்றார்.

அடுத்து, ஆழ்வார் எம்பெருமானை நோக்கி வினா வொன்று எழுப்புகின்றார்.

இன்றென்னைப் பொருளாக்கித்
 தன்னைஎன்னுள் வைத்தான்
அன்றென்னைப் புறம் போகப்
 புணர்த்த தென்செய்வான் (9)

(இன்று-மயர்வற மதிநலம் அருளப்பெற்றபின்பு; அன்று-
அவருடைய திருவருளைப் பெறுவதற்கு முன்பு;
புறம் போகப் பண்ணுதல் - பராமுகம் செய்தல்;
புணர்த்தல் - மாயையை இட்டு மயக்குதல்)

என்பது வினா? இப்பாசுரம் இத்திருவாய்மொழியின் உயிரானது. இந்த வினா மூன்று வகையில் அமைகின்றது. முதல் வகை: தனக்குத் தானே சிந்தித்தலில் நோக்கு. இரண்டாவது வகை: இறைவனைக் குறித்துக் கேட்டலில் நோக்கு. மூன்றாவது வகையில் அதிசங்கையில் நோக்கு. இவ்விடத்தில் ஓர் இதிகாசம் ஆழ்வார் எம்பெருமானை நோக்கி இப்படி ஒரு வினா எழுப்பினாரே, இதற்கு எம்பெருமான் என்ன மறுமொழி கூறினான்?' என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்க, அதற்குப் பட்டர் 'அவன் பதில் சொல்வதற்கு என்ன இருக்கின்றது? இவர்தலையிலே ஒரு பழியை ஏறிட்டுப் பல காலம் இழந்து கிடந்த நாம் சொல்லுவது ஏன்? என்று நாணம் உற்றவனாய்க் காலாலே தரையைக் கீறி நிற்பதைத் தவிர வேறுண்டோ' என்று அருளிச்செய்தார். எம்பெருமான் கூறிய விடை: 'நீர் பெற வேண்டிய பேற்றினைப் பெற்றீராகில் அதுவே அமையாதோ? என்ன, 'அதுவே அமையும்' என்கின்றார். தேங்காய்க்கு இளநீர் புக்கவழி ஆராய்ந்தோ விடாய்த்தவன் இளநீர் குடிப்பது?

பின்னர் ஆழ்வார், 'திருவாய் மொழி பாடுகையாகின்ற இக்கைங்கரியத்தைப் பரமானந்தமாகச் செய்யப் பெற்ற எனக்கு வேறு என்ன விருப்பம் உள்ளது?'' என்கின்றார்.

**உற்றேன்; உகந்து**
**பணிசெய்து உன்பாதம்**
**பெற்றேன்; ஈதே இன்னம்**
**வேண்டுவது?** (10

(பணி-திருவாய் மொழி பாடுகை; ஈதே-இதுவே)

என்பது ஆழ்வார் திருவாக்கு. எம்பெருமானின் திருநாமம் கப்பக்குடத்தான் என்பது; இவன் தனது வலது கையில் ஒரு சட்டி நிறைய அப்பங்கள் வைத்திருப்பதைக் காணலாம்.

(5). திருக்கண்ணபுரத்தில்[14] எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை நம்மாழ்வார் 'கண்ணபுரத்து ஆதியான்' என்று குறிப்பிடுவர். குலசேகரப் பெருமாள் 'கண்ணபுரத்துக் கருமணி' (பெரு. திரு.8) என்று பேசித் தாலாட்டுவர். பெரியாழ்வாருக்கு இந்த எம்பெருமான 'கண்ணபுரத்து அமுதமாக' (பெரியாழ் திரு. 1.5:8) இனிப்பன். திருமங்கை மன்னன் 100 பாசுரங்களாலும் (10 திருமொழிகள்) வேறு இரண்டு தனிப் பாசுரங்களாலும் மங்களாசாசனம் செய்து மகிழ்வர். நம்மாழ்வார் 'மாலை நண்ணி' (திருவாய் 9.10) என்ற திருவாய் மொழியால் வழிபடுவர். முதல் பாசுரத்தில் 'வேலைமோதும் மதிள் சூழ் திருக்கண்ணபுரம்' என்று கூறியிருப்பதால் ஒரு காலத்தில் கடல் இவ்வூருக்கருகிலிருந்து இப்போது ஒதுங்கிப் போயிருத்தல் கூடும் என்று நினைக்கத் தோன்றுகின்றது.

14. திருகண்ணபுரம்: இஃது ஒரு சிற்றூர். திருவாரூரையும் மாயூரத்தையும் இணைக்கும் இருப்பூர்தி வழியில் நன்னிலம் என்ற நிலையத்திலிருந்து சுமார் ஒன்பது கி.மீ. தொலைவிலுள்ளது. நன்னிலத்திலிருந்து பேருந்து வசதி உண்டு. நன்னிலத்திலிருந்து நாகூர் செல்லும் பேருந்தில் ஏறி திருப்புகலூர் (அப்பரடிகள் முத்தி பெற்ற தலம்) இறங்கி ஒரு குதிரை வண்டி அல்லது மாட்டு வண்டியை அமர்த்திக் கொண்டு சுமார் 2 கி.மீ. தொலைவிலுள்ள (தென் திசையில்) கண்ணபுரத்தை அடைதல் வேண்டும் வழியிலுள்ள ஆற்றைக் கடக்க பாலம் உண்டு. 1968-ஜூன் திங்கள் நான் குடும்பத்துடன் இந்த எம்பெருமானைச் சேவித்ததை நினைவு கூர்கின்றேன். எம்பெருமானின் திருநாமம் சௌரிராஜன். திருத்தலத்தின் முழு விவரங்களையும் இவ்வாசிரியரின் சோழ நாட்டுத் திருப்பதிகள் – இரண்டாம் பகுதியில் (6-ஆவது கட்டுரை) கண்டு தெரியலாம்.

இத்திருவாய் மொழியின் முதல் நான்கு பாசுரங்கள் பக்தியோகத்தையும் அடுத்து வரும் ஐந்து பாசுரங்கள் பிரபத்தி நெறியையும் புகட்டுகின்றன. பத்தாவது பாசுரம் இரண்டு நெறிகளையும் அநுட்டிக்க இயலாதவர்கள் 'கண்ண புரம்' என்ற பெயரைச் சொன்னாலே போதும் என்கிறார். 'திருக்கண்ணபுரம் சொல்ல நாளும் துயர்பாடு சாராவே' என்பது ஆழ்வார் வாக்கு. இனி பாசுரங்களில் ஆழ்ங்கால் படுவோம்.

**மாலை நண் ணித்தொழு தெழு மினோ வினைகெட**
**காலை மாலை கமலமலர் இட்டு ஓர்**
**வேகூலமோ தும்மதில் சூழ்திருக் கண்ணபுரத்து**
**ஆலின்மே வால்அமர்ந் தான்அடி இணைகளே (1)**

(வேலை-கடல்; ஆலின்மேல்-நீரின்மீது; ஆல் அமர்ந் தான்-ஆலிலையில் கண் வளர்ந்தவன்)

'ஆலிலைப் பள்ளியான் திருவடிகளின்மீது இரவும் பகலும் தாமரை மலர்களை இட்டு வழிபட்டால் நம் வினைகள் எல்லாம் கெட்டொழியும்' என்கின்றார். 'காலை மாலை, என்பதற்கு 'பகலும் இரவும்' என்று பொருள் கொள்ளுதல் சிறப்பு. 'கமல மலர் இட்டு' என்பதால் ஒருவகைப் பூதான் சிறப்பு என்பது பொருளன்று; அவனுக்கு ஆகாத பூ இல்லை.

**கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும்**
**முள்ளார் முளரியும் ஆம்பலுமுன் கண்டக்கால்**
**புள்ளாயோ ரேனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று**
**உள்ளதார் உள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே**

(பெரி. திரு. 11.7:6)

என்ற மங்கை மன்னன் பாசுரம் ஈண்டு அநுசந்திக்க உரியது. அடுத்த பாசுரத்தில் 'கள்ளவிழும் மலரிட்டு இறைஞ்சுமின்'(2) என்று அருளிச் செய்கையாலே 'சிறந்த மலரேயாக வேண்டும்

என்பது கட்டாயமன்று, வாடிவதங்கிய மலரானாலும் பொருந்தும்' என்பதை இப்பாசுரத்தில் தெளிய வைக்கின்றார்.

திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருப்பவன் உபய விபூதிக்கும் நாதன்; 'அண்டவாணன்'-அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகன். அவனை,

தொண்டர்! நும் தம்துயர்
போகநீர் ஏகமாய்
விண்டுவா டாமலர்
இட்டுநீர் இறைஞ்சுமின் (3)

(விண்டு வாடா-மலர்ந்து வாடாத)

என்றவாறு துதிக்கும்படித் தெருட்டுகின்றார். துயர் எல்லாருக்கும் ஒரே வகையாக இராது; 'ஸம்சாரிகளுக்கு விரோதி சத்ரு பீடாதிகள்; முமுட்சுகளுக்கு விரோதி ஸம்சார ஸம்பந்தம்; முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி கைங்கர்ய ஹாநி' (முமுட்சுப்படி-38). என்பது காண்க. அடுத்த பாசுரம்,

மானைநோக் கிமடப் பின்னைதன் கேள்வனை
தேனைவா டாமலர் இட்டுநீர் இறைஞ்சுமின் (4)

(மானை நோக்கி-மானையொத்த கண்பார்வையை யுடைய; கேள்வன்-கணவன்; தேனை-தேன் போல்)

என்பது. 'நப்பின்னைப் பிராட்டி புருஷகாரமாக வழிபடுக்கள்; அவளுடைய புருஷகார பலத்தாலே பேறு தப்பாது' என்கின்றார். இதுகாறும் காட்டிய நான்கு பாடல்களும் பக்தி நெறியைக் காட்டுபவை.

இனி பிரபத்தி நெறியைக் காட்டும் பாசுரங்களைக் காண்போம்,

சரணம் ஆகும்தன
தாளடைந் தார்க்கெல்லாம்
மரணமா னால்வைகுந்
தம்கொடுக் கும்பிரான் (5)

(சரணம்-இரட்சகன்; தாள்-திருவடி)

இதில் எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றினவர் கட்கு அவன் அவர்களை இந்த உலகத்தினின்றும் விடுவித்துத் திருநாட்டில் கொண்டு போய் வைப்பான் என்கின்றார். இத் திருவாய் மொழிக்கு இதுவே உயிரான பாசுரமாக இருப்பது. "ஆழ்வீர்! உமக்கு மரணமானால் வைகுந்தம் கொடுக்கக் கடவேன்" என்று எம்பெருமான் அருளிச் செய்ததையே "மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்கின்ற சொல் நயத்தாலே வெளியிட்டருள்கின்றார். "இவ்வுடல் முடியுந்தனையும் பொறுத்திரும்; முடிந்தவுடனே நுகர்வினை (பிராரப்த கருமங்கள்) முடிந்து விட்டதாகக் கொண்டு பழ வினையை (சஞ்சித கருமங்களை) துடைத் தெறிவதற்குப் பொருளாக்கி இவ்வளவுடன் பிறப்பு வட்டத்தைமுடித்திட்டுப் 'பொய்ந் நின்ற ஞாலமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம் பும் இந்நின்ற நீர்மை இனியாமுறாமை' (திருவிருத் 1) என்று நீர் முன்னர்ப் பிரார்த்தித்த படியே செய்து தலைக் கட்டு வேன்" என்று ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் அருளிச் செய்தது இங்குத் திரும்பவும் கூறப்பட்டது.

'அன்பினாகும் தனதாளடைந்தவர்க்கெல்லாம்' (6)

என்று அடுத்துப் பேசுகின்றார் ஆழ்வார். தனது திருவடி களை அடைந்தவர்களுள் இன்னார் இனியார் என்று வேறு பாடு பாராமல் வசிட்ட சண்டாள விபாகமற எல்லார்க்கும் தக்க நட்பாக்கிக் கொள்பவன் எம்பெருமான். அன்றியும், பிரகலாதன் அசுரனாகப் பிறந்திருந்தும் அவனது அன்பையே

கணிசித்து அவனை ஆட்கொண்டவன், 'திருக்கண்ணபுரத்து' அன்பன் நாளும் தனமெய்யர்க்கும் மெய்யனே' என பின்னும் காட்டுவர் ஆழ்வார்.

மெய்யனா கும்விரும்
பித்தொழு வார்க்கெல்லாம்
பொய்ய னாகும்புற
மேதொழு வார்க்கெல்லம் (7)

இதில் எம்பெருமான் தாழ்ந்த பலன்களைக் கருதாமல் தன்னையே புருஷார்த்தமாகப் பற்றுபவர் யாவர்க்கும் தன்னுடைய சொரூப ரூப குண விபூதிகளை உள்ளது உள்ள படியே காட்டிக் கொடுப்பான் என்கின்றார். கீழான பலன்களைக் கணிசித்து அதற்காகத் தன்னை வழிபடுபவர்க்கு அந்த அற்ப பலன்களைக் கொடுத்து தன்னை மறையா நிற்பன், 'புறமே தொழுவார்க்கெல்லாம் பொய்யனாகும்.' இப்படி மெய்யர்க்கு மெய்யனாயும் பொய்யர்க்குப் பொய்ய னாயும் இருக்கும் இருப்பைத் திருக்கண்ணபுரத்திலே காட்டிக் கொண்டிருக்கும் எம்பெருமான் "ஆகத்து அணைப்பார்க்கு அணியன்"—தன்னை இதயத்தில் வைப்பார்க்குக் கையாளா கவும் இருப்பான்.

அணியனா கும்தன
தாளடைந் தார்க்கெல்லாம்
பிணியும் சாரா;
பிறவி கெடுத்தாளும்
..............................
பணியினா ளும்பர
மேட்டிதன் பாதமே

(தாள் - திருவடி; அணியன் - அந்தரங்கன்; பிணி - நோய்; பிறவி-சம்சார சங்கம்; பரமேட்டி-பரமபுருடன்)

இதில் 'தனதாள் அடைந்தார்க்கு எல்லாம் அணியன்' என்பதில் இரண்டு விதமான பொருள் உண்டு. வேறொரு

பலனை உத்தேசித்து அதற்குச் சாதனமாக இவன் திருவடிகளை அடைதல் ஒருவிதம்; அங்ஙனமின்றி 'பலனும் இதுவே; அதற்கு உபாயமும் இதுவே' என்று கொண்டு அடைதல் மற்றொருவிதம். ஈண்டு இரண்டாவதாகச் சொன்னவர்களே 'தனதாளடைந்தவர்கள்' என்று சிறப்பிக்கப் பெறுகின்றனர். இப்படிச் சுலபனாகிச் செய்வது என்னவெனில் ''பிணியும் சாரா பிறவிகெடுத்தாளும்''. துக்கங்களையும் துக்கங்களுக்குக் காரணமான சம்சாரத்தையும் போக்கி அடிமைகொள்வான். ஆகவே 'திருநாட்டில் இருக்கும் இருப்பில் ஒன்றுக்கும் குறையாது திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் சௌரிப் பெருமாளின் திருவடிகளையே உபாயமும் உபேயமுமாகப் பற்றுங்கள்' என்கின்றார் ஆழ்வார்.

இனி முத்தாய்ப்பாக ஆழ்வார் கூறுவது :

> **பாதம்நா ளும்பணி**
> **யத்தணி யும்பிணி**
> **ஏதம்சா ரா;எனக்**
> **கேல்இனி யென்குறை**
> **வேதநா வர்விரும்பும்**
> **திருக்கண் ணபுரத்(து)**
> **ஆதியா னைஅடைந்**
> **தார்க்கல்லல் இல்லையே (9)**

(நாளும்-எப்போதும்; பணிய-சேவிக்க; பிணி-நோய் ஏதம்-பாவங்கள்; வேதநாவர்-வைதிகர்கள்; ஆதியான்-முழுமுதற் கடவுள்)

என்ற பாசுரம். பிறருக்கு உபதேசம் செய்வது கிடக்கட்டும்; தாம் முன்னம் அவனை ஆச்ரயித்துக் குறைதீர்ந்த படியைப் பேசிக் களிக்கின்றார். அதில், ''அவனது திருவடிகளை அடையவே அநாதி காலமெல்லாம் திரண்டு கிடந்த பாவங்கள் தொலைந்தன. இனிமேல் பாவங்கள் வந்து சேரா, இஃது

என் அநுபவம். நான் குறை தீரப் பெறவேண்டும் என்று சொல்லுகின்றேன். வேதம் அறிந்த வைதிகர்கள் விரும்பி வாழும் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் ஆதி மூலத்தே அடைந்தார்க்கு "அல்லல் போம்; வல்வினைபோம்; அன்னை வயிற்றிற் பிறந்த தொல்லைபோம்; போகாத் துயரங்களும் போயொழியும்" என்கின்றார்.

இறுதிப் பாசுரம் பக்தியையோ பிரபத்தியையோ அநுட்டிக்க முடியாதவர்கட்கு ஓர் எளிய யோசனை கூறுகின்றார். அஃது என்ன? அதைப் பாசுரத்தில் காண்போம்.

இல்லை யல்லல்;
    எனக்கேல்இனி யென்குறை
அல்லி மாதர்
    அமரும்திரு மார்பினை
கல்லில் ஏய்ந்த
    மதில்சூழ்திருக் கண்ணபுரம்
சொல்லநா ளுந்துயர்
    பாடுசா ராவே (10)

(அல்லல்-துக்கங்கள்; அல்லி-தாமரை; கல்லில் ஏய்ந்த-கற்பணிமிக்க; நாளும்-ஒரு நாளும்; துயர்-துக்கம்)

இதில் பக்தி அல்லது பிரபத்தியை அநுட்டிக்க இயலாதவர்கள் 'திருக்கண்ணபுரம்' என்ற பெயரைச் சொன்ன அளவிலே எல்லாத் துயரங்களும் ஒரு நாளும் சாரா என்கின்றார். இத்துடன் சோழ நாட்டுத் திருத்தலப் பயணம் நிறைவு பெறுகின்றது.

# 3. பாண்டி நாட்டுத் திருப்பதிகள்

**பா**ண்டி நாட்டுத் திருப்பதிகள் 18. இவற்றுள் நம்மாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பெற்றவை 12, அவை;

| | | | |
|---|---|---|---|
| 1. | திருமோகூர் | 7. | வரகுணமங்கை |
| 2. | திருமாலிருஞ்சோலை. | 8. | திருக்குளந்தை |
| 3. | திருக்குருகூர் | 9. | திருப்புளிங்குடி. |
| 4. | திருக்கோளூர். | 10. | தொலைவில்லிமங்கலம் |
| 5. | திருப்பேரெயில். | 11. | சிரீவரமங்கை |
| 6. | சிரீவைகுண்டம் | 12. | திருக்குறுங்குடி. |

இவற்றை முறையேகாண்போம்.

1. **திருமோகூர்** : இத்திருத்தலப் பெயர் திருமாலின் மோகனாவதாரத்துடன் தொடர்புடையது. திருப்பாற் கடலைக் கடைந்து அமுதம் எடுப்பதற்குத் தேவர்களும் அசுரர்களும் ஒன்று சேர்கின்றனர். அமுதம் வந்ததும் தேவர் கள் அசுரர்கட்குப் பங்குகொடுக்க இசையவில்லை. அசுரர்கள்

1. **திருமோகூர்** : இத்திருத்தலம் மதுரை நகருக்கு வடக்கே சுமார் ஏழு கல் தொலைவிலுள்ளது; மதுரை - மேலூர் நெடுஞ்சாலை வழியே ஒற்றைக் கடைவரையில் சென்று அதன்பிறகு கிழக்கே திரும்பி ஒருகல் தொலைவு சென்று இவ்வூரை அடையலாம். மதுரையிலிருந்து திருவாதவூர் வழியே மேலூருக்குச் செல்லும் பேருந்தில் செல்ல வேண்டும்; அல்லது மதுரையிலிருந்து திருவாதவூர்வரை சென்றுதிரும்பும் நகரப் பேருந்தினையும் பயன்படுத்திக்கொள்ளலாம். சாலையின் மேலேயே ஊர் உள்ளது. எம் பெருமான் காளமேகப் பெருமான். வழித்துணைப் பெருமான்; தாயார்; திருமோகூர் வல்லிநாச்சியார், மேகவல்லி நாச்சியார், எம்பெருமான் நின்ற திருக் கோலம், கிழக்குநோக்கிய திருமுகமண்டலம்.

சும்மா விடுவார்களா? அவர்கள் அமுதகலசத்தைத் தூங்கிக் கொண்டு ஓடத் தொடங்குகின்றனர். தேவர்கள் திருமாலிடம் முறையிட, அவர் மோகினி வடிவத்துடன் அசுரர்கள் முன்னே காட்சி அளிக்கின்றார், இருசாராருக்கும் அமுதத்தைத் தாமே பங்கிட்டுத் தருவதாகக் கூறிக் கலசத்தை வாங்கிக் கொள்ளுகின்றார். அமுதத்தைப் பங்கிடவும் முனைகின்றார். தேவர்கள் பக்கம் கலசமும் அகப்பையுமாக வருங்கால் அமுதத்தைத் தாராளமாக வார்க்கின்றார். அசுரர்கள் பக்கம் வருங்கால் தமது மோகனப் புன்னகையாலும் ஆடலாலும் பாடலாலும் அவர்களை மயக்குகின்றார் அமுதம் வார்க்காமலேயே. இறுதியாக அசுரர்கட்கு ஒருதுளிகூட இல்லாமல் அமுதம் காலியாகி விடுகின்றது. இங்ஙனம் அசுரர்களை ஏமாந்த சோணகிரிகளாக்க எடுக்கப் பெற்றதே மோகனாவதாரம். இந்த அவதாரம் எழுந்ததலமே மோகனூர் அதுவே 'மோகூர்' எனக் குறுகி, 'திரு' என்ற அடையுடன் சேர்ந்து 'திருமோகூர்' என்றாயிற்று.

இந்தத் திவ்விய தேசத்தை நம்மாழ்வாரும் திருமங்கை யாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளனர். நம்மாழ்வார் '**தாளதாமரை**'(10.1)என்ற ஒருதிருவாய்மொழியால் மங்களா சாசனம் செய்துள்ளார்

> **காள மேகத்தை யன்றிமற்**
> **றொன்றிலம்' கதியே (1)**

என்பது முதற் பாசுரம். கொடிய வெப்பத்தில் அடிபட்டவன் குளிர்ந்த தடாகத்தையோ காளமேகம் பொழியும் மழையையோ எதிர்பார்ப்பது இயல்பேயன்றோ? அங்ஙனமே நம்மாழ்வாரும் தம்முடைய இருள் தருமா இவ்வுலக வாழ்வெல்லாம் தொலையப் பெறும் சமயத்தில் காளமேகப் பெருமானை அநுபவிக்கிறபடியைத் தெரிவிக்கின்றது. இவர்திருவாய் மொழி. தம் திருமேனியின் கட்டுக் குலைந்த நிலையில் தம் முடிவு அணித்தென்று அறுதியிட்டுக் கொண்டு

நம்மாழ்வார் திருமோகூருக்கு வந்ததாகவும், தம்முடைய திருநாட்டுப் பயணத்திற்கு வழித்துணையாகத் திருமோகூர்க் காளமேகப் பெருமாளைப் பற்றியதாகவும் பெரியோர் பணிப்பர். எம்பெருமானை ஆழ்வார் 'தயரதன் பெற்ற மரகத மணித்தடம்' (8) என்று வருணிப்பார். தம்முடைய தாபங்களெல்லாம் தீர்வதற்கு இந்தத் தடாகத்தை நோக்கி வந்தவர், நம்மையெல்லாம் 'தொண்டீர் வம்மின்'(4)என்றும், 'அடியீர்தொழுமின்' (8) என்றும் குரல்கொடுத்து அழைப்பது நம் காதில்விழுவதாகப் பிரமை அடைகின்றோம். 'இலங்கதி மற்றொன்று எம்மைக்கும்...நலம் கழல் அவனடி நிழல்தடம் அன்றி'(2) என்றும். 'அன்றியாம் ஒரு புகலிடம் இலம் என்று' என்று அலற்றி... நாம் இனி நணுகுதும் நமர் இடர் கெடவே' (3) என்றும், 'திருமோகூர் ஆத்தன் தாமரை அடி அன்றி மற்றும் இலம் அரணே'(6) என்றும், 'நம்முடை நல்லரண் நாம் அடைந்தனமே' (9) என்றும் நம்மாழ்வார் ஒரு முறைக்கு நான்கு முறை கூறி மகிழ்ந்ததை நாம் நினைக்கின்றோம். அந்த அநுபவத்தை நாமும் பெற்றதுபோல் உணர்கின்றோம், மேலும் இந்த அநுபவத்தைப் பெறவேண்டுமாயின் எனது பிறிதொரு நூலைக் காண்க.[2]

2. **திருமாலிருஞ்சோலை:**[3] இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சுந்தரராசனை பூதத்தார், பேயாழ்வார்.

2. ''**பாண்டி நாட்டுத்திருப்பதிகள்**'' (கட்டுரை - 85)' காண்க.

3. **திருமாலிருஞ்சோலை** (அழகர் கோயில்): இத் திருத்தலம் மதுரைக்கு வடக்கே 12 கல் தொலைவில் உள்ளது, அடிக்கடிப் பேருந்து வசதிஉண்டு. திருக்கோயிலுக்கு முன்னதாக ஒரு சோலை உள்ளது. அடுத்துத் திருக்கோயில்; பெரியகோயில். இரண்டு மூன்று திருச்சுற்றுகளைக் கடந்துதான் கருவறைக்குச் செல்ல வேண்டும். எம்பெருமான்: பரமசாமி; அழகர், கள்ளழகர், மாலாலங்காரர், தாயார்: கல்யாண சுந்தரவல்லி நாச்சியார், நின்ற

நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கை யாழ்வார் என்ற ஆறு ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ளனர். நம்மாழ்வார் 2. 10.; 3.; 10, 7 என்ற மூன்று திருவாய்மொழியாலும் 10. 8; 1, 6, என்ற தனிப்பாசுரங் களாலும் மங்களா சாசனம் செய்துள்ளார், நம்மாழ்வாரின்,

**வருமழை தவழும்**
**மாலிருஞ் சோலை (2. 10 : 4)**

என்ற திருவாய்மொழியின் அடியில் நம் மனம் ஆழங்கால் படுகின்றது. 'மழை தவழும்' என்ற அடைமொழியே போதுமாயிருக்க 'வரு' என்ற மேலும் ஓர் அடைமொழி கொடுத்த நயத்தை நம்பிள்ளை காட்டுவதில் நம்மனம் ஈடுபடு கிறது. ''ஊருக்கு இரண்டாயிற்று மழை. நின்ற இடத்தில் நின்று வர்ஷிப்பதொரு மேகமும்; போவதும் வருவது மாயிருப்பதொரு மேகமும்'' என்பது ஈட்டு ஸ்ரீசூக்தி, மேகங் கள் மலைகளில் பெரிய கொடு முடிகளில் இளைப்பாறி இளைப்பாறி மீண்டும் செல்கின்றனவாதலின் 'மழை தவழும்' என்று கூறுகின்றார் போலும். சித்தும் அசித்தும் எம் பெருமானின் திருமேனியாக இருப்பதாகக் கருதுவது வைணவ சித்தாந்தம். இது கருதியே, ''மாலிருஞ் சோலை, பதியது ஏத்தி எழுவது பயனே'' (2. 10 : 2) என்று கூறி யுள்ளதைச் சிந்திக்கின்றோம்.

திருக்கோலம், கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம். உற்சவர் அபரஞ்சி என்ற பொன்னால் செய்யப் பெற்றவர். தாயாருக்குத் தனிச் சந்நிதி உண்டு. இது திருக்கோயிலின் தென்புறம் உள்ளது. இவரைத் 'தனிக்கோயில் தாயார்' என்று வழங்குவதும் உண்டு. அழகர்மீது பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் இயற்றிய **'அழகர்அந்தாதியும்'** வேம்பத்தூரார் இயற்றிய **'அழகர் கலம்பகமும்'** மிகு புகழ் வாய்ந்தவை; செல்வாக்குடன் பயின்று வருபவை.

திருவாய்மொழிப் பாசுரங்களில் உள்ள 'சில அடிகள்' நம் சிந்தையைக் கவருகின்றன. ''மறியொடு பிணைசேர் மாலிருஞ்சோலை'' (2.10 : 6) என்ற அடியில் 'மறியொடு பிணைசேர்' என்று அடைமொழி கொடுத்ததற்கு ஓர் உட்கருத்து உண்டு. அந்த மலையில் குட்டியும் தாயும் பிரியா திருத்தல்போல் நாமும் தாயும் தந்தையுமாய் இவ்வுலகினில் ஈசனைப் பிரியாதிருத்தல் என்ற தொனிப் பொருள் தென்படுகின்றது. 'மழகளிற்றினம் சேர் மாலிருஞ்சோலை' (2.10 : 9) என்பதில் 'மழகளிற்றினம்சேர்' என்ற விடத்து ஒரு நயத்தைக் காட்டுவர் நம்பிள்ளை; ''லட்சணா பேதமாயிருப்பதொரு ஆனை நின்றவிடத்தே ஆயிரம் யானைகள் வந்து சேரா நிற்கும். அங்கு நிற்பதோர் சோலை மழகளிறு'' என்பதாக. அப்படிப்பட்ட யானையின் அருகே மழகளிற்றினம் சேர்வது வியப்பன்று என்று காட்டியவாறு.

மூலவர் பரமசாமியின் அழகில் பறிகொடுத்த நம்மாழ்வார்,

**முடிச்சோதி யாய்உனது**
**முகச்சோதி மலர்ந்ததுவோ?**
**அடிச்சோதி நீநின்ற**
**தாமரையாய் அலர்ந்ததுவோ?**
**படிச்சோதி ஆடையொடும்**
**பல்கலனாய் நின்பைம்பொன்**
**கடிச்சோதி கலந்ததுவோ**
**திருமாலே! கட்டுரையே** —திருவாய். 3.1 : 1

என்று பாடுகின்றார். ''நின் திருமுக மண்டலத்தின் ஒளி மேல் முகமாகக் கிளர்ந்து திருவபிடேகச் சோதியாய் வடிவு கொண்டதோ? நின் திருவடியின் ஒளியே கீழ்முகமாகக் கிளர்ந்து சென்று ஆசன பதுமமாக வடிவு கொண்டதோ? நின் திருவரை (இடுப்பு)யின் ஒளி பீதக ஆடையாகவும் பல

வகைப்பட்ட அணிகளாகவும் வடிவு கொண்டு பரவியதோ? அடியேனுக்கு உரைப்பாயாக'' என்ற ஆழ்வார் வாக்கைக் கொண்டே எம்பெருமானை வினவுகின்றோம். அவனது பேரழகு கண்டாரையெல்லாம் பிச்சேற்றி வைத்து விடுகின்றது. இப்பதிகத்தின் ஏனைய பாசுரங்களையும் மிடற்றொலி கொண்டு ஓதி உளங்கரைந்தால் பக்தியின் கொடுமுடியை எட்ட முயலலாம்.

3. திருக்குருகூர்[4] : இந்தத் திருத்தலத்தை அடுத்தடுத்து தண்பொருனையாற்றின் இருகரைகளிலும் ஒன்பது திவ்விய தேசங்கள் உள்ளன. இவை '**நவதிருப்பதிகள்**' என வழங்கப்பெறுகின்றன; இவற்றுள் பொருநையாற்றின் தென்கரையிலிருப்பவை திருக்குருகூர், திருக்கோளூர், தென் திருப்பேரை (திருப்பேரெயில்) என்ற மூன்றுமாகும். மற்ற

4. திருக்குருகூர் : திருநெல்வேலி - திருச்செந்தூர் இருப்பூர்தி வழியில் ஆழ்வார் திருநகரி என்ற நிலையத்திலிருந்து ஒருகல் தொலைவிலுள்ளது. குதிரை வண்டிகள், மாட்டுவண்டிகள் கிடைக்கும். ஊரிலும் சத்திரங்கள், தங்கும் விடுதிகள், உணவு விடுதிகள் உள்ளன. திருக்கோயிலினுள் நம்மாழ்வார் சந்நிதிக் கருகிலுள்ள உறங்காப்புளி (திருப்புளியாழ்வார்) நம்மாழ்வார் யோகத்திலிருந்த இடமாகும். இந்த உறங்காப்புளியிடத்தில்தான் நாதமுனி யோகத்திலிருந்து நம்மாழ்வாரிடமிருந்து (அர்ச்சையைக் கடந்து) 4000 பாசுரங்களையும் தெரிந்து கொண்டார். எம்பெருமான்; ஆதிநாதன்; பொலிந்து நின்ற பிரான்; (உற்சவர்) ஆதிப்பிரான். தாயார் : ஆதிநாதவல்லித் தாயார், குருகூர்வல்லி. நின்ற திருக்கோலம். கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம்; ஊரருகில் ஓடுவது தண்பொருநையாறு, ஆண்டு தோறும் வைகாசியில் நவ திருப்பதிகளின் கருட சேவை மிகு புகழ்பெற்றது. இந்த ஒன்பது கருட வாகனங்களும் இத்திருக்கோயிலியே இடம் பெற்றுள்ளன. (திருவாலி-திருநகரியில் ஆண்டு தோறும் தைமாதத்தில் நடைபெறும் கருடசேவை நினைக்கத்தக்கது).

ஸ்ரீவைகுண்டம், நத்தம் (வரகுணமங்கை), திருக்குளந்தை, திருப்புளிங்குடி, தொலைவிலிமங்கலம் (இரட்டைத் திருப் பதிகள்) என்ற ஆறும் ஆற்றின் வடகரையிலுள்ளவை. இந்த நவ திருப்பதிகளையும் நம்மாழ்வார் மங்களாசாசனம் செய் துள்ளார்.

இத்திருப்பதி எம்பெருமான்மீது (அர்சாவதாரம்) பாடி யருளிய பாசுரங்கள் யாவும் பரத்துவத்தை மூதலிக்கின்றன என்பதைக் காணும்போது நாம் வியப்பில் ஆழ்கின்றோம். உலக இயற்கையில் வெறுப்புற்ற ஆழ்வார் (திருவாய் 4.9) பலவாறாகக் கதற, ஒரு விதமாக அவருடைய ஆர்த்தியை மாற்றவேண்டுமென்று திருவுள்ளம் பற்றின எம்பெருமான், திருநாட்டிலே திருமகளும் தானுமாக இருக்கும் இருப்பைக் காட்டிக் கொடுத்தருள, இவரும் கண்டு ஒருவாறு களிக்கப் பெறுகின்றார். 'உயர்வற உயர்நலம்' (1.1), 'திண்ணன் வீடு' (2.2) முதலான திருவாய்மொழிகளிலும் எம்பெரு மானுடைய பரத்துவத்தை அருளிச் செய்திருந்த போதிலும் இத்திருவாய் மொழி (4.10) அர்ச்சையில் பரத்துவம் காட்டப் பெறுவதால் வீறு பெற்றிருக்கும். இத்திருத்தலத்தில் சேவை சாதிக்கும் எம்பெருமானுக்கு ஆதிநாதப் பெருமான் என்று திருநாமம் ஆகையாலே, இவர் பக்கலில் பரத்துவத்தை[5] எடுத்துரைக்கப் பாங்காக இருக்குமென்று திருவுள்ளம் பற்று

5. எம்பெருமானின் திருமேனி பரம் (வைகுந்தத்தில் இருக்கும் நிலை), வியூகம் (திருப்பாற்கடலில் வாசுதேவன் சங்கர்ஷணன், பிரத்தியும்னன், அநிருத்தன் என்ற நான்கு நிலைகளில் இருக்கும் இருப்பு), விபவம் (எண்ணற்ற அவதார மூர்த்திகள்) அந்தர்யாமி (எல்லோருடைய இதய கமலத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை), அர்ச்சை (திவ்விய தேசங்கள், பக்தர்களின் இல்லங்கள் இவற்றில் அவரவர் விருப்பத்திற்கேற்றவாறு திருமேனி கொண்டு நிற்கும் நிலை) என்ற ஐந்து நிலையில் இருக்கும்.

கின்றார் ஆழ்வார். உலகுக்கெல்லாம் முழுமுதற் காரண மான பொருள் எதுவோ அதுவே பரதெய்வம் என்றும் அதுவே உபாசிக்கத் தக்கதென்றும் உபநிடதங்கள் பறை சாற்றுகின்றன. இந்த ஆழ்வாரே பெரிய திருவந்தாதியில்,

முதலாம் திருவுருவம்
மூன்றென்பர்; ஒன்றே
முதலாகும் மூன்றுக்கும்
என்பர்—முதல்வா!
நிகரிலகு கார்உருவா!
நின்னகத்த தன்றே
புகரிலகு தாமரைப்
பூ (72)

(இலகு-ஒத்து விளங்கும்; புகர்-தேசு, ஒளி; இலகு-மிக்கு விளங்கும்)

என்ற பாசுரத்தில் இச்சித்தாந்தத்தை நிலைநிறுத்துகின் றார். ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே பரத்துவம் என்பது தோன்ற 'முதல்வா' என்று விளிப்பது கருதத் தக்கது.[6] சேவிக்கும் பொழுதே எல்லாத் தாபங்களும் ஆறும் படியான திருமேனி கொண்ட தெய்வமே பரத்துவம் என்பது விளங்க 'நிகர் இலகு கார் உருவா!' என்றும் விளிக்கின்றார்.

இந்தப் பரதெய்வத்தை நினைந்தே இத்திவ்விய தேசம் பற்றிய திருவாய்மொழியில்,

ஒன்றும் தேவும் உலகும் உயிரும்
மற்றும்யா துமில்லா
அன்று நான்முகன் தன்னொடு தேவர்
உலகோ டுயிர்படைத்தான்

6. முதலை வாயில் சிக்கிக் கொண்ட கசேந்திராழ் வானும் 'ஆதிமூலமே!' என்று நாராயணனை ஓல மிட்டழைத்ததும் நினைவு கூரத்தக்கது.

குன்றம் போல்மணி மாடம் நீடு
திருக்குரு கூரதனுள்
நின்ற ஆதிப்பி ரான்நிற்க மற்றைத்
தெய்வம் நாடுதிரே (1)

என்பது முதல் பாசுரம். இதில் "சகல ஜகத் காரண பூதனான சர்வேசுவரன் திருநகரியிலே எளியனாய்க் காட்சி தந்தருளா நிற்க, வேறு தெய்வங்களை நாடியோடுகின்றீர்களே. இஃது என்ன அறிவுக் கேடு!" என்று வெறுக்கின்றார் ஆழ்வார்.

முதல் இரண்டடிகள் எம்பெருமானின் ஜகத் காரணத்துவத்தை மூதலிக்கின்றன. 'தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதும் ஒன்றும் இல்லா அன்று' என்று கொண்டுகூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். எல்லாப் பொருள்களையும் படைத்தவனான சர்வேசுவரன், தாய் சந்நிதி ஒழிய குழந்தை வளராதாப் போலே, தன் சந்நிதி ஒழிய இவை சீவிக்க மாட்டா எனப் பார்த்துத் திருநகரியிலே எளியனாய் காட்சி தந்தருளா நிற்க, 'வேறே அடையக் கூடிய பொருளும் உண்டு' என்று தேடித்திரிகின்றீர்களே, இஃது என்ன அறிவுக் கேடு!' என்று வேறு தெய்வங்களை நாடுவோரை நோக்கி நிந்திக்கின்றார் ஆழ்வார். இங்கே இன்சுவை மிக்க ஈட்டு ஸ்ரீ சூக்தி காண்மின்: "சர்வேசுவரன் நான்முகனைப் படைத்தான்; நான்முகன் ஐம்முகனைப் படைத்தான்; ஐம்முகன் ஆறுமுகனைப் படைத்தான்; ஆக, இதுதான் பலமுகமாயிற்றுக் காணும்." மேலும், "நீர் வேட்கையையுடைய ஒருவன் கங்கை பெருகியோடாநிற்க, அதிலே அள்ளிக் குடித்துத் தன்விடாய் தீரமாட்டாதே, அதன் கரையிலேயே குந்தாலி கொண்டு கிணறு தோண்டித் தன்விடாய்க்கு உதவ நாக்கு நனைக்க இருக்குமாறு போலே, அடையத் தக்கவனுமாய், எளியனுமாய், எளிதில் ஆராதிக்கக் கூடியவனுமாய் நல்ல சுவபாவத்தையுடையவனுமான இவனைவிட்டு,

அடையத்தகாதவராய், அரியராய், அதில் ஆராதிக்கக் கூடிய வரைக் கெட்ட சுவபாவத்தையுடையவராய், சிவித்து ஆரா தித்தாலும் பலிப்பதும் ஒன்று இன்றிக்கே இருக்கிற திரு வில்லாத தேவரைத் தேடி அடைவதற்குத் திரிகின்றீர்களே" என்று நிந்திக்கும் ஈட்டின் விளக்கத்தையும் சிந்திக்கின் றோம்.[7]

இத்திருக்கோயில் மூலவர் ஆதிநாதரும் அவர் அருகில் உள்ள நாச்சிமார்களும் சுதையினாலானவர்கள். நாச்சி மார்கள் தனிக்கோயில் நாச்சிமார்களாகவும் திகழ்கின்றனர். தனிக்கோயிலில் நம்மாழ்வார் வீற்றிருக்கும் திருக்கோலத்தில் காட்சி அளிக்கின்றார். பொதுவாக திருமால் திருக்கோயில் களில் நம்மாழ்வாரின் திருமேனி கூப்பிய கையராய் சிலை வடிவிலும் செப்பு வடிவிலும் காணப்பெறும். ஆனால் இத் தலத்தில் அவர் உபதேசிக்கும் ஞான முத்திரையுடன் காட்சி தருகின்றார்.

4. **திருக்கோளூர்**[8] : இத்திருத்தலம் பற்றிய நம்மாழ் வார் திருவாய்மொழி நாயகி நிலையில் நடைபெறுகின்றது. தாய்ப் பாசுரம் (6.7). திருக்கோளூர் சென்று அவ்விடத்து எம் பெருமானுடன் கலந்து பரிமாற வேண்டும் என்கின்ற ஆழ் வாரின் (பராங்குச நாயகியின்) விருப்பம் இத்திருவாய்

7. மேலும் விளக்கத்தை இவ்வாசிரியரின் 'பாண்டி நாட்டுத் திருப்பதிகள்' (கட்டுரை-9) காண்க.
8. **திருக்கோளூர்** : திருக்குருகூருக்குக் கிழக்கே 2 கல் தொலைவிலுள்ளது. தென் திருப்பேரைக்கு மேற் கிலும் 2 கல் தொலைவுதான். மதுரகவிகள் திருவ வதரித்த திருத்தலம். இத்திருத்தலத்தைப் 'பிசுன க்ஷேத்திரம்' என்றும் வழங்குவர். எந்த வித வசதி களும் இல்லாத தலம். வசதிகள் திருநகரியில் தான். எம்பெருமான்: வைத்தமாநிதி; நிக்சேபவித்தன். தாயார்: கோளூர்வல்லி நாச்சியார். கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம். சயனத் திருக்கோலம் (புயங்க சயனம்)

மொழியாகப் பரிணமிக்கின்றது. பராங்குச நாயகியின் படுக்கையில் அவளுடன் படுத்துக் கொண்டு அவள் விரகதாபத்திற்கு உபசாரம் பண்ணிக் கொண்டு இருந்த திருத்தாயார் படுக்கையைத் தடவிப் பார்க்கின்ற போது தன் மகள் காணப்பெற்றிலள். அவளுக்குத் திருக்கோளூர் எம்பெருமானிடத்திலிருந்த கழிபெருங்காதலினை நன்கு அறிந்தவளாதலின் அப்பதிக்கே தன் மகள் சென்றிருத்தல் வேண்டும் என்று அறுதியிட்டுரைப்பதாகச் செல்லுகின்றது இத்திருவாய்மொழி தனியே சென்ற தன் மகளின் போக்கை நினைந்து கவல்கின்றாள் திருத்தாயார்.

திருத்தாயார் பேசுகின்றாள்;

உண்ணும் சோறு பருகுநீர்
　　தின்னும்வெற் றிலையுமெல்லாம்
கண்ணன் எம்பெருமான் என்றென்
　　றேகண்கள் நீர்மல்கி
மண்ணினுள் அவன்சீர் வளம்மிக்
　　கவனூர் வினவி
திண்ணம் என்னிள மான்புகு
　　மூர்திருக் கோளூரே (1)

(வினவி-விசாரித்து; புகும் ஊர்-சேர்ந்த இடம்)

என்பது இத்திருவாய் மொழியின் முதற் பாசுரம். முதல் இரண்டடிகளில் ஆழ்வாருடைய உண்மையான நிலையைக் காணமுடிகின்றது. சோறு, நீர், வெற்றிலை இவற்றின் அடைமொழிகளின் நயம் உய்த்துணரத் தக்கது. வயிறு நிறைய உண்டவனுக்கு அறுசுவை உணவு கிடைப்பினும் அஃது உண்ணும் சோறாகாது; கங்கைக் கரையில் திரிபவனுக்குக் கிணற்றுநீர் பருகும் நீராகாது. ஆகவே, பெரும் பசியனுக்குக் கிடைத்த சோறுதான் உண்ணும் சோறு; பெருவிடாயனுக்குக் கிடைத்த நீர்தான் பருகுநீர். பெரும் பசியனுக்குச் சோற்றி

லும், விடாய்த்தவனுக்கு நீரிலும் எப்படிப்பட்ட அவா இருக்குமோ அப்படிப்பட்ட அவா ஆழ்வாருக்கு பகவத் விஷயத்தில் இருந்தது என்பது கருத்து.

தனக்கு 'எல்லாம் கண்ணன்' என்று பலகால் சொல்லிக் கொண்டு நீர்மல்கு கண்ணினராயிருப்பதே ஆழ்வாருடைய இயல்பாகும். இப்படிப்பட்ட பராங்குச நாயகி ''அப்பெரு மானுடைய திருக்குணங்களும் திவ்வியமான ஐசுவரியமும் மிக்கு விளங்கும் திருக்கோளூர் எங்கு உள்ளது? எவ்வளவு தூரம் நடக்க வேண்டும்?'' என்று வினவிக் கொண்டே திருக் கோளூர்க்கே சென்று சேர்ந்திருப்பாள். ''வேறு எங்கும் போவதற்குக் காரணம் இல்லை. இது திண்ணம்'' என்கின் றாள் திருத்தாயார்.

'புகுமூர்' என்ற இடத்து ஈடு: ''காட்டுத் தீயிலே அகப் பட்டவன் பொய்கையும் பொழிலும் தேடிப் புகுமாப் போலே, சம்சாரமாகிய பாலை நிலத்தில் காட்டுத் தீயிலே அகப்பட்டவனுக்கு உகந்தருளின நிலங்களானவை பொய் கையும் பொழிலும் போலேயிறே. 'புகுமூர்' என்கையாலே புக்கார் புகுமூர் அன்றென்கை''. இன்சுவைமிக்க இஃது எண்ணி மகிழ்வதற்குரியது. எம்பெருமானார் திவ்வியதேச யாத்திரையாக எழுந்தருளுகையில் திருக்கோளூரை நோக்கிச் செல்லுங்கால், அப்போது அவ்வூரினின்றும் வெளியேறுகின்ற ஓர் அம்மையாரைக் கண்டார். அவரைப் பார்த்து ''எங்கு நின்றும் புறப்பட்டபடி?'' என்று வினவ, அந்த அம்மையார் 'திருக்கோளூரில் நின்றும்' என்று பதில் உரைத்தார். அது கேட்டு யதிராசர் 'அவ்வூர் புக்க பெண்களும் வெளியே போகக் கடவர்களாக இருப்பார்களோ?' என்றாராம். 'புகு மூர்' என்ற சொல்லின் சுவடறிந்து அருளிச் செய்த ஆசாரி யரின் வினாவின் உட்பொருள் சிந்தித்து மகிழத்தக்கது.[9]

9. மேலும் இத்திருவாய்மொழியின் விளக்கம் வேண்டு வோர் 'பாண்டி நாட்டுத்திருப்பதிகள்' (கட்டுரை-10) காண்க.

5 **தென் திருப்பேரெயில்**[10] : இது 'தென் திருப்பேரை' என்றும் வழங்கப் பெறும்.[11] நம்மாழ்வார் மட்டிலும் ஒரு பதிகத்தால் (திருவாய் 7.3) இத்தலத்து மகர நெடுங் குழைக்காதனை மங்களாசாசனம் செய்துள்ளார். கண்ண னாகவே ஈடுபட்டுப் பேசுகின்றார். இத்திருவாய்மொழி 'மகள் பாசுரமாக' நடைபெறுகின்றது. தாய்மாரும் தோழி மாரும் உற்றாரும் தடுக்கவும் அதற்குக் கட்டுப்படாமல் தலைவி தென் திருப்பேரெயில் செல்லத் துணிவதை இஃது எடுத்துரைக்கின்றது.

பராங்குச நாயகிக்குத்'திருப்பேரெயில் எம்பெருமானைக் கிட்டியே தீர்வேன்' என்னும் ஆற்றாமை பிறக்கின்றது. அந்த எம்பெருமானிடம் போக வேண்டும் என்று புறப்படு கின்றாள் ஆழ்வார் நாயகி. தோழிமாரும் தாய்மாரும் அவளைச் சூழ்ந்து கொண்டு 'உனக்கு அவனிடம் இவ்வளவு ஈடுபாடு ஆகாது; இது நமக்குப் பழியாக முடியும்' என் கின்றனர். ''நீங்கள் தடை சொல்லுகின்றவற்றால் ஒரு

10. **திருப்பேரெயில்** : இத்திருத்தலம் நெல்லை - திருச் செந்தூர் நெடுஞ்சாலையில் உள்ளது; ஆழ்வார் திருநகரியிலிருந்து மூன்று கல் தொலைவிலுள்ளது. தண்பொருநை யாற்றின் தென்கரையிலுள்ள இத்தலம் நவ திருப்பதிகளில் ஐந்தாவது. ஆழ்வார் திருநகரியிலிருந்து மாட்டுவண்டி கிடைக்கும். இங்கிருந்து தென் பொருநையைக் கடந்தால் (1 கல் தொலைவு) தொலை வில்லிமங்கலத்தை அடை யலாம். எம்பெருமான் : மகர நெடுங்குழைக் காதன், நிகரில் முகில்வண்ணன். வலது கை : வரத ஹஸ்தம். தாயார் : குழைக்காதுவல்லி நாச்சியார். இருந்த திருக்கோலம். கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம்.
11. இத்திருத்தலத்தின் பெயர் 'திருப்பேரெயிலா? 'திருப்பேரையா?'—என்பது பற்றிய ஆய்வை 'பாண்டி நாட்டுத் திருப்பதிகள்' (கட்டுரை-11) பக் 196-197 காண்க.

பயனும் உண்டாக மாட்டாது. 'நீங்கள் எனக்கு உரைப்ப தெல்லாம் ஊமையரோடு செவிடர் வார்த்தையாக முடியும்' (நாச். திரு. 12 : 1). நான் திருப்பேரெயில் எம்பெருமானாலே நெஞ்சு பறியுண்டேன். ஆகவே, நானே போனதாக ஏற்படாமல் நீங்களே என்னை அங்குக் கொண்டு போய்ச் சேர்க்கப் பாருங்கள்'' என்று பராங்குச நாயகி அவர்கட்குக் கூறித் தனக்குப் பிறந்த துணிவை அவர்கட்குச் சொல்லு கின்றாள். இதில்,

வெள்ளைச் சுரிசங்கொ டாழி யேந்தித்
தாமரைக் கண்ணன்என் நெஞ்சி னூடே
புள்ளைக் கடாகின்ற ஆற்றைக் காணீர்;
என்சொல்லிச் சொல்லுகேன் அன்னை மீர்காள்!
வெள்ளைச் சுகமவன் வீற்றி ருந்த
வேத வொலியும் விழா வொலியும்
பிள்ளைக் குழாவிளை யாட்டொ லியும்
அறாதிருப் பேரெயில் சேர்வன் நானே (1)

[சுரிதல் - உள்ளே சுளித்திருத்தல்; ஆழி - சக்கரம்; புள் - கருடன்; கடாகின்ற ஆறு - நடத்துகின்றபடி]

இதில் பராங்குச நாயகி தனது உள்ளத்தினுள்ளே ஒரு பெரிய திருவடித் திருநாள் நடந்து செல்லுகின்றபடியைத் தாய்மா ரிடம் எடுத்துரைக்கின்றாள். அவள் பெற்ற இறையின்பம் நம்மையும் பற்றத் தொடங்குகின்றது. 'கங்குலும் பகலும்' (7.2) என்ற திருவாய்மொழியில் பராங்குச நாயகியின் நிலையைத் திருத்தாயார் கூறியது நமது நினைவிற்கு வரு கின்றது. 'சங்கு சக்கரங்கள் என்று கை கூப்பிய' வளாத லாலும் (1), 'தாமரைக்கண் என்றே தளர்ந்த' வளாதலாலும் (1), அந்தத் திவ்வியாயுதங்களை ஏந்திக் கொண்டு இவளுக்குக் காட்சி தருகின்றான் எம்பெருமான். 'வன்காற்று அறைய மறித்து கிடந்து அலர்ந்த மென்கால் கமலத்தடம்போல்

பொலிந்து நின்ற, எம்பெருமான் தடங்கண்கள்' (திருவிரு. 42) என்று ஒருக்கணித்துக் கடைக்கண்ணால் நோக்கிய திருக் கண்ணழகுடன் காட்சி தந்தவிதத்தையும் பேசுகின்றாள் ஆழ்வார் நாயகி. முகில்வண்ண நிறத்துக்குப் பொருத்தமான வெளுப்பையும் சுரியையும் உடைத்தான திருச்சங்கையும், அங்ஙன் ஒரு விசேடணம் இட்டுச் சொல்ல வேண்டாதபடி யான அழகையுடைத்தான திருவாழியையும் திருச்சங்கையும் ஏந்தியவண்ணம் தாமரைக்கண்கள் பிறழ வந்து பெரிய திருவடித் திருத்தோளில் ஏறிச் சாரிகை வந்து தன் நெஞ்சினுள் உலாவுகின்ற எம்பெருமானைக் காணுமாறு அன்னைமார்களை வேண்டுகின்றாள் பராங்குச நாயகி. இவ்விடத்தில் எம்பெருமான் திருமேனிக்குத் திவ்வியாயுதங் கள் பிரகாசமாகத் திகழ்வதுபோல அவனுடைய ஆன்ம குணங்கட்குத் திருக்கண்கள் பிரகாசமாக இருப்பதை எண்ணுகின்றோம். தண்ணீர் தோன்றுவது கண்வழி அல்லவா?

'என்சொல்லிச் சொல்லுகேன்': 'என்ன பாசுரமிட்டு எதைச் சொல்வது?' என்கின்றாள். 'உங்கள் கண்ணுக்கு இலக்காகாதாப் போலே, என் வாக்குக்கும் இலக்காகிற தில்லையே!' என்கின்றாள். 'புள்ளைக் கடாகின்ற ஆற்றைக் காணீர்!' என்று பேசிய பிறகு இன்னமும் பேசவேண்டியது என்ன இருக்கின்றது? என்னில்: 'அதைப் பற்றிப் பன்னி உரைக்கில் பாரதமாக வளருமே; அதைச் செய்ய முடிய வில்லையே' என்கின்றாள். இனித் தான் மேற்கொள்ள வேண்டிய காரியத்தைப் பின்னடிகளில் தெரிவிக்கின்றாள். வேத ஒலியும், விழா ஒலியும், பிள்ளைக் குழாம் விளையாட் டொலியும் நிரந்தரமாக நடைபெறுகின்ற திருப்பேரெயி லுக்குச் சென்று சேர்வதே தன்னுடைய பணி என்கின்றாள்.

'பிள்ளைக்குழாம் விளையாட்டொலி' இத்திருப்பதிக்குச் சிறப்பான தொரு விசேடணம். சிறு பிள்ளைகள் திரண்டு

விளையாடுவதென்பது எங்கும் உண்டு; இவ்வூரில் சந்நிதித் தெரு சற்று விசாலமானது; அங்குப் பிள்ளைகள் விளையாடுவதற்கு வசதி அதிகம். எம்பெருமானும் அந்த விளையாட்டைக் காண ஆசைப்பட்டானாம். எதிரேயிருந்த பெரிய திருவடியின் சந்நிதி இடைச்சுவராயிருந்தபடியாலே அந்த விளையாட்டைக் காண மறைவாயிருக்கின்றதே என்று வருந்தி 'கருடா, அப்பால் விலகிப் போ' என்று பெருமான் ஆணையிட்டானாம். அதன்படி பெரிய திருவடி விலகி நிற்கும் நிலையை இன்றும் காணலாம்.[12]

6. **சிரீவைகுண்டம்**[13] : நெல்லை மாவட்டத்திலுள்ள சிரீவைகுண்ட வட்டத்தின் தலைநகரம். திருக்கோயிலின்

12. நந்நனாருக்காக திருப்புன்கூர் என்ற திருத்தலத்தில் நந்தி விலகி நிற்பதை நினைவு கூர வைக்கின்றது.
13. **சிரீவைகுண்டம்** : சிரீவைகுண்டம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவு. குதிரை வண்டிகளும் மாட்டு வண்டிகளும் கிடைக்கும். இங்கு எல்லா வசதிகளும் கிடைக்கும். திருநெல்வேலியிலிருந்து பேருந்துகள் இவ்வூர் வழியே திருச்செந்தூருக்குச் செல்வதால் இந்த வசதியையும் பயன் படுத்திக் கொள்ளலாம். திருக்கோயில் மிகப் பெரியது; சிற்பங்கள் நிறைந்த தூண்கள் நிறைந்தது. எம்பெருமான்: சிரீவைகுந்தன், கள்ளபிரான். தாயார்: வைகுந்தவல்லி நாச்சியார், சோரநாத நாச்சியார். நின்ற திருக்கோலம்; தன்னந்தனியாக நிற்கின்றான். கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம். இந்த இருவருக்கும் கன்னி மூலையில் எதிரெதிராகத் தனிக்கோயில்கள் உள்ளன. இந்த எம்பெருமானுக்கு ஆண்டிற்கு இரண்டு முறை பகலவன் வழிபாடு நடைபெறுகின்றது. சித்திரைத் திங்கள் ஆறாம் நாளும் ஐப்பசித் திங்கள் ஆறாம் நாளும் இளங்கதிரவனின் கிரணங்கள் கோபுர வாயில், மண்டபங்கள் இவற்றையெல்லாம் கடந்து வந்து எம்பெருமானின் திருமேனியை வருடி அதனைப் பொன்னிறமாக்குகின்றன. இத்தகைய சிறப்பு வேறு எங்கும் இல்லை.

வாயிலில் அமைக்கப்பெற்றுள்ள தகரக் கொட்டகை கோயிலின் எழிலையும் காம்பீரியத் தோற்றத்தையும் கெடுத்து விடுகின்றது. திருக்கோயிலின் கருவறையிலுள்ள மூலவர்—வைகுந்த நாதன் நல்ல சிலை வடிவில் அமைக்கப் பெற்றுள்ளார். உற்சவர் கண்ணபிரான் அர்த்த மண்டபத்தில் உபய பிராட்டிமார் இருபுறமும் இருக்க, கையில் கதையுடன் நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார். மூலவர் அருகில் தேவிமார் இல்லை. இவரைப் பற்றிய இதிகாசம்; சோமுகாசுரன் என்பவன் ஓர் அசுரன். அவன் நான்முகனிட மிருந்த நான்மறைகளையும் பறித்துச் சென்று விடுகின்றான். அதனால் மனங்கவன்ற நான்முகன் வைகுந்த நாதனை நோக்கித் தவம் செய்கின்றான். நான்முகனின் தவத்திற்கு இரங்கி மகிழ்ந்த எம்பெருமான் பெரிய திருவடியின்மீது ஏறி வந்து சோமுகாசுரனை வென்று நான்மறைகளையும் அவனிடமிருந்து பெற்று அவற்றை நான்முகனிடமே தந்து விடுகின்றான். நான்முகன் பொருட்டு அவசரமாக எழுந்தரு ளிய காரணத்தால் தேவிமார் இன்றித் தன்னந்தனியாக எழுந்தருளியுள்ளான். இந்த எம்பெருமானையே 'பால் பாண்டியன்' என்றும் வழங்கி வருகின்றனர்.

வரலாறு இது; பண்டு நான்முகன் வழிபட்ட வைகுந்த நாதன் பின்னர் எப்படியோ சிறிது காலம் மண்ணுக்குள் மறைந்து விடுகின்றான். அப்படி மறைந்திருக்கும் இடத்தில் அக்கம் பக்கத்தில் மேய்ந்து கொண்டிருக்கும் பசுக்கள் பால் சொரியத் தொடங்குகின்றன. ஆநிரைகளை மேய்க்கும் ஆயர்கள் இச்செய்தியை அரசனிடம் தெரிவிக்கின்றனர். அரசனும் அதிசயத்துடன் அவ்விடம் போந்து ஆட்களை விட்டு மண்ணைத் தோண்டிப் பார்க்கின்றான். மண்ணுக்குள் மறைந்திருந்த வைகுந்தநாதனை வெளிக்கொணர்ந்து அவன் இருந்த இடத்தில் கோயில் எடுப்பிக்கின்றான்; வழிபடு கின்றான். இது காரணமாக இன்றும் இவனுக்குப் பால்

திருமஞ்சனம் நடைபெற்று வருகின்றது. பாலாழியில் கண் வளரும் பரந்தாமன் பாலாபிஷேகம் பெறுவதும் இதனால் 'பால் பாண்டியன்' என்று திருநாமம் சூட்டப் பெறுவதும் பொருத்தம்தானே.

வைகுந்த நாதனை நம்மாழ்வார் மட்டிலும் இரண்டு பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார் (9.2 : 4, 8), இந்த இரண்டு பாசுரங்களும் நேரே இவரை மங்களாசாசனம் செய்தவை அல்ல. அண்மையிலுள்ள திருப்புளிங்குடி எம்பெருமானை மங்களாசாசனம் செய்த திருவாய்மொழிப் பதிகத்தில் இந்த இரண்டு பாசுரங்களும் வருகின்றன. ஒரு பாசுரத்தில் 'திருவைகுந்தத்துள்ளாய் தேவா!' (8) என்ற தொடர் மட்டிலுமே வருகின்றது. மற்றொரு பாசுரம், 'வைகுந்தத்துள் நின்று' (4) என்ற தொடர் மட்டிலுமே இந்த எம்பெருமானைக் குறிக்கின்றது. இந்த இரண்டு பாசுரங்களாலும் அர்ச்சாவதாரமாக எல்லாத் திருப்பதி களிலும் எல்லாத் திருக்கோலங்களிலும் எழுந்தருளி யிருப்பவன் பரமபத நாதனே என்ற தத்துவம் குறிப்பாகப் புலப்படுத்தப் பெற்றுள்ளது. பொதுவாக அர்ச்சை வடிவில் உள்ள எம்பெருமான் சில தலங்களில் சயனித்திருப்பான்; சிலவற்றில் இருந்த திருக்கோலத்தில் சேவை சாதிப்பான்; இன்னும் சிலவற்றில் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருவான், ஆழ்வார்கள் இந்த மூன்று திருக்கோலங்களில் எம்பெருமானைத் தனித்தனியே அநுபவித்து மகிழ்வர். இந்தத் திருக்கோலங்கள் மூன்றையும் ஒருசேர சேர்த்தும் அவர்கள் அநுபவித்துக் களிப்பர். திருமழிசையாழ்வார் 'நின்ற தெந்தை' (திருச்சந். 64) என்ற பாசுரத்திலும், திருமங்கையாழ்வார் 'கல்லுயர்ந்த' (திருநெடுந். 15) என்ற பாசுரத்திலும், நம்மாழ்வார்,

**நின்ற வாறும் இருந்த வாறும்**
**கிடந்த வாறும் நினைப்பரியன்**

—திருவாய் 5.10 ; 6

என்ற இன்னொரு பாசுரத்திலும் இந்த மூன்று நிலைகளிலும் எம்பெருமானை அநுபவித்து மகிழ்ந்துள்ளனர்.

7. **வரகுண மங்கை**[14] : இத்தலம் தண்பொருநை யாற்றின் வடகரையில் உள்ளது. இங்கு வந்து **'புளிங்குடிக் கிடந்து'** (திருவாய், 9.2 : 4) என்ற திருவாய்மொழியை ஓதிச் சேவிக்கின்றோம். தனிப்பதிகமோ பாசுரமோ இல்லை. 'வரகுணமங்கை இருந்து' என்ற தொடர் மட்டிலுமே இந்த எம்பெருமானுக்கு உரியது. இந்தப் பாசுரமும் புளிங்குடிப் பெருமானுக்கு உரியது. புளிங்குடிப் பெருமானை மங்களா சாசனம் செய்யும் பொழுதே வரகுண மங்கை எம்பெரு மானும் வைகுந்த நாதனும் விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்து இப்பாசுரத்தால் மங்களாசாசனம் பெறுகின்றனர்!

8. **திருக்குளந்தை**[15] (பெருங்குளம்) : திருக்கோயில் ஊரின் மேற்குப் பக்கத்திலுள்ளது. நம்மாழ்வார் மட்டிலும்

14. **வரகுண மங்கை** : சிரீவைகுண்டத்திற்குக் கிழக்கே 2 கல் தொலைவு. தூத்துக்குடி செல்லும் சாலையில் உள்ளது. சிவைகுண்டத்திலிருந்து குதிரை வண்டி களும் மாட்டு வண்டிகளும் கிடைக்கும். இத்திருத் தலத்தின் அர்ச்சகர் சிவைகுண்டத்திலிருந்து வர வேண்டும். திருத்தலப் பயணிகளே அவரை இட்டுக் கொண்டு வருதல் சிறப்பு. எம்பெருமான்: விஜயாசனர். தாயார் : வரகுணவல்லி. கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம் இருந்த திருக்கோலம்.

15. **திருக்குளந்தை** : சிரீவைகுண்டத்திலிருந்து வட கிழக்கில் சுமார் 10 கி.மீ. தொலைவிலுள்ளது. சிரீவைகுண்டம்-ஏரல் பேருந்து வழியில் உள்ளது. இங்குக் குதிரை வண்டிகளும் மாட்டுவண்டிகளும் குறைவில்லை. தங்கும் விடுதிகளும் உணவு விடுதி களும் உள்ளன. இத்தலத்திலிருந்து தண் பொரு நையாறு $1\frac{1}{2}$ கி.மீ. தொலைவில் ஓடுகின்றது. இங்குள்ள ஒரு பெரிய ஏரியின் காரணமாக இவ்வூர் 'பெருங்குளம்' என்ற பெயராலும் வழங்கி வருகின்றது. எம்பெருமான் : மாயக்கூத்தன். தாயார்: குளந்தை வல்லி நாச்சியார். நின்ற திருக் கோலம், கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம்.

ஒரே பாசுரத்தால் இத்திருக்கோயில் எம்பெருமானை மங்களாசாசனம் செய்துள்ளார்.

கூடச்சென் றேன்இனி என்கொ டுக்கேன்?
கோள்வளை, நெஞ்சத் தொடக்க மெல்லாம்
பாடற் றொழிய இழந்து, வைகல்
பல்வளை யார்முன் பரிச ழிந்தேன்
மாடக் கொடிமதிள் தென்கு ளந்தை
வண்குட பால்நின்ற மாயக் கூத்தன்
ஆடற் பறவை உயர்த்த வெல்போர்
ஆழி வலவனை ஆத ரித்தே.
—திருவாய் 8.2 ; 4

[கோல்வளை - அழகிய வளை! பாடுஅற்று - மீதியில் லாமல் நீங்கி; வைகல் - நெடுங்காலமாகவே; குடபால் - மேற்குப் பக்கம்; பறவை - கருடன்; ஆழி வலவன் - சக்கரத்தை வலக்கையில் உடையவன்]

என்பது பாசுரம். பாசுரத்திலேயே திருக்கோயில் ஊரின் மேற்குப் பக்கத்தில் இருப்பதையும், எம்பெருமான் நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிப்பதையும் அறிய முடிகின்றது. இது நாயகி நிலையில் 'மகள் பாசுரமாக' நடைபெறுகின்றது.

எம்பெருமானுடன் கலந்து பிரிகின்றாள் ஒரு பிராட்டி. அவன் மறுபடியும் தன்னிடம் வரும் வரையில் அவளால் பொறுத்திருக்க முடியவில்லை. ஆகவே, தானே அவன் இருக்கும் இடத்தை நோக்கிப் புறப்படுகின்றாள். இதுகண்ட தோழிமார் முதலானோர் படி கடந்து இங்ஙனம் அவள் புறப் படுவது அவள் நிலைக்கு ஆகாது என்று அறிவுரை பகன்று அவளை நிறுத்தப் பார்க்கின்றனர். அவளோ தனக்கு எம்பெருமான் விஷயமொன்று தவிர, மற்று எதிலும் நசை இல்லாமையைச் சொல்லி அவர்கள் அறிவுரைக்குத் தன்னால் இணங்க முடியாமையைச் சொல்லுவதாக அமைந்தது இப்

பாசுரம். இத்தலத்தை இவர் ஒருவரே இந்த ஒரே பாசுரத்தால் மங்களாசாசனம் செய்துள்ளார். 'மாயக்கூத்தன்' என்ற எம்பெருமானின் திருநாமம் நம்மைப் பல்வேறு கோணங்களில் சிந்திக்க வைப்பதை இந்த ஆசிரியரின் 'பாண்டிநாட்டுத் திருப்பதிகள்' என்ற நூலில் காணலாம்.[16]

9. திருப்புளிங்குடி[17] : நம்மாழ்வார் ஒருவரே இத்தலத்து எம்பெருமானை மங்களாசாசனம் செய்துள்ளார். நம்மாழ்வார் சயனத்திருக்கோலத்தில் இருக்கும் இறைவனைக் காணும்போது,

> **கொடியார் மாடக் கோளூர்**
> **அகத்தும் புளிங்குடியும்**
> **மடியா தின்னே நீதுயில்**
> **மேவி மகிழ்ந்ததுதான்**
> **அடியார் அல்லல் தவிர்த்த**
> **அசைவோ? அன்றேல்,இப்**

16. ஷை நூல் (கட்டுரை-14) பக் 238-242 காண்க.
17. திருப்புளிங்குடி : சிரீவைகுண்டம் இருப்பூர்தி நிலையத்திலிருந்து 2கல் தொலைவு; திருத்தலத்தினின்றும் கீழ்த்திசையில் 2கல் தொலைவு இருப்பூர்தி நிலையத்திலிருந்து குதிரை வண்டிகள்' மாட்டு வண்டிகள் கிடைக்கும். இத்திருத்தலத்தில் எந்தவித வசதிகளும் இல்லாததால் சிரீவைகுண்டத்திற்கு வந்துவிடவேண்டும். எம்பெருமான்: காய்சின வேந்தன். தாயார்: மலர் மங்கை நாச்சியார். கிடந்த திருக்கோலம் (புயங்கசயனம்) கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம். இத்திருத்தலத்தில் சடாரி சாதிக்கப் பெறுவதில்லை. ஒருகாலத்தில் பார்ப்பனரல்லாதார் திருக்கோயிலுக்குள் நுழைய அனுமதி இல்லாதிருந்தது; அவர்கள் கருடனின் சன்னிதியருகிலுள்ள ஒரு சாளரம் வழியாகத்தான் எம்பெருமானைச் சேவிக்க வேண்டும். இப்பொழுது அந்தக் கட்டுப்பாடு வழக்கில் இல்லை.

**படிதான் நீண்டு தாவிய**
**அசைவோ? பணியாயே** —திருவாய் 8.3 : 5

[மடியாது - இடம் வலம் கொள்ளாமல்; இன்னே - இன்று காண்பது போலவே; மேவி - விரும்பி; அல்லல் - துன்பம்; அசைவு - அயர்ச்சி; பணியாய் - கூறியருள வேண்டும்.]

என் பாசுரத்தை அருளுகின்றார். ''என்றைக்கு இங்கே திருக்கண் வளர்ந்தருளப் புகுந்தானோ அன்று முதல் இன்று வரை ஆடாமல் அசையாமல் சயனித்திருக்கின்றானே! இஃது என்ன சிரமமோ?' என்று கருதுகின்றார். ''எம்பெருமான் இப்படித் திருக்கண் வளர்வது நம் போன்ற நிலவுலகத்தவர்கட்கன்றோ? அதனை அறிந்து அவர்கள் பரிந்து ஈடுபட வேண்டும். அங்ஙனம் ஈடுபடக் காணாமையால் எம்பெருமான் இப்படிக் கிடப்பதை விட்டு எழுந்து போக வேண்டியதே அவன் மேற்கொள்ள வேண்டிய செய்கை. அப்படி எழுந்து போகாமல் இருப்பது என்றேனும் யாரேனும் ஒருவர் பரியக் கூடும் என்றே கிடக்கின்றான்'' என்று ஆழ்வார் கருதுகின்றார். நாமும் அப்படித்தான் நினைக்கின்றோம். இவ்விடத்தில் **''நடந்த கால்கள் நொந்தவோ?''** (திருச்சந் 61) என்ற திருமழிசையாரின் பாசுரம் அநுசந்திக்கத்தக்கது.

அடுத்து, இத்தலத்து எம்பெருமான்மீது ஆழ்வார் அருளிய திருவாய்மொழிப் பாசுரங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் நம் மனத்தில் எழுகின்றன.

**பண்டைநா ளாலே நின்திரு வருளும்**
**பங்கயத் தாள்திரு வருளும்**
**கொண்டுநின் கோயில் சீய்த்துப்பல் படிகால்**
**குடிகுடி வழிவந்தாட் செய்யும்**

> தொண்டரோர்க் கருளிச் சோதிவாய் திறந்துன்
> தாமரைக் கண்களால் நோக்காய்
> தெண்டிரைப் பொருநல் தண்பணை சூழ்ந்த
> திருப்புளிங் குடிக்கிடந் தானே (1)

[பங்கயத்தாள் - பெரிய பிராட்டியார்; சீய்த்து - திருவலகிடுதல் போன்ற செயல்களைச் செய்து; பல் படிகால் - அநாதி காலமாக; ஆள்செய்யும் - அடிமை செய்யும்]

என்பது முதற்பாசுரம். வேறு புகலற்ற தம்மைக் குறித்து ஒரு சொல் அருளிச்செய்து விடாய்தீரக் குளிர நோக்கியருளுமாறு வேண்டுகின்றார் ஆழ்வார். வழிவழியாகக் கைங்கரியம் செய்யும் குடிவழி வந்தவராகத் தன்னைக் கருதுகின்றார்.

நின்கோயில் சீய்த்து : திவ்வியதேசங்களில் பண்ணும் கைங்கரியங்களில் தலையாயது இது.[18] 'வயலணி அனந்த புரம் கடைத்தலை சீய்க்கப்பெற்றால் கடுவினை களைய லாமே' (திருவாய் 12.2 : 7) என்று பின்னரும் அருளிச் செய்வர். திருவலகிடுதல், மெழுகுதல், கோலமிடுதல் முதலியன செய்கைக்கு கோயில் சீய்க்கை என்று பெயர். இங்கே ஈட்டில் திருக்கண்ணமங்கையாண்டான் இதிகாசம் ஒன்று உள்ளது. அவரைப்பற்றி ஸ்ரீவசனபூஷணத்தில் "திருக்கண்ண மங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை

18. திலகவதியார் - திருவதிகை வீரட்டத்தானத் திருக் கோயிலில் செய்த பணியும் அப்பர் பெருமான் உழவாரப் படைகொண்டு திருக்கோயில்தோறும் செய்து வந்த கைப்பணியும் நினைவுகூர்தற் குரியவை.

19. ஸ்வவ்யாபாரம் - தன்னைக் காத்துக் கொள்ளற் குரிய செயல். ஒரு வேலைக்காரனுடைய நாயினை மற்றொரு வேலைக்காரன் அடிக்க, அவன் அது பொறாமல், அடித்தவனை எதிர்த்துப் பொருது அவனையும் கொன்று தானும் குத்திக் கொள்வ

விட்டான்'' (83) என்று அருளிச் செய்யப்பட்டிருக்கின்ற தன்றோ? அப்படிப்பட்டவர் அவ்வூரில் ஒருமகிழ மரத்தடியிலே இருந்து திருவலகிடா நிற்கையில்; உண்மையுணர்வற்ற ஒருவன் 'எம்பெருமானே உபாயம் என்றிருக்கிற அநந்யப் பிரயோஜநர் இங்ஙனே கிலேசப்படுவது எதற்காக?' என்றானாம்; அப்போது திருவலகிட்ட இடத்தையும் இடாத இடத்தையும் காட்டி, 'இவ்விடமும் அவ்விடமும் இருந்தபடி கண்டாயே; இதற்கொருபலமில்லை என்று தோற்றி இருந்ததோ?' என்று பணித்தாராம் திருக்கண்ணமங்கையாண்டான்.ஈண்டு அறியத்தக்க வேண்டுவதாவது—திருஷ்டப் பிரயோஜனம் (= நேரில் காணும் நன்மை அதாவது இம்மைப் பயன்) என்றும், அத்ருஷ்ட பிரயோஜநம் (= மறுமைப்பயன்) என்றும் பிரயோஜநம் இருவகைப்படும். அத்ருஷ்டப் பிரயோஜநத்திற்கொரு சாதநாநுஷ்டானம் பண்ணாமையே அநந்யப்ரயோஜநற்குற்றது. சந்நிதி வாசலை அலகிடுதல் முதலிய திருப்பணிகளை ஒரு ப்ரயோஜநாபேட்சையின்றிக்கே செய்வதனால் ஒருகுறையும் இல்லை; இது நிஷ்ப்ரயோஜநம்தானேஎன்ன வேண்டா; திருவலகிடாத இடம் கண்கொண்டுகாணவொண்ணாததாயும், திருவலகிட்ட

தாக இருக்கிறபடியைக் கண்டு, ஒரு சிறிய மனிதன் தன்னபிமானத்திலே ஒதுங்கினது என்னும் இவ்வளவுக்காகத் தன்னை அழிய மாறினபடியைக் கண்டால் 'பரமசேதநன் (= இறைவன்) அபிமானத்திலே ஒதுங்கினால் அவன் என்படுமோ?' என்று தம்மைப் பாதுகாத்தற்குரிய செயல்களை அடைய விட்டு, அந்நாயினைப் போன்று தம்மை நினைத்துக் கொண்டு அப்போதே வந்து திருக்கண்ணமங்கையில் பத்தராவில் திருவாசலில் (= பத்தராவிப் பெருமாள் சந்நிதியின் திருவாசலில்) கைப்புடையிலே (= கோபுர வாசலுள் இருக்கின்ற ஒட்டுத்திண்ணை, கை-சிறிய; புடை - இடம்) புகுந்து கண் வளர்ந்தார் என்பது பிரசித்தமிறே.

இடம் கண்ணாற் காண இனிதாயிருப்பதே பிரயோஜநம் இஃது அநந்யப் ப்ரயோஜநத்திற்கு விரோதியன்றுஎன்பதாம்.

**'உன் தாமரைக் கண்களால் நோக்காய்'** : சொல்லில் தோற்றாத பற்றும் நோக்கிலே தெரியும்படிக் குளிர நோக்கியருள வேண்டும் என்பது இதன் பொருள். இத்தொடர் பற்றிய ஓர் இதிகாசத்தை ஈட்டாசிரியர் குறிப்பிடுகின்றார், திருவரங்கத்தில் பிள்ளை தேவப்பெருமாள் அரையர் என்பார் இப்பாசுரத்தைச் சேவிக்கையில் 'உன் தாமரைக் கண்களால் நோக்காய்' என்று ஒரு தடவை சொல்லி நிறுத்தாமல் 'நோக்காய் நோக்காய்...' என்று பல காலம் சொல்லிக் கொண்டேயிருந்து மேலடியில் போகமாட்டாது நின்றாராம். அப்பொழுது கேட்டிருப்போர் கூட்டத்தில் வீற்றிருந்த அவருடைய திருத்தகப்பனார் ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் எழுந்திருந்து 'பிள்ளாய் நீ எம்பெருமான் திருவுள்ளம் புண்பட இங்ஙனம் பலகாலும் சொல்லி வலியுறுத்தலாமோ? அழகிய மிடற்றைத் தந்து, நல்ல பாட்டைத் தந்து, ஐசுவரிய சந்தானங்களையும் அவர் தந்தருளியிருக்க, ஒன்றும் செய்யாதாராக நினைத்து இன்னமும் 'நோக்காய் நோக்காய்...' என்றால் இஃது என்னே! மேலே பாடுக' என்றாராம்.[20]

20. இப்பதிகத்தின் பொருட்சுவை ஒரு புறம் இருக்க, சொற்சுவை கல் நெஞ்சத்தையும் கரையப் பண்ணும். 'சம்சாரத்தில் ஆர்த்தி விசேடங்கள் உண்டாகி நெஞ்சு தடுமாறிக் கிடக்கும்போது இப் பதிகத்தின் பாசுரங்களை வாய்வெருவினால் நெஞ்சுகுளிரும்' என்று கூறி, மேலும் 'நாற்பதாண்டுகளுக்குள் திருவரங்கம் பெரிய கோயிலில் பெரிய திருவத்யயன உற்சவத்தில் என்னுடைய ஆசார்யரான அழகிய மணவாளச்சீயர் கண்ணும் கண்ணீருமாயிருந்த இருப்பு 'நின்று நோன்றிக் கண்ணும் நீங்கா நெஞ்சுள்ளும் நீங்காவே' (திருவாய் 5.5 : 3) என்று உரைப்பர் பி. ப. அண்ணங்கராசாரிய சுவாமிகள் (திவ்யார்த்த தீபிகை காண்க.)

10. **தொலைவிலிமங்கலம்**[21] : இத்திருத்தலத்து எம்பெருமானை ஆழ்வார் ஒரு திருவாய்மொழியால் (5.5) மங்களாசாசனம் செய்கின்றார். இப்பதிகம் நாயகி நிலையில் தோழிப் பாசுரமாக நடைபெறுகின்றது. பராங்குசநாயகி பிறந்தபொழுது இவரது திருத்தாயார் முதலானோர் சோதிடர்களை அழைத்து இக்குழந்தையின் பேற்றுச் சிறப்பு களைப்பற்றி உசாவுகின்றனர். "இவள் வாழ்வு மிகவும் சிறப்பாகவே அமைந்துள்ளது. இவள் உயர்வற உயர்நல முடையவனான அயர்வறும் அமரர்கள் அதிபதியால் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவள்; தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல்மாலைகள்" சொல்லுவள் என்றெல்லாம் சொல்லுகின்றனர். அதன் பிறகு "ஆனால் இவளுக்கு ஓர்

21. **தொலைவிலி மங்கலம் (இரட்டைத் திருப்பதிகள்)** இங்கு இரண்டு திருப்பதிகள் உள்ளன. ஆகவே இவை 'இரட்டைத் திருப்பதிகள்' என்று பெயர் பெற்றன. ஒன்று தண் பொருநையாற்றின் வடகரை யில் ஆற்றுப்படுகையில் உள்ளது. (இறைவன் - சீநிவாசன்); மற்றொன்று இதற்குச் சற்று வடபுறம் இருப்பது (இறைவன் - செந்தாமரைக் கண்ணன்). இவை இரட்டைத் திருப்பதிகளாக இருப்பினும் 108 திருப்பதிக் கணக்கில் ஒன்றாகவே கருதப்பெறு கின்றது. ஆழ்வார் திருநகரி இருப்பூர்தி நிலையத்தி லிருந்து 2 கல் தொலைவு; நிலையத்திற்குக் கிழக்கே உள்ளது. இத்திருக்கோயிலின் அர்ச்சகர் அடுத்த கரையிலுள்ள தென்திருப்பேரையிலிருந்து வருதல் வேண்டும். இறைவன்: தேவபிரான், அரவிந்த லோசனன். தாயார் கருந்தடங்கண்ணி நாச்சியார். நின்ற, இருந்த திருக்கோலங்கள். கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம். இந்த இரண்டு திருக்கோயில் களைத் தவிர வேறு கட்டடங்கள் அருகில் உள்ளன.

இந்தச் சிற்றூர் **சௌரமங்கலம்** என்ற பெயரால் வழங்கி வருகின்றது. இத்திருக்கோயிலின் மேல்திசையில் ஒரு கல் தொலைவில் 'அப்பன் சந்நிதி' உள்ளது. இது நம்மாழ்வார் அவதரித்த தலம் என்று சொல்லப்பெறுகின்றது.

அவக்கேடு உண்டு. அஃது என்னவெனில்: இவளைத் தொலைவிலிமங்கலத்திற்குக் கொண்டு செல்வீர்களாயின் இவளை இழக்க நேரிடும். இவளை அங்குக் கொண்டு போகாமலிருந்தால் இவளுடன் சேர்ந்து நெடுங்காலம் வாழலாம். இந்த ஒரு கண்டத்திற்கு இவள் தப்பிப் பிழைப்பது அரிது.'' என்றும் சொல்லியிருந்தனர். ஆனால், இவள் பிறந்த குடி தொலைவிலிமங்கலத்திற்குக் கொண்டு போகாதிருக்கும்படியான குடி அன்று; பரம வைணவ நெறியைச் சார்ந்த குடி; இவளைப் பெறுவோமாயினும் சரி, இழப்போமாயினும் சரி, அங்கு இவளை அழைத்துச் சென்று அத்தலத்து எம்பெருமானைச் சேவைபண்ணி வைத்தே தீர்வது'' என்றிருக்கும்படியான குடி. அப்படியே அவர்கள் செய்யும்படியாகவும் நேர்ந்தது. அதனால் விளைந்த 'விபரீதத்தையே' தோழி எடுத்துரைக்கின்றாள்.

பராங்குச நாயகி தொலைவிலிமங்கலத்து எம்பெருமானைச் சேவித்த நாள் தொட்டு அவனுடைய பேரகிழல் ஈடுபட்டு அவனுடைய திருமேனி அழகினையே வாய்வெருவுகின்றாள். இந்த நிலையைத்தான் தோழி தாய்மாருக்கு எடுத்துரைக்கின்றாள்.

> தவள வொண்சங்கு சக்கர மென்றும்
> தாமரைத் தடங் கணென்றும்
> குவளை யொண்மலர்க் கண்கவர் நீர்மல்க
> நின்று நின்று குமிறுமே.
>
> —திருவாய். 6.5 : 1

[தவள - வெண்ணிறமான; தடம் - விசாலமான; மல்க- பெருக[

இதில் நீலத் திருமேனிக்குப் பாங்காக வெள்ளிய சங்கு விளங்கும் அழகைப் பேசுகின்றாள். ''உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம்; கண்படை கொள்ளில் கடல் வண்ணன் கைத்தலத்தே'' (நாச். திரு 7 : 8) என்று

ஆண்டாள் பேசுகின்றபடியே இவளும் பேசுகின்றாள். இடையீடின்றியே பகவதநுபம் பெற்றிருக்கும் சங்கிற்கே உடம்பு வெளுக்கும் நிலை ஏற்பட்டால், பகவதநுபவம் சிறிதுமில்லாத தன் நிலை என்னவாகுமோ என்று ஏங்குகின்றாள் போலும். 'பெருங் கேழலார்தம் பெருங்கண் மலர்ப் புண்டரீகம் நம்மேல் ஒருங்கே பிறழவைத்தார்'' (திருவிருத் 45. பிறழ -மிக) என்று எம்பெருமான் தன்னைக் குளிர நோக்கினமையைப் பேசுகின்றாள். 'கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரி யோடி நீண்ட அப்பெரியவாய கண்கள் என்னைப் பேதமை செய்தனவே' (அமலனாதி - 8) என்று பாண்பெருமாள் அநுபவித்தவாறு இவளும் அநுபவித்து அத்திருக்கண்களின் நீர்மையை நினைத்தவாறே இவளுடைய கண்கள் நீர் மல்க நிற்கும் நிலையை எடுத்து காட்டுகின்றாள். நின்று நின்று குமிறும் : நெஞ்சின் நினைவை வாய்விட்டுச் சொல்லமாட்டாத இன்னாப்பாலே உள்ளே குமுறா நின்றாள். 'குமிறும்' என்று பதம் பிரிக்காமல் (நின்று திறு உகும் இறும்) என்று பிரித்து 'உகும் - நீர்ப்பண்டமாக நின்றாள்; இறும் - தளர்ந்து விழுகின்றாள்' என்று சிலர் பொருள் கூறினார்களாம். அது சுவையற்றது என்று மறுக்கப் பட்டதை ஈட்டாசிரியர் குறிப்பிடுகின்றார். ஈடு : ராஜ கோஷ்டியிலே 'உகும் இறும்' என்று பொருள் சொல்ல, விக்கிரம சிங்கன் என்பான் ஒருவன் 'அங்ஙனலல்ல; கன்றைக் கடக்க வைத்தால் முலைக் கண் கடுத்துப் பசு அலமந்து படுமாப்போலே உள்ளோடுகின்ற கிலேசம் வாய்விட மாட்டாதே நோவுபடுகின்ற இவளுக்கு இது வார்த்தையோ? என்றான். பெருவெள்ளத்தில் சுழிக்குமாப் போலே அகவாயிலுள்ளது வெளிவிடமாட்டாதே உள்ளே நின்று 'சுழிக்கிறபடி' என்பது கண்டு மகிழ்க.

11. **சிரீவரமங்கலம்**[22] (வானமாமலை): இத்தலம் நெல்லை மாவட்டம் நாங்குநேரி வட்டத்தில் உள்ளது. வட்டத்தின் தலைநகர் நாங்குனேரி. இதே ஊரில் நான்கு ஏரிகள் இருந்தமையால். 'நான்குநேரி' என்ற பெயரால் வழங்கு கின்றது. ஆனால் இன்று நாம் காண்பது ஒரே ஒரு ஏரியே; இது திருக்கோயிலுக்கு அடுத்துள்ளது. ஆதியில் கோயிலின் கருவறையே குளத்திற்குள்தான் இருந்திருக்க வேண்டும் என்று சொல்லுகின்றார்கள். இன்றும் குளத்தில் நீர் நிறைந் திருக்கும்பொழுது கோயிலின் கருவறையைச் சுற்றி ஒன்றிரண்டு அடி நீர் இருப்பதைக் காணலாம். இந்தத் திருக்கோயில், குளம், ஏரிக்கரையிலுள்ள மரங்கள் எல்லாம் பரமபத நாதனை நினைவு படுத்திக்கொண்டே இருக்கும்.

இத்திருத்தலத்து எம்பெருமானை நம்மாழ்வார் மட்டிலும் ஒரே ஒரு திருவாய்மொழியால் (5.7) மங்களா சாசனம் செய்துள்ளார். இங்குள்ள எம்பெருமான் தோத்தாத் திரி பெருமாளின் இருப்பு வைகுந்தத்தில் பரமபத நாதன் இருப்பை நினைவு படுத்தும். ஆழ்வார் பாசுரங்கள் நம்

22. **சிரீவரமங்கலம்** : நெல்லை - நாகர் கோவில் நெடுஞ் சாலையில் நெல்லையிலிருந்து 18-வதுகல் தொலை வில் இவ்வூர் உள்ளது. திருக்குறுங்குடியிலிருந்து கீழ்த்திசையில் 8 கல் தொலைவு. அடிக்கடிப் பேருந்து வசதிகள் உள்ளன. இராமாநுச கூடங்கள், சத்திரங்கள், உணவு விடுதிகள் உள்ளன. எம் பெருமான்: வானமாமலைப் பெருமான், தெய்வ நாயகன் (உற்சவர்) தோத்தாத்திரிப் பெருமாள், தாயார் : சிரீவரமங்கை நாச்சியார்; தோத்தாத் திரிஅம்மை. இருந்த திருக்கோலம். கிழக்கு நோக்கிய திருமுகமண்டலம். 'வானமாமலையே! அடியேன் தொழ வந்தருளே' (5.7 ; 6) என்ற பாசுரத்தைநோக்குமிடத்து 'வான மாமலை' என்ற திருநாமம் எம்பெருமானுக்கு உரியது என்றும், பிறகுஇத்திருநாமம் இட்டு இப்பெயரால் திவ்விய தேசமும் வழங்கிவருகின்றதென்றும் அறிகின்றோம்,

மனத்தில் எழும்போது நம்மைப் பரவசப்படுத்தும். எம் பெருமான் ஆழ்வாருக்கு முகம் காட்டாமையால் அவர் படுகின்ற ஆர்த்தியெல்லாம் நம் நினைவிற்கு வரும்.

**கோற்ற நோன்பிலேன் நுண்ணறி விலேன்**
**ஆகிலும் இனிஉன்னைவிடு ஒன்றும்**
**ஆற்ற கின்றிலேன்; அரவின்அணை அம்மானே(2)**

[நோற்ற - அநுட்டித்த; நோன்பு - கருமயோகம்; நுண்ணறிவு - ஞான யோகம்]

என்பது ஆழ்வார் திருவாக்கு. ''மூன்று யோகங்களையும் செய்யவில்லை, இங்ஙனே கைம்முதலற்றவனேயாகிலும்' உன்னைவிட்டு என்னால் தரித்திருக்க முடியவில்லை'' என்கின்றார். 'அரவினணையம்மானே!' : சென்றால் குடையாம் இருந்தால் சிங்காதனமாம்' (முத. திருவந். 53) என்று எல்லா அடிமைத் தொழில்களையும் செய்யும் திருவனந் தாழ்வானைப்போல் என்னையும் அடிமை கொண்டருள வேண்டாவோ?' என்ற குறிப்பு இதில் தொனிக்கின்றது.

**சிரீவர மங்கலநகர்**
**வீற்றிருந்த எந்தாய் உனக்கு**
**மிகையல்லன் ஆங்கே(1)**

என்றஅடியில் பொதிந்துள்ள ஏக்கத்தையும் காண்கின்றோம். ''நீ பரமபதத்திலிருந்தாயாகிலும், நான் ஒருவாறு தரித்திருக்கலாம், எனக்காக வந்துள்ள இடத்தில் நான் எப்படி இழப்பது? உன்னாலே காக்கப் பெறவேண்டிய சேதநவர்க்கங்களில் நான் புறம்பு பட்டேன் அல்லேன்'' என்று ஏங்குவதைக் காண்கின்றோம். ஆழ்வாரை அடிமை கொள்வதால் எம்பெருமானுக்குக் கிடைக்கும் பேற்றை பட்டாசிரியர் அருமையான ஓர் உவமையால் விளக்குகின்றார். ''பால் குடிக்கும் குழந்தையை, பால்குடித்து வயிறு நிறையக் கண்டு

உகக்கும் அன்னையைப் போல, அடிமையாக இருப்பவன் ஸ்வரூபம் பெற்று அடிமை செய்கை சேஷிக்குப் பேறேயன்றோ? என்பது எண்ணி எண்ணி மகிழ்த்தக்கது.[23]

இத் திருக்கோயிலில் நடைபெற்று வரும் எண்ணெய்க் காப்புத் திருமஞ்சனமே இத்தலத்தின் சிறப்பாகும். ஆறு படி நல்லெண்ணெயுடன் சிறிதளவு சந்தன எண்ணெயைச் சேர்த்துக் காப்பு நடைபெறுகின்றது. இங்ஙனம் மூலவர் தோத்தாத்திரி நாதருக்குத் திரு மஞ்சனம் செய்யப்பெற்ற எண்ணெயை ஓரிடத்தில் சேகரம் செய்து அதனைப் பின்னர் வீரப்பநாய்க்கர் மண்டபத்திற்குப் பின்புறம் உள்ள எண்ணெய்க் கிணற்றில் விட்டு விடுகின்றனர். நாம் கால்படி நல்லெண்ணெய் கொணர்ந்தால் அதனை இக் கிணற்றில் ஊற்றி விட்டு அக்கிணற்றிலிருந்து கால்படி எண்ணெயை எடுத்துக் கொள்ளலாம். கோயில் ஆட்சியாளரிடம் சொன்னால் எடுத்துத் தருவர். இந்த எண்ணெய் தீராத சரும நோய், குட்டம் (தொழு நோய்) முதலிய நோய்களை யெல்லாம் தீர்க்கின்றது என்று மக்கள் நம்புகின்றனர். வடநாட்டுப் பக்தர்கள் இந்த எண்ணெயை அதிகமாக வாங்கிச் செல்லுகின்றனர். இந்த எண்ணெயின் பெருமையை குறுமுனியாகிய அகத்தியரே அவருடைய மருத்துவ முறையில் குறிப்பிட்டுள்ளார்.

12. **திருக்குறுங்குடி**[24]: இத்திருத்தலத்தில் எம்பெருமான் திருவருளால்தான் நம்மாழ்வார் அவதரித்தார் என்பது

23. மேலும் இந்த அநுபவம் அறிய வேண்டுவோர் இந்த ஆசிரியன் "பாண்டி நாட்டுத் திருப்பதிகள்" (கட்டுரை—17) கண்டு தெளிக

24. திருக்குறுங்குடி: இத்திருத்தலம் திருநெல்வேலி - தென்காசி இருப்பூர்தி வழியிலுள்ள சேரமாதேவி நிலையத்திலிருந்து 16 கல்தொலைவு. வான மாமலையிலிருந்து மேல் திசையில் எட்டுக்கல் தொலைவிலுள்ளது. பேருந்தில் சென்று வரலாம்,

என்பது வரலாறு.[25] இத்திருக்கோயிலின் கொடிமரம் சந்நிதிக்கு நேராக இல்லை. சற்று வடபுமறாக விலகியுள்ளது. காரணம்; நம்பாடுவான் என்ற பக்தனுக்காகத்தான் அப்படி விலகியுள்ளது. இவன் திருக்குறுங்குடியை அடுத்துள்ள மயேந்திரகிரியில் யாழ்வாசிப்பவர்களில் வல்ல பாணர்களுள் ஒருவன். இவன் திருக்குறுங்குடி நம்பியைச் சேவிக்க வருகின்றான். அவன் வந்த நாள் கார்த்திகை மாதம் சுக்கில பட்ச ஏகாதசி. அவன் வரும் வழியில் பசியுடனிருந்த பிரம்ம இராட்சசன் ஒருவன் இவனைப் பற்றிப் பசி தீர்த்துக் கொள்ள எண்ணுகின்றான். நம்பியைச் சேவித்த பிறகு தான் வந்து இராக்கதனுக்கு இரையாவதாகப் பாணன் கூற, இராக்கதன் அவன் பேச்சை நம்பி அவனை விடுவிக்கின்றான். பாணன் நம்பியைச் சேவிக்கின்றபோது கோயிலின் கொடிமரம் சந்நிதியை மறைக்கின்றது. பாணன் அதனைப் பொருட் படுத்தாமல் உள்ளம் உருக உடல்புளகிக்கப் பாடுகின்றான். நம்பியின் அருளால் கொடிமரம் நகர்கின்றது.

சேரமாதேவியிலிருந்தும் பேருந்து வசதிகள் உண்டு. இது வாமன க்ஷேத்திரமானதால் குறுங்குடி என்ற பெயர் பெற்றது .

எம் பெருமான்: வைணவ நம்பி, மலைமேல் நம்பி, நின்ற நம்பி, இருந்த நம்பி, கிடந்த நம்பி, திருப்பாற்கடல் நம்பி, திருக்குறுங்குடி நம்பி (7 நம்பிகள்). தாயார்: குறுங்குடி வல்லி நாச்சியார். நின்ற திருக்கோலம். கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம். இத்தலத்து எம்பெருமான் திருவருளால்தான் நம்மாழ்வார் அவதரித்தார். திருமங்கை யாழ்வார் முத்திபெற்ற தலம். நம்மாழ்வார், திருமழிசையாழ்வர், பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் ஆகிய நான்கு ஆழ்வார்களின் மங்களாசாசனம் பெற்ற திருத்தலம்.

25. முன்னர் விளக்கப்பெற்றது. முதல் கட்டுரை-பக்.6 காண்க.

26. நம்பி: நம்பு என்பது விருப்பம் என்றும் பொருள் தரும் ஓர் உரிச்சொல். அதன் பகுதியாக வந்தது

'நம்பி' என்ற திருநாமம் நம்மாழ்வாரால் எம்பெருமானுக்குச் சூட்டப்பட்டது என்பது,

**நம்பி, யைத்தென் குறுங்குடி நின்றஅச்**
**செம்பொ னேதிக ழும்திரு மூர்த்தியை**
**—(திருவாய் 1. 10 :9)**

என்ற திருவாய்மொழித் தொடரால் அறியப்படும். இத் தலத்து எம்பெருமானைப்பற்றிய திருவாய்மொழி நாயகி வாக்காக—உருவெளித் தோற்றமாக (5. 5) நடைபெறுகின்றது. எம்பெருமான் பராங்குச நாயகிக்கு உருவெளித் தோற்றமாகச் சேவை சாதிக்கின்றான். இக்காட்சியைக் கண்ட ஆழ்வார் நாயகி அப்பெருமானைப்பற்றிப் பேசுதல், புலம்புதல் முதலியன செய்கின்றாள். இதனைக் கண்ட அன்னையரும் தோழியரும் தலைவன் திறத்தில் எவ்வளவு காதல் பெருகினும் அவன் வரும்வரை ஆற்றியிருத்தலே மகளிர் கடமையாகும் என்றும், அவளது செயல்கள் தம் குடிக்குத் தகாதவை என்றும் கூறி விலக்குகின்றனர். அவர்கட்கு விடை கூறும் முறையில் இத்திருவாய்மொழி (5. 5.) 'மகள்பாசுர'மாக நடைபெறுகின்றது.

ஆழ்வார் நாயகி பேசுகின்றாள்: ''அன்னைமீர், என்னை நீங்கள் சீறுவது எதற்கு? சீறும் பயனென்? வேண்டுமானால்

'நம்பி' என்பது. எல்லோராலும் விரும்பப்படுபவன் என்பது பொருள். 'நம்பி' என்பதற்கு பெருமை, செல்வம், குணம் முதலிய எல்லாம் நிறையப் பெற்றவன் எனப் பொருள் கூறுவர் வியாக்கியான ஆசிரியர். எல்லாக் குணங்களும் நிரம்பப் பெற்றவன்—பரிபூரணன்—என்ற பொருளில் வரும் இச்சொல் பரமபதத்திலுள்ளவனுக்குப் பொருந்துமாயினும் அங்கு எம்பெருமானைக் காட்டிலும் குறைநதாரின்மையால் வாத்சல்யம், சௌசீல்யம், முதலிய எண்ணில் பல் குணங்கள் பகல் விளக்குப் போல பயன்படாமல் கிடக்கின்றன. அத்திருக் குணங்கள் யாவும் இருட்டறையில் விளக்குப்போல் அர்ச்சாவதாரங்களில் நன்கு ஒளிர்கின்றன.

திருக்குறுங்குடி நம்பியின் வடிவழகைச் சிறுங்கள். என்னைச் சிறுவது முறைமையன்று. 'திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட அக்கணமே சங்கும் சக்கரமும் செந்தாமரைக் கண்களும் செங்கனிவாயும் என் முன்னே தோன்றுகின்றன (1). மேகத்தில் மின்னல் தோன்றினாப் போலேயிருக்கும் அவனது பூணு நூலும், பரந்த மின்னல் ஓரிடத்திலே சுழித்தாற் போன்றே மகரகுண்டலமும், திருமறுவும், திருவாபரணங்களும், திருத்தோள்களும் என்னைச் சுற்றி வளைத்துக் கொள்ளுகின்றன (2). அவனது வென்றிவில், கதை, வாள், திருவாழி, திருச்சங்கு, ஆகிய பஞ்சாயுதங்களும் என்னைச் சூழ்ந்து கிடக்கின்றன (3). அவனது செவ்வித் திருத்துழாய்த் தனி மாலையும், உபய விபூதிக்கும் தான் நாதன் என்பதனை நிலைநாட்டும் திருவபிடேகமும், அந்த மாலைக்கும் திருமுடிக்கும் பாங்கான திருமேனியும், திருவரை பூத்தாற் போன்று தோற்றுகின்ற திருப்பீதாம்பரமும் அதன் மேலாபரணமான விடு நாணும் இடைவிடாது என் அருகே நின்று ஒளிருகின்றன (4). அழகெல்லாம் திரண்டு ஒரு வடிவு கொண்டாற் போன்றதான திருப்பவளமும் அழகியவாய் நீண்டு விளங்குகின்ற திருப்புருவங்களும், அவற்றிற்குத் தகுதியாகத் திகழ்கின்ற திருக்கண்களும் என் உயிர் நிலையிலே நின்று என்னை நலிகின்றன (5). கற்பகக் கொடி போன்ற அவனது திருமூக்கும், கொவ்வைச் செவ்வாயும், நீலமேகம் போன்ற திருமேனியும், நான்கு திருத்தோள்களும் என் நெஞ்சை இடம் அடைத்துக் கொண்டு கிடக்கின்றனவே (6). சோதி வெள்ளம் அலையெறியும் திருமேனியுடன் என் உள்ளத்தில் வேர் கொண்டு விட்டான் (7),

> செய்யதாமரைக் கண்ணும்
> அல்குலும் சிற்றிடை யும்வடிவும்
> மொய்ய நீள்குழல் தாழ்ந்த
> தோள்களும் பாவியேன் முன்னிற்குமே'

[அல்குல் - இடைக்குக் கீழுள்ள பின் பகுதி; மொய்ய - செறிந்து நீண்ட; குழல் - கேசம்]

திருமுடிமுதல் தோன்றும் திருவபிடேக முதலான எண்ணற்ற சேர்த்தியழகு பொருந்திய திருவாபரணங்களையுடைய அப்பெருமான் கன்னலும் பாலும் அமுதமும் போன்று என் நெஞ்சைவிட்டு நீங்காது நிற்கின்றான் (9); அவனது சோதி வெள்ளத்தில் எழுகின்ற ஒரு திவ்விய உருவம் என் உள்ளத்தில் பிரகாசித்த வண்ணம் நிலைபெற்று நிற்கின்றதே(10)". இங்ஙனம் ஆழ்வார் நாயகி பெற்றநுபவித்த நிலை நம்மையும் பற்றுகின்ற உணர்ச்சியில் நாம் உந்தப் பெறுகின்றோம். இத்திருவாய்மொழிப் பாசுரங்கள் ஓதிஓதி அனுபவிக்கத்தக்கவை.

**நவதிருப்பதிகள்** : இவற்றை 1. திருக்குருகூர், 2, 3. தொலைவிலி மங்கலம், 4. திருப்புளிங்குடி, 5. திருப்பேரெயில், 6. சிரீவைகுண்டம், 7. வரகுணமங்கை, 8. திருக்குளந்தை. 9. திருக்கோளூர் என்ற முறையில் நவதிருப்பதிகளாக எண்ணுவது மரபு. இவற்றைச் சேவிப்பது பற்றி ஒரு சிறு யோசனை. சிரீவைகுண்டத்திலிருந்து (6) கிளம்பி, வரகுண மங்கையை (7) முடித்துக் கொண்டு திருக்குருகூருக்கு (1) வருதல்வேண்டும். அங்கிருந்துதிருக்கோளூரைச் (9) சேவித்துக் கொண்டு, தொலைவிலி மங்கலத்திற்கு (2, 3) வந்து இந்த இரட்டைத் திருப்பதிகளைச் சேவித்துக் கொண்டு திருப்பேரெயிலுக்கு (5) வருதல் வேண்டும். இத்திருப்பதி சேவையை முடித்துக் கொண்டு திருக்குளந்தைக்கு (8) வந்து திருப்புளியங்குடியை (4) அடைதல் வேண்டும். பின்னர் எங்கும் சுற்றி அரங்கனை அடைதல்போல் தொடங்கின் சிரீவை குண்டத்திற்கே (6) திரும்ப வேண்டும்.

**குறிப்பு** : 1968 - சூன் திங்கள் இந்த நவதிருப்பதிகளையும் ஒரே நாளில் ஒரே மூச்சில் சேவிப்பதற்கு என் நண்பர்கள் திரு கூத்தநயினாரும், அவரது அண்ணாச்சி திரு செங்கையா பிள்ளை அவர்களும் (S. R. சுப்பிரமணியப் பிள்ளை பதிப்பகம், திருநெல்வேலி சந்திப்பு) சிற்றுந்து (Van) உதவினார்கள். இவர்கள் இருவரையும் இப்பொழுது நன்றியுடன் நினைவுகூர்கின்றேன்.

# 4. மலைநாட்டுத் திருப்பதிகள்

மலை நாட்டுத் திருப்பதிகளை பதின்மூன்று என வரையறுத்துள்ளார் திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார். அவை :

1. திருவண்பரிசாரம்
2. திருவாட்டாறு
3. திருவனந்தபுரம்
4. திருவாறன் விளை
5. திருச்செங்குன்றூர்
6. திருக்கடித்தானம்
7. திருவல்லவாழ்
8. திருவண்வண்டூர்
9. திருப்புலியூர் (குட்டநாடு)
10. திருக்காட்கரை
11. திருமூழிக்களம்
12. திருவித்துவக்கோடு
13. திருநாவாய்

இவற்றுள் திருவித்துவக்கோடு என்ற திருப்பதியைத் தவிர பன்னிரண்டையும் மங்களாசாசனம் செய்துள்ளார் நம்மாழ்வார். இவற்றை முறையே காண்போம்; பாசுரங்களிலும் ஆழங்கால் படுவோம்.

1. **திருவண் பரிசாரம்**[1] : இத்திவ்விய தேசத்தை ஒரே ஒரு பாசுரத்தால் மங்களாசாசனம் செய்கின்றார் ஆழ்வார்.

1. **திருவண் பரிசாரம்** : இது மலைநாட்டிலுள்ள முதல் திருப்பதி. திருநெல்வேலி - நாகர்கோயில் நெடுஞ்சாலையில் நாகர்கோயிலிருந்து சுமார் இரண்டு கல் தொலைவில் (வட திசையில்) உள்ளது; நெடுஞ்சாலையில் ஒரு வாய்க்கால் பாலத்தருகில் இறங்கி

வருவார் செல்வார் வண்பரி
சாரத்து இருந்தஎன்
திருவாழ் மார்வற்கு என்திறம்
சொல்வார்; செய்வதுஎன்?
உருவார் சக்கரம் சங்குசுமந்(து)
இங்கு உம்மோடு
ஒருபாடு உழல்வார் ஓர்அடி
யானும் உளன்என்றே'
—திருவாய் 8.3:7

[திருவாழ்மார்பன் - சீநிவாசன்; என் திறம் - என் தன்மை; பாடு - பக்கம்; உழல்வான் - திரிகின் றவன்].

என்பது பாசுரம். எம்பெருமான் திருவண் பரிசாரத்தில் வந்து எழுந்தருளியிருக்கின்றார். திருநகரியில் திருப்புளி யாழ்வார் அடியில் எழுந்தருளியிருக்கின்றார் நம்மாழ்வார். சக்கரத்தாழ்வாரையும் சங்காழ்வாரையும் எம்பெருமான் சுமந்து கொண்டிருப்பதைப் பார்க்கின்றார். எம்பெருமா னுக்கு உபய விபூதியும் ஆளாயிருந்தும் ஒரு சேவகனைத் தன்னிடம் வேலைக்கு வைத்துக் கொள்ளவில்லையே என்று வயிறு பிடிக்கின்றார். ''ஆள் இருந்தால் திருவாழி திருச் சங்குகளைத் தாமே சுமப்பாரோ? மடாதிபதிகள் தம் முடைய திரிதண்டத்தையும் ஓர் அடியாரிடம் கொடுத்து

முக்கால் கல் தொலைவு நடந்து சென்று ஊரை அடையலாம். நாகர்கோயிலில் தங்கி நகர்ப் பேருந்துமூலம் இவ்வூருக்கு வருவதே சிறந்தது. நாகர்கோவிலில் தங்கும் விடுதிகள், உணவு விடுதிகள் வசதியாக உள்ளன. வசதியாகத் தங்கலாம். திருவண்பரிசாரம் நம்மாழ்வாரின் திருத்தாயார் உடைய நங்கையார் பிறந்த ஊர். இந்த ஊர் எம்பெருமானும் அந்த அம்மையாருக்குக் காட்சி தந்ததாகப் புராண வரலாறு கூறுகின்றது.

விட்டுத் தாம் கைவிசிக் கொண்டு போகா நின்றார்களே. அவர்களுடைய திருமேனி அவ்வளவு மென்மையதானால் எம்பெருமானுடைய திருமேனியின் மென்மை வாயினால் வருணிக்க முடியுமா? திருவாழி திருச்சங்கு முதலான திவ்வியாயுதங்களைத் தாம் சுமக்கலாமோ? அவற்றைச் சுமக்க ஆள் வைத்துக் கொள்ள வேண்டாவோ?'' என்ற எண்ணம் ஆழ்வார் மனதில் ஓடுகின்றது.

திருநகரித் திருத்தெருவிலே போவோரும் வருவோருமான வழிப்போக்கர்களுண்டே. அவர்கள் சம்சாரிகளாய்த் தங்கள் தங்கள் காரியங்களுக்காகப் போவதும் வருவதுமாக இருந்தாலும், ஆழ்வார் எண்ணம் வேறுவிதமாக உள்ளது. திருவண்பரிசாரம் சேவிக்கப் போகின்றார்கள். சேவித்து மீளுகின்றார்கள் என்றே இவர் நினைக்கின்றார். தம்மை அழைக்க வருகின்றார்கள் என்று இவர் நினைத்தவாறு ஒருவரும் இவரருகில் வந்தார் இலர். ''இவர்கள் திருவண் பரிசாரத் தெம்பெருமானிடத்திலே நம்மைப் பற்றிச் சொல்லவில்லை போலும் என்று அறுதியிட்டு 'திருவாழ் மார்பர்க்கு என் திறம்சொல்லார் செய்வதென்?' என்கின்றார். ஆழ்வாரது விருப்பம் யாதெனில், ''உதவி ஆள் ஒருவரும் இல்லாதிருக்கின்ற இந்த சம்சார மண்டலத்திலே சங்கு சக்கரங்களைச் சுமந்து கொண்டு உம்மோடே ஒரு பக்கத்திலே கூடவே திரியும்படியாக ஒருவன் திருநகரியிலே திருப்புளியடியிலே உளன் என்று சொல்ல வேண்டுமாம். 'ஒரு பாடுழல்வான்' என்கின்றாரே; ஒரு பக்கத்திற்கு ஆழ்வாரானால் மற்றொரு பக்கத்திற்கு ஆர்? என்ற கேள்வி பிறக்குமே என்பதற்கு நம்பிள்ளையின் அருளிச் செயல்: 'ஒரு பார்சவத்துக்கு இளையபெருமாள் உண்டிறே' என்று ஓர் அடியான் என்றது 'பயன் கருதாத் தாசன்' என்றபடி.

2. திருவாட்டாறு [2]: இத்திருப்பதியை நம்மாழ்வார் நமக்கு,

> திகழ்கின்ற திருமார்பில்
> திருமங்கை தன்னோடும்
> திகழ்கின்ற திருமாலார்
> சேர்விடம்தண் வாட்டாறு
>
> —திருவாய். 10. 6 : 9

[திகழ்கின்ற - விளங்குகின்ற; திருமங்கை - பெரிய பிராட்டியார்; திருமாலார் - இலக்குமி நாதன்]

2. திருவாட்டாறு: இதுவும் ஒரு மலைநாட்டுத் திருப்பதி. நாகர் கோயிலிலிருந்து திருவனந்தபுரம் செல்லும் நெடுஞ்சாலையில்பதினாறு கல் தொலைவி லுள்ளது இத்திருத்தலம். நாகர் கோயிலிலிருந்து அடிக்கடி பேருந்து வசதி உண்டு. ஆறும் அதன் கால்வாய்களும் ஊரைச் சூழ்ந்திருப்பதால் 'திருவட்டாறு—திருவாட்டாறு' என்ற பெயர் ஏற்பட்டிருக்க லாம் என்று ஊகம் செய்ய முடிகின்றது. கோயில் சிறிய கோயிலே; உயரமான இடத்தில் அமைந் துள்ளது. ஆயினும் அது பெரிய மதிற் சுவரால் சூழப் பெற்ற பெரும்பரப்பான இடத்தில் அமைந்துள்ளது. வெயில், மழை என்று பாராமல் எல்லாக் காலங் களிலும் கோவிலை வலம் வருவதற்கு கல்பரவப் பெற்ற நடைபாதையும் அப்பாதையின் மீது கூடாரம் போன்ற அமைப்பும் உள்ளன. பாதை மிகவும் அகலமானது. எம்பெருமான் வாகனங்களில் உலாப் போவதற்குப் போதுமானது. இருபுறங் களிலும் ஆயிரக்கணக்கான பித்தளை விளக்குகள் அமைக்கப் பெற்றுள்ளன. நடைபாதைக் கூரையிலும் பல்வேறு விதமான வண்ண விளக்குகள் தொங்கு கின்றன. விழாக்காலங்களில் இவை எரியவிடப் பெறும். எமபெருமான்: ஆதிகேசவப் பெருமாள். தாயார்: மரகதவல்லி. மேற்கு நோக்கிய திருமுக மண்டலம். ஆதிசேடன்மீது கிடந்த திருக்கோலம். நம்மாழ்வார் ஒருவரே இந்த எம்பெருமானை மங்களாசாசனம் செய்துள்ளார்.

என்று அறிமுகம் செய்து வைக்கின்றார். அலர்மேல் மங்கை உறைமார்பன் வாழும் இடம் திருவாட்டாறு என்பது ஆழ்வாருடைய குறிப்பு. திருவாட்டாற்றான் மீதுள்ள திருவாய்மொழி மிகமிக அற்புதமானது. பன்முறை படித்துப் படித்து மனம் கரைய வேண்டிய பதிகமாகும் இது (10.6). சீவான்மா வேட்டையில் சதா ஈடுபட்டுள்ள எம்பெருமான் திருவாட்டாற்றில் வந்து பாடிவீடு அமைத்துக் கொண்டு தங்கு கின்றான். ஆழ்வாரைத் திருநாட்டில் கொண்டு போய் அநுபவிக்க வேண்டுமென்று பாரித்து நிற்கின்றான்.

> **மண்ணுலகில் வளம் மிக்க**
> **வாட்டாற்றான் வந்துஇன்று**
> **விண்ணுலகம் தருவானாய்**
> **விரைகின்றான் விதிவகையே**
>
> —திருவாய் 10. 6 : 3

என்ற ஆழ்வாருடைய பாசுரத்தாலேயே இதனை அறியலாம். இதனை உளங்கொண்டுதான் ஈட்டின் ஆசிரியர் நம்பிள்ளை இப்பதிகத்தின் அவதாரிகை (முன்னுரை) தொடங்கும் போதே ''பொய் நின்ற ஞாலம்' (திருவிருத் 1) தொடங்கி இவ்வளவும் வரை (திருவாய். 10.6) ஈசுவரனை ஆழ்வார் பின் தொடர்ந்தபடி சொல்லிற்று; இது தொடங்கி ஆழ்வாரை சர்வேசுவரன் பின்தொடருகின்றபடி சொல்லுகிறது'' என்று கூறியுள்ளார். அஃதாவது, இதுகாறும் ஆழ்வார் எம்பெருமானிடம் குறையிரந்து நின்றார்; இனி 'முனியே நான்முகனே' (திருவாய் 10.10) என்னும் திருவாய்மொழி யாவும் எம்பெருமான் ஆழ்வாரிடம் குறையிரந்து நிற்கிற படியைப் பேசத் தொடங்குகின்றது என்பதாம். இது கருதியே திவ்விய தேசங்கள் தோறும் எழுந்தருளியுள்ள எம்பெருமான் களின் குணங்களைக் குறிப்பிடுங்கால் 'ஆசாரிய ஹ்ருதயம்' திருவாட்டாறு எம்பெருமானிடம் ''அடியார்க்கு மோட்சத்தைக் கொடுக்கும் அளவில் அவர்கள் விதித்தபடி

செய்வானாய் அவர்கட்குப் பரதந்திரப்பட்டிருக்கும் தன்மை எல்லை கடந்து வெள்ளமிட்டோடும்'' என்று கூறுகின்றது. இந்த எம்பெருமானைச் சேவிக்கும்-பொழுது, இத்திருவாய் மொழியில் ஆழங்கால்பட்ட நமக்கு நம்மாழ்வாரின் உணர்வு நம்மையும் பற்றுகின்றது.[3]

3. திருவனந்தபுரம் : [4] நாகர் கோயிலிலிருந்து பேருந்து வசதி உண்டு. திருவாட்டாற்றிலிருந்து நாம் அனந்தபுரம் வந்து சேர்கின்றோம். பேருந்தில் வரும்போது எம்மருங்கும்

3. இந்த அநுபவம் 'மலைநாட்டுத் திருப்பதிகள்' என்ற எனது நூலில் விரிவாக விளக்கப் பெற்றுள்ளது. (கட்டுரை-2) ஆண்டுக் கண்டு தெளிக.

4. திருவனந்தபுரம் : தென்னிந்திய இருப்பூர்தி நிலையம். நிலையத்திலிருந்து சுமார் ½ கல் தொலைவிலுள்ளது திருக்கோயில். இருப்பூர்தி நிலையத்திற்கு எதிராக அருகிலே நல்ல நல்ல தங்கும் விடுதிகளும் உள்ளன; உணவு விடுதிகளும் உள்ளன. வசதியாகத் தங்கிக் கொள்ளலாம். திருக்கோயில் திருவாட்டாற்றுத் திருக்கோயில் போலவே சற்று உயரமான இடத்தில் அமைந்துள்ளது. பல படிகள் ஏறியே கோயிலினுள் நுழைய வேண்டும். திருக்கோயிலுக்கருகிலேயே திருவாங்கூர் அரசரின் அரண்மனையும் உள்ளது. அரண்மனையிலிருந்து அரசகுடும்பம் திருக்கோயிலுக்கு வந்து போதற்குச் சுரங்க வழி உண்டு. கோபுரங்களிலும் மண்டபங்களிலும், தூண்களிலும் பல்வேறு சிற்பங்களைக் காணலாம். நுழைவாயிலிலுள்ள இராச கோபுரம் சுமார் 100 அடி உயரம் உள்ளது. ஏழு நிலைகளைக் கொண்டது. திருக்கோயிலின் திருச்சுற்றுகளில் ஆயிரக்கணக்கான பித்தளை விளக்குகள் உள்ளன. திருவிழாக் காலங்களில் இவை எரியும். கருவறையின் முன்புறமுள்ள அர்த்த மண்டபம் 20 அடி சதுரத்தைக் கொண்டது. கல்லின் கனம் இரண்டரை அடி. இந்த ஒற்றைக்கல் மண்டபத்திலிருந்து கொண்டு மூன்று திருவாயில்கள் மூலமாகவும் தெற்கு நோக்கிய சாய்ந்த திருவபிடேகமும், வடக்கு நோக்கி நீட்டிய திருவடிகளையும் கொண்டு

அடர்ந்த தோப்புகள், ஓங்கி உயர்ந்த மலைக்குன்றுகள், பாங்குடன் திகழும் மணல் மேடுகள், பூங்கொத்துகள் குலாவும் குளிர் சோலைகள், குறுக்கும் நெடுக்குமாக வலைப் பின்னல்போல் பாய்ந்து செல்லும் சிற்றாறுகள், கால்வாய் கள் இவை அணி செய்வதைக் காணமுடிகின்றது. ஊரினுள் நுழையும்போதே,

> கெடும்இடர் ஆய எல்லாம்
> கேசவா! என்ன; நாளும்
> கொடுவினை செய்யும் கூற்றின்
> தமர்களும் குறுகஇல்லா;
> விடம்உடை அரவில் பள்ளி
> விரும்பினான் சுரும்பலற்றும்
> தடம்உடை வயல்அ னந்த
> புறநகர் புகுதும் இன்றே.

—திருவாய் 10. 2 : ;1

[இடர் - துன்பம்; நாளும் - நிரந்தரமாக; கூற்றின் தமர் - யமபடர்கள்; குறுக -அணுக; அரவு-பாம்பு; சுரும்பு-வண்டு; அலறும் - ஆரவாரிக்கும்; தடம் - குளம்)

என்ற பாசுரம் நம் வாயிலிருந்து மிடற்றொலியாக வெளிப் படுகின்றது. 'ஆதிசேடன் மீது திருக்கண் வளரும் எம்பெருமான் — அனந்தசயனன் — விரும்பி எழுந்தருளி யிருக்கும் நகர் அனந்தபுரம். 'கேசவா' என்ற மூன்று எழுத்து

கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம் கொண்டுள்ள அனந்தபதுமநாபனைச் சேவிக்கலாம். திருவாட் டாற்றுக் கோயில் இதைவிடச் சற்றுப் பழமை யானது. இங்குக் கேரள பாணி மீதூர்ந்து நிற்கின்றது. திருவனந்தபுரத் திருக்கோயிலில் தமிழ்ப் பண்பாடும் கலந்து மிளிர்கின்றது. நம்மாழ்வார் மட்டிலும் மங்களாசாசனம் செய்த தலம். மூலவர் அனந்தபதுமநாபன்; தாயார் சிரிஹரி இலக்குமி தேவி.

களைச் சொன்ன அளவிலே இடர் என்று பேர் பெற்றவை எல்லாம் கெடும். 'போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்' (திருப். 15) என்று ஆண்டாள் கூறியவாறு ஆகாமியமும் (எதிர்வினை) சஞ்சிதமும் (பழவினை) நெருப்பி லிட்ட பஞ்சுபோல் நசித்துப் போய்விடும். ''அவன் ஒரு விரோதியைப் போக்கினபடி சொல்ல, விரோதி என்று பேர் பெற்றவை எல்லாம் நசிக்கும்'' என்பது ஈடு (10.2 : 1). கேசவன் நாமத்தை வாய்விட்டுச் சொல்வதே கேசவனை அருச்சித்ததாகும் என்பது ஆழ்வாருடைய திருவுள்ளம்.

இந்த உலகில் தீச்செயலை மேற்கொள்ள நினைப்பவர் சிறிதும் தாமதியாது உடனே செய்து முடிப்பதும், நற்செயல் மேற்கொள்ள நினைப்பவர் 'பார்ப்போம் பார்ப்போம்' என்று காலத்தை நீட்டிக் கொண்டு போவதும் இயல்பாக இருப்பதை இன்றும் நாம் காணலாம். அனந்தபுரம் போக வேண்டும் என்ற நினைப்புத் தோன்றிய அன்றே போக வேண்டும் என்பது ஆழ்வாருடைய விருப்பம். ஆகவேதான் 'புகுதும்' என்று கூறினார். அப்படி உடனே புறப்பட்டு விட்டால், இப்பிறப்பில் மட்டுமல்ல, இன்னும் வருகின்ற ஏழு பிறப்பில் நேரிடும் துன்பங்களும், கடந்த ஏழு பிறப்பில் செய்த தீவினைகளும் போய்விடும் (2). துக்கங்களும் துக்கத் திற்குக் காரணமானவைகளும் அழியும்; இதை அநுபவத்தில் கண்ட ஆழ்வார் இந்த இயல்பினை அறியாத ஏனையோருக் கும் நெஞ்சில் படும்படி உரைக்கின்றார். அவனுடைய ஆயிரம் பெயர்களில் ஒன்றைச் சொன்னால் கூட போதும் என்கின்றார். 'பேரும் ஓர் ஆயிரத்துள் ஒன்று நீர் பேசுமினே'(3).

அந்தப் பெயரையும் கூசாமல் பேசினால், ஒரு திருநாமம் ஆயிரம் என்று பெருகிச் செயல் புரியும் பெருமையுடையது. அவர் இருக்கும் அந்த ஊரும் பரமபதமாகிவிடும்(4). இதனை வற்புறுத்துவார் போல் 'அண்ணலார் கமலபாதம்

அணுகுவார் அமரர் ஆவார்' என்கின்றார். 'எண்ணுமின் எந்தை நாமம்' என்பதற்கு ஈடு : ''இடறினவன் 'அம்மே' என்னுமாறு போல, திருநாமம் சொல்லுவதற்கு ஒரு தகுதியைத் தேடிக்கொள்ள வேண்டா. 'திருநாமம் சொல்லும் போது பக்தியுடையவனாகிச் சொல்ல வேண்டுமோ?' என்று நஞ்சியர் பட்டரைக் கேட்க, அதற்கு அவர் 'கங்கையில் முழுகப் போகிறவனுக்கு வேறு ஓர் உவர்க் குழியிலே முழுகிப் போக வேண்டுமோ? மேல் உண்டாகின்ற நன்மையைத் தரும் இது தகுதியையும் தரமாட்டாதோ?' என்று அருளிச் செய்தாராம். திருநாமம் சொல்லுவதற்கு ருசியே[4] ஆயிற்று வேண்டுவது; அவர்களே அதிகாரிகள்''. இப்பகுதி நன்கு சுவைக்கத் தக்கது.[5] மேற்குறிப்பிட்ட மூன்று திவ்விய தேசங்களும் ஒரே தடவையில் சேவிக்க வேண்டும். அடுத்து வரும் ஆறையும் (4,5,6,7,8,9) ஒரு மூச்சில் சேவிக்க வேண்டும்.

4. **திருவாறன்விளை**[6] : 'ஆழ்வார்கள் வழுவிலா' அடிமை செய்ய வேண்டும் என்று அது தன்னையே சொல்லா

4. ருசி – பாவச் செயலையோ புண்ணியச் செயலையோ அறிந்தே செய்வதற்குக் காரணமாயுள்ள சுவை.
5. மேலும் விளக்கம் '**மலைநாட்டுத் திருப்பதிகள்**' (கட்டுரை—3) கண்டு தெளிக.
6. **திருவாறன்விளை** : இத்திவ்வியதேசம் கேரள மாநிலத்தில் எர்ணாகுளம் கொல்லம் இருப்பூர்தி வழியில் செங்கன்றூர் என்ற நிலையத்திலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவு. 'ஆரமுல்லா' என்பது வழக்கிலுள்ள பெயர். நம்மாழ்வார் மட்டிலும் மங்களாசாசனம் செய்த திருத்தலம். திருவாட்டாற்றுத் திருக்கோயில்போல் சற்று உயரமான இடத்தில் அமைந்துள்ளது. கோயிலைச் சுற்றிலும் நாற்புறமும் உயர்ந்த மதில்கள், சுமார் ஐந்து ஏக்கர் நிலப்பரப்பில் கோயில் அமைந்துள்ளது, திருக்கோயிலை வலம் வருவதற்கு கற்கள் பரப்பப் பெற்ற நடைபாதை அமைந்துள்ளது திருக்கோயிலின் வடபுறம் 'சான்றோர் கவி எனக் கிடக்கும்'

நிற்பார்கள், அடைந்ததன் பயனான கைங்கரிய ருசியாலே எம்பெருமான் பிராட்டியோடு கூடி ஆனந்த மயமாக எழுந்தருளி யிருக்குமிடம் திருவாறன்விளை. இத்தலத்து எம்பெருமானை ஒரே திருவாய்மொழியில் (7.10) மங்களா சாசனம் செய்துள்ளார் ஆழ்வார். அங்கு சென்று அடிமை செய்ய விழைகின்றார் ஆழ்வார்.

> இன்பம் பயக்க எழில்மலர்
> மாதரும் தானும் இவ் ஏழுலகை
> இன்பம் பயக்க இனிதுடன்
> வீற்றிருந்து ஆழ்கின்ற எங்கள்பிரான்
> அன்புற்று அமர்ந்துறை கின்ற
> அணிபொழில் சூழ்திரு வாறன்விளை
> அன்புற்று அமர்ந்து வலஞ் செய்து
> கைதொழும் நாட்களும் ஆகும் கொலோ
> —திருவாய் 9-10.1

[எழில் மலர் மாதர் - இலக்குமி; பிரான் - உபகாரகன்]

"அல்லி மலர் - மகள் போக மயக்குகளாகியும் நிற்கும் அம்மான்' (திருவாய் 3.10 : 8) என்றவாறு திருவாய். மொழியைச் செவிமடுப்பதற்கு என்றே பெரியபிராட்டியுடன் எம்பெருமான் ஆனந்தமயமாகத் திருவாறன்விளையில்

பம்பையாறு செல்லுகின்றது. கோயிலிலிருந்தே ஆற்றிற்குச் செல்லப் படித்துறை அமைக்கப் பெற்றுள்ளது. இப்படிக்கட்டுகளின் அருகிலேயே ஒரு விசாலமான இடப்பரப்பில் அர்ச்சகரின் இல்லமும் உள்ளது. இந்தச் சிற்றூரில் பயணிகள் தங்குவதற்கு எந்தவித வசதிகளும் இல்லை. கோட்டயம் என்ற ஊரில் தங்கி இக்கோயிலையும் இன்னும் சில திருக்கோயில்களையும் சேவிப்பது வசதி. எம்பெருமான் : திருக்குறளப்பன்; கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம்; நின்ற திருக்கோலம். இந்த எம்பெருமானை மூன்று முறை சேவித்து திட்டுதற்கரிய பகவதநுபவம் பெற்றேன்.

எழுந்தருளியுள்ளான். 'இன்பம் பயக்க......இவ்வேழுலகை' என்பதற்கு ஈடு : ''தாய் தந்தையர் இருவரும் சேர இருந்து பரியப்புக்கால் குழந்தைகட்கு ஒரு குறையும் பிறவாது அன்றோ? ஆக, இருவருமான சேர்த்தியாலே தங்களுக்கு ஆனந்தம் உண்டாக, அச்சேர்த்தியைக் காண்கையாலே, உலகத்திற்கு ஆனந்தம் உண்டாக, அதனைக் கண்டு குழந்தை பால் குடிக்கக் கண்டு உகக்கும் தாயைப் போலே, இவர்கட்கு உண்டான பிரீதியைக் கண்டு அதனாலே தாங்கள் இனியராய் இருப்பாராயிற்று'' (திவ்வியார்த் தீபிகை காண்க).

'திருவாய்மொழி கேட்கைக்குப் பாங்காயிருப்பதொடு தேசம் பெற்றோம்' என்று பெறாப் பேறு பெற்றாப் போலே விரும்பி எழுந்தருளியிருக்கும் தேசம் என்பது தோன்ற 'இனிதுடன் வீற்றிருந்தாழ்கின்ற' என்கின்றார். பூம் பொழில்கள் சூழ்ந்த அத்தகைய திருவாறன்விளையை வலம் வருதல் முதலானவற்றைச் செய்து வழிபடும் நாள் எந்நாளோ? என்று பார்க்கின்றார் ஆழ்வார். இப்பாசுரத்தைத் திருவுள்ளம் பற்றியே அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இத்திருப்பதியில் விளங்கும் குணத்தை 'ஆனந்த வளர்ச்சி' என்று குறிப்பிட்டார்.

> ''பிரவணசித்தம் பரத்துவ விமுகம்
> ஆக்கும் ஆநந்த விருத்தி, நீள்
> நகரிலே''

என்பது சூத்திரம் (ஆசா. ஹிரு. 171) ஈண்டு விருத்தி-வளர்ச்சி; நீள் நகர்-திருவாறன்விளை, பிரவணம்-அன்பு; விமுகம் ஆக்குதல்-வேறு படுத்துதல். இத்திருப்பதியின்மீது ஆழ்வாருக்குள்ள அன்பு பரத்துவத்தையும் விரும்பாதபடி செய்துவிடும் என்பதாகும். இத்திவ்விய தேச அநுபவம் பற்றி விரிவாக விளக்க இங்கு இடம் இல்லை.[7] திருவாறன் விளை

7. மலை நாட்டுத் திருப்பதிகள் - (கட்டுரை-4) காண்க.

யின் புகழைப் பாடுவதால் ஏற்படும்பலன்; "பாபம் போகைக் காகத் தனித்து ஒரு முயற்சி செய்ய வேண்டா; பால் குடிக்க நோய்தீருமாறு போலே நம்முடையபாபங்கள்தாமே நசித்துப் போம்" (ஈடு : 7,10.5)

5. திருச்செங்குன்றூர்[8] : நம்மாழ்வார் மட்டிலும் ஒரு திருவாய்மொழியில் (வார் கடா அருவி 8.4) மங்களா சாசனம் செய்யப் பெற்ற திவ்வியதேசம் இது.

வார்கடா அருவி யானைமா மலையின்
  மருப்பினைக் குவடுஇறுத்து உருட்டி
ஊர்கொள் திண்பாகன் உயிர்செகுத்து அரங்கின்
  மல்லரைக் கொன்றுசூழ் பரண்மேல்
போர்கொடா அரசர் புறக்கிட மாடம்
  மீமிசைக் கஞ்சனைத் தகர்த்த
சீர்கொள்சிற் றாயன் திருச்செங்குன் றூரில்
  திருச்சிற்றாறு எங்கள்செல் சார்வே (1)

(வார்கடா-ஒழுகுகின்ற மதம்; மருப்பு-கொம்பு; குவடு-சிகரம்; ஊர் கொள்-நடத்தவல்ல; செகுத்து-முடித்து;போர் கொடா-போரைச் செலுத்துகின்ற; சிற்றாயன்-பால கிருட்டிணன்; சார்வு-புகலிடம்)

8. திருச்செங்குன்றூர் : கொல்லம்-எர்ணா குளம் இருப்பூர்தி வழியில் ஒரு நிலையம். நிலையத்தி லிருந்து திருக்கோயில் சுமார் ஒரு கி மீ. தொலைவில் உள்ளது. நடந்தே செல்லலாம். எம்பெருமான் : இமையவர் அப்பன். தாயார் : செங்கமலவல்லி. மேற்கே திருமுக மண்டலம். நின்ற திருக்கோலம். முதல் தடவை சென்றபோது (1969 ஜூன்) முன் வாயில் நாற்புற மதிள்சுவர்கள் கட்டப் பெறாத நிலையில் - இடிந்து பாழடைந்த நிலையில் - இருந்தது. இரண்டாம் முறை சென்றபோது (1983-மே மாதம்) திருப்பணி முடிந்து நன்னிலையில் இருந்தது திருக்கோயில்.

என்பது முதற்பாசுரம், இதில் சிறுவன் கண்ணனின் தீரச் செயல் குறிக்கப்பெறுகின்றது. கண்ணன் பிறந்த பொழு திருந்தே அவனைக் கொல்லக் கம்சன் பல்வேறு வழிகளை மேற் கொள்ளுகின்றான். வில்விழவு ஒன்று ஏற்படுத்தி அதனைக் காரணமாகக் கொண்டு அக்ரூரனை அனுப்பிக் கண்ணனைத் திருவாய்ப்பாடியினின்றும் மதுரைக்கு வர வழைக்கின்றான். கண்ணனும் பலராமனும் மதுரையை நோக்கி வருகின்றனர். வழியில் கண்ணனைக் கொல்வதற் கென்றே குவலயா பீடம் என்ற யானை மதுவூட்டி நிறுத்தப் பெற்றுள்ளது. முதலில் கண்ணனால் அந்த யானையின் உயிர் செகுக்கப்பெறுகின்றது. மலையின்மீதுள்ள இரண்டு கொடு முடிகளைத் தகர்ப்பது போல் கண்ணன் அந்த யானை யின் கொம்புகளைப் பிடுங்கி யானையைக் கொன்று அதன் மீது இவர்ந்திருக்கும் பாகனையும் யமபுரத்திற்கு அனுப்பு கின்றான். அரண்மனை வாயிலைக் குறுகும்பொழுது சாணூரன், முஷ்டிகன் என்ற இரண்டு மல்லர்கள் சிறுவர் களை எதிக்கின்றனர். கண்ணன் அந்த இரண்டு மல்லர்களை யும் தொலைத் தொழிக்கின்றான்.

அத்தாணி மண்டபத்தினுள்ளே நுழைந்தவுடன் கம்சனைச் சூழ்ந்து போர்க் கோலத்துடன் இருந்த அரசர் களைப் புறமுதுகிட்டோடச் செய்து அரியாசனத் திருந்த கம்சனின் உயிரையும் போக்குகின்றான். இத்தனைச் செயல்களையும் ஒருசேர முடித்த கண்ணன் திருச்செங்குன்றூர்த் திருக்கோயிலில் அர்ச்சை வடிவமாக எழுந்தருளியுள்ளான். அந்தத் திருப்பதியே தனக்குப் புகலிட மாகும் என்று திருவுள்ளமாகின்றார் மேற்குறிப்பிட்ட பாசுரத்தில். யானையைக் கொன்ற சிறுவன் கண்ணனின் தீரச் செயலை நினைந்து,

கும்பமிகு மதயானை மருப்பொசித்து
கஞ்சன் குஞ்சிபிடித் தடித்தபிரான்—பெரி.தி. 3-10,3

என்று பெருமிதங் கொண்டு பேசுவர் திருமங்கை மன்னன். மேற்குறிப்பிட்ட நம்மாழ்வாரின் பாசுரத்தை நினைந்தே ஆசாரிய ஹிருதயம் இந்தத் திவ்வியதேசத்தில் சூரம், வீரம் முதலிய குணங்கள் விளங்கும் என்கின்றார்.

> மகாமதிகள் அச்சங்கெட்டு அமரும்
> சௌர்யாதிகள், சிற்றாற்றிலே கொழிக்கும்
> ஆசா-ஹிரு : 74

என்பது சூத்திரம். மகாமதிகள்-விதுரன் போன்றவர்கள்; சௌர்யம்-சூரனது தன்மை. குவலயா பீடம், சாணூரன், முஷ்டிகன், கம்சன் முதலானவர்களைக் கொன்று வெளிப் படுத்திய சூரத்தனம் முதலானவைகள். இந்தத் திவ்விய தேசத்தில் ஆற்றுக்குள்ளிருக்கும் மணி, முத்து முதலானவை கள் கரையிலே கொழித்துத் தோற்றுமாறுபோலே இவை பிர காசிக்கும் என்பதுகருத்து. இந்த எம்பெருமான் அர்ச்சை வடி விலேயே தம் இதய கமலத்தில் வீற்றிருப்பதாகக் கூறுவர் (7). இந்தத் தலத்தின் எம்பெருமானின் திருநாமம் இமையவர் அப்பன் என்பதை,

> எங்கள்செல் சார்வு யாமுடை அமுதம்
> இமையவர் அப்பன் என்அப்பன் (2)

என்ற பாசுரப் பகுதியால் அறிகிறோம்.[9]

6. **திருக்கடித்தானம்** : 'பூத்த பொழில்தண் திருக் கடித்தானம்' (8.6:6) என்று புகழ்கின்றார் நம்மாழ்வார் இத் திருப்பதியை.'மணத்தையுடைய இடம்' எனப் பொருள்படும் 'திருக்கடித்தானம்'[10] என்ற திருப்பெயர் இவ்வூருக்கு மிகவும்

9. மேலும் இத்தலத்து எம்பெருமானை ஆழ்வார் அநுபவித்ததை 'மலைநாட்டுத் திருப்பதிகள்' (கட்டுரை-5) காண்க.

10. திருக்கடித்தானம் : கொல்லம்-எர்ணாக் குளம் இருப்பூர்தி வழியில் செங்கணாச்சேரி என்

பொருந்தும். 'கற்பகச் சோலைத் திருக்கடித்தானமே' (8.6:10) என்ற நம்மாழ்வார் கூற்று சிந்திக்கத் தக்கது. மரங்கள் செறிந்து குளிர்ச்சியை உண்டாக்குவதால் தேவர்கள் நாட்டிலுள்ள கற்பகச் சோலையை நினைவுகூருப்படி செய்கின்றது. திருக்கடித்தானத்தைக் கற்பகச் சோலையுடன் ஒப்பநோக்கும்படியும் தூண்டுகின்றது. நம்மாழ்வார் மட்டிலும் ஒரே திருவாய்மொழியில் (8.6) மங்களாசாசனம்செய்த திவ்வியதேசம். இந்தத் திவ்விய தேசத்தில் நம்மாழ்வார் பெற்ற இறையநுபவத்தை நாமும் பெற முயல்கின்றோம். எம்பெருமான் இரவு பகலென்று பாராமல் தன்னையே நினைந்து வாழுமாறு ஆழ்வாருக்குத் திருவருளைச் சுரந்தான்; அந்தப் பேரருளை எண்ணி எண்ணி இனியராகின்றார் ஆழ்வார்.

> எல்லியும் காலையும்
> தன்னை நினைந்துஎழ
> நல்ல அருள்கள்
> நமக்கேதந்து அருள் செய்வான் (1)

(எல்லி-இரவு; அருள்-கிருபை)

என்பது அவரது திருவாக்கு. 'நமக்கே தந்து அருள்செய்வான்' என்பதால் எம்பெருமான் வேறொருவருக்கும் இவ்வருள் பாவிக்கவில்லை என்பது ஆழ்வாரின் நினைப்பு. தரம் பெற்ற பேற்றினை நித்திய சூரிகளும் பெறவில்லை என்பதாக எண்ணுகின்றார்.

நிலையத்துலிருந்து சுமார் 2 கல் தொலைவில் உள்ளது. பேருந்து மூலம் இவ்வூரை அடையலாம். கோடைக் காலமாக இருப்பினும் தோப்பும் துரவுமாக உள்ள இடமாதலால் இயற்கைக் காட்சிகளை கண்டு களித்தவண்ணம் நடந்து செல்வது சிறப்பு. சுமார் 1½ மணி நேரத்தில் இவ்வூரை அடையலாம். எம்பெருமான் : அற்புத நாராயணன், அமிர்த நாராயணன்; தாயார் : கற்பகவல்லி. நின்ற திருக்கோலம். கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம்.

அடுத்து, அந்த அருள் எங்ஙனம் பாலிக்கப்பெற்றது என்பதைச் சொல்லப் புகுகின்றார். இதனை,

> திருக்கடித் தானமும்
> என்னுடைச் சிந்தையும்
> ஒருக்கடுத் துள்ளே
> உறையும் பிரான்கண்டீர் (2)

(ஒருங்க அடுத்து-ஒருக்கடுத்து; ஒன்றாக நினைத்து என்ற படி; உறையும்-வதியும்)

என்ற பாசுரத்தால் அருள்கின்றார். திருக்கடித்தானம் என்ற திருப்பதியையும் தன்னுடைய சிந்தையையும் ஒன்றாக நினைப்பதைப்பற்றி,

> அங்குத்தை வாஸம் சாதனம்
> இங்குத்தை வாஸம் சாத்தியம்
>
> —ஸ்ரீவசன. பூஷ. 171

(அங்குத்தை- அந்த இடத்தில்; இங்குத்தை-இந்த இடத்தில்)

என்று ஸ்ரீவசன பூஷணம் குறிப்பிடுவது சிந்திக்கத்தக்கது. அதாவது திவ்விய தேசங்களைவிட ஞானியரின் திருமேனியில் எம்பெருமான் கொண்டுள்ள மதிப்பு அளவற்றது; அவன் திவ்விய தேசங்களில் எழுந்தருளியிருப்பது சேதநரை அகப்படுத்திக் கொள்ளுகைக்காகவே யாதலால், அங்கு வசிப்பது சாதனம்; இச்சேதநன் திருந்தி இவனுடைய இதயத்தில் தான் வசிக்கப் பெற்றது அத்திவ்விய தேச வாசமாகிய கிருஷியின் (வேளாண்மை) பயனாகையால் ஞானியரிடத்தின் வாசமே எம்பெருமானுக்குச் சிறந்த பயனாகும். இதனையே இந்த ஆழ்வார் பிறிதோரிடத்தில்,

**இமையோர் வணங்க**
**மலைமேல் தான்நின்று**
**என்மனத்துள் இருந்தான்** (திருவாய் 10.4:4)
(மலை-திருமலை; இமையோர்-நித்திய சூரிகள்)
என்று குறிப்பிட்டுள்ளமையைக் காணலாம்.[11]

7. **திருவல்லவாழ்**[12] : இந்தத் திருப்பதியைத் 'திரு வெல்லா' என்று வழங்குகின்றனர் (மலையாள மக்கள்). இந்தத் தலத்து எம்பெருமான்மீது மங்களாசாசனம் செய்த பதிகம் 'மகள் பாசுரமாக' (5.9) நடைபெறுகின்றது. பராங்குச நாயகி திருவல்லவாழ் செல்லக் கருதுகின்றாள். அவள் சொல்லுதலைத் தடுத்து நிறுத்தும் தோழியர்க்குக் கூறுவதாக அமைந்தது இத்திருவாய்மொழி :

**மானேய்நோக்கு நல்லீர்!**
**வைகலும்வினை யேன்தமலிய**
**வானார் வண்கமுகும்**
**மதுமல்லிகை யும்கமழும்**

11. மேலும் பல விளக்கத்தை '**மலைநாட்டுத் திருப் பதிகள்**' (கட்டுரை-6) காண்க.
12. **திருவல்லம்வாழ்** : எர்ணாகுளம்-கொல்லம் வழியில் ஓர் இருப்பூர்தி நிலையம். நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவிலுள்ள திருக்கோயிலுக்கு நடந்தே செல்லலாம். நம்மாழ்வாரும் (திருவாய் 5.9) திரு மங்கையாழ்வாரும் (பெரி திரு. 9.7) ஒவ்வொரு பதிகத்தால் மங்களாசாசனம் செய்துள்ளனர். திரு மங்கையார் பாசுரம் தம் நெஞ்சுக்கு உரைப்பதாக நடைபெறுகின்றது. மகளிர் திருக்கோயிலுக்குள் அனுமதிக்கப் பெறுவதில்லை; அவர்கள் திருக்கோயி லுக்கு வெளியிலிருந்தே தரிசனம் செய்ய வேண்டும். மூலத்தானத்தில் சுதர்சனச் சக்கரம் தாபிக்கப் பெற்றுள்ளது. விபூதிப் பிரசாதமே தருகின்றனர். (இங்கு அரியும் சிவனும் ஒன்றுபோலும்). எம்பெரு மான் : **கோலப்பிரான்**. தாயார் : **செல்வத் திருக் கொழுந்து நாச்சியார், வாத்சல்யாதேவி.** எம்பெரு மான் நின்ற திருக்கோலம்; கிழக்கு நோக்கிய திரு முக மண்டலம்.

தேனார் சோலைகள்சூழ்
திருவல்லவாழ் உறையும்
கோனாரை அடியேன்
அடிகூடுவ(து) என்றுகொலோ (5.9:1)

(மானேய்-மான்போன்ற; வைகலும் - நாள்தோறும்; மெலிய-இளக்கும்படி; மது-தேன்; தேன் ஆர்-தேன் நிரம்பிய)

என்பது இத் திருவாய்மொழியின் (5.9) முதற்பாசுரம். ஆகாயம் வரையிலும் உயர்ந்திருக்கும் வளப்பமுடைய பாக்கு மரங்களும் தேன் பொருந்திய மல்லிகையும், வாசனை வீசு கின்ற சோலைகளும் சூழ்ந்திருக்கும் இடம் திருவல்லவாழ் என்ற திருப்பதி. தான் மெலிவதற்காகவே கமுகுகள் வானத்தைக் கண்செறி இட்டாற்போல (கபளீகரித்தல் போல்)இருக்கின்றன என்பது பராங்குச நாயகியின்நினைப்பு. தான் இருக்கின்ற இடம் 'மரங்கள் யாவும் உலர்ந்துவிட்டன' என்னும்படியாகவும், அவன் (எம்பெருமான்) இருக்கும் இடம் காலம் அல்லாத காலத்திலும் மரங்கள் பலனைக் கொடுக்கக் கூடியனவாகவும் இருக்கும்' என்றும் எண்ணுகின் றாள். இருவராய்க் கொண்டு பரிமாற வேண்டும் தேசத்தில் தனியே நிற்கின்றான் காண் என்பது தோன்ற 'தேனார் சோலைகள்சூழ் திருவல்ல வாழ் உறையும் கோனாரை' என்று குறிப்பிடுகின்றாள்.

மேற்குறிப்பிட்ட பொருளைச் சிந்தித்த நிலையில் 'கோனாரை அடியேன் அடி கூடுவது என்று கொலோ?' என்ற அடிக்கு ஈட்டின் ஆசிரியர் நம்பிள்ளை கூறும் மெய்ப் பொருள் நம் சிந்தையில் எழுகின்றது. ''நாராயண சப்தத் திலும் பிரணவத்திலும் போலே 'கோனாரை அடியேன்' என்கின்றாள். அவனைச் சொல்லும்போது தம்மை யிட்டல்லது சொல்லப் போகாது. தம்மைச் சொல்லும்

போதும் அவனையிட்டல்லது சொல்லப் போகாது 'கோனாரை' என்ற இடம் நாராயண சப்தார்த் தம்; 'அடியேன்' என்ற இடம், பிரண வார்த்தம். பிரணவம், ஜீவப்பிரதானம்; நாராயணபதம் ஈசுவரப்பிரதானம். 'அடியேன்கூடுவது என்று கொலோ?' என்ற இடம் நான்காம் வேற்றுமையின் பொருள் (சதுர்த்தி). 'என்று கொலோ' என்று பிரார்த்தனையோடு தலைக்கட்டுகின்றதன்றோ? கோனாரை அடியேன்—நாயகன் தைரியத்தையுடைய நாயகன். இவள் தைரியம் இல்லாதவள், அடியேன் அடிகூடு வது என்று கொலோ—சொரூபத்திற்குத் தகுதியாக வேற்று மையின் பொருளோடே தலைக்கட்டுகிறபடி......''[13]

அடுத்து ஒவ்வொரு பாசுரத்திலும் கூறப்பெற்றுள்ள இயற்கைச்சூழ்நிலை நேரில் காணும் சூழ்நிலையுடன் ஒப்பிட்டு மகிழ்கின்றோம். இயற்கை என்பதுவும் ஈசுவரனின் படைப்பே யன்றோ? திருவேங்கடமாமலை, ஒன்றுமேதொழ நம் வினை ஓயுமே' (திருவாய். 3.3 : 8) 'மதிதவழ்குடுமி மாலிருஞ்சோலைப் பதியது ஏத்தி எழுவது பயனே' (டிை 2. 10 : 2) என்று கூறியுள்ளவும் நம் நினைவுக்கு வருகின்றன. ''இவர் (நம்மாழ்வார்) இவ்வாற்றாமையோடு இருந்து சோலையைக் கவிபாடுகிறது, உள்ளே நிற்கின்ற எம் பெருமானைப் போன்று இவையும் இனிய பொருளாக இருக்கையால் அன்றோ? மனத்தினை உள்முகமாக்கி அநுபவிக்க மாட்டாதார்க்கு, தன்னை அவர்களது

13. ஈட்டின் தமிழாக்கம் - திருவாய் 5.9 :1 காண்க. பிரணவம் சேதநனுடைய சேஷத்துவத்தையும் (சேதநன் பரமான்மாவுக்கே அடிமையாக இருக்கும் தன்மை), நாராயண பதம் ஈசுவரனுடைய தன்மை யையும், நான்காம் வேற்றுமையின் பொருள் சேத நன் ஈசுவரனுக்கு எல்லாத் தொண்டுகளையும் புரிய விரும்ப வேண்டும் என்பதையும் குறிக்கின்ற (இவற்றின் விவரங்களை 'முமுட்சுப்படி' போன்ற நூல்களை நோக்கி அறிக).

கண்களுக்கு இலக்காக்கிக் கொண்டு உபாயவஸ்து நிற்கிறாப் போலே காணும் இவையும்' யாவர்க்கும் தொழுகுலமான சர்வேசுவரனுடைய உபாய பாவனையில் நிலைபோலே, நித்திய பிராப்யனாகக் (அடையத்தக்கவனாகக்) கொண்டு அங்கே இருக்கின்றவன், அடியார்கள் உகந்தது ஒரு பொருளைத் திருமேனியாகக் கொண்டு முகம் கொடுத்துக் கொண்டு நிற்பதுபோலே, அங்குள்ளாரும் இங்கே போந்து தாவரங்களாயும் ஜங்கமங்களாயும் விலங்குகளாயும் அவனை விட மாட்டாதே நிற்கிறபடி. நித்தியரும் முக்தரும் சம்சாரிகளில் ருசியுடையாரும் உகந்தருளின நிலங்களைப் பற்றியன்றோ கிடப்பது'' (ஈட்டின் தமிழாக்கம் - திருவாய். 5.9 : 1).[14]

8. **திருவண்வண்டூர்** : இந்தவூருக்குப் பேருந்தில் வரும் போதே இயற்கைக் காட்சிகளுக்குக் குறைவில்லை, எம் பெருமானுடைய அசித்தும் சித்திற்குக் களிப்பினை நல்கும் என்ற தத்துவத்தை எண்ணுகின்றோம். நம்மாழ்வார் மட்டிலுமே இவ்வூர்ப் பெருமானை ஒரு பதிகத்தால் (6.1) மங்களாசாசனம் செய்துள்ளார். பதிகம் 'மகள் பாசுரமாக' நடைபெறுகின்றது; தூதுப் பாசுரமாகவும் அமைந்துள்ளது.

14. மேலும் விளக்கத்தை 'மலை நாட்டு' திருப்பதிகள் (கட்டுரை - 7) காண்க.

15. **திருவண்வண்டூர்** : திருச்செங்குன்றூரிலிருந்து கோட்டயம் செல்லும் பேருந்தில் ஏறவேண்டும். மழிக்கீர் என்ற இடத்தில் இறங்கி இடப்புறத்தில் மேற்கு நோக்கிச் செல்லும் சாலை வழியாக $1\frac{1}{2}$ கல் தொலைவு நடந்து சென்று இவ்வூரை அடையலாம். இப்பொழுது (5-5-89) இந்த ஊருக்கே பேருந்து வசதி இருக்கலாம். ஊரில் எந்தவித வசதிகளும் இல்லை. அழகான சிறிய திருக்கோயில். எம்பெருமான் : **பாம்பணையப்பன்**; தாயார்; **கமலவல்லி நாச்சியார்**. நின்ற திருக்கோலம், மேற்கு நோக்கிய திருமுகமண்டலம்,

இதற்கு முன்னுள்ள 'பிறந்த ஆறும் வளர்ந்த ஆறும்' (5.10) என்ற திருவாய்மொழியில் 'உன்னை என்று கொல் சேர் வதுவே' (1) 'உன்னை என்று 'தலைப்பெய்வனே' (2), உன்னை என்று கொல் கூடுவதே' (9) என்றெல்லாம் கதறி எம்பெருமான் பக்கலிலே கடுகச் சேரவேண்டும் என்று பாரித்திருக்கும் ஆழ்வார் எம்பெருமான் திருவண்வண்டூரில் சந்நிதி பண்ணிக் கொண்டு தனக்குச் சேவை சாதிக்கச் சித்தமாக இருப்பதை நோக்குகின்றார். ஆனால் சேர முடியாத நிலையில் நாயகி நிலையை அடைந்து சில புள்ளினங்களைத் தூதுவிடுகின்றார் (திருவாய் 6.1). தூதுவின் தத்துவம் பிறிதோரிடத்தில் விளக்கப் பெற்றுள்ளது.[15]

இந்தத் திருவாய்மொழியில் பராங்குச நாயகி குருகினங்கள், கருநாரை, புள்ளினங்கள், அன்னங்கள், பூங்குயில்கள், கிளி, பூவை, வண்டினங்கள் இவற்றைத் தூது போகும்படி வேண்டுகின்றாள். முதலில் குருகினங்களைப் பார்த்துப்பேசுகின்றாள்; திருவண்வண்டூர் எம்பெருமானிடம் சென்று தன்னுடைய காதன்மையைத் தெரிவிக்குமாறு இரக்கின்றாள்.

வைகல்பூங் கழிவாய் வந்து
மேயும் குருகினங்காள்
செய்கொள் செந்நெல் உயர்திரு
வண்வண் டூர் உறையும்
கைகொள் சக்கரத் தென்கனி
வாய்ப்பெரு மானைக் கண்டு
கைகள் கூப்பிச் சொல்லீர்
வினையாட்டியேன் காதன்மையே (1)

[வைகல் - நாள்தோறும்; பூங்கழி - உப்பங்கழி; குருகு - கொக்கு; செய் - வயல்; வினையாட்டியேன் - பாவத்தைப் பண்ணின என்னுடைய; காதன்மை - காதல்தன்மை]

15. இந்நூல் - கட்டுரை. 11. காண்க.

என்பது பாசுரம். உணவின் பொருட்டு வந்து வந்து மேயும் குருகினங்களை நோக்கி, "நீங்கள் திருவண்வண்டூர் சென்றால் அங்கும் உங்கட்குத் தேவையான ஏராளமான உணவு கிடைக்கும்" என்பதைச் 'செய்கொள்செந்நெலுயர்' என்ற சொற்றொடரால் குறிப்பிடுகின்றாள். எம்பெருமானைத் தெரிந்து கொள்ள இரண்டு அடையாளங்கள் கூறுகின்றாள். இதற்கு முன்னுள்ள திருவாய்மொழியில் (5.10) 'பிறந்தவாறும்' என்று கண்ணன் அவதாரத்தை எண்ணி மோகம் கொண்டவளாதலால் அந்த அவதாரத்தில் கையும் திருவாழியுமாகப் பிறந்தமை தன்உள்ளத்தில் ஊறியிருப்பதனால் அவ்வடையாளத்தைக் 'கைகொள் சக்கரத்து' என்று குறிப்பிடுவது முதல் அடையாளம் .அடுத்து 'வளர்ந்தவாறும்' என்று ஆயர்பாடியில் வளர்ந்த படியைக் கருத்தில் இருத்தினவளாதலால், கண்ணன் அவ்வாயர்பாடியிலுள்ள பெண்டிர்க்கு அணுக்கனாய் இருந்து கொவ்வைக் கனிவாய் கொடுத்துக் கூழைமை செய்த படிகள் யாவும் அவளது திருவுள்ளத்தில் நிழலிட்டுத் தோற்றுகின்றன. எனவே 'கனி வாய்ப் பெருமான்' என்று குறிப்பிடுவது இரண்டாவது அடையாளம். அப்பெருமான் தன்னிடம் வந்தபோது தன்னுடைய செளசீல்யம் தோற்ற இருந்தான் என்றும், பிரிந்து சென்ற பிறகு பரத்துவம் பாராட்டி நிற்கின்றான் என்றும் குறிப்பிட்டு, ஆகவே அவனைக் காணுங்கால் 'கைகள் கூப்பிச் செல்லீர்' என்று விண்ணப்பிக்குமாறு வேண்டுகின்றாள். "இன்னாள் உம்மை ஆசைப்பட்டிருக்கின்றாள்" என்று சொன்னால் போதும் என்பது அவள் திருவுள்ளம். இங்கே இன்சுவை மிக்க "வன்னெஞ்சர் காதல் போலன்றிறே மென்னெஞ்சர் காதல்; மெல்லியலார் காதல் அளவல்லாத என் காதல் சொல்லீர்; சொல்லுவார் தாழ்வே" (ஈடு 6. 1: 1) என்ற ஈட்டின் பகுதி சுவைத்து இன்புறத் தக்கது.

அடுத்து, ஆழ்வார் நாயகின் கவனம் உப்பங்கழிகளில் மேய்ந்து திரியும் கருநாரை ஒன்றின்மீது செல்லுகின்றது. அதனை நோக்கி இவ்வாறு பேசுகின்றாள்.

**காதல் மென்பெடை யோடுடன்**
**மேயும் கருநாராய்!**
**வேத வேள்வி யொலிமுழங்**
**கும்தண் டிருவண்வண்டூர்**
**நாதன் ஞாலமெல் லாமுண்ட**
**நம்பெருமானைக் கண்டு**
**பாதம் கைதொழுது பணியீர்**
**அடியேன் திறமே (2)**

[பெடை - பெண்நாரை; கரு - என்றது, புணர்ச்சியால் உண்டாகும் அழகினை; திறம் - தன்மை].

துணைவியுடன் திரிவதால் நாரை புகருடன் விளங்குகின்றது. ''கூடத்திரிகையிலே நாரை திரை நீங்கி வடிவு புகர்த்தபடி; பிரியாதார்க்கு உடம்பு வெளுக்காதாகாதே. தான் உடம்பு வெளுத்துக் கிடக்கிறாளிறே'' என்ற ஈட்டின் பகுதி கருதத் தக்கது. வேத வேள்வியொலி முழக்கத்தில் மனம் ஈடுபட்டுக் கால் தாழ்ந்து தன்னை மறந்தொழிந்ததாகப் பராங்குச நாயகி கருதுகின்றாள். அவனருகிற் சென்று அவனுடைய திருவடிகளைத் தொழுது விண்ணப்பித்தால் போதும் என்று குறிப்பிடுகின்றாள். பக்தர்கட்கு ஆபத்து வருவதற்கு முன்னரே அவர்களைப் பாதுகாக்கும் இயல்பை யுடையவனாதலால் 'ஞாலம் எல்லாம் உண்ட' என்ற தொடரால் அவனது நீர்மையை எடுத்துக் காட்டுகின்றாள். இங்கு ''அவன் திறம் போலன்று. என் இடையாட்டத்தைச் சொல்லுங்கோள். சொல்லில் ஒரு மகாபாரதத்திற்குப் போருமாகாதே'' என்ற இன்சுவை மிக்க ஈட்டின் பகுதி சுவைத்து மகிழத் தக்கது.[17]

17. மேலும் விளக்கம் காண விரும்புவோர் ''மலைநாட்டுத் திருப்பதிகள்'' (கட்டுரை-8) காண்க.

**9. திருப்புலியூர்** [18] : இது குட்டநாட்டுத் திருப்புலியூர் என்று வழங்கப்படுவது. நம்மாழ்வாரின் பதிகம் 'தோழிப் பாசுரமாக' 'அறத்தொடு நிலை'[19] என்ற துறையில் அமைந்தது (திருவாய்.8.9). அடிக்குறிப்பின் விளக்க ஒளியில்

18. **திருப்புலியூர்** ; திருச்செங்குன்றூருக்கு மேல்திசையில் 4 கல் தொலைவு. கோயில் மிகச் சிறியது. சிதில மடைந்த நிலையில் உள்ளது. அவசரத் திருப்பணி தேவை. செங்கோட்டை - கொல்லம் இருப்பூர்தி வழியில் கொட்டாரக்கரா என்ற இருப்பூர்தி நிலையத்திலிருந்து 33 கல் தொலைவு. பேருந்து வசதி உண்டு. எம்பெருமான் : **மாயப்பிரான்**; தாயார்: **பொற்கொடி நாச்சியார்**. நின்ற திருக் கோலம். கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம்.

19. **அறத்தொடு நிலை** : தானும் தலைமகளும் இது காறும் அறத்தொடு பொருந்தவே நடந்திருப்ப தாகத் தோழி காட்டி நிற்றலே இது. அறம் என்பதை ஈண்டு முறை, தக்கது என்று கொள்ளல் வேண்டும். இறையனார் களவியலுரை யாசிரியரும் "அறம் என்பது, தக்கது, தக்கதனைச் சொல்லி நிற்றல் தோழிக்கும் உரித்தென்றவாறு, அல்லதூஉம், பெண்டிர்க்கு அறம் என்பது கற்பு. கற்பின் தலை நிற்றல் என்பதூஉமாம்" (இறைகள. நூற்பா - 23இன் உரை) என்று உரைத்துள்ளமை ஈண்டு கருதத் தக்கது. தொல்காப்பியர் அறத்தொடு நிற்றலை 'புரைதீர்கிளவி' என்று குறிப்பிடுவர். இறையனார் களவியல் ஆசிரியரோ 'மாறுகோள் இல்லாமொழி' என்பர்.

**தோழிக் குரியவை கோடாஅய் தோஎத்து**
**மாறுகோ ளில்லா மொழியுமார் உளவே** (நூற்.14)

[கோடாய் - செவிலித்தாய்; கோள் - தாய் எனப் பிரித்து தாயாகக் கொள்ளப்படுவோன் எனப் பொருள்படும்].

என்றநூற்பாவினால் இதனை அறியலாம். 'மாறு கோள் இல்லா மொழி' என்பதற்கு உரையாசிரியர் கூறும் விளக்கவுரை : "எற்றினொடு மாறு கொள்ளாமையோ எனின், தாயறிவினொடு மாறு

ஆழ்வார் பாசுரங்களை நோக்குதல் வேண்டும். பராங்குச நாயகி வயது முதிர்ந்து மங்கைப் பருவம் அடைகின்றாள். கணவனை நாடி அடைய வேண்டிய வயதல்லவா இது? திருப்புலியூர் எம்பெருமானுடன் இயற்கைப் புணர்ச்சியும் நடைபெற்று விடுகின்றது. தலைவியின் உயிர்த் தோழியானவள் தலைவியின் உருவ வேறுபாட்டாலும் சொற்களின் வேறுபாட்டாலும் புணர்ச்சி உண்டானமையை ஒருவாறு அறிகின்றாள். தன் மகளின் உண்மை நிலையை அறியாத தாய் தந்தையர் இவளுடைய திருமணத்தை உறுதி செய்து மணமுரசும் அறைவிக்கின்றனர். இதனை அறிந்த தோழி மனம் கவல்கின்றாள். 'பரதனே அரசன்' என்று அறைவித்த முரசொலி செவிப்பட்டபோது பரதாழ்வான் எங்ஙனம் மனக் கிலேசம் அடைந்தானோ அங்ஙனமே தோழி இப்போது துயர் அடைகின்றாள். இவ்வாறு சிந்திக்கின்றாள்; 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில், வாழகில்லேன்'' (நாச். திரு:1-5) என்று கூறியவள் இவள். 'அன்றிப்பின் மற்றொருவர்க் கென்னைப் பேசல் ஒட்டேன் மாலிருஞ்சோலை யெம்மாயற் கல்லால்' (பெரியாழ். திரு 3:4-5) என் பிடிவாதத்தைப் பிடிக்கின்றவள். மாறாக ஏதேனும் நடைபெற்றால் இவள் உயிர் தரியாள். அப்படி நடைபெறுவதை எப்படியாயினும் தடுத்தே ஆக வேண்டும். அங்ஙனம் செய்ய முயலுங்கால்

---

கொள்ளாமையும், தலைமகள் பெருமையொடு மாறுகொள்ளாமையும், தலை மகள் கற்பினொடு மாறுகொள்ளாமையும், தோழி தனது காவலொடு மாறுகொள்ளாமையும், நாணினொடு மாறு கொள்ளாமையும், உலகினொடு மாறுகொள்ளாமையும் எனக் கொள்க'' என்பது. தலைவிக்கு வாய்ந்த களவொழுக்க நிகழ்ச்சியினால் தம் மேம்படுவதான குற்றம் ஏதும் இல்லை என்று இவ்வாறெல்லாம் இவையனைத்திற்கும் மாறுகோளில்லாத வகையாய்த் (குற்றமில்லாத வகையாய்) தோழி ஆய்ந்து கூறுவாள்)

திருப்புலியூர் நாயனாருடன் புணர்ச்சி உண்டானமையை அறிவிப்பின் அஃது என் காவற் சோர்வாலே நிகழ்ந்தது என்று ஏற்பட்டுவிடும். அறிவியாது ஒழியில் இவள் வாழாள். இந்நிலையில் செய்ய வேண்டியது என்ன?' என்பதாக.

தோழி இங்ஙனம் சிந்தித்துக் கொண்டிருக்கும்போது தலைவியின் பெற்றோரும் மற்றொரும் தலைவியின் வடிவ வேறுபாட்டிற்குக் காரணம் யாதாக இருக்குமோ என்று ஆராயும் நிலையைக் காண்கின்றாள். தானும் அவர்களுடன் ஆராய்வதாகச் சேர்ந்து கொண்டு இதனை விலக்க வேண்டும் என்று உறுதி செய்கின்றாள். அந்த முறையைக் கூறுவதாக அமைந்ததே இத் திருவாய்மொழி. இஃது அகப் பொருள் நூலார் குறிப்பிடும் 'அறத்தொடு நிற்றல்' என்பதாகும். இத்திருப்பதி எம்பெருமான்மீதுள்ள பதிகம் இதனையே கூறுகின்றது.

தோழி முதலில் தன் பேச்சை இவ்வாறு தொடங்கு கின்றாள்.

**கருமா ணிக்க மலைமேல்**
**மணித்தடந் தாமரைக் காடுகள்போல்**
**திருமார்வு வாய்கண் கைஉந்தி**
**கால்உடை யாடைகள் செய்யபிரான்**
**திருமால் எம்மான் செழுநீர்வயல்**
**குட்ட நாட்டுத் திருப்புலியூர்**
**அருமாயன் பேரன்றிப் பேச்சிலள்**
**அன்னை மீர்! இதற்கென் செய்கேனோ?**

(திருவாய் 8.9:1)

[மணித்தடம் - தெளிந்த தடாகம்; உந்தி - கொப்பூழ்; கால் - திருவடி; உடை - தரித்திருக்கும் செய்ய ஆடைகள் எனக் கூட்டுக]

என்பது பாசுரம். எம்பெருமானின் திவ்விய அவயவங்களின் அழகினைக் கண்டு அவ்வடிவழகு அல்லது மற்றொன்று அறியாதபடி ஈடுபட்டாள் என்று தாய்மார்க்கு உரைக்கின்றாள். அநுபவிப்பார் நெஞ்சு குளிரும் படி கருமையுடைய தாய், பிரகாசத்தால் மிக்கு இருப்பதாய், தனக்கு மேல் ஒன்று இல்லாததான இனிமையுடையதாய் இருப்பது ஒருமலை மேலே என்ற கருத்துத் தோன்ற 'கருமாணிக்க மலைமேல்' என்கின்றாள். இத்தகைய ஒரு மலைமீது தெளிந்த ஒரு தடாகம் தாமரைக் காடுகள் பூத்ததுபோல் எம்பெருமானது எழில் நீலமேனியில் திருமார்பு, திருவதரம், திருக்கண்கள், திருக்கைகள், திருவுந்தி, திருவடிகள் முதலிய உறுப்புகள் அமைந்துள்ளன என்பது தோன்ற 'மணித்தடம்......... ஆடைகள் செய்தபிரான்' என்கின்றாள். பக்தர்கட்குப் பற்றுக்கோடாகவுள்ள பெரிய பிராட்டியார் எழுந்தருளியிருக்கும் திருமார்பு ஆதலால் அது சிவந்து காணப்பெறுகின்றது. அப்பிராட்டி வழியால் உறவு செய்தார்க்கு அநுகூலமான சொற்களைப் பேசுகின்றது அவனது திருப்பவளம். இச்சொற்கள் சொல்லப்புக்கு இனியனான தன்னைக் கண்ட காட்சியால் தடுமாறினால், குறையும் தலைக்கட்டிக் கொடுப்பது செவ்வரி படர்ந்த திருக்கண். அவனது நோக்கிற்குத் தோற்றாரை அணைப்பது திருக்கை. உத்தேசியமான நிலத்தில் (அதாவது திருவடியில்) விழாநின்றால் காற்கட்ட வல்லது திருவுந்தி. இது நடுவே அழுக்கும் சுழி அன்றோ? இவை எல்லாவற்றிற்கும் தோற்று விழும் இடம் எம்பெருமானது திருவடிகள். இவை யாவும் காட்டிலெறிந்த நிலாப் போல் ஆகாமல் பக்தர்கட்கு அநுபவிக்கக் கொடுக்குமவன் என்பதனைக் குறிப்பிடவே 'பிரான்' (உபகாரகன்) என்கின்றாள்.

இங்ஙனம் எம்பெருமானின் திருமேனியழகினை,

**என் அரங்கத்து இன்னமுதர்**
**குழல்அழகர் வாய்அழகர்**
**கண் அழகர் கொப்பூழில்**
**எழுகமலப் பூஅழகர்** —நாச். திரு. 11: 2

என்று ஆண்டாள் கூறி அநுபவித்ததையும் நினைந்து பார்க்கின்றோம். மேலும் இங்கு பர வியூக விபவம் இவற்றிற்குரிய திருநாமங்களையும் சொல்லாமல், அல்லாத உகந்தருளின திவ்விய தேசங்களில் நிற்கின்றவர்களின் பெயர்களையும் சொல்லாமல் குட்டநாட்டுத் திருப்புலியூர் எம்பெருமானுடைய திருநாமங்களையே வாய்வெருவா நிற்கின்றாள் என்பது தோன்ற 'திருப்புலியூர் அருமாயன் பேரன்றிப் பேச்சிலள்' என்கின்றாள். அவள் நிலை தனக்கு அப்போது தான் தெரியும் என்பது தோன்ற 'அன்னைமீர் இதற்கு என் செய்கேன்'[20] என்கின்றாள். அடுத்து வரும் இரண்டு திருப்பதிகளை (10, 11) ஒரே தடவையில் சேவிக்க வேண்டும்.

19. **திருக்காட்கரை**[21] பேருந்தில் செல்லும்போது சாலைக்கு இருமருங்கும் உள்ள தோப்புகள், சோலைகள்,

20. இதற்கு மேல் இத்திருவாய்மொழியின் விளக்கம் வேண்டுவோர் **'மலைநாட்டுத் திருப்பதிகள்'** (கட்டுரை - 9) காண்க.

21. **திருகாட்கரை :** கேரளத்தில் தென் இந்திய இருப்பூர்தி வழியில் எர்ணாகுளம் என்ற நிலையத்திலிருந்து சுமார் 10 கல் தொலைவிலுள்ளது இந்தத் திவ்வியத் தேசம். அங்குப் போய்த் திரும்ப பேருந்து வசதி உண்டு. சாலையின் மேலேயே இவ்வூர் அமைந்துள்ளது. சுமார் இரண்டு ஏக்கர் நிலப்பரப்பில் தாழ்ந்த மதிற்சுவர்களால் சூழப் பெற்ற இடத்தில் அமைக்கப் பெற்றுள்ளது இத் திருக்கோயில். மிகவும் சிறிய கோயில்தான். எம்பெருமான் **திருக்காட்கரை அப்பன்**. தாயார் : **பெருஞ்செல்வநாயகி, வாத்சல்யவல்லி**, நின்ற திருக் கோலம். கிழக்கு நோக்கிய திரு முக மண்டலம்.

வயல்கள், இவற்றைக் கண்டு களித்துக் கொண்டே செல்லலாம். எங்கெங்கெல்லாம் எழில் கொதித்து நிற்கின்றதோ அங்கங்கெல்லாம் தமிழ்க் கடவுள் முருகன் எழுந்தருளியிருப்பான் என்பது தமிழரது சமயக்கொள்கை திரு. வி. க. வின் "முருகன் அல்லது அழகு" என்ற நூலில் இது விளக்கப் பெற்றிருப்பதைப் படித்து மகிழலாம். மாயோனும் (திருமாலும்) தமிழ்க் கடவுள்தானே? 'மாயோன் மேய காடுறை உலகமும்' (தொல் - பொருள் - அகத் - 5) என்று அவனைத் தொல்காப்பியமும் குறிப்பிடுகின்றதன்றோ? முருகனும் திருமால் மருகன் அன்றோ? ஆகவே, திருமாலும் அழகான இடங்களில் கோயில் கொண்டுள்ளார் என்பதைக் காண்கின்றோம். இத்தகைய அழகான இடங்களில் பூவைப் பூ, காயாம் பூ, நீலோற்பலம், செங்கழுநீர்ப்பூ இவை மலர்ந்து காட்சி அளிக்கின்றன. இந்தப் பூக்களைக் கண்டதும் நம்மாழ்வாரின் உயிரும் உடம்பும் ஒருங்கே மலர்ச்சி பெற்றுப் பூரித்துப் போகின்றன. அந்த உணர்ச்சி,

> பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
> காவிமலர் என்றும் காண்தோறும்—பாவியேன்
> மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை
> எல்லாம் பிரான்உருவே என்று — பெரி,திருவம்.73

[பூவை - ஒருவகை மலர்; காவி - செங்கழுநீர்ப்பூ; ஆவி - உயிர்; மெய் - உடல்; பூரிக்கும் - பருத்து வளரும்]

என்று பாட்டாக வடிவம்பெறுகின்றது. எம்பெருமானுடைய திவ்விய மங்கள வடிவம்தான் இப்படி வந்து காட்சி தருகின்றது. இது வெறும் பிரமையே என்று தோன்றினாலும், அறிவு எச்சரித்தாலும், ஆழ்வாரது பக்திக் கண்களுக்கு அவை அப்படியே தென்படுகின்றன. அறிவின் எச்சரிக்கையையும் புறக்கணித்துப் பிரமையே மேல் என்று அவரது உணர்ச்சி தூண்டுவதால் அந்தப் பிரமையிலேயே அவரது உள்ளம் தோய்ந்து ஒன்றி நின்று பேரின்பத்தை அடைகின்றார் ஆழ்வார்.

திருக்காட்கரை என்ற திவ்விய தேசமும் இத்தகைய இயற்கையழகு மிக்க சூழலில்தான் அமைந்துள்ளது. இந்தத் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை நம்மாழ்வார் மட்டிலுமே ஒரு திருவாய்மொழியால் (9.6) மங்களா சாசனம் செய்துள்ளார். இந்த ஆழ்வார் திருக்காட் கரைக்கு வந்தபோது ஒருசமயம் தம் உள்ளத்தில் எம்பெருமானின் பெருமையைக் கூறி மகிழ்ந்தது தம் நினை விற்கு வருகின்றது.[22]

**சிறியே னுடைச்சிந்தை யுள்மூ வுலகும்தம்**
**நெறியா வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தாரே**

—திருவாய் 8.7:8

என்றபடி இறைவன் முறை கெடப் பரிமாறின பரிமாற்றம் நினைவின் பொருளானதோடன்றி அப்போதைய அநுபவமே யாகி விடுகின்றது. இந்த நிலையில் இறைவனுடைய சீல குணத்தை (பெரியவன் தாழ்ந்தவர்களுடன் புரையறக் கலக்குந் தன்மை) எடுத்துப்பேசி உள்ளம் கரைகின்றார் ஆழ்வார். பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம் ஆகிய நான்கு நிலைகளில் உள்ள எல்லாக் குணங்களையும் அர்ச்சாவதாரத்தில் காணலாம் என்பது தத்துவம் (ஆசா. ஹிரு. 158). ஆயினும் ஒவ்வொரு திருப்பதியிலும் ஒவ்வொரு குணம் சிறப்பாகப் பொலியும் என்றும் அத்தத்துவம் குறிப்பிடுகின்றது (ஷை-159). இந்தக் கருத்துப்படி திருக்காட் கரையில் சீலகுணம் கரையழியப் பெருகும் என்பது வைணவர் களின் அசைக்க முடியாத நம்பிக்கை. இங்குத்தானே சேஷ· சேஷி பாவனை (ஆண்டான்-அடியவன் பாவனை) தட்டு மாறிப் பரிவர்த்தனை செய்து ஆண்டவனின் சீலகுணம் பெருகி வழிந்தது?

22. பெரி. திருவந். 68 ('கல்லும் கனைகடலும்')

நம்மாழ்வார் இந்த எம்பெருமானின் ஆச்சரியமான பரிமாற்றங்கலை நினைக்கும் பொழுது நெஞ்சு நீர்ப்பண்டமா கின்றது; கட்டுக்குலைந்து உருகுகின்றது. ஆன்மா தாங்கக் கூடிய அளவுக்கு மீறி ஆசையும் கரைபுரண்டோடுகின்றது.

**உருகுமால் நெஞ்சம் உயிரின் பரமன்றி**
**பெருகுமால் வேட்கையும் என்செய்கேன் தொண்டனேன்**
—திருவாய் 9 : 6 : 1

[பரம் அன்றி - பொறுக்க அரிதாம்படி]

என்ற ஆழ்வாரின் வாக்கினை நினைந்து யாரும் நெஞ்சுரு காமல் இருக்க முடியாது; எம்பெருமான் தாழ நின்று ஆழ்வாருடன் பரிமாறின சில குணத்தினை நினைக்கும் போது எவரையும் கரையழியச் செய்யும். ஒரு குணத்தையே 'காலம்' என்னும் ஒரு பொருள் உள்ள வரையிலும் கால் தாழ்ந்து கணந்தோறும் புதுமை பிறந்து அநுபவிக்கவல்ல ஆழ்வாரின் பக்தியை நினைந்து போற்றுகின்றோம். அவருக்கு இறைவன் ''அப்பொழுதைக்கு அப்பொழுது ஆராவமுத மாக'' (திருவாய் 2·5 : 4) இனிக்கின்றவன் அல்லவா?

இந்த மாயனின் அநந்த கல்யாண குணங்களை அவர் நினைக்கத் தொடங்கினால் அந்த நினைவும் நெடுகச் சென்று தலைக்கட்டாது. மீண்டும் அவற்றையே நினைக்கத் தொடங்குவார் ஆழ்வார். இங்ஙனம் காலம் செல்லுகின்றது. இவ்வாறு நெஞ்சால் நினைக்க முடியாத அந்த அரும்பெரும் குணங்களைத் தம் வாயினால் சொல்லத் தொடங்குகின்றார் ஆழ்வார். தம்மை அறியாமல் அவருடைய வாய் திருக்குணங் களைப் புகழ்ந்தவண்ணம் உள்ளது. இங்ஙனம் புகழ்ந்த வண்ணம் பேசுங்கால் அப்பேச்சு செவிவழி யாக உள்ளே புகுந்து ஊற்றெடுத்து நெஞ்சினை மேலும் கரையச் செய்கின்றது. இவ்விடத்தில் ஈடு; ''பெருக்காற்றின் கரை இடிந்து பின் நீராய்க் கரைந்து போமாறு போலே ஓர் உருவம் ஆக்கிக் காணவொண்ணாதபடி உக்குப்போக

நின்றது'' (9. 6 : 2) என்று குறிப்பது நினைந்து மகிழத் தக்கது. தாழ நின்று பரிமாறின எம்பெருமானுடைய சில குணத்தைப் பாட்டாகப் பாடிப் பரவினாலும் ஆழ்வாருடைய ஆன்மா வேகத் தொடங்குகின்றது.

> **நினைதொறும் சொல்லுந்**
> **தொறும் நெஞ்(சு) இடிந்துஉகும்**
> **வினைகொல்சீர் பாடினும்**
> **வேம்என தாருயிர் (2)**

என்று பேசுகின்றார் ஆழ்வார். ''எல்லாவற்றுக்கும் குளிர்ச்சி பண்ணக் கடவதான தாமரை மலரை மட்டிலும் கருகப் பண்ணுமாப் போலே, சகலர்க்கும் துன்பம் நீக்குவனவான குணங்கள் எனக்கு மட்டிலும் துன்பத்தை விளைவிக்கின்றனவே'' என்கின்றார்; இந்த நிலையில் எம்பெருமானுக்கு எங்ஙனம் கைங்கரியம் செய்வது என்று ஏங்குகின்றார். ''நினைகிலேன் நானுனக்கு ஆள் செய்யும் நீர்மையே'' என்று இதே பாசுரத்தில்(2) மேலும் பேசுகின்றார். ஆழ்வார் பெற்ற அநுபவத்தை மேலும் அறிய வேண்டுவோர் என்னுடைய பிறிதொரு நூலில்[23] கண்டு தெளியலாம்.

**11. திருமூழிக்களம்[24] :** இந்தத் திருப்பதியும் இயற்கை வனப்பு கொஞ்சும் சூழலில் அமைந்துள்ளது. இத்திருத்

---

23. 'மலைநாட்டுத் திருப்பதிகள்' (கட்டுரை-10) காண்க.
24. திருமூழிக்களம் : எர்ணாகுளம் — சோரனூர் இருப்பூர்தி வழியில் 'ஆல்வே' நிலையத்திலிருந்து சுமார் 10 கல் தொலைவிலுள்ளது இந்தத் திவ்விய தேசம்; பேருந்து வசதி உண்டு. பேருந்திலின்றும் இறங்கினவுடன் 150 அடி நடந்து திருக்கோயிலை அடையலாம். எம்பெருமான்: **திருமூழிக்களத்தான், அப்பன், சிரீசூக்திநாதப் பெருமான்.** தாயார் **மதுரவேணி நாச்சியார்.** தாயாருக்குத் தனிச் சந்நிதி;

தலத்து எம்பெருமானை நம்மாழ்வாரும் (9.7), திருமங்கை யாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளனர். திருமங்கை யாழ்வார் 'மூனியே! மூழிக்களத்து விளக்கே! (பெரி. திரு. 7.1 : 6) என்றும் 'மூழிக்களத்து விளக்கினை'(பெரி. திருமடல் கண்ணி-129) என்றும், நம்மாழ்வார் 'திருமூழிக்களத்து உறையும் ஒண்சுடர்க்கு' (திருவாய் 9.7 : 5) என்றும், 'திருமூழிக்களத்து உறையும் ஒண்சுடரை' (டிை 9.7 : 11) என்றும் போற்றுவர், இரண்டு ஆழ்வார்களுமே இத்தலத்து எம்பெருமானை 'சுடர்ப் பொருளாகவே' அருளிச் செய் திருப்பது கருதத் தக்கது. எம்பெருமானுடைய அனந்த கல்யாண குணங்களுள் 'சௌலப்பியம்' என்னும் குணம் சிறந்தது. அந்தத் திருக்குணமே இருட்டறையில் விளக்குப் போல் ஒளிர்வது அர்ச்சாவதாரத்தில்தான். அதுவும் சாதாரண மக்கட்கும் காட்சி தரும் இடமாகிய திருமூழிக் களத்தில் அக்குணம் மிகவும் ஒளி பெற்று விளங்குதலால் ஆழ்வார்கள் இருவரும் 'விளக்கு' என்றும், 'ஒண்சுடர்' என்றும், 'சோதி' என்றும் கூறியுள்ளனர் என்று கருதலாம். 'ஆசாரிய ஹிருதயம்' என்னும் நூல் இத்தலத்து எம்பெரு மானிடம் 'சௌமார்ய குணம்' (அழகு) 'கூடு பூரிக்கும்' என்று குறிப்பிடுகின்றது (சூத்திரம்-179)

இருப்பூர்தியில் செல்லும் பொழுதும் பேருந்தில் செல்லும் பொழுதும் இருபுறமுள்ள சோலைகள், நெல்வயல் கள், கமுகு-தென்னந்தோப்புகள் முதலிய இயற்கை வனப்பு களையெல்லாம் கண்டுகளித்த வண்ணம் செல்லலாம். அழகு

> இல்லை. பகவதி கோயில் உண்டு. கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம். நின்ற திருக்கோலம். பூசைக் காலங்களில் எந்தவித வாத்ய ஒலியும் இல்லை. கோயிலுக்கு அருகில் ஆல்வே நதி ஓடுகின்றது. இந்தச் சிறிய ஊரில் எந்தவித வசதிகளும் இல்லை. திருத்தலப் பயணிகள் எர்ணாகுளம் அல்லது ஆல்வே யில் தங்குவது சிறந்தது.

கூடு பூரிக்கும் மூழிக்களத்தின் வழியெல்லாம் அழகின் காட்சிகள்தாம். பாரதிதாசனின் 'அழகின் சிரிப்பு' என்ற நூலிலுள்ள கவிதைகளின் காட்சிகள் யாவும் நினைவுக்கு வரச் செய்யும். எண்ணற்ற உயிர்கட்கு எல்லையற்ற இன்பங்களைப் படைத்துப் புரந்து இன்புறும் 'அலகிலா விளையாட்டுடை' ஆண்டவனின் பெருங்கருணைத் திறத்தினை எண்ணி எண்ணி வியப்படைகின்றோம்.

நம்மாழ்வார் திருக்காட்கரை அப்பனின் சில குணத்தில் ஈடுபட்டார் அல்லவா? அங்ஙனம் ஆழங்கால் பட்டவர் அப்பெருமானை நேரில் காண ஆசைப்பட்டுப் பிராட்டியின் நிலையை ஏறிட்டுக் கொண்டு பராங்குச நாயகியாகத் தூது விடுகின்றார். நாரை, குருகு, கொக்கு ஆகிய பறவை இனங்களையும், வண்டு, தும்பி ஆகிய பூச்சி இனங்களையும் மேகத்தையும் தூது விடுகின்றாள் ஆழ்வார் நாயகி. திருமூழிக்களத்து எம்பெருமானின் அழகையும் குணங்களையும் பற்றாசாகக் கொண்டு அவன்பால் தூது விடுவதாகக் கொள்வது இத்தலத்து மீதுள்ள திருவாய்மொழி.

**எங்கானல் அகங்கழிவாய்**
**இரைதேர்ந்திங் கினிதமரும்**
**செங்கால மடநாராய்!**
**திருமூழிக் களத்துறையும்**
**கொங்குஆர்பூந் துழாய்முடிஎம்**
**குடக்கூத்தர்க் கென்தூதாய்**
**நும்தாள்கள் என்தலைமேல்**
**கெழுமீரோ நுமரோடே (1)**

[கானல் - உத்தியாவனம்; அகம்கழி - உள்ளிருக்கும் கழி; கொங்கு - தேன்; கெழுமீரோ - சேர்க்கின்றீர்களா]

பறவைகளைத் தூது விடுகின்ற இத்திருப்பதிகத்தின் முதற் பாசுரத்திலேயே ஆசாரியர்களே பறவைகளாகக் கருதப்பெறு

கின்றனர் என்பதைத் தெளிய வைத்தருள்கின்றார்ஆழ்வார். 'நும்தாள்கள் எம் தலைமேல் கெழுமீரோ நுமரோடே' என்னும் ஈற்றடி அமைந்த அழகு மிகவும் அற்புதமானது. ஆசாரியர்கள் தம் சுற்றத்துடன் தம் தலைமீது திருவடிகளை வைப்பதே பெறற்கரிய பேறு என்பதை இத்தூதுப் பதிகத்தில் உயிராக வைத்திருப்பதை 'மலைநாட்டுத் திருப்பதிகள்' (கட்டுரை-11) என்ற எனது பிறிதொரு நூலில் கண்டு தெளியலாம்.

12. **திருநாவாய்**[25]: இத்திருத்தலம் நான்காவது பிரிவில் அமைகின்றது; தனியாகச் சேவிக்க வேண்டியது. இத்திருத்தலத்தை நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளனர். ஷோரனூரிலிருந்து இருப்பூர்தியில் செல்லும் போதும், நிலையத்திலிருந்து நடந்து செல்லும் போதும் இருபுறமும் உள்ள இயற்கைக் காட்சி நம் சிந்தைக்கு விருந்தாக அமைகின்றது. சாலையிலிருந்து சுமார் 100 கெஜத் தொலைவில் உள்ளது திருக்கோயில். நம்மாழ்வார் இத்திருக்கோயில் எம்பெருமானை நாயகி நிலையிலிருந்து அநுபவிக்கின்றார். இத்திருவாய் மொழி 'மகள் பாசுரமாக' (9. 8) நடை பெறுகின்றது. கடப்பதற்கு உறுப்பாக இருப்பது கப்பல்; நாவாய். அங்ஙனமே துன்பக் கடலைக் கடப்பதற்கு இத்திருத்தலத்து எம்பெருமானும் நாவாய்

25. **திருநாவாய** : இத்திவ்விய தேசம் ஷோரனூர் - மங்களூர் இருப்பூர்தி வழியில் சுமார் 25 கல் தொலைவிலுள்ளது.இஃது ஓர் இருப்பூர்திநிலையம். நிலையத்திலிருந்து சுமார் 3 கி.மீ. தொலைவிலுள்ளது. வண்டியொன்றும் கிடைப்பதில்லை. சில சமயம் பேருந்து கிடைக்கும். 'நடராச சர்வீஸில். ஆனந்தமாக நடந்து செல்லலாம். பாரதம் புழா என்ற ஆற்றின் கரை மீதுள்ளது இத்திருத்தலம். எம்பெருமான் : **நாரண நம்பி, நாவாய் முகுந்தன்.** தாயார் : **மலர்மங்கை நாச்சியார், சிறுதேவி.** கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம். நின்ற திருக்கோலம்.

போன்றிருப்பதால் அவன் எழுந்தருளியுள்ள தலமும் நாவாய் என்ற பெயராலே வழங்குகின்றது. திரு என்ற அடைமொழி யுடன் இத்தலம் திருநாவாய் என்று வழக்கிலிருந்து வருகின்றது.

**துன்பக் கடல்புக்கு வைகுந்தன் என்பதோர்**
**தோணி பெறாதுழல் கின்றேன்**

—நாச். திரு 5:4

என்ற ஆண்டாளின் திருப்பாசுரத்திலும் இறைவன் துன்பக் கடல் கடத்தும் தோணியாக அருளிச் செய்யப் பெற்றுள்ளமை நினைக்கத் தக்கது.

பராங்குச நாயகி இருந்த இடத்திலிருந்து கொண்டே எம்பெருமானை அநுபவிக்க எண்ணுகின்றாள்.

**வெறித்தண் மலர்ச்சோலைகள்**
**சூழ்திரு நாவாய்**
**குறுக்கும் வகையுண்டு**
**கொடியோ கொடி யேற்கே (1)**

[வெறி - நறுமணம்; குறுக்கும் - குறுகும், மலையாள மொழி வழக்கு]

என்று மநோரதங்களைப் பண்ணுகின்றாள். இந்தத் திவ்விய தேசத்துக்கு அண்மையில் வாழும்படியான உபாயம் உண்டோ என்று எண்ணுகின்றார். 'குறுகும்வகை' என்பது மலையாள மொழி வழக்கு. இதுபற்றி ஓர் ஐதிகம்: ஒரு சமயம் இராமநுசர் மலைநாட்டுத் திருத்தலப் பயணத்தை மேற்கொண்டபோது திருநாவாய்க்கு அணித்தாக வந்து கொண்டிருந்தார்; எதிரிலே வந்து கொண்டிருந்த மலை யாளர்களை நோக்கி, "திருநாவாய் எவ்வளவு துரமுண்டு?" என்று வினவ, அவர்கள் 'குறுக்கும்' என்றார்கள். அண்மை யில் உள்ளது என்பது இதன் பொருள். எம்பெருமானார் இதனைக் கேட்டு 'இப்பகுதி மொழியாலன்றோ அருளிச்

செய்துள்ளார் ஆழ்வார் என்று பாசுரத்தில் மிகவும் ஈடு பட்டாராம். அதனை நினைவு கூர்ந்து நாமும் பாசுரத்தில் தோய்ந்து அநுபவிக்கின்றோம்.

**அறுக்கும் வினையாயின**
**ஆகத்து அவனை**
**நிறுத்தும் மனத்தொன்றிய**
**சிந்தையி னார்க்கு (1)**

[அறுக்கும் - போக்கும்: ஆகத்து - உள்ளத்தில்; ஒன்றிய- ஒருமைப்பாடுடைய]

என்பது பாசுரத்தின் முதல் இரண்டு அடிகள். ''அப் பொழுதைக்கு அப்பொழுது ஆரா அமுதமாக இனிக்கும் எம்பெருமானைத் தங்கள் உள்ளத்தில் நிறுத்தி வைத்துக் கொள்ள வேண்டும் என்ற கருத்தினையுடையவர்கட்கு, திருநாவாய் அண்மைக்கு வரும்படியான உபாய முண்டோ என்பது பராங்குச நாயகியின் எண்ணம், 'வினையாயின' என்பதனால் விரோதிகளைக் குறிப்பிடுகின்றார் ஆழ்வார்., அந்த விரோதிகள் சொரூப விரோதி, உபாய விரோதி, பிராப்பிய விரோதி என்று திருமந்திரப் பொருளில் கூறப் பெறும் மூன்று விரோதிகளாகும்.[26] இவற்றைத் தவிர பழ வினை (சஞ்சிதம்) நுகர்வினை (பிராரப்தம்), எதிர்வினை (ஆகாமியம்)போன்ற வினைத்தொகுதிகளும்உள்ளன. இவை யனைத்தும் அடங்கியவையே 'வினையாயின'வாகும். எம் பெருமானை உள்ளத்தில் நிலை நிறுத்தி வைத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உள்ளவர்களிடம் இவ்விரோதிகள் யாவும் அணுகா என்பது கருத்து:[27]

கேரளத் திருத்தலப் பயணத்தில் அவசரம் கூடாது. நிதானமாகப் பார்த்து வருதல் வேண்டும். சொந்த வாகன

26. முமுட்சுப்படி - 83, 84, 85.
27. மேலும் இப்பதிக அநுபவம்பெற விழைவோர்'மலை நாட்டுத் திருப்பதிகள்' (கட்டுரை—13) காண்க.

வசதி யுள்ளவர்க்கு இப்பயணத்தில் சிரமம் அதிகம் தெரியாது. இத்தகைய வாய்ப்பு இல்லாதவர்கள். காலையில் ஒரு திருப்பதியும் மாலையில் ஒரு திருப்பதியுமாகச் சென்று சேவித்தல் நன்று. பெரும்பாலும் மலைநாட்டுத் திருப்பதிகளிலுள்ள திருக்கோயில்கள் காலையில் (7½ - 12) மணி வரையிலும் மாலையில் (5½ - 8) மணி வரையிலுமே திறந்து வைக்கப்பெற்றிருக்கும். பேருந்து வசதிகளிருப்பினும் அவை புறப்படும் நேரம், திரும்பும் நேரம், ஆங்காங்குக் கிடைக்கும் தங்கும் வசதிகள், உணவு வசதிகள் இவற்றைப் பொறுத்தே நம் பயணம் நிறைவு பெறுதல் வேண்டும். சொந்த வாகன வசதியில்லாதவர்கள்—கேரளத்திற்குப் புதியவர்கள்- பல்வேறு சங்கடங்களை அநுபவிக்கத் தயாராக இருத்தல் வேண்டும். உடலில் வலுவும் எதையும் சகித்து நிற்கும் ஆற்றலும் உள்ளவர்கட்குக் கேரளத் திருத்தலப் பயணம் ஆனந்தமாகவே இருக்கும். இயற்கைக் காட்சிகளும் தட்ப–வெப்ப நிலையும் மனத்திற்குக் களிப்பாக இருக்கும் சோர்வின்றித் திருப்பயணத்தை இனிதாக முடிக்கலாம்.

## 5. வட நாட்டுத் திருப்பதிகள்

வடநாட்டுத் திருப்பதிகள் 12 என்று வரையறுத்துள்ளார் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார். அவை

| | |
|---|---|
| 1. திருவேங்கடம், | 2. சிங்கவேள் குன்றம் |
| 3. அயோத்தி | 4. நைமிசாரண்யம் |
| 5. சாளக்கிராமம் | 6. பதரியாசிரமம் |
| 7. கண்டம் கடிநகர் | 8. திருப்பிரிதி |
| 9. வடமதுரை, | 10. துவாரகை |
| 11. ஆய்ப்பாடி | 12. திருப்பாற்கடல் |

என்பவை. பிருந்தாவனம், கோவர்த்தனம் இவை பற்றிப் பாசுரங்கள் உள்ளன. இவை 108 திருப்பதிகளுள் இடம் பெறாததன் காரணம் தெரியவில்லை. வடநாட்டுத்திருப்பதிகளுள் முதலாவதாகக் குறிப்பிடப் பெற்றிருப்பது திருவேங்கடம்.[1]

1. தொல்காப்பியப் பாயிரத்திலும், சங்க இலக்கியங்களிலும் குறிப்பிடப் பெற்றுள்ள 'வடவேங்கடம்' என்னும் மலைத்தொடர் இதனின்றும் முற்றிலும் வேறுபட்டது. விவரம் இவ்வாசிரியரின் 'திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்' (பாரி நிலைய வெளியீடு) என்ற நூலில் காண்க.

1. திருவேங்கடம்[2] இன்று இது 'திருமலை' என்று வழங்கப் பெறுகின்றது. இம்மலை வழி வழியாக 'ஏழுமலை' (சப்தகிரி) என்றும் வழங்கப் பெறுகின்றது. இப்பொழுது பேருந்துகள் மலையிலிருந்து இறங்கும் வழியில் இம்மலையின் பெயர்ப் பலகைகளைக் காணலாம். சில ஆண்டுகட்குமுன் இம்மலைச் சாலை ஏறும் வழியாகவும் அமைந்திருந்தது. இந்த வழியில் கீழிருந்து மேலே செல்லுங்கால் முதலில் காண்பது எருத்து மலை (விருஷபாத்திரி). அடுத்து முறையே நீலமலை (நீலாத்திரி), மைவரை (அஞ்சனாத்திரி), பாம்புமலை (சேஷாத்திரி, அரவக்கிரி), கருடமலை (கருடாத்திரி), நாராயணமலை (நாராயணாத்திரி), வேங்கடமலை (வேங்கடாத்திரி) என்ற மலைகளைக் காணலாம். அத்திரி - மலை; வரை - மலை. கிரி-மலை. கோயில் (திருவரங்கம்), திருமலை, பெருமாள்

2. திருவேங்கடம்: ஆந்திர மாநிலத்தில் சித்தூர் மாவட்டத்தில் உள்ள ஒரு திவ்வியதேசம். காட்பாடி-ரேணி குண்டா இருப்பூர்தி வழியில் ஒரு நிலையம். நிலையத்திலிருந்து மலை மூன்று கல் தொலைவிலுள்ளது. ஏழு கல் தொலைவு கடந்தால் மலையின் உச்சியை அடையலாம். திருப்பதியிலும் திருமலையிலும் பக்தர்கள் தங்குவதற்கு வாடகையிலும் வாடகையின்றியும் ஏராளமான சத்திரங்கள் தேவஸ்தானப் பொறுப்பில் உள்ளன. உணவு விடுதிகளும் உள்ளன. தனியாரும் கட்டட வசதிகளும உணவு வசதிகளும் செய்துள்ளனர். மலைக்குச் செல்வதற்கு அடிக்கடிப் பேருந்து வசதிகள் உள்ளன. வடநாட்டார் இத்தலத்தை 'பாலாஜி' என்று வழங்குவர். நாடோறும் எண்ணற்ற திருத்தலப் பயணிகள் வந்து வழிபட்டுச் செல்லுகின்றனர். திருமலையில் கோயிலமைப்பு பூலோக வைகுந்தம் போல் காட்சியளிக்கும். பரமபதத்தை அடைந்தது போன்ற மகிழ்ச்சியை விளைவிக்கும். மலையில் பல தீர்த்தங்கள் உள்ளன. கோயிலுக்கு அடுத்து இத்தலம் 2.3 ஆழ்வார்களின் பாசுரங்கள் பெற்றது. நம்மாழ்வார் பாசுரங்கள் மட்டிலும் 62.

கோயில் (காஞ்சி) என்று வைணவப் பெருமக்களால் போற்றப் பெறும் மூன்று திவ்விய தேசங்களுள் இது நடு நாயகமாகத் திகழ்கின்றது. திருவேங்கடத்தைப்பற்றி 213 பாசுரங்கள் நாலாயிரத்தில் காணப்பெறுகின்றன. இவை பத்து ஆழ்வார்கள் பாடியவையாதலால் முத்தமிழ்க் கவி வீரராகவமுதலியார் 'பதின்மர் செந்தமிழ்'[3] என்று போற்றிப் புகழ்வர். நம்மாழ்வார் பாடியவைமட்டிலும் 62 பாசுரங்கள்.

தம்முடைய முதல் பிரபந்தமாகிய **திருவிருத்தத்தில்** திருவேங்கடம் முதன் முதலாக மங்களா சாசனம் செய்யப் பட்டதால்[4] **'திருமலை'** என்று சிறப்பிக்கப் பெற்றுள்ளது. **கோயில்** பற்றி முன்னர் விளக்கப்பட்டது. இம்மூன்றற்கும் நடுநாயகமாயுள்ள (கோயில், திருமலை, பெருமாள் கோயில்) திருமலையைப் பற்றிய ஒரு பாடலைக் காண்போம்.

**இசைமின்கள் தூதென் றிசைத்தால்**
**இசையிலம் என்தலைமேல்**
**அசைமின்கள் என்றால் அசையும்கொலாம்**
**அப்பொன் மாமணிகள்**
**திசைமின் மிளிரும் திருவேங்**
**கடத்துவன் தாள்சிமயம்**
**மிசைமின் மிளிரிய போவான்**
**வழிக்கொண்ட மேகங்களே** —திருவிருத். 31

[இசைமின்-ஒப்புக்கொள்மின்; இசையிலம் - ஒப்புக் கொள்ளவில்லை; அசைமின்கள் - பொருந்துங்கள்; வல்தாள் - வலிய அடிவாரம்; சிமயம் - சிகரம்;

3. திருவேங்கடக் கலம்பகம் -24. இதன் ஆசிரியர் அந்தகக் கவிவீரராகவ முதலியாரின்பேரர். செங்கற் பட்டுக்கு அருகிலுள்ள பொன் விளைந்த களத் தூரில் பிறந்தவர்.
4. திருவேங்கடத்தைப் பாசுரங்கள் திருவிருத். 8, 10, 15, 31, 50, 60, 67, 81. காண்க.

மிசை - மேல்; திசை - திக்குகள்; மின்மிளிரும் - மின்னல்போல் பிரகாசிக்கும்; மிளிரிய - விளங்க; வழிகொண்ட - பிரயாணப்பட்ட]

என்பது தூதுப் பாசுரம். இங்குத் தூதுசெல்லாத மேகத்தைக் குறித்துத் தலைவி இரங்குகின்றாள். திருவேங்கடமலை மேல் சென்று சேரும் பொருட்டுப் பயணப்பட்ட மேகங்களை நோக்கித் தலைமகள் 'என்னைப் பிரிந்து அங்குச் சென்று வசிக்கின்ற என் தலைமகனுக்கு என் நிலைமையைச் சொல்லுமாறு நீங்கள் எனக்குத் தூதராக வேண்டும்' என்று வேண்ட, அதற்கு அவை உடன்படக் காணாமையால் மீண்டும் அவற்றை நோக்கி, 'அவனுள்ளவிடத்து ஏறச் செல்லும் பேறு பெற்ற நீங்கள் அங்ஙனம் செல்ல மாட்டாத என் தலைமேல் உங்கள் பாதத்தை வைத்தாவது செல் லுங்கள்' என்று வேண்டுகின்றாள். திருமலைத் தலைமேல் சென்று தங்குவதற்கு விரைகின்ற அவை இவள் தலைமேல் தங்கி நிற்பதற்கும் இசைதல் அரிதாக இருக்கும் தன்மையைக் குறித்து தலைவி இரங்குகின்றாள். இங்ஙனம் பலவாறு கூறி அலற்றுதற்குப் பயன் யாதெனில் மூடியிருந்து வேவதோர் கொள்கலம் மூடி திறந்த விடத்து ஆவி எழுந்து முன்னின்ற வெப்பம் நீங்கினாற்போல, ஆற்றாமையால் உள்ளே மிக்குநின்ற தாபத்தை வாய்விட்டு வெளியிட அது சிறிதளவு குறைதலேயாகும்.

இவ்விடத்தில் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீசூக்திகள் மிக சுவையுடன் அநுபவிக்க வேண்டியவை: ''கீழ் (32) நீலமுண்ட மின்னன்ன மேனிப் பெருமானுக்கு' என்று பரமபதத்தே தூது விட்டாள்; அது பரபக்தி, பரஞானம், பரமபக்தியுடையார்க்கல்லது புகவொண்ணாத தேசமாகை யாலே அவதாரங்களிலே தூதுவிடப் பார்த்தாள்; அதுவும் சம காலத்தில் உள்ளார்க்காய்ப் பின்னை இல்லை யாகையாலே பிற்பட்டார்க்கும் அநுபவிக்கலாம் படிச்

சுலபமான திருமலையிலே திருவேங்கடமுடையான் திருவடி களிலே மேகத்தைத் தூதாக விடுக்கின்றாள், திருமலையை நோக்கிப் போகின்ற மேகங்களே, தூதுச் செய்தியைக் கொண்டு போய்ச் சொல்லுங்கள் என்றால், சொல்லு கின்றீர்கள் இல்லை; திருமலைக்குப் போகிற பராக்கிலே பேசாது போகின்றவற்றைக் கண்டு, நீங்கள் சொல்ல மாட்டீர்களாகில் உங்கள் திருவடிகளை என் தலை மேலே வையுங்கள் என்றால் வைக்க மாட்டீர்களா? திருமலைக்குப் போவாருடைய திருவடிகள் உத்தேச்யமாயிறே இருப்பது? திருமலைக்குப் போகிறவர்களைத் தலையிலே வைக்கக் கிடைக்குமோ? திருவடியைப் (அநுமனைப்) பிராட்டி இங்கே ஓரிராத் தங்கிப் போக வேண்டுமென்று அருளிச் செய்ய, ஒண்ணாது என்று அவனும் மறுத்துப் போனாப்போலே போகா நின்றன'' என்று.

தொண்டை நாட்டுத் திருப்பதிகள்மீது ஆழ்வார் பாசுரங்கள் இல்லையானாலும் ஒரே - பாசுரம் உண்டு. அதுதான் பெருமாள்கோயில் மீது' (காஞ்சி). இதுவும் ஆழ்வாரின் முதல் பிரபந்தம் பற்றியது என்பது கருதத் தக்கது; அதை ஈண்டுக் காட்டுவேன்.

**நானிலம் வாய்க்கொண்டு நன்னீர்**
**அறமென்று கோதுகொண்ட**
**வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ்பாலை**
**கடந்த பொன்னே?**
**கானிலம் தோய்ந்து விண்ணோர்தொழும்**
**கண்ணன்ன வெஃகாஉதுபூந்**
**தேனிளஞ் சோலை அப்பாலது**
**எப்பாலைக்கும் சேமத்ததே (26)**

[நால் நிலம் - முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல்; வாய்கொண்டு - வாயில் பெய்து கொண்டு; அற - நீங்கும்படி; கோது - நீக்கப்பட வேண்டிய பகுதி;

வேனில் அம் செல்வன் - சூரியன்; வெஃகா - சொன்ன வண்ணம் செய்த பெருமாள் கோயில்; அப்பாலது - அவ்விடத்திலுள்ளது; எப்பாலைக் கும் - எல்லாத்துன்பத்திற்கும்; சேமத்தது - இன்பம் தருவது]

'நகர் காட்டல்' என்பது இப்பாசுரத்திற்குரிய துறை உடன் போக்கில் நாயகன் நாயகியை உடன் கொண்டு. இடைவெளிப் பாலை கடந்து தன் ஊருக்குப் போகும்போது அவளுக்கு வழிநடை இளைப்புத் துன்பம் தோன்றாதிருக்கும் பொருட்டு அவளை நோக்கி, 'அதோ தெரிகின்ற அப் பெரிய நகர் காண் நம்முடைய நகர்' என்று தனது நகரைக் காட்டி அண்மை தோன்றக் கூறுவது இத் துறையாகும். "புணர்ந்துடன் போன தலைமகன் நடந்து இளைத்த தலைவியைக் குறித்து இடந்தலைப் பெய்தமை சொன்ன பாசுரம்" என்பர் அழகிய மணவாள சீயர். தலைவனும் தலைவியும் தாம் ஒருவருக்கொருவர் தனி நிழலாயிருக் கையாலே இவர்களுக்கு இந்நிலத்தின் கொடுமையால் உண்டாகும் இளைப்பு இல்லையாகிலும் பொழுது போக்காகத் தலைவன் தலைவியை நோக்கி இங்ஙனம் கூறினது என்றலும் உண்டு. "நாயகி, நம்முடைய வழி நடையில் தெய்வாதீனமாய் பாலை நிலத்தைத் தாண்டி விட்டோம். அஃது இனித் தாண்டவேண்டியிருந்தால் மிகவும் சிரமப்பட வேண்டியதாக இருக்கும். நல்ல காலமாய் அதைத் தாண்டி விட்டோம். இனி நமது நகர் அண்மையில் தான் உள்ளது" என்கின்றான் நாயகன். பகலவன் நால்வகை நிலங்களையும் தன் கதிர்களால் வாயிற் பெய்து கொண்டு சாரமான நீர்ப்பசை அறும்படி நன்றாக மென்று சார மற்றதை உமிழ்ந்த பகுதியே பாலை நிலம்; அதனைத் தாண்டியாயிற்று.

சிலப்பதிகாரத்தில்,

**கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி**
**வேத்திய லிழந்த வியனிலம் போல**
**வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்**
**தானலந் திருகத் தன்மையிற் குன்றி,**
**முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து**
**நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்**
**பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்**[5]

என்ற பகுதியில் முல்லை குறிஞ்சி இரண்டு நிலம் மட்டிலும்தான் கேகடையில் திரியும் என்று சொல்லப் பட்டது. ஈண்டு நானிலமும் கோடையில் திரியும் என்று கூறியிருத்தல் காணத்தக்கது. கோடையில் சென்னைக் கடற்கரைப் பகுதி (நெய்தல்), திருநாங்கூர்ப்பகுதி (மருதம்) இவற்றைக் காணுங்கால் இத்திரிபைக் காணலாம். 'நன்னீர் அறமென்று கோது கொண்ட வேனிலஞ் செல்வன்' என்ற பின் மீண்டும் 'சுவைத்து' என்றது சிறிதும் நீரில்லாதபடி பசையறப் பருகினமை தோன்றுதற்கு.

**பாலை கடந்த பொன்னே!** இப்படிப்பட்ட கொடிய நிலத்தைக் காலால் நடந்து கடந்து வந்து மிக வருந்த வேண்டிய நிலையிலும் தலைவனைப் பிரியாது அவனுடன் வருதலையே ஓரின்பமாகக் கருதி, எரிகின்ற நெருப்பில் ஓட வைத்த பொன்போல ஒளி விடுகின்ற தன்மையைக் கூறி விளிக்கின்றான் தலைவன். 'திருமகள் போன்றவளே!' என்றதாகவும் கருதலாம். '**கால் நிலந்தோய்ந்து விண்ணோர்தொழும் கண்ணன் வெஃகாஉது**: தேவர்க்கு இந் நிலவுலகில் கால்தோயாதிருத்தல் இயல்பு; அது மாறிக் கால்நிலம் தோய்வார் எனக் கூறியது அவ்வுலகத்திலும் இத் திவ்விய தேசத்துக்குள்ள பெருமையைக் காட்ட. நிலத்தில்

5. சிலப். காடுகாண். அடி 60-66

கால்தோய்பவரான மண்ணுலகத்தோரும் கால் பொருந்துவதற்கு அரிய பாலையின் வெப்பத்தைத் தணிக்க வல்லதான திருவெஃகா[6] கால்நிலம் தோயாத வரான விண்ணுலகத் தோரும் கால் பொருந்தும் படியானதென நயம் காட்டியது இன்புறத்தக்கது. அன்பு மிகுதியால் இடம்பாராது கால் தோய்வார் என்றவாறு.

**பெரிய திருவந்தாதியில்** நம்மாழ்வார்,

> **கல்லும் கனைகடலும் வைகுந்த வான்நாடும்**
> **புல்என்று ஒழிந்தனகொல்? ஏபாவம்! வெல்ல**
> **நெடியான் நிறம்கரியான் உள்புகுந்து நீங்கான்**
> **அடியேனது உள்ளத்து அகம்.**
> —பெரிய திருவந். 68.

(கல் - திருவேங்கடம்; கனைகடல் - திருப்பாற் கடல்; வான்நாடு - வானுலகம்; புல்லென்று - அற்ப மாகி; ஏபாவம் - ஐயோபாவம்; வெல்ல - மிக)

6. **திருவெஃகா**: 108 திவ்வியதேசங்களுள் ஒன்று. தொண்டை நாட்டில் காஞ்சியில் தேரடித் தெருவிற் கருகிலுள்ளது. கணிகண்ணன் சொற்கேட்ட திருமழிசை பிரான் சொன்னபடி தான் செய்து 'சொன்ன வண்ணம் செய்த பெருமாள்' என்று திருநாமம் பெற்றவன் இத்தலத்து எம்பெருமான்; சௌலப்பியத்திற்கு எல்லை நிலமானவன். இத் தலத்து எம்பெருமான் பிரமன் செய்த வேள்வியை அழிக்கவந்த வேகவதி நதியைத் தடுக்கும்பொருட்டு அதற்கு அணையாகக் குறுக்கே பள்ளி கொண்ட வனாதலால் அப்பிரானுக்கு வடமொழியில் 'வேகாசேது' என்பது திருநாமம். அது தமிழில் 'வேகவணை' என்று மொழி பெயர்ந்தது; அது பின் 'வேகணை' என விகாரப்பட்டது; பின்னர் வெஃகணை எனத் திரிந்து தானியாகு பெயராகத் தலத்தைக் குறித்தது. அது பின்பு வெஃகா என மருவிற்று என்பர். 1956 சனவரியில் முதன்முதலாக என் அருமை நண்பர் கி. சீநிவாசவரதன் என்பாரின்

என்ற திருப்பாசுரத்தால் திருவேங்கடத்தை மங்களா சாசனம் செய்கின்றார்.

**அங்குத்தை வாசம் சாதனம்**
**இங்குத்தை வாசம் சாத்தியம்**

—ஸ்ரீவசன, 176

[சாதனம் - பயனை அடையத் துணையாக இருப்பது; சாத்தியம் - அதனால் அடையும் பயன்.]

என்ற வாக்கியம் இப்பாசுரத்தின் முன் இரண்டு அடிகளை மூலமாகக் கொண்டு எழுந்தது.

எம்பெருமானுக்குப் பரமபதத்திலும் திருப்பாற் கடலிலும், கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான உகந்தருளின இடங்களிலும் இருப்பதைவிட மெய்யடியாருடைய இதய கமலத்தில் வாழ்வதே மிக விருப்பமாகும். சமயம்பார்த்து அன்பருடைய நெஞ்சில் சேர்வதற்காகவே மற்ற இடங்களில் எம் பெருமான் தங்குகின்றான். ஆகவே, பரமபதம் முதலியவற்றின் வாசம்உபாயமாயும் அடியார்களுடைய இதயகமலத்தின் வாசம்புருஷார்த்தமாயும்இருக்கும். இஃது அவனுக்குக்கைகூடி விட்டால் பரமபதம் முதலான இடத்தில் வாசம் செய்வது மட்டமாய்விடும். ஒவ்வொருவரும் இரவில் பள்ளி கொள்ளும் போது இப்பாசுரத்தில் பலகால் அநுசந்திக்க வேண்டும் என்பது பெரியோர்களின் உபதேசம்.

திருவாய்மொழிப் பாசுரங்களை நோக்குவோம்; திருவேங்கடமுடையானுக்கு அடிமைசெய்ய வேண்டும் (3.3) என்றகருத்துடையதில் முதல் பாரம் இது.

துணை கொண்டு சேவித்தேன். அதன் பின்னர் குடும்பத்துடன் ஒருமுறை சேவித்தேன். உற்சவர் கண்ணனைக் கவரும் பேரழகு வாய்ந்தவர். இந்த நண்பர் இப்போது (1989) இல்லை. 1986இல் திருநாடு அலங்கரித்து விட்டார்.

ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும்நாம்
தெழிகு நல்அரு வித்திரு வேங்கடத்து
எழில்கொள் சோதிஎந்தை தந்தை தந்தைக்கே (1)

[ஒழிவுஇல் - ஓய்வில்லாத; உடனாய் -கூட்டவே: மன்னி - நிலைபெற்று; வழுஇலா - குற்றமற்ற, தெழிகுரல்அருவி - கம்பீரமான ஓசையையுடைய அருவி; எழில்கொள் - நிறம் பெற்ற]

"அந்தோ! கீழே வெகுகாலம் வீணாகக் கழித்துவிட்டதே! என்கின்ற இழவு நெஞ்சில் படாதபடி அதனை மறந்து ஆனந்தமயமாகக் கைங்கரியம் பண்ணப்பாரிக்கின்றார்" என்பது இதன் கருத்து. 'உடனாய்' என்பது எல்லாத் தேசங்களிலும் விடாதே தொடர்ந்து அடிமை செய்ய வேண்டும் என்கின்ற பாரிப்பைக் காட்டுகின்றது. 'ஒழிவில் காலமெல்லாம்': இதற்கு ஓர் ஐதிகம். "ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் இத்திருவாய்மொழி பாடப் புக்கால் 'ஒழிவில் காலமெல்லாம், ஒழிவில்காலமெல்லாம், காலமெல்லாம் என்று இங்ஙனே நெடும் போதெல்லாம்பாடி, மேல் போகமாட்டாதே அவ்வளவிலே தலைகட்டிப் போவாராம்" என்று. இதனால் அரையர் ஆழ்வாருடைய நிலைமையை அப்படியேயடைந்து கைங்கரியத்தில் தமக்குள்ள ஈடுபாட்டைக் காட்டினரென்பது பெறப்படும்.

திருவேங்கடத்து எழில் கொள் சோதி : இங்கு ஈட்டு ஸ்ரீசூக்தி பரமபோக்கியமானது. "வானார் சோதியையும் நீலாழி சோதியையும் வ்யாவர்த்திக்கின்றது; வானார் சோதி பகல் விளக்குப் பட்டிருக்கும், நீலாழி சோதி கடல்கொண்டு கிடக்கும். வேங்கடத் தெழில்கொள் சோதி குன்றத்திலிருக்கும் விளக்காயிருக்கும். "திருவேங்கடமேய விளக்கிறே".

**ஓர் இதிகாசம்** : எம்பெருமானார் இத்திருவாய்மொழியை அருளிச் செய்யும்போது அந்தக் காலட்சேபக் குழுவில் நூற்றுக்கணக்காக எழுந்தருளியிருந்த சீடர்களை நோக்கி "ஆழ்வார் பாரித்த குறைதீரத் திருவேங்கடமுடையான் பரிசரத்திலேயிருந்து நித்திய கைங்கரியம் பண்ணவிருப்ப முடையார் ஆரேனுமுண்டோ?" என்று வினவியருள, குளிரருவி வேங்கடமாகையாலே எல்லாரும் குளிருக்கு அஞ்சி விடை கூறாதிருக்க, அனந்தாழ்வான் எழுந்து 'அடியேனுக்கு நியமித்தருள வேணும்' என்றார். அது கேட்டு உகந்த எம்பெருமானார் 'நீரொருவரே ஆண்பிள்ளை' என்று போரப் பொலியக் கொண்டாடித் தழுவியருளி விடை கொடுத்தருளினர்; அது முதலாக 'அனந்தாண்பிள்ளை' என்று அவருக்குப் புகழ்பரவலாயிற்று என்பது இதிகாசம்,

இத்திருவாய்மொழியிலுள்ள எல்லாப் பாசுரங்களையும் உளம் உருகச் சேவித்தால் ஆழ்வாரின் கைங்கரியப் பாரிப்பு இனிதுபுலனாகும்.

இன்னொரு திருவாய்மொழி சரணாகதிதத்துவத்தை விளக்குவது. 'உலகம் உண்ட பெருவாயா' (6.10) என்று தொடங்குவது. இதற்குமுந்திய திருவாய்மொழியில் (6.9).

**தாவி வையம் கொண்ட தடந்தா மரைகட்கே**
**கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ?(9)**

என்றெல்லாம் அபரிமிதமான ஆர்த்தியோடே பரமபதத்தளவும் கேட்கும்படி, கேட்டோர் நெஞ்சம் நீராய் உருகும் வண்ணம், எம்பெருமானைக் கூப்பிடுகின்றார். இந்தக் குரல் செவிடன் காதில் ஊதிய சங்கொலி போலாயிற்று. திருவேங்கடமலையிலே நித்தியசூரிகளோடு, நித்தியசம்சாரிகளோடு, திர்யக்குகளோடு (விலங்குகள் முதலியவை) வேறுபாடு இன்றி எல்லாரும் வந்து ஒரு மிடறாக ஆச்ரயிக்கலாம் படி நித்தியசந்நிதி பண்ணியிருக்கிறபடியை அநுசந்தித்து

அத்திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பெரிய பிராட்டியார் முன்னிலையாக (புருஷகார பூதையல்லவா?) தம்முடைய அநந்யகதித்துவத்தை (ஆன்மா ரட்சணத்திற்கு எம்பெருமானைத் தவிர வேறொரு ரட்சகப் பொருள் அற்றிருக்கை) விண்ணப்பம் செய்து சரணம் புகுகின்றார் இத் திருவாய்மொழியில். இதன் முதல் ஒன்பது பாசுரத்தால் சரண்யன் தன்மை சொல்லிப் பத்தாவது பாசுரத்தில் சரணம் புகுகின்றார்.

''உன்னையொழிய வேறுகதி இல்லாமல் இருக்கின்ற என்னை உன் திருவடிகளிலே சேரும்படியான விரகு அருளிச் செய்யவேண்டும் (1); விரோதிகளையெல்லாம் கிழங்கு எடுக்கவல்ல திவ்வியாயுதத்தினால் ஒளி பெற்றிருக்கின்ற நீ எனது விரோதிகளையும் போக்கி நான் உன் திருவடிகளைச் சேரும்படி கருணைகாட்ட வேண்டும் (2); 'உன் அடிசேர் வண்ணம் அருளாய்!' என்றீர். 'இங்ஙனம் நினைத்தபோதே அருள முடியுமோ?' என்ன: 'வேறுபட்ட சிற்றின்பங்களில் போகாதபடி ஞான இலாபத்தைப் பண்ணிவைத்த உனக்கு பேற்றினைத் தருதல் பெரிய பணியோ?' என்கின்றார் (3); 'பிரானே, உன்னைப் பெறுகைக்கு உடலாக நீ சாத்திரங்களில் காட்டித் தந்த சாதனங்கள் ஒன்றும் எனக்குப் பயன் அளிக்கவில்லை; ஆனபின்பு, தேவரை நான் அடைவதற்கு எனக்கென்று தனியே ஒரு சாதனம் கண்டுதரவேணும்' என்கின்றார் (4): 'ஆழ்வீர்' நீர் இங்ஙனே கிடந்து துடிப்பதேன்? எப்படியும் உம் விருப்பம் நிறைவேற்றவே கருதியிருக்கின்றோம்' என்று திருவுள்ளமாக, 'அஃது என்றைக்குச் செய்வதாகத் திருவுள்ளம்? ஒரு நாளிட்டுத் தரலாகாதோ?' என்கின்றார் ஆழ்வார்.

'ஆழ்வீர், எந்நாளே என்று நீர் ஐயுறுகிறது ஏன்? அஃது ஒருதேச விசேடத்திலேயே உள்ளது ஒன்று அன்றோ?' என்று

எம்பெருமான் அருளிச் செய்ய, 'அங்குள்ளாரும் இங்கே வந்தன்றோ அநுபவிக்கின்றது? அப்படியிருக்க எனக்கு மாத்திரம் தேசவிசேடமா?' என்கின்றார். 'அப்படியல்லாமல் வேறு பயன்களைக் கருதுகின்ற தேவர்கள் கூட வேறு பயன் களைக் கருதாதாரைப் போன்று வந்து அடையும்படி நிற்கின்ற இடத்தை நான் இழந்து போவதோ?' என்கின்றார் எனவும் கொள்ளலாம். இமையோர்களை - 'சுவர்க்கலோகத்திலுள்ள தேவர்களைச்' சொன்னதாகக் கொண்டால் தான் இப் பொருள். அப்படியின்றி இதற்கு 'நித்தியசூரிகள்' எனக்கொண் டால் இப்பொருள் பொருந்தாது(6); 'மெய்ந் நான் எய்தி'— 'அடியேனாகிய நான் உண்மையாகவே உன்னை அடைந்து (முன்பாசுரம்) இந்தஞான இலாபம் எனக்கு உண்டாயிற்று என்பது உண்மைதான். அதுபலத்தோடு கூடியல்லது நில்லாது என்பதும் உறுதியே, ஆனால்உன்னுடைய இனிமை நெஞ்சுக்கு பொருளான பின்பு என்னால் தரித்திருக்க முடியாது' என்கின்றார் (7).

'உன்னைச் சேர்தற்கு என் தலையில் ஒரு சாதனமும் இல்லை' என்றீர்: இஃது ஒரு வார்த்தையோ? சாதனத்தைச் செய்தார்க்கு அன்றிப் பலம் உண்டோ?' என்று எம்பெருமான் சொல்ல, 'அவரவர்களுடைய விருப்பங்களைப் பெறுதல், சாதன அநுட்டானத்தாலே என்றிருக்கும் நான்முகன் முதலாயினோர்க்கும் கிட்டினால் பாசுரம் இதுவேயன்றோ? என்கிறார். தாந்தா முடைய ஆகிஞ்சன்யத்தை (கன்ம ஞான பக்திகளாகிற மற்ற உபாயங்களில் தொடர்பற்றிருக்கை) முன் னிடு மத்தனை போக்கி, ஒரு சாதனத்தைச் செய்து பெறலாம் படியோ நீ இருக்கிறது? (8). தாம் விரும்பியவாறே காணப் பெறாமையாலே, 'இப்போதே உன்னைக் காணாவிடில் தரிக்க மாட்டேன்' என்கிறார் (9). தம்முடைய எண்ணம் சடக்கெனச் சித்திக்கைக்காகப் பெரிய பிராட்டியாரைப்

புருஷகாரமாகக் கொண்டு திருவேங்க முடையான் திருவடி களில் இங்ஙனம் சரணம் அடைகின்றார்.

'அகல கில்லேன் இறையும்' என்று
அலர்மேல் மங்கை உறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகம்மூன்
றுடையாய்! என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகல்ஒன் றில்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே (10)'

[இறையும் - கணமும்; நிகர் - ஒப்பு; அமரர் - தேவர் கள்; புகல் ஒன்று இல்லா - வேறு வழி ஒன்றும் அற்ற]

7. இந்தப்பாசுரத்தைக்கொண்டுத்வயமந்திரத்தின் ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் பிரபத்யே! என்ற முதல் வாக்கியத்தை விளக்குவர். 'அலர்மேல் மங்கை' என்கையாலே 'ஸ்ரீ' என்ற சொல்லின் பொருளும், 'அகலகில்லேன்' என்கையாலே 'மத்' என்ற சொல்லின் பொருளும், 'உறை மார்பா' என் கையாலே நித்தியயோகமும் (சேர்க்கை), 'நிகரில் புகழாய்' என்றது முதல் 'திருவேங்கடத்தானே' என்பதுவரை 'நாராயண' என்ற சொல்லின் பொருளும், 'புகல் ஒன்று இல்லா அடியேன்' என் கையாலே உத்தமன் (உத்தமன்—தன்மையிடம்) போதருகின்ற அதிகாரியும், 'உன் அடிக்கீழ்' என் கையாலே 'சரணௌ' என்ற சொல்லின் பொருளும், 'அமர்ந்து புகுந்தேனே' என்கையாலே 'பிரபத்யே' என்ற சொல்லின் பொருளும் கூறியுள்ளதைத் தெரிவித்தபடி. 'சரணம்' என்ற சொல்லின் பொருளைத் தெரிவிக்கும் பதம் திருப்பாசுரத்தில் இல்லையே எனின், 'புகுந்தேன்' என்றதனால் 'சரணம்' என்ற சொல் கோல் விழுக்காட்டாலே வருவது ஒன்றாதலின் தனியே கூறிற்றிலர் என்க.

பிராட்டியின் புருஷகார பலத்தாலே தலையெடுக்கும் ஆறு குணங்களுள் (முமுட்சுப்படி—136) நான்கைச் சொல்லுகிறது இப்பாசுரம். 'நிகரில் புகழாய்' என்பதனால் 'வாத்சல் யத்தை'யும், 'உலகம் மூன்றுடையாய்' என்பதனால் 'சுவாமித்வத்தை'யும், 'என்னை ஆள்வானே' என்பதனால் 'சௌசில்யத்தை'யும், 'திருவேங்கடத்தானே' என்பதனால் 'சௌலப்பியத்தை'யும் தெரிவிக்கின்றார் ஆழ்வார். (முமுட்சுப்படி—137)[8].

**2. துவரை**[9] : **'மாசறு சோதி'** (5.3) என்று தொடங்கும் மடலூர்தல் துறையிலமைந்த பதிகம் ஒன்றில்

8. இந்தப் பாசுரத்தின் விரிவான பொருளை ஈட்டின்-தமிழாக்கம்-ஆறாம் தொகுதி பக்கம் 489-527 கண்டு தெளிக.
9. **துவரை** : துவாரகை என்பது முத்திதரும் நகரங்கள் ஏழினுள் ஒன்று. இது மேற்கிந்திய இருப்பூர்தி வழியில் ஜாம்நகருக்கும் ஒக்க விற்கும் இடையிலுள்ள ஓர் இருப்பூர்தி நிலையம் (குஜராத் மாநிலம்), ஒக்காவிலிருந்து 18 கல் தொலைவிலுள்ளது. நிலையத்தில் டோங்கா என்ற குதிரை வண்டி கிடைக்கும். அதன்மூலம் நகருக்குச் செல்லலாம், இங்குத் தங்குவதற்கு இராமாநுசக் கூடம் உண்டு. கிருட்டிணன் கோயில் கோமுகிநதி கடலொடு கலக்குமிடத்தில் உள்ளது. இந்த இடத்தில் நீராடுதலுக்கு ஒரு சிறிய கட்டணம் செலுத்துதல் வேண்டும். நீராடி ஈர ஆடையுடன் கண்ணனைச் சேவிப்பது வழக்கமாக இருந்து வருகின்றது. கண்ணனை மிக அருகில் நின்று சேவிப்பதற்கும் ஒரு கட்டணம் உண்டு. இந்த மூர்த்தி நின்ற திருக்கோலத்தில் உள்ளது. குசேலர் வரலாற்றுத் தொடர்புடையது இத்திருத்தலம். கண்ணன் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த துவாரகை கடலில் மூழ்கிவிட்டது. துவாரகை என்பது அகன்ற துவாரத்தையுடையது என்று பொருள்படும்.(இந்த ஊரைப் பார்க்க 1978-மே-யில் முயன்றபோது,பம்பாய் வரை சென்றுதிரும்பினேன். ஆமதாபாத்திற்குப் பயணச்சீட்டுகிடைக்கவில்லை),

எம்பெருமானை மங்களா சாசனம் செய்கின்றார். இத் திருவாய்மொழி ஆழ்வார், நாயகி சமாதியில் நின்று பேசுவதாகும். ஆழ்வார்நாயகி தம்முடைய ஆசையின் மிகுதியைக் காட்டுவதே இத்திருவாய்மொழி.

மடலெடுக்கையென்று தமிழில் (அகஇலக்கியத்தில்) ஒரு முறைமை உண்டு. நாயகன் வேட்டையாடப் புறப்படுகின்றான். தலைவியும் தோழியும் பூக்கொய்து விளையாடப் புறப்படுகின்றனர். யாதோ ஒரு காரணத்தால் தோழி தலைவியை விட்டுப் பிரிய நேரிடுகின்றது. அவ்வமயம் தலைவன் அங்கு வந்து சேர்கின்றான். ஊழ்வலியால் கண்கள் சந்திக்கக் 'கண்கலவி' ஏற்படுகின்றது. பிறகு அந்த ஊழே பிரியவும் காரணமாகின்றது. அந்தப் பிரிவைக் பொறுக்கமாட்டாத தலைவி அவனோடு கூடுவதற்காகச் செய்யும் முயற்சிதான் மடலூர்தல் எனப்படுவது.

தலைவனை ஒரு படத்தில் எழுதி வைத்த கண் வாங்காமல் அவனைப் பார்த்துக் கொண்டு மலர்கள், சந்தனம் முதலிய போகப் பொருள்களையும் உதறித் தள்ளி ஊணும், உறக்கமும் உடம்புகுளித்தலும் இன்றிப் பனை மடலைக் கையில் ஏந்திக் கொண்டு[10] அதனால் உடம்பை மோதிக் கொண்டு தலைவிரிகோலமாக 'இன்ன படுபாவி என்னைக் காக்கமாட்டாதே கைவிட்டான். அவன் கண்ணற்றவன்; அவனிலும் விஞ்சிய கொடியன் இல்லை' என்று தெருவேறக் கதறிக் கொண்டே கேட்போரெல்லாரும் நடுங்கும்படியாக இரங்கும்படியும் திரிந்து உழல்வதுதான் மடலூர்தல் ஆகும்.

இங்ஙனம் மடலூர்தலின் பயன்தான் யாது? இதனைக் கண்டு அரசன், ஊர்ப் பெருமக்கள் இவளது ஆர்த்தியைக்

10. சங்க இலக்கியங்கள் பனைமடலால் செய்யப் பெற்ற குதிரையில் ஊருவதாகப் பேசும்.

கண்டு பொறுக்க மாட்டாத கருணையினால் இருவரையும் கூட்டிவைப்பர். உறவுமுறையினர் யாராவது கூட்டி வைப்பர்; தோழிமாராவது கூட்டி வைப்பர். நாயகனே பழிக்கு அஞ்சி கூடினும் கூடுவன். ஆழ்வார் இப்படி எம்பெருமானைப் பழித்துக் கொண்டு தெருவில் வருகின்றாரா எனில்: இல்லை. மடலூர்வதாகச் சொல்லி அச்சமுறுத்தின மாத்திரமேயன்றி அதனை முற்ற முடிய நடத்தினபாடில்லை. 'உலகுதோறும் அலர்தூற்றி, ஆம் கோலணைகள் செய்து குதிரியாய் மடலூர்துமே'(9), 'யாம் மடமின்றித் தெருவுதோறு அயல் தையலார் நா மடங்காப்பழி தூற்றி நாடும் இரைக்கவே'(10), 'யாம் மடலூர்ந்தும் மதம் ஆழியங்கைப் பிரானுடை தூமல் தண்ணந் துழாய் மலர் கொண்டு சூடுவோம்'(10) என்றும் உள்ள பாசுரங்களால் இஃது அறியப்படும்.

இந்தக் கருத்தின் அடிப்படையில்தான் ஒரு பாசுரம் 'துவராபதி மன்னன்' மீது எழுகின்றது.

அன்னையென் செய்யில்என்? ஊரென்
சொல்லில்என்? தோழிமீர்
என்னை யினியுமக் காசை
யில்லை; அகப்பட்டேன்
முன்னை அமரர் முதல்வன்
வண்துவ ராபதி
மன்னன் மணிவண் ணன்வாசு
தேவன் வலையுளே(6)

[என்னை - என்திறத்தில்; துவராபதி மன்னன் - கண்ணன்; வலையுள் - விலையினுள்ளே அகப்பட்டேன் - சிக்கிக் கொண்டேன்]

என்பது பாசுரம். 'நீ இங்ஙனே துணிவு கொண்டால் அன்னை சீவிக்கமாட்டாள்; அதனாலே ஊரார் பழிப்பும் மிகும்' என்று தோழி சொல்ல, 'கண்ணபிரானுடைய

குணசேஷ்டிதங்களிலே நான் அகப்பட்டேன். இனி யார் என் செய்தாலென்ன?' என்கின்றாள். இங்கே ஈட்டு ஸ்ரீசூக்தி: "ஆழ்வார் திருவரங்கப் பெருமானரையர் (எம்பெருமானை) வலையாக அபிநயித்துப் பாடாநிற்க, திருக்கண்களைக் காட்டியருளினார் எம்பெருமானார். 'கார்த்தண் கமலக் கண்ணென்னும் நெடுங்கயிறு' என்னக் கடவதிறே. அநுகூலம் போலேயிருந்து தப்பாதபடி அகப் படுத்திக் கொள்ளும் நோக்கிலே அகப்பட்டேன்.

3. வடமதுரை [11]: ஒரு திருவாய்மொழிப் பாசுரத்தில் (8.5 : 9) 'உத்தர் மதுரைப் பிறந்த மாயன்' என்கின்றார்.

11. வடமதுரை : தில்லி போகும் இருப்பூர்தி வழியில் உள்ள நிலையம். நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவிலுள்ளது. முத்தி தரும் நகரங்கள் ஏழினுள் இதுவும் ஒன்று. கண்ணுக்கு மதுரமா யிருத்தலாலும் மது என்ற அசுரனை அழித்த இடமாதலாலும் இதற்கு 'மதுரை' என்ற பெயர் ஏற்பட்டதாகக் கூறுவர். யமுனை நதியின் கரை யில் உள்ளது. இதன் கரையில் திருத்தலப் பயணிகள் நீராடுவதற்கேற்ற நல்ல படித்துறை யொன்று அமைக்கப் பெற்றுள்ளது. கண்ணனைப் பற்றிய பழங்கால இடங்கள் யாவும் முகம்மதியர்களின் படையெடுப்பின் பொழுது அழிக்கப் பெற்றன. ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த திருக்கோயில் கள் இன்று ஒன்றுகூட இல்லை. பிற்காலத்தில் எழுந்த கட்டடங்களும் பாழடைந்து கிடக்கின்றன. கண்ணனுக்குரிய கேசவமந்திர் என்ற திருக்கோயில் இன்று இல்லை. அந்த இடத்தில் ஒரு பெரிய மசூதி உள்ளது. இன்று இந்த மசூதியைச் சுற்றி மூன்று பக்கங்களிலும் ஒரு பெரிய கட்டடம் பல கோடி ருபாயில் எழும்பியுள்ளது. இங்குக் கண்ணனுக்குத் தனிக்கோயில் உள்ளது. பளிங்குக் கற்களாலானது. இக்கோயிலிலுள்ள கண்ணனின் சிலை கண்டோரை ஈர்க்கும் பாங்கில் உள்ளது. இத்திருக்கோயிலுக்கருகில் வாசுதேவர் - தேவகிக் குக் கம்சன் அமைத்த சிறையின் நினைவாக ஒரு

'கொண்ட பெண்டிர்' (9.1) என்ற ஒரு திருவாய்மொழி முழுதும் 'வடமதுரைப்' பற்றிய மங்களா சாசனமாக அமை கின்றது. 'நெடுமாற்கடிமை' (8.10) என்ற திருவாய்மொழி யில் பாகவதர்களின் பெருமையை வெளியிட்டார். இங்கு (9.1) பகவானுடைய பெருமையை வெளியிடுகின்றார். பாகவதர்களே எல்லா உறவும் என்றது கீழ்த் திருவாய் மொழி; பகவானே எல்லா உறவும் என்கின்றது இத்திருவாய் மொழி. இவை ஒன்றோடொன்று முரண் பட்டவை அன்று. பகவத் பக்தியின் எல்லை நிலமாக பாகவத பக்தியையும், பாகவத பக்தியின் எல்லை நிலமாக பகவத் பக்தியும் கொள்ளத் தக்கது. ஒன்றில் வைக்கும் பக்தி பிறிதொன்றி லும் பெருகி வளரும். இத்திருவாய்மொழியில் பலபாசுரங் களில் 'வடமதுரையில் பிறந்த' என்று வருவதால் இது வடமதுரையை மங்களா சாசனம் செய்கிற திருவாய்மொழி யாகக் கொள்ளலாம். இனி, பாசுரங்களின் பொருளில் ஆழங்கால் படுவோம்.

'ஒரு காரணம் பற்றி வந்த மனைவி, புத்திரர்கள் முதலானவர்களால் ஒரு பயனும் இல்லை; இயல்பாகவே பந்துவாய் இருக்கின்ற சர்வேசுவரனே ஆபத்துக்குத் துணை வன்; அவனையே பற்றி உய்யுங்கள்' என்கின்றார் முதல் பாசுரத்தில்.

> **கொண்ட பெண்டிர் மக்கள்**
> **உற்றார் சுற்றத் தவர்பிறரும்**
> **கண்ட தோடு பட்ட**
> **தல்லால் காதல்மற் றியாதுமில்லை**

சிறைக் கூடமும் நல்ல முறையில் சலவைக் கல்லால் அமைக்கப் பெற்றுள்ளது. மதுரை நகரினுள் துவாரகை நாதர் கோயில், மதுரைநாதர் கோயில் என்ற திருக்கோயில்கள் உள்ளன. துவாரகை நாதர் கோயில் செல்வச் செழிப்பில் திருமலைக் கோயிலை நிகர்த்தது.

எண்டி சையும் கீழும்
 மேலும் முற்றவும் உண்டபிரான்
தொண்ட ரோமாய் உய்ய
 லல்லால் இல்லைகண் டீர்துணையே(1)

[கொண்ட பெண்டிர் - மனைவி, கண்டதோடு - கையில் காசு, கண்டபோது; பட்டது - நேசித்தது; காதல் - அன்பு; தொண்டர் - அடியார்]

ஒரு காரணத்தினால் வந்த உறவினர்களை 'ஔபாதிக பந்துக்கள்' என்றும், காரணமின்றி வரும் எம்பெருமான் 'நிருபாதிக பந்து' என்றும் சொல்லப் பெறுவர். முன்னவர் கையில் காசு; கண்டபோது மட்டிலும் அன்பு காட்டுவர். ஆகவே இவர்களை விட்டொழித்து நிருபாதிக பந்துவான எம்பெருமானைப் பற்றி உய்வதே உற்றதாகும்.

துணையும் சார்வும் ஆகு
 வார்போல் சுற்றத் தவர்பிறரும்
அணைய வந்த ஆக்க
 முண்டேல் அட்டைகள் போல்சுவைப்பர்
கணையொன் றாலே ஏழ்மரமும்
 எய்த எங்கார் முகிலை
புணையொன் றுய்யப் போகல்
 அல்லால் இல்லைகண் டீர்பொருளே(2)

[சுற்றத்தவர் - தாயாதிகள்; அணைய வந்த - கைக்கு எட்டின; கணை - அம்பு; கார்முகில் - கரிய மேக நிறத்தவனான எம் பெருமான்]

இதில் 'உபகாரரைப் போலே இருந்து தம்தம் காரியங் களையே தலைக்கட்ட நினைக்கும் நம்பத்தகாதவர்களை ஒழிய, காரணம் இல்லாமலே இயல்பாகவே நம்பிக்கையை விளைவிக்குபவனாய் ஆபத்துக்குத் துணைவன் ஆனவனைப் பற்றுவது அன்றிப் பயன் இல்லை' என்கின்றார்.

கையிலே பொருள் இருப்பதைக் கண்டால் பந்துக் களாய்க் கொண்டாடுவார்கள்; ஆபத்து வந்த காலத்தில் ஏன் என்று கூடப் பார்க்க மாட்டார்கள்; ஆகவே, காரணம் இல்லாமலே ஆபத்துக்குத் துணைவனாக இருக்கின்ற கண்ணனுடைய திருவருளுக்குப் பாத்திரமாகுங்கள்; அவனையொழியக் காப்பவர் ஒருவரும் இலர்(3); சிலரை ஆபத்திற்குத் துணையாவர் என்று செல்வம் முதலியவற்றைக் கொடுத்துப் பலநாள் அடைந்தாலும், ஆபத்து வரும் பொழுது கண்ணற்றுப் பராமுகம் செய்வார்கள்; ஆதலால் ஒருவித காரணமும் இல்லாமல் இந்த லீலா விபூதியில் வந்து அவதரித்து ஆபத்திற்குத் துணையானவனே வந்து பற்றத் தக்கவன்'(4); தங்களைப் பெறாவிடில் தரிக்கமாட்டாதபடி நட்பை உடையவர்களான பெண்களாலே, ஆபத்து வந்த காலத்தில் இகழப்படுவர். ஆகவே ஒரே தன்மையான நட்பையுடைய இறைவனைப் பற்றுவது ஒழியச் சுகம் வேறு இல்லை(5); எல்லை இல்லாத பேரின்பமான பேற்றினை உணராமல் முன்புள்ளார் பலர் முடிந்து போயினர். ஆதலால் அப்படியே நீங்களும் அழிந்து போகாமல், அடியார்கட்காக அவதரித்துப் பாதுகாக்கும் அக் கண்ணனையே பற்றி உய்யுங்கள்; இதையன்றி ஆன்மாவுக்கு நன்மை இல்லை(6); பகவானைப் பற்றுதல் மிகமிக எளியது; இனிமை வாய்ந்தது. சித்தோபாயம் சொல்லுகின்ற இப்பாசுரத்தில் 'சிற்ற வேண்டா' என்பதே உயிரானது; சிற்றுதல் - சிதறுதலாய்ப் பரக்கவொரு வியாபாரம் பண்ணவேண்டாம் என்பது சரம சுலோக சித்தம்(7)

அந்தரத்திற்குக் காரணத்தைச் சொல்லி, பாதுகாப்பவனான அவனையே பற்றுவதைத் தவிர, வேறு சீரியதாம் உள்ள ஒரு பற்றுக்கோடு இல்லை(8)

யாது மில்லை மிக்கதனில்
　　என்றென் றது கருதி
காது செய்வான கூதைசெய்து
　　கடைமுறை வாழ்க்கை யும்போம்
மாது கிலின்கொ டிக்கொள்
　　மாட வடமதுரைப் பிறந்த
தாது சேர்கோன் கண்ணன்
　　அல்லால் இல்லைகண் டீர்சரணே(9)

[அதனில் மிக்கு-அதனைக் காட்டிலும்; காது செய்தல்-காது பெருக்குதல்; கூதை-மூளி; தாதுசேர்-மாலை யணிந்த]

இதில், 'கண்ணனைத் தவிர வேறு ஒன்றினை இரட்சகம் என்று பற்றினவர்கள் பண்டு நின்ற நிலையும் கெட்டழிவார்கள்; ஆகவே, இவனன்றி வேறு சரணம் இல்லை' என்கின்றார்

கண்ணன் அல்லால் இல்லை
　　கண்டீர்சரண்; அதுநிற்க, வந்து
மண்ணின் பாரம் நீக்கு
　　தற்கே வடமது ரைப்பிறந்தான்
திண்ண மாநும் உடைமை
　　உண்டேல் அவனடி சேர்த்துய்ம்மினோ
எண்ண வேண்டா; நும்ம
　　தாதும் அவனன்றி மற்றில்லையே(10)

[மண்ணின்பாரம் - பூபாரம்; நும் - உங்களுடைய; திண்ணமா - திடமாக; அடிசேர்த்து - திருவடிகளில் சமர்ப்பித்து; நும்மது - உங்களுடையது; ஆதும் - எப்பொருளும்]

இதில், 'தானே புகலிடம் என்னும் உண்மையை நிலை நிறுத்துவதற்காக அவதரித்த கண்ணன் திருவடிகளைப்

பற்றுங்கள்' என்கின்றார். இந்தத் திருவாய் மொழி முழுதும் உளங்கரைந்து ஓதுதல் வேண்டும்; பகவதநுபவம் பெறுதல் வேண்டும். இவை 'தீது இலாத ஒண்தமிழ்கள்'

4. திருப்பாற்கடல்[12]: இத்திருத் தலத்தைப்பற்றித் திருவாய்மொழியில் 13 பாசுரங்களும், திருவிருத்தத்தில் ஒரு பாசுரமும், பெரிய திருவந்தாதியில் இரண்டு பாசுரங்களும் உள்ளன. இந்த எம்பெருமானைப்பற்றி நம்மாழ்வார் கூறுவது:

பாலாழி நீகிடக்கும்
பண்பையாம் கேட்டேயும்
காலாழும் நெஞ்சழியும்
கண்சுழலும்—நீலாழிச்
சோதியாய்! ஆதியாய்!
தொல்வினைஎம் பால்கடியும்
நீதியாய்! நிற்சார்ந்து
நின்று. —பெரி. திருவந் 34.

[பால்ஆழி - திருப்பாற்கடல்; ஆழும் - தடுமாறும்; நீலாழி - நீலக்கடல்; சோதி - நிறம்; சார்ந்து நின்று - அணுகி].

12. திருப்பாற்கடல்: இத்திருத்தலம் வடதுருவத்திற்கு அப்பால் உள்ளதாகச் சொல்லப் பெறுகின்றது. மனிதர்கட்கு எட்டாத இடம் இது. வடகடலைச் சேவித்தே மன நிறைவு பெறவேண்டியதுதான். சூக்கும உடலைக் கொண்டவர்கள்தாம் இந்த இடத்திற்குச் சென்று அடைதல் முடியும்; தேவர் கள், பண்டைய முனிவர்கள். யோகியர் இவர் களைப் போன்ற பிறர் இந்த இடத்திற்குச் செல் லுதல் கூடும். நான்முகன் மூலம் இவர்களின் குறை களைக் கேட்டு அவற்றைத் தீர்ப்பதற்காகவே பரமபத நாதன் வியூக நிலையில் இங்கு எழுந்தருளி யுள்ளான். அடியார்கள் பொருட்டு அவதாரங்கள் எடுக்கும் இடமும் இதுதான். இந்தப் பாற்கடலைக்

இவ்வாறு திருப்பாற்கடல் நாதனை அநுபவிக்கின்றார் நம்மாழ்வார்: "நின்னை அடியேன் நேரில் கண்டதில்லை; நீ திருப்பாற்கடலில் கிடந்திருக்கும் திருக்கோலத்தைச் சாத்திரம் அறிந்த பெரியோர்களின் வாயிலாகக் கேட்ட அளவிலேயே 'இப்படியும் ஓர் அழகு உண்டோ?' என்று ஈறிபட்டுக் கால், நடை தளராமல் ஆழ்ந்து போகின்றது; நெஞ்சு நீர்ப்பண்டமாகக் கரைந்து அழிந்து போகின்றது. கண்கள் ஒரு பொருளையும் பார்த்து அறியாதபடி சுழலத் தொடங்குகின்றன" என்று கூறுகின்றார். இந்தப் பாசுரத்தால் எம்பெருமான் சயனத்திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார் என்பது தெரிகின்றது. எம்பெருமானின் திருநாமம் திருப்பாற்கடல் நாதன் (க்ஷீராப்திநாதன்) தெற்கு நோக்கிய திருமுக மண்டலம் கொண்டு புயங்க சயனத்தில் (பாம்பணை மேலான்) காட்சி தருகின்றார். தாயார், கடல் மகள் நாச்சியார். இந்த எம்பெருமானை மானசிகமாகத்தான் சேவிக்க வேண்டும்.

திருப்பாற்கடல் நாதனைப் பற்றிச் சாத்திரம் என்ன கூறுகின்றது? இவன் வியூக நிலை எம்பெருமான்.[13] வியூகமாவது, லீலாவிபூதியில் (இவ்வுலகில்) அதன் படைப்பு, காப்பு, அழிப்பு இவற்றை நடத்துவதற்காகவும், சமுசாரி கட்கு வேண்டியவற்றை ஈந்து, வேண்டாதவற்றைப் போக்கி அவர்களைக் காத்தற் பொருட்டும், தன்னை இடையறாது நினைப்பவர்கட்கு (உபாசிப்பவர்கட்கு) அவர்தம் தளைகளை

கடைந்துதான் அமுதம் பெற்றுத் தேவர்கட்கு வழங்கினான் எம்பெருமான். பெரிய பிராட்டியார் பிறந்த இடம் இதுதான். அவரை இறைவன் ஏற்றான்.

13. இறைவன் இருக்கும் இருப்பைப் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை என்று ஐந்து வகையோடு இருப்பதாக வைணவ நூல்கள் பேசும்.

போக்கித் தன்னை வந்து அடைந்தவர்கட்குக் காரணமான பேரருளைச் சுரப்பதற்காகவும், வாசுதேவன் சங்கர்ஷணன் பிரத்யும்னன் அநிருத்தன் என்ற பெயர்களுடன் இருக்கும் நிலையாகும். இவற்றுள் வாசுதேவ ரூபமான பரத்துவத்தில் ஞானம் சக்தி பலம் ஐசுவரியம் வீரியம் தேஜஸ் என்ற ஆறு குணங்களும் நிறைந்திருக்கும். ஏனையவை மூன்றில் அவரவர் மேற்கொண்ட செயலுக்குத் தக்கவாறு ஒவ்வோர் இரண்டிலும் இரண்டிரண்டு குணங்கள் விளக்கமாக இருக்கும். சங்கர்ஷரானவர் ஞானம் பலம் என்ற இரண்டு குணங்களையுடையவர்; இவர் பிரகிருதிக்குள் உருமாய்ந்து கிடக்கும் உயிர்த் தத்துவத்திற்குத் தலைவராக நின்று அதனைப் பிரகிருதியினின்றும் வேறாக்கிப் பிரத்தியும்ன நிலையையும் அடைந்து வேதம் முதலிய சாத்திரங்களை வெளியிடுவதையும் உலக அழிப்பையும் செய்பவனாக இருப்பார். பிரத்தியும்நரானவார் ஐசுவரியம் வீரியம் என்ற குணங்களோடு கூடி ஞானத்திற்கு ஊற்றுவாயான மனம் என்ற தத்துவத்திற்குத் தலைவராக நின்று சாத்திர முறைப்படி ஒழுகவேண்டிய தர்மோபதேசத்தையும், சுத்த வர்க்க சிருஷ்டியையும் செய்யவேண்டியவராக இருப்பார். அநிருத்தரானவர் சக்தி, தேஜஸ் என்ற இருகுணங்களோடும் கூடி உலகப் பாதுகாப்பிற்கும் உயிர்கள் ஈடேறுவதற்குத் தகுதியான தத்துவ ஞானங்களைக் கொடுத்தற்கும், காலப் படைப்பிற்கும் மிச்ரவர்க்க சிருஷ்டிக்கும் உடையவராக இருப்பார்.

இந்த நான்கு வியூகங்களும் ஒவ்வொன்றும் மும் மூன்றாகப் பன்னிரண்டு கிளை வியூகங்களாகப் பிரியும். வாசுதேவர் கேசவன், நாராயணன், மாதவன் என்ற மூன்றாகவும்; சங்கர்ஷணர் கோவிந்தன், விஷ்ணு, மதுசூதன னாகவும்; பிரத்தியும்நர் திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரனாகவும்; அநிருத்தர் இருடிகேசன்,

பதுமநாபன், தாமோதரனாகவும் பிரிவர். இவர்கள் பன்னிரண்டு ஆதித்தர்களாக நின்று பன்னிரண்டு திங்கள்களின் தலைவர்களாகப் பன்னிரண்டு திசைகளில் வீற்றிருப்பர். இவர்களின் அறிகுறியாகத்தான் வைணவர்கள் தமது திருமேனியில் திருமண் காப்பினை (புண்டரத்தை) இட்டுக் கொள்வர். இவர்கள் மரணமாகும் வரையிலும் திருமேனியைக் காப்பர் என்பது வைணவர்களின் நம்பிக்கை. திருவாய்மொழியிலுள்ள பன்னிரு திருநாமப் பாட்டும் (திருவாய் 2.7) தேசிகப் பிரபந்தத்திலுள்ள 'பன்னிரு நாமம்' (தே.பி. 280-292) என்ற சிறு பிரபந்தமும் இந்தப் பன்னிரு எம்பெருமான்களைப் பற்றியவை. திருமண் தரித்துக் கொள்ளும்போது இந்தப் பாசுரங்களை அநுசந்திப்பது வழக்கம். இதனால் இறைவன் திருவடிப் பேறு கிட்டும் என்பது வைணவர்களின் நம்பிக்கை.

அறிவியல் கருத்துப்படி திருப்பாற்கடலைப் பாலோடை (Milky way) எனப்படும் விண்மீன்களின் கூட்டத்தைத் தான் பண்டையோர் பாற்கடல் என வழங்கியதாகக் கருதலாம். இப்பாற்கடலின் தனிச்சிறப்பு இன்றும் அறிவியலறிஞர்களிடையே ஒரு புதிராகவே உள்ளது. பேரண்டத்தில் வேறெங்கும் நடைபெறாத ஒரு திருக்கூத்து இங்கு நடைபெற்று வருவதாகக் கருதுகின்றனர் அவர்கள். மற்ற இடங்களிலெல்லாம் ஒரு பொருள் உருமாறி வேறொரு பொருளாகுமேயொழிய சூனியத்திலிருந்து ஒரு பொருள் உண்டாவதில்லை. ஆனால் பாலோடை மாத்திரம் இதற்கு விதிவிலக்காகும் என்பது அறிஞர்களின் கருத்தாகும். வெறும் பாழிலிருந்து அதாவது இன்மையிலிருந்து நீரிய அணுக்கள் (Hydrogen atoms) பாலோடையில் எப்படியோ படைக்கப் பெறுகின்றன. இது விளங்காப் புதிராக இருப்பதாகவே அவர்கள் கருதுகின்றனர். இந்த இடத்திலேயே பதுமநாபன் கொப்பூழில் நான்முகன் தோன்றி உலகத்தையும் பிறவற்றையும் படைத்தான் என்பது கொள்கை.

நம்மாழ்வாரின் முதற்பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் ஒரு பாசுரம்:

**வேதனை வெண்புரி நூலனை**
**விண்ணோர் பரவநின்ற**
**நாதனை ஞாலம் விழுங்கும்**
**அநாதனை ஞாலம்தத்தும்**
**பாதனைப் பாற்கடல் பாம்பணை**
**மேல்பள்ளி கொண்டருளும்**
**சீதனை யேதொழுவார் விண்ணு**
**ளாரினும் சீரியரே (79)**

[வேதனை - வேதத்தில் வல்லவன்; அநாதனை - ஒரு தலைவனை; ஞாலம் - உலகம்; தத்தும் - அளந்த; அணை - படுக்கை]

இது நாயகனைப் பிரியாத பேறு பெற்ற மகளிரின் சிறப்பைக் கூறித் தலைவி இரங்கும் பாசுரம். இதில் திருப்பாற்கடலில் பாம்பணையின்மீது அறிதுயில் கொள்ளும் எம்பெருமானை இடைவிடாது வணங்கி அநுபவிப்பவர் எவரோ அவர் பரமபதத்தில் வாழும் நித்திய முத்தர்களைக் காட்டிலும் சிறப்புடையராவர் என்கின்றார் ஆழ்வார்.

நாயகனுடைய பிரிவிலே தனித்து மிகவும் வருந்துகின்ற நாயகி, தன்னையாற்றுவிக்கின்ற தோழியை நோக்கி, 'நாயகனைப் பிரியாமல் அவனுடன் என்றும் கூடி வாழ்கின்றவர் முத்தியுலகில் பேரின்பம் நுகர்வாரினும் சிறப்புடையவராவர்' என்று கூறிய இதனால், 'அப்படிப் பட்ட பேற்றை யான் பெற்றிலேனே' என்று தன் ஆற்றாமை மிகுதியை வெளியிடுகின்றாள். பெரிய பிராட்டியாரும் பூமிப் பிராட்டியாரும் ஒருகாலும்விட்டுப் பிரியாது திருவடி வருடிக் கூடிக் குலவி இன்புற அவர்களுடன் அறிதுயில் அமரும் தன்மையை 'பாற்கடலில் பாம்பணைமேல் பள்ளி

கொண்டருளும் சீதனை' என்றதனால் குறிப்பிட்டு அப்படிப் பட்ட இடையீட்டில்லாப் போகம் தமக்குக் கிடைக்கா மையைப்பற்றிப் பொறாமையும் வருத்தமும் கொள்ளு கின்றாள் பராங்குச நாயகி.

இடைவிடாது பகவநுபவம் செய்வதற்கென்றே வாய்த்த இடம் பரமபதம். இதற்கு எவ்விதமான இடையூறும் அங்கில்லை. அங்கிருந்து கொண்டு பகவானை அநுபவித்தல் வியப்பன்று; 'உண்டியே உடையே உகந்தோடும் இம்மண்டலம்' (பெரு. திரு. 4)[14] பகவநுபவத் திற்கு நேர்விரோதியாதலால் அப்படிப்பட்ட இந்த இருள்தரு மாஞாலத்திலிருந்து கொண்டே அங்ஙனம் நித்தியாநுபவம் செய்தலில் மிக அருமையுண்டாதலால் அவ்வருமையைப் போக்கி எம்பெருமானை இடைவிடாது அநுபவிக்குமவர் களை நித்திய முக்தர்களினும் மேம்பட்டவராகக் கூறத் தடையுண்டோ? ஒரு சிறந்த காரியத்தைப் பிரதிபந்தகம் இல்லாத இடத்தில் தலைக்கட்டுதற் காட்டிலும் பிரதிபந்தகம் மலிந்த விடத்தே தலைகட்டுதல் வியக்கத்தக்க தன்றோ? எம்பெருமான் பக்கம் ஈடுபாடு கொண்ட ஆழ்வார் (நாயகி) மற்றொன்றில் சிந்தை செலுத்தாது அப்பெருமானையே மனம் மொழிமெய்களால் பூர்ணாநுபவம் செய்யப்பெற்றவர் இவ்வுலகத்திலிருந்து கொண்டே நித்திய சூரிகளிலும்

14. இன்றைய சூழ்நிலையில்—அதாவது ஆபாசப் படக்காட்சிகள், ஆபாச நாவல்கள், சிறுகதைகள், ஆபாச விளம்பரங்கள், ஆபாசச் சுவரொட்டிகள்—போன்றவற்றைப் பார்த்துக் கொண்டும் படித்துக் கொண்டும் கல்லூரியில் பயின்றுவரும் முன்—குமர, குமரப்பருவ இளைஞர்கள் இவற்றையெல்லாம் இயன்றவரை ஒருவாறு புறக்கணித்துத் தம் கல்வி யில் மிக்க ஊக்கம் செலுத்திச் சிறப்பாகத் தேர்ச்சி பெறுவதை ஒப்பிடுக. இத்தகைய மாணவர்கள் இவ்வுலகில் இடைவிடாது பகவதநுபவம் பெறுபவர் களுடன் எல்லாவகையிலும் ஒப்பாவர் என்பதை நினைவு கூர்க.

மேம்பட்டவராவர் என்று அருளிச் செய்கின்றார். அப்படிப் பட்ட அநுபவம் தமக்குக் கிடைக்கவில்லையே என்று வருந்துகின்றமையும் இதில் தோன்றும் (இது ஒரு வகையில் நைச்சியாநுசந்தானம்).

திருவாய்மொழியில் நம்மாழ்வார் திருப்பாற்கடல் நாதனைப் பன்னிரு திருநாமப்பாட்டு(2.7)தவிர 'பாம்பணை மேல் பாற்கடலுள் பள்ளி அமர்ந்ததுவும்' (2.5 : 7), 'ஐந்து பைந்தலை ஆடு அரவு அணைமேவிப் பாற்கடல் யோக நித்திரை செய்த எந்தாய்!' (2.6 : 5), 'அரவம் ஏறி அலை கடல் அமரும் துயில்கொண்ட அண்ணலை' (3.6 : 3), 'பாற் கடல் சேர்ந்த பரமனை' (3.7 : 1) 'அலைகடல் பள்ளி அம்மானை' (5 3 :7), கடல் சேர்ப்பாய்' (6.9 : 5), 'பணங்கள் ஆயிரமும் உடைய பைநாகப் பள்ளியாய்' (8. 1 : 8), 'அடையும்...பாற்கடலும்' (8.2 : 8), 'தூநீர்க் கடலுள் துயில்வானே' (8. 5 : 4), 'மொய்த்து ஏய்திரை மோதுதண் பாற்கடலுளான்' (8.7 : 10), 'திருப்பாற்கடலே...ஒருமா நொடியும் பிரியான்' (10. 7 : 8), தொடுகடல் கிடந்த எம் கேசவன்' (10. 9 ; 7) என்றெல்லாம் இனங்காட்டி அவனை அநுபவிப்பர். முத்தாய்ப்பாக,

> ஏக மூர்த்தி இருமூர்த்தி
> மூன்று மூர்த்தி பலமூர்த்தி
> ஆகி ஐந்து பூதமாய்
> இரண்டு சுடராய் அருவாகி
> நாகம் ஏறி நடுக்கடலுள்
> துயின்ற நாரா யணனே (4. 3 : 3)

என்ற பாசுரத்தில் திருப்பாற்கடல் நாதனின் உண்மைச் சொருபத்தைக் காட்டுவர். ஏகமூர்த்தி—படைப்புக்கு முன்பு சூக்கும் சிதசித்விசிட்டனாய் ஒரே மூர்த்தியாக இருக்கும் பரவாசுதேவர். இருமூர்த்தி - படைப்பில் உந்முகனாய் பிரகிருதி, மகான் என்ற இரண்டு தத்வங்களையும் சரீரது

மாகக் கொண்டு நிற்கின்ற பரவாசுதேவர், வியூக வாசுதேவர். மூன்று மூர்த்தி—சாத்விகம், இராசசம், தாமதம் என்று மூன்று வகைப்பட்ட அகங்காரம் என்கின்ற தத்துவத்தைச் சரீரமாகக் கொண்டு நிற்கும் சாங்கர்ஷணர், பிரத்யும்நர், அநிருத்தர். பல மூர்த்தி: 'எந்நின்ற யோனியு மாய்ப் பிறந்தாய்' (திருவிருத். 1) என்ற அநேக விபவாவதார மூர்த்திகள் (அவதாரங்கள்). இன்னும், இந்த ஆழ்வார், வியூக நிலை எம்பெருமானை மிக அழகான உவமையாலும் எடுத்துக் காட்டுவர்.

மாநீர் வெள்ளி மலைதன்மேல்
வண்கார் நீல முகில்போல
தூநீர்க் கடலுள் துயில்வானே (8.5 : 4)

[மாநீர் - ஆழ்ந்த நீர்; வண்கார் - அழகிய கார்காலம்; முகில் - மேகம்; தூநீர்க்கடல் - வெளுத்தபாற்கடல்]

திருப்பாற்கடலில் திருஅனந்தாழ்வான்மீது எம்பெருமான் திருக்கண் வளர்வதானது ஆழ்ந்த நீர்க்குள்ளே அழுந்தின தோடு வெள்ளி மலையின்மீது காளமேகம் படிந்தாற் போன்றுள்ளது என்கிறார்.

5. திருநாடு[15]: இதை 'வைகுந்தம்' என்றும், 'பரம பதம்' என்றும், 'நலம் அந்தம் இல்லதோர் நாடு' என்றும்

15. திருநாடு: நித்திய விபூதி என்றும் வழங்கப் பெறும். இந்த உலகின் ஆனந்தம் ஒப்பற்றதாக இருக்கும் பான்மையது. இங்குத்திவ்விய கற்பகச் சோலைகள். நானாவித மலர்கள் நிறைந்த திவ்விய பூங்காக்கள், திவ்விய இளமரக்காக்கள், திவ்விய செங்குன்றங்கள், நீராடும் திவ்விய தடாகங்கள் முதலியவை நிறைந்து இருக்கும். இங்கு மிகவும் இடமகன்ற நிரதிசய ஆனந்தமயமான திருமாமணி மண்டபம் ஒன்றுண்டு. உபய விபூதிகளிலுள்ளவர் களும் ஒரு மூலையில் அடங்கும்படியான மிகவும்

வழங்குவர் வைணவப்பெருமக்கள். ஆழ்வார்கள் 'பெருநிலம்' 'பெருவிசும்பு', 'உம்பர் உலகு', 'விண்ணகம்', 'நாரணன் உலகு', 'இன்ப வீடு', 'அமரர் உலகம்' 'வானோர் கடிநகர்' என்றெல்லாம் பன்னி உரைப்பர். வைகுந்தநாதன் வீற்றிருக்கும் இடம் திருமாமணி மண்டபம். இவன் வீற்றிருக்கும் சீரிய சிங்காதனம் அற்புதமான கோப்புடையது. பன்னிரண்டு இதழ்களையுடைய நானா சக்தி மயமான திவ்விய பொற்றாமரைப் பூவின்மீது விசித்திரமான கட்டிலைக் கொண்டது. இந்தக் கட்டிலின் மீது பல்லாயிரம் சந்திரர்களை உருக்கி வார்த்தாற்போல் குளிர்ந்த தன்மையையுடைத்தான திருமேனியை உடையனாய் கலியாண குணங்கட்கு அந்தமில்லாமையினால் அனந்தன் என்ற திருநாமமுடையவனாய், எல்லாவித அடிமைத் தொழில் புரிபவர்க்கெல்லாம் உபமான நிலமாயிருத்தலால் சேஷன் என்னும் திருநாமமுடையவனாகிய திருஅனந்தாழ்வானாகிய படுக்கையில் வெள்ளி மலையின் உச்சியில் பல்லாயிரம் பகலவன் உதித்தாற்போல் இருக்கும் ஆயிரம் பணாமுடி மண்டலமாகிய சோதி மண்டலத்தின் நடுவில் வீற்றிருப்பவன். அருள் தேவியான பெரிய பிராட்டியார் இவனது வலப்பக்கத்திலும், பொறைத்தேவியான பூமிப் பிராட்டியாரும், ஆனந்த தேவியான நீளாப் பிராட்டியாரும்

விசாலமானமானது. இங்குள்ள பொருள்கள் யாவும் சுத்த சத்துவத்தாலானவை. இங்குக் காலம் நடையாடாது; காலை-மாலை, பகல்-இரவு, இன்று-நேற்று என்ற நிலைகள் இங்கு இல்லை. முன்-பின் என்ற நிலை உண்டு. வீடுபேறு அடைதற்கேற்ற உபாயங்களைக் கையாண்டு அவன் திருவருளைப் பெற்ற முமுட்சுகள்தாம் இந்த நீள் விசும்பினை அடைதல் முடியும். இவர்கள் இப்பூவுலகிற்குத் திரும்பி வருதல் இல்லை. பிரளய காலத்தில் இவர்கட்கு அழிவு இல்லை. இறைவன் திருவுள்ளப்படி எந்த உருவத்தையும் இவர்கள் மேற்கொள்வர்.

இடப்பக்கத்திலும் இருப்பர். இவனை அநந்தன், கருடன், விஷ்வச்சேனர் முதலான நித்தியசூரிகளும், இவ்வுலகத் தளைகளினின்றும் விடுபட்ட முக்தரும் அநுபவித்தற்கு உரியனாய் இருப்பன்.

இந்த எம்பெருமான் சத்தியம், ஞானம், ஆனந்தம், அனந்தம் இவற்றின் சொரூபமாக இருப்பவன். இடத்தாலும் காலத்தாலும் அளவிடப்பெறாதவன்; எங்கும் நிறைந் திருப்பவன். மூன்றுவித சேதன அசேதன பரிணாம ரூபமான வேறுபாட்டின் குறைகள் (விகார தோஷங்கள்) தட்டாதவன். அறம்பொருள் இன்பம் வீடு என்ற நான்கு வகைப்பட்ட பலன்களையும் உயிர்கட்கு நல்கி அவற்றின் புகலிடமாக இருப்பவன். தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன். ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜஸ் முதலிய மங்கள குணக் கூட்டங்களால் அலங்கரிக்கப் பெற்றவன். அவனிடம் இக்குணங்கள் ஆதல் அழிதல் இன்றி எப்பொழுதும் நிறைந்திருக்கும். இவற்றைத் தவிர வாத்சல்யம், சௌசீல்யம் சௌலப்பியம் முதலிய எண்ணற்ற குணங்களை யும் கொண்டவன். இவ்வுலகைப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றின் காரணபூதன். சிறார் வீடு கட்டி அழிக்குமாப் போலே இவையாவும் இவனுக்குத் தன் இச்சை யாலே உண்டாகும் கேவல விளையாட்டேயாகும். பருவுட லுடன் பரமபதத்தை அடைய முடியாததால் இந்த எம்பெருமானை மானசிகமாகத்தான் சேவிக்கவேண்டும். இவன் தெற்கு நோக்கிய திருமுக மண்டலம்கொண்டு இருந்த திருக்கோலத்தில் சேவைசாதிக்கின்றான். தாயார் பெரிய பிராட்டியார்.

இந்தப் பெருமானை நம்மாழ்வார் 'விண்ணைத் தொழுது அவன் மேவு வைகுந்தன் என்று கைகாட்டும்' (திருவாய் 4.4 : 1), 'சேணுயர் வானத்து இருக்கும் தேவ பிரான்' (5.3 : 9), 'விண்மீது இருப்பாய்' (6.9 : 5),' அடையும்

வைகுந்தமும்' (8.2 : 8) என்று இனங்காட்டி மகிழ்வர். திருவாய்மொழிப் பாசுரமொன்றில் இந்த ஆழ்வார் வைகுந்த நாதனை அநுசந்திக்கின்றார்.

> **தானோர் உருவே தனிவித்தாய்**
> **தன்னின் மூவர் முதலாய**
> **வானோர் பலரும் முனிவரும்**
> **மற்றும் மற்றும் முற்றுமாய்த்**
> **தானோர் பெருநீர் தன்னுள்ளே**
> **தோற்றி அதனுள் கண்வளரும்**
> **வானோர் பெருமான் மாமாயன்**
> **வைகுந் தன்எம் பெருமானே.**
>
> —திருவாய் 1.5 : 4

[தான் - ஒருவனாகி நின்ற தான்; ஓர் உரு - ஓர் உருவ முடையவன்; தனி - தனித்த காரணன்; வித்து - உபாதான காரணம்; மூவர் - பிரமன், சிவன், இந்திரன்; பலர் - சேதனர்; மற்றும் - மானிடசாதி; மற்றும் -விலங்கு பறவை; முற்றும்-எல்லாம்; தான் - சங்கல்பத்துடன் கூடிய தான்; வானோர் - நித்திய சூரிகள்; மாமாயன் - ஆச்சரியமான செயல்களை யும் குணங்களையும் உடையவன்; வைகுந்தன் - பரமபதநாதன்]

இப்பாசுரத்தில் ஆழங்கால் பாடுவோம்.

**தானோர் பெருநீர் தன்னுள்ளே தோற்றி அதனுள் கண் வளரும் வானோர் பெருமான்:** இதில் சமஷ்டி சிருஷ்டியும் (தொகுதியான படைப்பும்), '**தானோர் உருவே தனிவித்தாய் தன்னின் மூவர் முதலாய வானோர் பலரும் முனிவரும் மற்றும் மற்றும் முற்றுமாய்:** இதில் வியஷ்டி சிருஷ்டியும் (வேறு வேறு படைப்புகளும்) பேசப் பெறுகின்றன. சாந்தோக்கிய உபநிடத வாக்கியத்தில் (6.2 : 1) 'சதேவ', 'ஏகமேவ' 'அத்விதீயம்' என்ற மூன்று சொற்றொடர்கள் உள்ளன.

இவை முறையே துணைக் காரணம், முதற் காரணம், நிமித்த காரணம் தவிர வேறு இன்மையைக் காட்டுகின்றன. இந்த மூவகைக் காரணங்களும் எம்பெருமானே என்று கொள்ள வேண்டும். அதுபோலவே, இப்பாசுரத்தில் 'தான், ஓர், தனி' என்னும் மூன்று சொற்கள் (முதல் அடியில்) உள்ளன. இவற்றுள் தான் என்பதனால் முதற்காரணம் (உபாதான காரணம்) இன்மையும், 'ஓர்' என்பதனால் துணைக் காரணம் (சகஹாரி காரணம்) இன்மையும், 'தனி' என்பதனால் நிமித்த காரணம் இன்மையும் பெறப்படு கின்றன. மூன்று காரணமும் இறைவனே என்பது அறுதி யிடப் பெறுகின்றது. இதனை மேலும் விளக்குவோம். சூக்கும சித்து அசித்தோடு கூடியிருக்கின்ற தன்மையால் முதற்காரணமும், சங்கல்பத்தோடு கூடியிருக்கிற தன்மை யால் நிமித்த காரணமும், ஞானம் சக்தி முதலிய குணங் களோடு கூடியிருக்கின்ற தன்மையால் துணைக்காரணமும் ஆக மூன்று காரணங்களும் இறைவனே ஆவான் என்பது தெளிவாகின்றது. கம்பநாடன் இக்கருத்தினையே,

> உற்றொரு தனியே தானே
> தன்கணே உலகம் எல்லாம்
> பெற்றவன்
>
> —கம்ப. யுத்த. வருணனை-63

என்ற பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது ஈண்டு ஒப்புநோக்கி உணரத்தக்கது.

**தன்னில் மூவர்...முற்றுமாய் :** தன்னுடைய சங்கல்பமா கின்ற சொரூபத்திலே மூவராக நின்றவர்கள் பிரமன், சிவன், இந்திரன். இவர்களுடன் தேவர்கள், சனகாதி முனிவர்கள், நிலைத்திணைப் பொருள்கள், இயங்கு திணைப்பொருள்கள், இன்னமும் சொல்லப் பெறாதவைகள் ஆகியவற்றை உண்டாக்குகைக்காக 'மூவர் முதலாய வானோர் பலரும்

முனிவரும் மற்றும் மற்றும் முற்றும் தன்னில் ஆய்' என்று கொண்டு கூட்டி பிரமன், சிவன், இந்திரன் முதலான தேவர்கள் முதலான எல்லாமும் தானேயாகி என்றும் உரைக்கலாம். உலகத்தில் கப்பும் கிளையுமான மரம் ஒருசிறிய விதையினுள் சூக்குமமாக உள்ளது என்ற கொள்கைப்படி காரிய நிலையில் மறுஉருவமாகத் தெரிகின்ற எல்லாப் பொருள்களும் காரண நிலையில் சூக்கும உருவமாக உள்ளனவாதலின் இங்ஙனம் சொல்லுவதில் தவறு இல்லை. இதனால் முன் இரண்டு அடிகளிலும் எம்பெருமானுடைய காரண நிலை கூறப்பெற்றதாகக் கொள்ள வேண்டும்.

'தானோர் பெருநீர் தன்னுள்ளே தோற்றி அதனுள் கண் வளரும்'! இப்படிப் படைப்பில் ஒருப்பட்ட தான் தனக்குக் கண்வளருகைக்காகப் போதும்படியான படைப்பையுடைத்தான ஒரு பெருங்கடலைத் (ஏகார்ணவத்தைத்) தன் பக்கல் நின்றும் உண்டாக்கி அதனுட் கண் வளரும். இப்படிப் பெருங்கடலில் சாய்ந்தருளுகின்றவன்தான் யார் என்னில்: 'இவன் நித்தியசூரிகட்குத் தலைவன். ஆச்சரியமான குணங்களையும் செயல்களையும் உடையவன். திருநாட்டைக் கொலு வீற்றிருக்கும் இடமாக உடையவன். அவன்தான் வைகுந்தன்; அவன் என் தலைவன்'' என்கின்றார்.

வடநாட்டுத் தலங்கள் பற்றிய இக்கட்டுரையில் திருவெஃகாவும் (தொண்டை நாடு), திருநாடும் (பரமபதம் அடக்கப் பெற்றுள்ளன என்பது நினைவு கொள்ளத்தக்கது.

## 6. அருளிச் செயல்கள்

உயர்வற உயர்நலம் உடையவனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற சடகோபன் என்னும் நம்மாழ்வார் அருளி செய்த பிரபந்தங்கள் நான்கு. அவை திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி (இயற்பாவில் அடங்கி யுள்ளவை), திருவாய்மொழி என்பவை. இந்த நான்கும் முறையே இருக்கு, யசுர், அதர்வணம், சாமம் என்ற நான்கு வேதங்களின் சாரம் என்று வழங்குவர் பெரியோர். இது,

> இயற்பா மூன்றும் வேதத்ரயம் போலே
> பண்ணார் பாடல் புண்புரை இசை
> கொள் வேதம் போலே —ஆசா. ஹ்ரு 50
> [த்ரயம் - மூன்று]

என்ற சூத்திரத்தால் அறியப்படும். திவ்வியப் பிரபந்தத்தின் பிரிவு நான்கனுள் இயற்பா என்னும் பிரிவினுள் சேர்ந்திருப் பவை யாகியதிருவிருத்தம்,திருவாசிரியம்,பெரியதிருவந்தாதி என்னும் பிரபந்தங்கள் முதல் மூன்று வேதங்களின் தானத் தில் கோடல் வேண்டும். 'பண்ணார் பாடலாகிய' (10.7 : 5) திருவாய்மொழியை சாமவேதத்தின் தானத்தில் கோடல் வேண்டும். 'பண்புரை வேதம்', 'இசைகொள் வேதம்' என்னும் தொடர்கள், 'பண்ணார் பாடல்' என்கின்றபடியே திருவாய்மொழி பண்ணையும் இசையையும் உடைத்தாகை யாலே சாமவேதத்திற்குப் பண்ணும் இசையும் உண்டு என்பதனை அறிவிக்கின்றன.

1. திருவிருத்தம் : இஃது இயற்பாவில் ஐந்தாவதாக இடம் பெற்றுள்ளது. இந்நூலில் ஆழ்வார் தமது அன்பு மிகுதி முதலிய செய்திகளை எம்பெருமான் முன்னிலையில் விண்ணப்பம் செய்தலால் இஃது இத்திருநாமம் பெற்றது. வடமொழியிலுள்ள 'வ்ருத்தம்' என்ற சொல் தமிழில் விருத்தம் எனத் திரிந்தது. பல பொருள்களையுடைய இச் சொல் இங்கு 'செய்தி' என்னும் பொருளைப் பெற்றது. ஆழ்வார் தமது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமானை நோக்கி 'தேவரீரை அநுபவித்தற்கு விரோதியான உடல் தொடர்பைப் போக்கியருள வேண்டும்' என்று சம்சார சம்பந்த நீக்கத்தை விரும்பும் முகத்தால் இவ்விருள் தருமா ஞாலத்தில தம் இருப்பு தமக்கு மிகவும் வெறுக்கத் தக்கதாக இருக்கும் செய்தியையும், எம்பெருமானுடைய நித்தியாநு பவத்திலேயே தமக்குக் காதல் கிளர்ந்த செய்தியையும சொல்லுகினறதாக அமைகின்றது. 'திரு' என்ற சொல் வடமொழியில் 'ஸ்ரீ' எனபது போல தமிழில் மேன்மையுடைய எப்பொருள்கட்கும் சிறப்புச் சொல்லாகி அவற்றிற்குப் பெருமைப் பொருளைக் காட்டும். விருத்தம் என்னும் சொல் செய்தியைச் சொல்லுவதாயினும், ஈண்டுக் காரிய ஆகுபெயராய், செய்தியைக் கூறும் நூலை உணர்த்து கின்றது.

இப்பிரபந்தம் கட்டளைக் கலித்துறையில் அமைந்த 100 பாசுரங்களைக் கொண்டது; பாசுரங்கள் அந்தாதி¹ தொடைத் யால் அமைந்தன. சைவ சமயத்தில் திருநாவுக்கரசர் தேவாரத் திருமுறை, பட்டினத்தடிகளின் பாடல் திருமுறை என்பவற்றின் கட்டளைத் துறையைத் திருவிருத்தம் என்று வழங்கும் மரபு இருத்தலின், அதுபோலவே இதுவும் திரு

1. ஒரு செய்யுளின் இறுதி சொல், அசை, எழுத்து அடுத்த செய்யுளின் சொல், அசை எழுத்தாகத் தொடங்குவது அந்தாதித் தொடை. அந்தம் - இறுதி; ஆதி - முதல்

விருத்தம் என்று திருநாமம் பெற்றதாகச் சிலர் கருதுவர்; வடமொழியில் செய்யுளைக் குறிக்கின்ற வ்ருத்தம் என்கின்ற பொதுமொழி, இங்கே சிறப்பாய்க் கட்டளைக் கலித்துறை என்னும் ஒருவகைச் செய்யுளை உணர்த்தி நூலுக்குக் கருவியாகு பெயராயிற்று என்பது இக்கொள்கையின் தேர்ந்த கருத்து. தாழிசை, துறை, விருத்தம் என்ற பாவின் இனம் மூன்றனுள் ஒன்றாகிய துறையின்பாற் படும் கட்டளைக் கலித்துறையா லாகிய நூலை விருத்தம் என்பது பொருந்துமோ என்ற ஐயம் உண்டாகக் கூடும். ஆனால் இங்கு விருத்தம் என்னும் சொல் அவ்வினம் ஒன்றை உணர்த்துவதன்றிச் செய்யுட் பொதுப் பெயராகக் கொள்ளப் படுதலால் கட்டளைக் கலித்துறையாலாகிய நூலை விருத்தம் எனலாம் என்று ஒப்புமை சொல்லி விடக் கூடுமாயினும், 'செய்தி' என்று முன் சொன்ன பொருளே சிறக்கும்.

> இந்நின்ற நீர்மை இனியாம்
> உறாமை...............
> மெய்ந்நின்று கேட்டருளாய்
> செய்யும் விண்ணப்பமே (1)

என்று தம்முடைய செய்தியைக் கூறுவதாகவே தொடங்கும் சுவாரஸ்யத்தை நோக்கியே நம்பூருவ ஆசாரியப் பெருமக்கள் இதற்குத் திருவிருத்தம் என்று திருநாமம் சாற்றினர் என்பது கருதத்தக்கது. அன்றியும், இப்பிரபந்தத்தில் பெரும்பாலும் (முதல், இறுதிச் செய்யுட்களைத் தவிர) ஆழ்வார் பிராட்டி-யார் நிலையை ஏறிட்டுக் கொண்டு தமது விருத்தத்தைக் விருத்தாந்தத்தைக் — கூறுகின்றாராதலின், திருவிருத்தம் என்பதற்குத் திருமகளின் நிகழ்ச்சியைக் கூறும் நூல் என்று பொருளாகலாம் என்றும் சிலர் கருதுவர்.

முதல், இறுதிச் செய்யுட்களைத் தவிர ஏனைய 98 செய்யுட்களும் வெளிப் படைப் பொருளையும்(அந்யாபதேசம்)

உள்ளுறைப் பொருளையும் (ஸ்வாபதேசம்) ஆகிய இருவகைப் பொருளைக் கொண்டவை. சொற்செறிவு, பொருட் பொலிவு, ஆழ்ந்த கருத்து, தொனிப் பொருள், கற்பனை அலங்காரம். முதலிய சிறப்புகளாலும் ஒப்புயர்வின்றி விளங்குவது. தன்னைக் கற்பார்க்குப் பிறவித் துயரறுத்து அந்தமில் பேரின்பம் அளிக்க வல்லது. எம்பெருமானை அகப்பொருள் நெறியில் அநுபவிக்குந் திறத்திற்கு வழி காட்டியாயுள்ளது (இதனைப் பிறிதோர் இடத்தில் விளக்கு வோம்). மணிவாசகப் பெருமானின் திருக்கோவையாரும் இந்த நூலும் ஒரு தன்மையாக இருக்கும் எனலாம். இப் பிரபந்தம் முமுட்சுத்துவத்தையும் முக்தியையும் உண்டாக்கு வதற்கு ஏற்றது.

இப்பிரபந்தத்தில் ஒரு பாசுரத்தைக் காட்டி விளக்குவேன்.

> 'இசை மின்கள் தூதென்' றிசைத்தால்
> இசையிலம்; என்தலைமேல்
> அசைமின்கள் என்றால், அசையும் கொலாம்
> அம்பொன் மாமணிகள்
> திசைமின் மிளிரும் திருவேங்
> கடத்துபவன் தாள்சிமயம்
> மிசைமின் மிளிரிய போவான்
> வழிக்கொண்ட மேகங்களே (31)

[இசைமின் - ஒப்புக் கொள்ளுங்கள்; இசைத்தால் - வேண்டினால்; இசையிலம் - உடன்பட்டுச் செல் விதைக் காண்கின்றோம் இல்லை; அசை மின் - பொருந்துமின்; அசையும் கொலோ - செல்லக் கூடுமோ? அம்பொன் - அழகிய பொன்; மின் மின்னல்; தாள் - அடிவாரம்; சிமயம் - சிகரம்; மிளிரிய - விளங்கச் செல்லும்; வழிக்கொண்ட - பயணப்பட்ட]

தூது போகுமாறு சொன்னவிடத்தும் போகாத மேகங் களைக் குறித்துத் தலைவி இணங்கிப் பேசும் பாசுரம் இது. பாசுரத்தைத் திரும்பத் திருப்பப் படித்துப் பொருளை மனத்தில் அமைத்துக் கொள்க. இப்படிப் பலவாறு கூறி அலற்றுவதற்குப் பயன்: மூடியிருந்து வேவதோர் கொள் கலம் மூடிதிறந்த விடத்து ஆவி எழுந்து முன்னின்ற வெப்பம் நீங்கினாற் போல, ஆற்றாமையால் உள்ளே மிக்கு நின்ற தாபத்தை வாய்விட்டு வெளியிட அது சிறிதளவு குறைதலாகும்.

இவ்விடத்தில் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீசூக்தி: "கீழ் நீலமுண்ட மின்னன்ன மேனிப்பெருமானுலகு' என்று பரமபதத்தே தூது விட்டாள்; அது பரபக்தி, பர ஞானம், பரமபக்தி உள்ளவர்க்கல்லது புகவொண்ணாத தேசமாகையாலே அவதாரங்களிலே தூது விடப் பார்த்தாள்; அதுவும் சம காலத்திலுள்ளார்க்கு ஆகி பின்னை இல்லை யாகையாலே பிற்பட்டார்க்கும் அநுபவிக்கலாம் படி சுலபமான திருமலையிலே திருவேங்கட முடையான் திருவடி களிலே மேகத்தைத் தூதாக விடுகின்றாள். 'திருமலை நோக்கிப் போகும் மேகங்களே! என்னுடைய தூது வாக்கியங் களைக் கொண்டு போய்ச் சொல்லுங்கள்' என்றால், சொல்லு கிறீர் இல்லை; திருமலைக்குப் போகிற பராக்கிலே போகாத போகிறவற்றைக் கொண்டு சொல்ல மாட்டீர்களாகில் உங்கள் திருவடிகளை என் தலைமேல் வையுங்கள் என்றால், வைக்க மாட்டீர்களா? திருமலைக்குப் போவாருடைய திருவடிகள் உத்தேச்யமாயிறேயிருப்பது. திருமலைக்குப் போகிறவர்களைத் தலையிலே வைக்கக் கிடைக்குமோ? திருவடியை (அநுமனை)ப் பிராட்டி இங்கே ஒரிராத் தங்கிப் போக வேண்டுமென்று அருளிச் செய்ய, ஒண்ணாது என்று அவனும் மறுத்துப் போனாப் போலே போகா நின்றன" என்பது.

யாரேனும் எங்கேனும் வழி நடந்து சென்றாலும் திவ்விய தேசங்களுக்கு யாத்திரை செல்வதாகவே நினைப்பது ஆழ்வாரது தொழிலாம்.

வருவார் செல்வார் வண்பரி
சாரத்து இருந்தஎன்
திருவாழ் மார்பற்கு என்திறம்
சொல்லார் செய்வதுஎன்

—திருவாய் 8. 3: 7

என்பர் திருவாய் மொழியிலும். வழியே சொந்த காரிய மாகச் செல்பவர்கள் எல்லாரும் திருவண் பரிசாரம் என்னும் திருப்பதிக்குச் செல்வதாக வன்றோ பாவனை நிகழ்ந்தது? தூதுவிடற்கு உரியதைத் தன் தலைமேல் அடி வைத்துச் செல்லுமாறு வேண்டுதலை,

எங்கானல் அகங்கழிவாய்
இரைதேர்ந்துஇங்கு இனிதமரும்
செங்கால மடநாராய்!
திருமூழிக் களத்துறையும்
கொங்கார்பூர் துழாய்முடிஎம்
குடக்கூத்தர்க்கு என்தூதாய்
நுங்கால்கள் என்தலைமேல்
கெழுமீரோ நுமரோடே

—திருவாய் 9.7 : 1

என்ற திருவாய்மொழிப் பாசுரத்திலும் காணலாம்.

ஸ்வாபதேசப் பொருள் (உள்ளுறை) : கீழ் எம்பெருமான் பக்கல் ஆழ்ந்த நெஞ்சை மீட்கும்படி வேண்டப்பட்டவர்கள் 'இவர் நெஞ்சை மீளச் செய்வது சர்வசக்தனான அவ்வெம் பெருமானுக்கும் அசாத்தியமானதொன்றானால் நம்மால் செய்யலாவதோ? என்று கைவிட, பின்பு ஆழ்வார் திவ்விய தேச யாத்திரைபராய்த் திருமலையை நோக்கிச் செல்கிற சிலரைக் கண்டு, இவர் நம் குறையை எம்பெருமான் பக்கல்

விண்ணப்பம் செய்து நம்மை அவனோடு சேர்ப்பதற்கு ஏற்ற புருஷகாரமாவர் என்று கருதி அவர்களை ஆசாரியராக வரிக்க, அவர்கள் இவர்க்கு ஆசாரியராவதற்கு உடன் படாமையால், "எம்பெருமான் தாள் தொழுவார் காண்மின் என் தலைமேலாரே" (பெரி. திரு. 7.4 : 1) என்னும் படி இவர் நம் சிரசின்மேல் திருவடிகளை வைப்பதும் புருஷார்த்தமாகும் என்று அதனை வேண்டுகிறபடி.

கருவிருத்தக் குழிநீத்தபின் காமக்
 கடுங்குழி வீழ்ந்து
ஒருவிருத்தம் புக்குழ லுறுவீர்!
 உயிரின் பொருள்கட்
கொருவிருத்தம் புகுதாமல் குருகை
 யர்கோன் உரைத்த
திருவிருத்தத் தோரடி கற்றிரீர்
 திருநாட் டகத்தே[2] – தனியன்

[கரு - கர்ப்பம்; விருத்தம் - வட்டமான; காமம் - சிற்றின்பம்; விருத்தம் - கிழத்தனம்; உழலுவீர் - அலைவீர்; பொருள்கள் - பயன்கள்; விருத்தம் - இடையூறு; புகுதாமல் - நேரிடாதபடி; திருநாடு - பரமபதம்]

என்ற பாடல் இப்பிரபந்தத்தின் சிறப்பினை வலியுறுத்தும்.

2. **திருவாசிரியம்:** இஃது ஆழ்வாரின் இரண்டாவது பிரபந்தம். திருவிருத்தமாகிய முதல் பிரபந்தத்தில் ஆழ்வார் தமது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமானை நோக்கி "தேவரீரை அநுபவித்தற்கு இடையூறாக இருக்கும் உடல் தொடர்பை அறுத்துத் தந்தருள வேண்டும்" என்று விடுத்த விண்ணப்பத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. இவரைக் கொண்டு

2. கிடாம்பியாச்சான் அருளியது.

நாட்டுக்கு நன்மையாகச் சில திவ்வியப் பிரபந்தங்களை வெளியிடுவித்து இவ்விருள்தருமா உலகில் உழலும் சம்சாரி களைத் திருத்திப் பணி கொள்ளவேண்டும் எனத் திருவுள்ளம் பற்றுகின்றான். ''இந்த ஆழ்வார் இந்த சம்சாரத்தை விட்டு விலகி, ஒரு 'நலமிந்தமில்லாததோர் நாட்டில் போய்ச் சேர வேண்டுமென்று' பாரிப்பது நம்முடைய குணங்களை அநுபவிப்பதற்காகவன்றி வேறொன்றுக்காக அன்று; அந்தக் குணாநுபவத்தை இவர்க்கு நாம் இவ்விடத்திலேயே வாய்க்கச் செய்வோம். இங்கேதானே இவர் குணாநுபவம் பண்ணிக் களித்தவராய், அவ்வநுபவம் உள்ளடங்காமல் புறவெள்ளமிட்டுப் பிரபந்தங்களாகப் பெருகி உலகிற்கு உபகாரம் செய்தவராகட்டும்'' என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றித் தனது சொரூப ரூப குண விபூதிகளைக் காட்டிக் கொடுக்கின்றான். ஆழ்வாரும் அவற்றைக் கண்டு பரமானந்தம் பொலிய அநுபவிக்கின்றார் இத்திருவாசிரியத் தில். சம்சாரத் தொடர்பைக் கழித்துப் பரமபதத்திற்குச் சென்ற பிறகு அநுபவிக்கக் கூடிய எம்பெருமானது மேன்மையையும் நீர்மையையும் வடிவழகையும் இங்கிருந்து கொண்டே சுருக்கமாக ஏழு பாசுரங்களால் அநுபவித்து மகிழ் கின்றார். ஏழு பாசுரங்களும் ஆசிரியப்பாக்களால்[3] அமைந் துள்ளதால் பிரபந்தமும் **திருஆசிரியம்** எனத் திருநாமம் பெற்று வழங்கி வருகின்றது. இப்பிரபந்தத்திலுள்ள ஏழு

3. **ஆசிரியப்பா** நேரிசையாசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, இணைக்குறளாசிரியப்பா, அடிமறி மண்டில ஆசிரியப்பா என நான்கு வகைப்படும். அடியொன்றுக்கு நான்கு சீராய் இயற்சீர் பயின்றும் வெண்சீர் விரவியும மூன்றடிக்குக் குறையாமல் பல அடிகளால் அகவலோசையுற்று இறுதியில் ஏ என்னும் அசையால் முடிவது ஆசிரியப்பாவாகும். எல்லா அடிகளும் நாற்சீராய் ஈற்றயலடி மூன்று சீராய் வருவது நேரிசையாசிரியப்பா. எல்லா அடிகளும் நாற்சீராலே முடிவது நிலைமண்டில

பாசுரங்களில் 1, 2, 3, 6 எண்ணிட்டுள்ள பாசுரங்கள் நேரிசை யாசிரியப்பாக்கள்; 4, 5, 7 எண்ணிட்டுள்ளவை நிலை மண்டில ஆசிரியப்பாக்கள். இப்பிரபந்தமும் அந்தாதித் தொடையால் அமைந்தது இயற்பாத் தொகுதியில் ஆறாவ தாக அடைவுபடுத்தப் பெற்றுள்ளது.

*இப்பிரபந்தத்தின் முதல் பாசுரம் இது.*

**செக்கர்மா முகிலுடுத்து, மிக்க செஞ்சுடர்ப்**
**பரிதிசூடி அஞ்சுடர் மதியம் பூண்டு**
**பலசுடர் புனைந்த பவளச் செவ்வாய்**
**திகழ்பசுஞ் சோதி மரகதக் குன்றம்**
**கடலோன் கைமிசைக் கண்வளர் வதுபோல்**
**பீதக ஆடை முடிபூண் முதலா**
**மேதகு பல்கலன் அணிந்து சோதி**
**வாயவும் கண்ணவும் சிவப்ப மீதிட்டுப்**
**பச்சை மேனி மிகப்ப கைப்ப**
**நச்சுவினைக் கவர்தலை அரவின்அமளி ஏறி**
**எறிகடல் நடுவுள் அறிதுயில் அமர்ந்து**

**சிவன்அயன் இந்திரன் இவர்முத லனைத்தோர்**
**தெய்வக் குழாங்கள் கைதொழக் கிடந்த**
**தாமரை யுந்தித் தனிப்பெரு நாயக!**
**மூவுல களந்த சேவடி யோயே.**

[*செக்கர் - சிவந்த; முகில் - மேகம்; பரிதி - சூரியன் மதி - சந்திரன்; பல்சுடர் - உருக்கள்; கடலோன் - கடலரசன்; சோதி - அழகிய; மேனி - திருமேனி;*

*ஆசிரியப்பா. ஈற்றடியும் முதலடியும் ஒழிந்து இடை யடிகள் இரண்டும் பலவும் குறளடியானும் சிந்தடி யானும் வருவன இணைக்குறளாசிரியப்பா. எல்லா அடியும் முதல், நடு, இறுதியாக உச்சரிப்பினும் ஓசையும் பொருளும் பிழையாது வருவது அடிமறி மண்டில ஆசிரியப்பா.*

எறிகடல் - அலை எறிகின்ற; அரவு - அனந்தாழ்வான்; கிடந்த - பள்ளிகொண்டிருக்கும்; உந்தி - கொப்பூழ்; சேஅடி - அழகிய திருவடி]

திருவிருத்தத்தின் முதற்பாசுரத்தில் 'அழுக்குடம்பு' என்று தம் முடைய உடம்பின் தன்மையை (கீழ்மையைப்) பேசினார்; இந்தப் பிரபந்தத்தின் முதற் பாசுரத்தில் எம்பெருமானின் திருமேனியின் பேரெழிலில் ஈடுபட்டுப் பேசுகின்றார். அப்ராக்ருதமாய் ஒப்புயர்வற்றதான பகவானுடைய திவ்விய மங்கள விக்ரகத்திற்கு ப்ராக்ருதப் பொருள்களில் ஒன்றை உவமையாக எடுத்துக் கூறுவது,

ஒட்டுரைத்திவ் வுலகுன்னைப்
புகழ்வெல்லாம் பெரும்பாலும்
பட்டுரையாய் புற்கென்றே
காட்டுமால் பரஞ்சோதி

—திருவாய் 3.1 : 1

[ஒட்டுஉரைத்து - உதாரணமாகச் சொல்லி; புகழ்வு - துதிப்பது; பெரும்பாலும் - மிகவும்; பட்டுரையாய் - பொருளற்றதாய்; புற்கென்றே - சிறுமையாக]

என்றவாறு அவத்யமாகத் தலைக்கட்டுவதல்லது வேறில்லை. ஆகையால் இல்பொருளுவமை (அபூதஉவமை)யால் விளக்குகின்றார். உவமேயப் பொருள் ஒப்பற்றதாக இருக்கும்போது இப்படித்தான் விளக்க வேண்டிவரும்.

எம்பெருமான் திருவரையில் திருப்பீதாம்பரம் சாத்திக் கொண்டும், திருமுடியில் திருவபிடேகம் அணிந்து கொண்டும், இப்படியே மற்றும் பலபல திருவாபரணங்களைப் பூண்டு கொண்டும், செந்தாமரை போன்ற திருவாயும் திருக்கண்களும் விளங்கவும், பச்சையான திருமேனி நிறமானது மற்ற சோபைகளெல்லாவற்றையும் விடச் சிறப்பாக விளங்கவும். கடலிடையே திருவனந்தாழ்வான் என்னும் இருவணையின்

பீதேறி திருக்கண் வளர்ந்தருள்கிறபடிக்கு எடுத்துக் காட்டாக வருணிக்கப் பொருத்தமான உவமையொன் றில்லாமையால் இல்பொருள் உவமையொன்றைக் கையாளு கின்றார். மரகதப் பச்சையான ஒருமலை செந்நிறமான மேகத்தைப் பீதக ஆடையாக உடுத்திக்கொண்டும், கிரீடத்தின் இடத்தில் சூரியனை அணிந்து கொண்டும், கண்டிகை இடத்தில் சந்திரனை அணிந்துகொண்டும், முத்துச்சரம் முதலான மற்றும் பல திருவாபரணங்களின் இடத்திலே நட்சத்திரங்களைப் புனைந்து கொண்டும், திருவதரம் திருக்கண்களின் இடத்தில் பவளமயமான பிரதேசங்களைக் கொண்டும் ஒரு கடலில் பள்ளி கொண் டிருந்தால் எப்படியிருக்குமோ அப்படியிராநின்றது எம்பெருமான் திருக்கோலத்துடன் பள்ளிகொண்டிருக்கும் நிலை—என்கின்றார். இங்கு எம்பெருமான் உபமேயம்: மலை உவமானம்; பீதாம்பரம்—உவமேயம்; செக்கர் மாமுகில் உவமானம். திருமேனியழகிலும் அறிதுயில் கொண்ட அழகிலும் இந்த ஆழ்வார் நெஞ்சைப் பறிகொடுத்துவிட்டாராகையாலே ஒரு வினைமுற்றுடன் பாசுரத்தை முடிக்க முடியாமல் 'மூவுலகளந்த சேவடி யோயே!' என்று கண்ணாஞ் சுழலையிட்டுக் கிடக்கின்றார்.

அடுத்து, மிக்க அழகிய எம்பெருமானின் இணைத் தாமரை அடிகளைப் பேசி அவற்றைத் தம் சென்னியில்சூட வேண்டும் என்ற ஆவலைக் காட்டுகின்றார் (2). தொடர்ந்து பாகவதபக்தியின் பெருமையை எடுத்துரைக்கின்றார் (3). பாகவதர்கள் எம்பெருமான் திருவடிகட்கு மங்களாசாசனம் செய்துகொண்டிருப்பதைக் கண்டு அப்படிப்பட்ட பொழுது போக்குப் பேறு தமக்கு வாய்க்குமா என்கின்றார் (4). எம்பெருமான் உலகமளந்த சரிதையை அநுசந்தித்து அதில் அமைந்த சௌலப்பியம், சௌசீல்யம் முதலான திருக்குணங் களில் ஈடுபட்டுத் தம்மை மறக்கின்றார் (5). உலகளந்தானின்

திருவடிகளை வணங்கி வழிபடாமல் சிறுதெய்வங்களை ஆராதிக்கும் அதிகமான மக்களைக் கண்டு அவர்கள்மீது கழிவிரக்கம் கொள்ளுகின்றார் (6). சம்சாரிகள் திருந்தாத நிலையைக் கண்டு 'இவர்கள் எக்கேடாவது கெடட்டும்' என்று அவர்களைக் கைவிட்டுத் தாம் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தலை நினைந்து மகிழ்கின்றார் (7).

இப்பாசுரங்களின் அந்தாதி அமைப்பில் முடிவுப் பாசுரத்தின் அந்தமும் முதற்பாசுரத்தின் ஆதியும் மண்கூலித்து அமையாததால் சில பாசுரங்கள் மறைந்திருத்தல் கூடும் என்று கருதுவர் சிலர். இதனைப் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமிகள் ஒப்புக்கொள்ளவில்லை. இவர் இப்பிரப்பந்தம் பூரணத்துவம் பெற்றதாகவே கொள்வர்.

காசினியோர் தாம்வாழக்
    கலியுகத்தே வந்துதித்து
ஆசிரியப் பாவதனால்
    அருமறைநூல் விரித்தானைத்
தேசிகனைப் பராங்குசனைத்
    திகழ்வகுளத் தாரானை
மாசடையா மனத்துவைத்து
    மறவாமல் வாழ்த்துதுமே[6] —தனியன்

[காசினி உலகம்; உதித்து - அவதரித்து; மறைநூல் - வேதசாத்திரம்; தேசிகன் - ஆசாரியன்; பராங்குசன்- நம்மாழ்வார்; மாசு - குற்றம் (அகங்காரம், மமகாரம்)]

என்ற தனியனால் இப்பிரபந்தத்தின் பெருமை எடுத்துரைக்கப் பெறுகின்லது.

3. பெரிய திருவந்தாதி : இஃது இயற்பாத்தொகுதியில் ஏழாவது பிரபந்தமாக அடைவு செய்யப் பெற்றுள்ளது.

4. அருளாளப் பெருமான் எம்பெருமானார் அருளியது.

ஆழ்வார் திருவாசிரியத்தில் எம்பெருமானுடைய சொரூப ரூப குண விபூதிகளை அநுபவித்ததைக் கண்டோம். இங்ஙனம் அநுபவித்த பகவத் விஷயத்தில் அவ்விஷயத்திற்குத் தகுதியாக ஆசைகளைப் புரண்டு பெருகிச்செல்லுகின்றபடியை இப்பிரபந்தத்தில் பேசுகின்றார், இதில் பத்தி பிரபத்தி (சரணாகதி) வழிகளை ஆங்காங்கே காணலாம். இதிலுள்ள பாசுரங்களும் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன. முதற்பாசுரத்தின் முதற்சீரும் இறுதிப்பாசுரத்தின் இறுதிச் சீரும் மண்டலித்தும் அமைந்துள்ளன. எல்லாப் பாசுரங்கள் தேனும் பாலும் கன்னலும் அமுதுமாக இனிப்பவை. என்றாலும் விரிவஞ்சி ஒரு சில பாசுரங்களை மட்டிலும் காட்டி விளக்குவேன்.

**நாளால் அமர்முயன்ற வல்லரக்கன் இன்உயிரை**
**வாழா வகைவலிதல் நின்வலியே—ஆழாத**
**பாரும்நீ; வானும்நீ; காலும்நீ; தீயும்நீ;**
**நீரும்நீ யாய்நின்ற நீ. (11)**

[நாளால் - அகங்காரத்தினால்; வல்அரக்கன் - இராவணன்; வாழாவகை - வாழ்ந்திருக்க வொட்டாமல்; வலிதல் - கவர்ந்து கொண்டது; பார் - பூமி; கால்—காற்று]

பயன் கருதாத நம்மை விரும்பா திருக்கின்ற எம்பெருமானைப்பாடாதிருப்போம்என்றிருந்த ஆழ்வாரைப் பாடத் தூண்டுகின்றான் இறைவன். இதனால் வியப்புற்ற ஆழ்வார் பாடுகின்றார்.' நான் யார்க்கும் தலை சாய்ப்ப தில்லை' என்று செருக்குற்ற இராவணனைப் பங்கப் எடுத்திய எம்பெருமானின் செயலை எல்லோரும் மெச்சிப் பாராட்டுகின்றனர். இஃது என்ன பாராட்டு? தசமுகனின் உறுதியைக் காட்டிலும் வலிதான எனது உறுதியைச் சிதைத்து என்னை வாய் திறந்து பாடும்படிச் செய்த அப்

பெருமானுக்கு இஃது ஓர் அரிய செயலா?'' என்று பேசு கின்றார் ஆழ்வார். 'வலியே' என்பதில் உள்ள ஏகாரம் வலியல்ல என்பதைக் காட்டும்.

தாம்பால்ஆப் புண்டாலும்
அத்தழும்பு தான்இளகப்
பாம்பால் ஆப் புண்டுபா
டுற்றாலும் சோம்பாது, இப்
பல்லுருவை எல்லாம்
படர்வித்த வித்தா! உன்
தொல் உருவை யார் அறிவார்?
சொல்லு. (15)

[தாம்பு - கயிறு; ஆப்புண்டாலும் - கட்டியடிக்கப் பெற்றாலும்; பாம்பு - காளியன். பல்உரு - பலபல பிராணிகள்; படர்வித்த - விரிவாகப் படைத்த; வித்து - விதை]

சம்சாரிகள் எம்பெருமானுக்குப் பலவகையான தீங்குகளை உண்டுபண்ணினாலும், அப்போதும் ஆருயிர்களிடம் அவனது வாத்சல்யம் குறையாது காப்பாற்றுகின்றான் என் கின்ற பெருங் குணத்தில் ஈடுபட்டுப் பேசுகின்றார். தாம்பால் ஆப்புண்டது சண்ணிநுண் சிறுத் தாம்பினால் உரலில் பிணைத்து அடித்துப் பகவானைத் துன்புறுத்தினாள் யசோதை; அநுகூலர் அன்பின் மிகுதியால் செய்த செயல் இது. பாம்பால் ஆப்புண்டது காளியன் தன் வாலினால் கண்ணனை அழுந்தக் கட்டி அவன் திருமேனி தழும் பேறும்படி வருத்தத்தை உண்டு பண்ணியது. இது பிரதி கூலர் விரோதத்தால் செய்த செயல். முன்னதை விடப் பின்னது வலிது. 'அத்தழும்புதான் இளக' என்பதனால் இஃது அறியப்படும். இந்த இருசாரார் மாட்டும் நன்மையையே நாடி இருக்கும் எம்பெருமானின் சொரூபம் ஒருவராலும் நிலை காண ஒண்ணாது.

அடியால் படிகடந்த முத்தோ? அதன்றேல்
முடியால் விசும்பளந்த முத்தோ? — நெடியாய்!
செறிகழல்கொள் தாள்நிமிர்த்துச் சென்றுலக
மெல்லாம்
அறிகலமால் நீ அளந்த அன்று(27)

[நெடியாய் - திரிவிக்கிரமனே; படிகடத்தல் - அளத்தல்;
முடி - திருமுடி; முத்து - மகிழ்ச்சி, அழகு]

இதற்குமுன்னர் உள்ள பாசுரத்தில் 'யானும் என் நெஞ்சும் இசைந்தொழிந்தோம்' என்று ஆழ்வார் கூறியதைக் கேட்ட எம்பெருமான், 'இப்படி ஒரு பாசுரம் செவிப்படுவது அற்புதமே!' என்று கொண்டு பெரு மகிழ்ச்சியுற்றான். இதனைத் தன் ஞானக் கண்ணாலே கண்டறிந்த ஆழ்வார், 'எம்பெருமானே'! இப்போது நின் திருவுள்ளத்தில் ஓடுகின்ற மகிழ்ச்சிப் பெருக்கு "பண்டு உலகளந்த காலத்து உண்டான மகிழ்ச்சிப் பெருக்கோடு ஒக்குமோ? அன்றி அதனினும் மேம் பட்டதோ?" என்று வினவுகின்றார் போலும்! "நெடியாய்! நெருங்கின வீரத் தண்டைகளை அணிந்துள்ள திருவடிகளை நீட்டி உலகங்களை அளந்த காலத்தில் திருவடியாலே பூமிப் பரப்பை யெல்லாம் அளந்து சொந்தமாக்கிக் கொண்டதனால் ஒரு மகிழ்ச்சியும், திருமுடியை நிமிர்த்தி மேலுலகங்களையெல்லாம் அளாவிச் சொந்தமாக்கிக் கொண்டதனால் ஒரு மகிழ்ச்சியும் ஆக இரண்டு மகிழ்ச்சிகள் உண்டாயின; அவற்றுள் எந்த மகிழ்ச்சியோடொக்கும் இப்போது நீ அடையும் மகிழ்ச்சி? வடமொழியில் முத் என்பதுசந்தோஷத்திற்குப் பெயர்; அச்சொல்லே இங்கு முத்து மகிழ்ச்சி என்றாகியுள்ளது.

இவ்விடத்தில் ஓர் ஐயம் எழுகின்றது. மேலே நீட்டப் பெற்ற ஒரு திருவடியே மேலுலகங்களையெலாம் அளந்ததாக அருளிச் செயல்களில் சொல்லியிருக்க 'முடியால் விசும்பளந்த' என்று இங்கு இவர் அருளிச் செய்தது பொருந்துமா? என்பது

வினா. இதற்குச் சமாதானம்: ஒரு திருவடியே மேலுலகங் களையும் அளந்ததென்பது உண்மையே; அந்தத் திருவடி யோடு கூடத் திருமுடியும் ஓங்கி வளர்ந்த படியாலும், எல்லாச் செயலையும் திருவடிக்கே சொன்னால் கண்ணெச்சி லாகுமென்று ஒரு செயலைத் திருமுடியிலேறிட்டுச் சொல்லி யிருக்கக் கூடும்.

**பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற**
**காவிமல ரென்றுங் காண்டோறும் – பாவியேன்**
**மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை**
**எல்லாம் பிரானுருவே யென்று (73)**

[பூவை - பூவப் பூ; காயா - காயாம்பூ; நீலம் - கரு - நெய்தல்; காவி மலர் - செங்கழுநீர்ப் பூ; பிரான் - எம்பெருமான்; ஆவி - உயிர்; பூரிக்கும் - பருத்து வளரும்.

இதற்கு முன்னுள்ள பாசுரத்தில் 'நிகரிலகு காருருவா? என்று எழில் மிக்க திருமேனியை அநுசந்திக்கவே, போலி கண்டு மேல் விழும் படியான அளவிறந்த அன்பு அத் திருமேனியிலே தமக்கு விளைந்தபடியை அருளிச் செய் கின்றார். மலர்கின்ற பூவைப் பூ, காயாம் பூ, நீலோற்பலம் கழுநீர்ப்பூ இவற்றைக் காணும் போதெல்லாம் ஆழ்வாருக்கு எம்பெருமான் உருவைக் கண்டதாக அநுபவம் ஏற்பட்டு உள்ளமும் பூரிக்கின்றது.

'காண்தோறும்' என்பதுவே போதுமாயிருக்க, 'என்றும் காண்தோறும்' என்று கூறுவதென்னென்னில்; போலிகண்டு பூரித்தல் என்கின்ற இந்தப் பிரமம் ஒருகால் இருகால் அன்று. ஒரு தடவை அவற்றைக் கண்டு பூரித்த பின்பு, 'ஓ! நாம் பிரமித்தோம்; இவை பூக்களேயொழிய எம்பெருமானது திருவுருவமல்ல' என்று தெளிந்துகொண்டாலும் அடுத்தகணத் தில் இது மறந்து போய், பழைய பிரமமே திரும்பவும் ஏற்படு கின்றது; இப்படியே பிரமிப்பதும் தெளிவதும், பிரமிப்பதும் தெளிவதுமாய் நித்தியம் செல்லுமென்பதும் தோன்றும்.

'பாவியேன் மெல்லாவி' : இதில் 'பாவியேன்' விபரீத இலக்கணையால் 'பாக்கியசாலியாகிய என்னுடைய' என்று பொருள் படவும் கூடும். போலியான பொருள்களைக் கண்ட மாத்திரத்திலே ஆவியும் உடலும் பூரிக்கும்படியான பேறு எனக்கல்லவா உள்ளது என்றவாறாம்.

இப்பிரபந்தத்தின் பெருமையை,

**முயற்றி சுமந்தெழுந்து முந்துற்ற நெஞ்சே!**
**இயற்றுவாய் எம்மோடு நீ கூடி—நயப்புடைய**
**நாவின் தொடைக்கிளவி யுள்பொதிவோம் நற்பூவைப்**
**பூ வீன்ற வண்ணன் புகழ்.**

[முயற்றி - முயற்சி; சுமந்து - மேற்கொண்டு; இயற்று வாய் - காரியம் நடத்துவாய்; பூவைப்பூ - காயாம் பூ; ஈன்ற - உண்டான; நயப்பு - ஆசை; நாஈன் - நாவினால் உண்டாகப் பெற்ற; தொடை கிளவி - செயற்கைப் பொருத்தமுடைய சொற்கள்]

என்ற பாசுரம் (தனியன் - எம்பெருமானார் அருளியது) காட்டுகின்றது. இதில் ஆழ்வார் தம்முடைய திருவுள்ளத்தை நோக்கிப் பேசுகின்றார். தம்முடைய நெஞ்சு தம்மைவிட்டுத் தனித்துப் போய் விட்டதாம் பகவத் விஷயாநுபவத்திற்கு; அப்படி முற்பட்டுப் போன நெஞ்சைக் கூவி 'என்னையும் கூடக்கூட்டிக் கொள்' என்கிறார்.

தம்மிலிருந்து நெஞ்சை வேறு படுத்திச் சொல்லுதல் கவிமரபு. நெஞ்சைத் தூதுவிடுவதாகச் சொல்லுவதில் இம் மரபைக் காணலாம். நல்ல பொருள்களைப் பேசிக் கொண்டு பொழுது போக்குவதற்கு இந்த இருள்தருமா ஞாலத்தில் வேறு யாரும் உடன்படாமல் 'உண்டியே உடையே உகந்' தோடுபவர்களாயிருப்பதால் உசாத்துணையாக அமைவதற்கு நெஞ்சு தவிர வேறில்லாமையால் அந்த நெஞ்சை நோக்கித் தானே வார்த்தை சொல்ல வேண்டும்? 'யானும் என்

நெஞ்சும் இசைந்தொழிந்தோம்' (26) என்றும் மேலே சொல்லப் போகின்றார். ஆகவே, நெஞ்சை விளித்து வார்த்தை சொல்லுவதென்பது பக்தர்கட்கு ஒரு நல்ல பொழுது போக்காக அமைகின்றது. நெஞ்சு பிரிந்து போய் விட்டதாகச் சொல்லுவதும் அப்படியே; நெஞ்சு விடுதூதாகச் சொல்லுவதும் அப்படியே.

4. திருவாய்மொழி : இது 100 பதிகங்கள் அடங்கிய நூல். பாசுரங்கள் யாவும் அந்தாதித் தொடையால் அமைந்து முதற் பாசுரத்தின் தொடக்கச் சீரும் இறுதிப் பாசுரத்தின் இறுதிச் சீரும் மண்டலித்து அமைந்துள்ளது. ஒவ்வொரு திருவாய்மொழியின் பலச் சுருதிப் பாசுரத்தில் (திருக்கடைக் காப்புச் செய்யுளில்) ஆழ்வாரின் முத்திரை அமைந்துள்ளது. இவர்தம் பாசுரங்கள் தானான தன்மையில்நின்று ஆழ்வார் பேசுவதாக அமைந்த பாசுரங்கள் (இப்படி அமைந்தவை 73 பதிகங்கள்), பிராட்டியின் நிலையை ஏறிட்டுக்கொண்டு பேசும் பாசுரங்கள் (இப்படி அமைந்தவை 27 பதிகங்கள்) என்று இருவகையாக அமையும். முன்னவற்றைப் புறத் துறைப் பாடல்கள் என்றும், பின்னவற்றை அகத்துறைப் பாடல்கள் என்றும் கருதலாம். ஆழ்வாரின் ஞான நிலை முறுகி நிற்கும்போது முன்னவை பிறந்தன; பிரேம நிலை மீதூர்ந்து நிற்கும்போது பின்னவை தோன்றின. ஆசாரி ஹிருதயம் என்ற நூல் இதனை,

> ஞானத்தில் தம்பேச்சு
> பிரேமத்தில் பெண் பேச்சு (சூத். 118)

என்றவாறு அமைந்துள்ளன என்று கூறும். இந்த 27பதிகங்களே யன்றி திருவிருத்தம் முழுதுமே அகத்துறைப் பாடல்களாகும். இவை பற்றி இந்நூலில் பின்னர் விளக்கப் பெறும்.⁵ இப்பிர

5. அகப் பொருள் தத்துவம் (கட்டுரை-7) காண்க.

பந்தம் இறைவன் தன்மை, இறைவன்பால் சென்றொடுங்கும் உயிர்களின் தன்மை, பக்தி பிரபத்திகளின் பெருமை இவை பற்றிய கருத்துகளை விரிவாகப் பேசுகின்றது.

**திருவாய்மொழியின் பெருமை :** ஆழ்வார்களுள் நம்மாழ்வார் மிகச் சிறந்தவராகப் போற்றப் பெறுகின்றார். இவற்றுள் திருவாய்மொழி மிகச் சிறப்பாகப் போற்றப் பெறுகின்றது. சிலவற்றை ஈண்டுக் காண்போம்.

1. திருவாய்மொழியைப் பாராட்டித் தமிழிலும் வடமொழியிலும் பல நூல்கள் தோன்றியுள்ளன. (அ) நம்மாழ்வார் காலத்திலேயே அவருடைய சீடரான மதுரகவிகள் ஆழ்வாரையும் அவருடைய நூல்களையும் 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்ற பத்துப் பாசுரங்களையுடைய ஒரு நூலை அருளிச் செய்துள்ளார். அதில், தன் குருநாதரின் பெயரைச் சொன்னாலே தன் நாவுக்கு மிகவும் இனிக்கும் என்கின்றார்.

**நண்ணித் தென்குரு கூர்நம்பி என்றக்கால்**
**அண்ணிக் கும்அமு தூறுமென் நாவுக்கே. (1)**

என்பதால் இதனை அறிகின்றோம். தம் ஆசாரியராகிய ஆழ்வாரின் விஷயத்திலேயே மனம் மொழி மெய் என்ற முக்கரணங்களும் ஈடு பட்டதைக் கூறுபவர்,

**தேவு மற்றறி யேன்குரு கூர்நம்பி**
**பாவின் இன்னிசை பாடித் திரிவனே (2)**

என்கின்றார். பிராட்டியாருடன் கூடிய கரிய கோலமுகில் வண்ணனைத் தாம் கண்டாலும் அது தம் குருநாதர் காட்டிய வழியால் அடைந்ததாகும் என்கிறார் (3). ஆழ்வாருடைய அருளினால் மேலுள்ள காலமெல்லாம் அவருடைய திருக்குணங்களை ஏத்தும் பேறு பெற்றதை நினைந்து இனியராகின்றார் (6). இந்தப் பேரருளை எண் திசையிலுள்ளவர்களும் அறியும்படி செய்வதாகக் கூறு-

கின்றார். தம் நெஞ்சில் வேதாந்த விழுப்பொருள்கள் நன்கு பதியும்படி திருவாய்மொழியை அருளிச் செய்ததை,

**மிக்க வேதியர் வேதத்தி னுட்பொருள்**
**நிற்கப் பாடியென் நெஞ்சுள் நிறுத்தினான் (9)**

என்று கூறி அதே கணத்தில்தான் அவருக்குக் கைங்கரியம் செய்யும் பேற்றினையே பயனாகக் கொண்டதையும் குறிப் பிடுகின்றார்.

(ஆ) கம்பநாடர் சடகோபரைப் பாராட்டிச் 'சடகோபர் அந்தாதி' என்ற ஓர் இனிய நூலை இயற்றியுள்ளார்.

**சேராதன வுளவோபெருஞ் செல்வர்க்கு**
**வேதம் செப்பும்**
**பேராயிரம்; திண்பெரும்பெயர்**
**ஆயிரம்; பெய்துளவத்**
**தாரார் முடி ஆயிரம்; குருகூர்ச்**
**சடகோபன் சொன்ன**
**ஆரா அமு தங்கவி ஆயிரம்**
**அவ்வரியி னுக்கே (45)**

என்பது அதில் உள்ள ஒருபாடல்

(இ) மணவாள மாமுனிகள் திருவாய்மொழிபற்றி 'திருவாய்மொழி நூற்றந்தாதி' என்ற நூலை அருளி திருவாய்மொழியைச் சிறப்பித்துள்ளார். இதில் 100 திருவாய் மொழிக்கும் 100 வெண்பாக்கள் அருளிப் போற்று கின்றார். அவற்றுள் ஒன்று திருவேங்கடத்தைச் சிறப்பிக்கும் 'உலகம் உண்ட பெருவாயா' (6. 10: 10) என்ற திருவாய் மொழி பற்றியது,

**உலகுயமால் நின்ற உயர்வேங் கடத்தே**
**அலர்மகளை முன்னிட்டு அவன்தன்—மலரடியே**
**வன்சரணாய்ச் சேர்ந்த மகிழ்மாறன் தாளினையே**
**உன்சரணாய் நெஞ்சமே! உள் (60)**

என்ற வெண்பாவாகும்.

(ஈ) வேதாந்த தேசிகர். 'திராவிடோபநிஷத் சங்கதி' 'திராவிடோபநிஷத் தாத்பரியரத்நாவளி' என் சிறந்த இரண்டு வடமொழி நூல்களால் திருவாய்மொழியின் சிறப்பைப் பாராட்டியுள்ளார்.

(உ) திருக்குருகூரில் நம்மாழ்வார் குடிவழி வந்த கல்வி யிலும் கவிபாடுவதிலும் சிறந்து விளங்கிய புலவர் பெரு மக்களில் சிலர் நம்மாழ்வாரின் பெருமைகளையும் அவர்தம் நூல்களின் சிறப்புகளையும் அமைத்து, 'மாறனலங்காரம்' 'மாறன் பாப்பாவினம்' 'மாறன் திருப்பதிக் கோவை', 'மாறனகப் பொருள்' முதலிய பல நூல்களை இயற்றி யுள்ளனர். திருவேங்கடத் துறைவான் கவிராயர் இயற்றிய 'மாறன் கோவை' என்ற ஓர் அரிய நூலும் உள்ளது.

2. திருவாய்மொழி எல்லாவற்றாலும் சிறந்ததொரு நூலாயிருப்பதனால் சிறந்த தமிழ் நூல்களின் உரையாசிரியர் கள் இதிலிருந்து இலக்கியக் கருத்துகளுக்கும், இலக்கணக் குறிப்புகளுக்கும் பல மேற்கோள்கள் எடுத்துக் காட்டி யுள்ளனர்.

(அ) திருக்குறளுக்குச் சிறந்த உரை அருளிய பரி மேலழகர்,

> பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
> நிலையாமை காணப் படும் (349)

என்ற குறளின் உரையில் 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' (திருவாய் 1. 2: 5) என்ற பகுதியையும்,

> ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
> பேரா இயற்கை தரும் (370)

என்ற குறளின் உரையில்,

நன்றாய் ஞானம் கடந்துபோய்
நல்லிந் திரிய மெல்லாம் ஈர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும்பாழ்
உலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்ப துன்பங்கள்
செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே யப்போ தேவீடு (8 8; 6)

என்ற பாசுரத்தையும், அரசன் இறைவன் என வழங்கப் பெறுவான் ன்பதை விளக்குமிடத்தில்,

திருவுடை மன்னரைக் காணில்
திருமாலைக் கண்டேனே என்னும் (4. 4; 8)

என்ற பாசுரப் பகுதியையும் மேற்கோள் காட்டியுள்ளார். ஆரா இயற்கை அவா நீப்பின்'' (370) என்ற குறளுரையில்

களிப்பும், கவர்வுமற்றுப்
பிறப்புப் பிணி மூப்பிறப்பற்று
ஒளிக்கொண்ட சோதியு மாய்
உடன்கூடுவ தென்றுகொலோ (2 3: 10)

என்ற பாசுரப் பகுதியை ''களிப்பும் கவற்சிகளும் பிறப் பிறப்பும் பிணி மூப்பிறப்புக்களும் முதலியன இன்றி உயிர் நிரதிசய இன்பத்ததாய் நிற்றலின் வீட்டினைப் 'பேரா இயற்கை' என்றார்'' என்று உரைநடைப் படுத்தி விளக்குவர்.

(ஆ) சேனாவரையர் 'நீட்டும் வழி நீட்டல்' என்ற இலக்கணக் குறிப்பிற்கு [தொல். சொல். நூற்பா-) 'வீடுமின்' முற்றவும்' (திருவாய் 1. 2: 1) என்ற பாசுரப் பகுதியாகிய 'வீடுமின்' என்பதனை எடுத்துக் காட்டியுள்ளார்.

(இ) நச்சினார்க்கினியர் தொல்காப்பியச் செய்யுளியல் 'தரவின்றாகித் தாழிசை பெற்றும்' (நூற்பா-149) என்பதன் உரையில் திருவாய்மொழியை எடுத்துக் கூறி இதன்

ஒவ்வொரு பதிகத்திலும் (திருவாய்மொழியிலும்) உள்ள பாசுரங்கள் தாழிசைகள் என்றும், இவை நான்கடியின் மிகாமல் வந்தவை என்றும் கூறினர். ஒவ்வொரு பதிகப் பாக்களும் ஒரு பொருள் மேல் அடுக்கி வந்தன என்றும் கூறினர். அவர் எழுத்தெண்ணி வரும் கட்டளைக் கலித் துறையைத் 'தரவுக் கொச்சகம்' என்றனர்.

எனவே, திருவாய்மொழிப் பாசுரங்க ளெல்லாம் பிற்கால இலக்கண நூல் கொண்டு விருத்தப் பாக்கள் என்று கூறலாகாது என்பதும், திருவிருத்தப் பாசுரங்களெல்லாம் அவ்வாறே கட்டளைக் கலித்துறை என்று கூறுதலாகாது என்பதும், இவற்றைத் தொல்காப்பிய இலக்கணம் கொண்டு 'தாழிசைகள்' என்றும், 'தரவுக் கொச்சகம்' என்றும் கூறுதல் வேண்டும் என்பதும் அறியப்பெறுகின்றன.

(ஈ) பிரயோக விவேக நூலார் பல இலக்கணக் குறிப்பு களுக்கு திருவாய்மொழியிலிருந்து பல மேற்கோள்களை எடுத்துக் காட்டியுள்ளனர். இரண்டாம் பாட்டின் உரையில் திருநாராயணன் தாள் காலம் பெறச் சிந்தித்துய்மினோ (4. 1:1) என்பதனையும், பதினோராவது பாட்டின் உரையில் 'பத்மநாபன் உயர்வற உயரும் பெருந்திறலோன்' (2. 7: 11) என்ற பாசுரத்திலிருந்து 'எனக்கே தன்னைத் தந்த கற்பகம்' என்ற பகுதியையும், முப்பத்தைந்தாம் பாட்டின் உரையில் 'வைத்த நாள் வரை' (3. 3: 10) என்ற பாசுரப் பகுதியாகிய 'பைத்த பாம்பணையான்' என்பதனையும், முப்பத்தாறாவது பாட்டின் உரையில் 'பற்பநாபன் உயர்வற உயரும் பெருந் திறலோன், எற்பரன்' (2. 7: 11) என்ற பகுதியையும் முப்பத்தொன்பதாம் பாட்டின் உரையில் 'கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர், பெரு நாடு காண இம்மையிலே பிச்சை தாம் கொள்வர்' (4. 1: 1) என்ற பகுதியையும்' நாற்பத்தேழாம் பாட்டின் உரையில் 'வைகல் பூங்கழிவாய்

வந்து மேயும் குருகினங்காள்...கைகள் கூப்பிச் செல்லீர்' (6.1: 1 )என்ற பகுதியையும், நாற்பத்தொன்பதாம் பாட்டின் உரையில் 'பால்வாய்ப் பிறைப்பிள்ளை யொக்கலைக் கொண்டு பகல் இழந்த, மேற்பாற்றிசைப் பெண் புலம்புறு மாலை' (திருவருத் -35), 'வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ் பாலை' (திருவிருத். 26) என்ற பகுதிகளையும் மேற்கோளாகக் காட்டியுள்ளனர். வேறு சில சொற்றொடர்களும் 'காரிமாறன்' என்ற ஆழ்வார் பெயரும் காட்டப் பெற்றுள்ளன.

(உ) இலக்கணக் கொத்து ஆசிரியராகிய சுவாமி நாத தேசிகர் 'கருநாய் கவர்ந்தகாலர் சிதைகிய பானையர்' (திருவாய் 4.1: 1) என்ற பகுதியை மேற்கோளாகக் காட்டினர்.

திருவாய்மொழி பல வகையிலும் சிறப்புற்று விளங்குவதனால் உரையாசிரியர் பலரும் பிற்கால நூலாசியர்களும் அதிலிருந்து இவ்வாறு மேற்கோள்கள் காட்டித் தம் படைப்புகளைச் சிறப்பித்துக் கொள்ளலாயினர்.

# 7. அகப்பொருள் தத்துவம்

பரம்பொருளுக்கும் ஆன்மாவிற்கும் ஒன்பது வகையான தொடர்புகள் — உறவுமுறைகள் — ஏற்பட்டுள்ளனவென்று வைணவ தத்துவம் கூறுகின்றது. இதை அறிந்து கொள்வதே சம்பந்த ஞானம் என்பது. இதை அறிந்து கொள்ளாததால் தான் ஆன்மாக்கள் நெடுங்காலமாக இறைவனை விட்டுப் பிரிந்து பிறவிக் கடலில் ஆழ்ந்து துன்புறுகின்றன. சர்வேசுவரனையும் நம்மையும் பொருத்திவைப்பது இச்சம்பந்த ஞானமேயாகும். சம்பந்த ஞானம் உடையவர்களிடத்தில் சர்வேசுவரன் விரும்பியுடைவன். ஆதலால் சம்பந்த ஞானம் ஈசுவரனையும் விருப்புறுத்துவதற்கு உரியதாகின்றது. இந்த ஞானமில்லாத பிறவி பயனற்ற பிறவியாகின்றது. இக்கருத்து பற்றியே திருமழிசைபிரானும்,

> அன்றுநான் பிறந்திலேன்
> பிறந்தபின் மறந்திலேன்[1]

என்றார். அதாவது, எனக்கு சம்பந்த ஞானம் பிறவாதிருந்த போது பல திவ்யதேசங்களில் நிற்றல், இருத்தல், கிடத்தல்களைச் செய்து கொண்டிருந்தான்; எனக்கு அதில் ருசி பிறப்பிக்கைக்காக இவ்வாறு செய்து கொண்டிருந்தான். (இது அவனுக்குச் சாதனம்); எனக்கு ருசி பிறந்து சம்பந்த

1. திருச்சந். 64

ஞானம் ஏற்பட்ட பிறகு திவ்விய தேசங்களில் செய்து கொண்டிருந்த செயல்களைத் தவிர்த்து, அவ்விருப்புகளையெல்லாம் என் நெஞ்சில் செய்தருளுகின்றான் (இது அவனுக்குச் சாத்தியம் - பலன்)'' என்கின்றார்.

நம்மாழ்வாரும் இந்தச் சம்பந்தஞானத்தின் பெருமையைக் குறித்து,

> **அடங்கெழில் சம்பத்து**
> **அடங்கக் கண்டு. ஈசன்**
> **அடங்கெழில் அஃது என்று**
> **அடங்குக உள்ளே.** —திருவாய் 1.2 : 7

[அடங்குஎழில் - முற்றிலும் அடங்கியதான; சம்பத்து - விபூதி; அடங்க - அஃதெல்லாம்; ஈசனது - எம்பெருமானுடைய; எழில் - சம்பத்து; உள்ளே - அந்த பகவத விபூதிக்குள்ளே; அடங்குக - சொருகிப் போவது]

என்ற பாசுரத்தில் விளக்குகின்றார். எம்பெருமானுடைய கட்டடங்க நன்றான செல்வத்தை எல்லாம் கண்டு நமக்கு வகுத்த சுவாமியினுடைய செல்வம் இவையெல்லாம் என்று நினைந்து அவ்விபூதிக்குள்ளே தானும் ஒருவனாகச் சேரக் கடவன். இதனால் எம்பெருமானுக்கும் நமக்கும் உள்ள உறவை உணரமுடியும்; உணரவே கூச்சம் குலையும் என்பது இதன் தேர்ந்த கருத்து. அந்த விபூதியினின்றும் வெளிப் பட்டால் விநாசமே உண்டாகும்; அதனுட்பட்டுவிட்டால் கூசவேண்டிய அவசியமே இல்லை. சம்பந்த உணர்ச்சி உண்டானால் அதுவே போதும். நிருபாதிக பிதாவாகிய எம்பெருமானுடைய 'உன்றன்னோடு, உறவேல் நமக்கு இங்கொழிக்க ஒழியாது' (திருப். 28) என்னும்படியான உறவின் உறுதியை உற்று நோக்கினால் இக்கருத்து தெளிவாகும். உடைமை - உடையவன் என்னும் சம்பந்த ஞானம்

அடியாகத் தானும் அவன் விபூதியில் ஒருவனாகச் சேர்ந்து கொள்ள வேண்டும் என்பதுவே இந்த உண்மை.

இராசகுமாரன் ஒருவன் ஓர் அழகிய தோட்டத்தைக் கண்டு உள்ளே புக நினைத்தும் கட்டுங்காவலுமாக இருந்தது கண்டு அஞ்சி நிற்கும்போது இதனை அறிந்த ஒருவன், 'இஃது உனது தகப்பனுடையது காண்' என்று எடுத்துக் கூறி 'இதில் நீ நினைத்தபடி புகுந்து திளைத்துப் பரிமாறலாம்' என்று விளக்குவதுபோலக் கொள்க. இந்த சம்பந்தஞானத்தை ஈட்டாசிரியர் இந்தப் பாசுரத்தின் வியாக்கியத்தில் ஒரு வரலாற்று மூலம் விளக்குகின்றார். வணிகன் ஒருவன் தன் மனைவி கருவுற்றிருக்கும் காலத்தில் பொருள் தேடும் விருப்பினால் வெளிநாடு சென்றான். அவளும் கருவுயிர்த்தாள். மகனும் தக்க வயது அடைந்து தன் தகப்பனின் தொழிலையே தன் தொழிலாக மேற்கொண்டான். இவனும் பொருளீட்டப் போனான். இருவரும் தத்தமக்கு வேண்டிய சரக்குகளை வாங்கிக் கொண்டு ஒரு பந்தலில் வந்து தங்கினர். அந்த இடம் இருவருக்கும் போதவில்லையாதலால் விவாதம் உண்டாயிற்று. அச்சமயம்இருவரையும் அறிந்தான் ஒருவன் வந்து 'இவன் உன் தகப்பன்; நீ இவன் மகன்' என்று தந்தை—மகன் என்ற சம்பந்தத்தை அறிவித்தான். அப்பொழுது அவ்விருவரும் 'முன்பே நம் சம்பந்தம் தெரிந்திருந்தால் இரண்டு சரக்குகளையும் . ஒன்று சேர்த்துப் பொருளீட்டியிருக்கலாம். இனி என்ன செய்வது?' என்று அளவளாவிக் களித்திருந்தனர். அதுபோல ஓர் ஆசாரியன் வாயிலாக எம்பெருமானுக்கும் நமக்கும் உள்ள சம்பந்தம் இன்னதென்று தெரிந்து கொண்டால், அதனால் நாம் அழியாப் பேறெய்திச் சுகமுற்று வாழலாம்.

எம்பெருமானுக்கும் நமக்கும் உள்ள உறவு ஒன்பது வகைப்படும் என்று சாத்திரங்கள் கூறுவதை எட்டெழுத்து

மந்திரமும் குறிப்பிடுவதாக நம் முன்னோர்கள் உரைத்துப் போயினர். எட்டு எழுத்து மந்திரம் 'ஓம் நமோ நாராயணாய' என்பது. இது மூன்று பதமாயும் (ஓம்+நமோ+நாராயணாய எட்டு எழுத்துகளாயும் (ஓம்—ஓர் எழுத்து ; நம—இரண்டு எழுத்து; நாராயணாய—ஐந்து எழுத்து) இருக்கும். பிரணவம் (ஓம்) என்ற பதம் அ, உ, ம என்று மூன்று எழுத்து களாய்ப் பிரியும். இங்ஙனம் பிரிந்த நிலையில் மூன்று பொருள் களைத் தெரிவிக்கும். சேர்ந்திருக்கும் நிலையில் ஒரே பதமாய் ஒரே பொருளைத் தெரிவிக்கும். இந்த அடிப்படை யில் சம்பந்தஞானத்தை நோக்குவோம்.

1. அகாரத்தினால்,

   (i) தந்தை-தனயன் என்ற உறவும்,

   (ii) இரட்சிக்கப்படுபவன்—இரட்சிப்பவன் என்ற உறவும் அறியக் கிடக்கின்றன.

2. 'ஆய' என்ற மறைந்து கிடக்கும் நான்காம் வேற்றுமை உருபால் (லுப்த சதுர்த்தியால்)

   (iii) அடிமை—அடிமை கொள்பவன் (சேஷ-சேஷி பாவனை) என்ற உறவு சொல்லப் பெறுகின்றது.

3. உகாரத்தினால்,

   (iv) நாயக - நாயகி (தலைவன்-தலைவி உறவு) நவிலப் பெறுகின்றது.

4. மகாரத்தினால்,

   (v) அறிபவன்—அறியப்படும் பொருள் (ஞாத்ரு-ஜ்ஞேய சம்பந்தம்) என்ற உறவு உரைக்கப் பெறுகின்றது,

5. நமஸ்ஸாலே,

   (vi) ஸ்வஸ்சாமி (சொத்து—சொத்துக்குரியவன்) என்ற சம்பந்தம் (ஸ்வம்-சொத்து, ஸ்வாமி—சொத்துக் குரியவன்) சொல்லப் பெறுகின்றது.

6. நாரபதத்தாலே,
(vii) சரீர—சரீரி (உடல்-உடலையுடையவன்) என்ற உறவு கூறப் பெறுகின்றது.

7. அயன பதத்தாலே,
(viii) ஆதார—ஆதேய(தாங்குகிறவன்-தாங்கப்படும்பொருள்) தொடர்பு காட்டப் பெறுகின்றது.

8. ஆய பதத்தால்,
(ix) போகத்தை அநுபவிப்பவன்—போக்கியப் பொருள் (போக்த்ரு-போக்கிய உறவு) என்ற சம்பந்தம் சாற்றப் படுகின்றது.

ஆக, திருமந்திரம் இறைவனுக்கும் ஆன்மாவுக்குமுள்ள ஒன்பது வகை உறவுகளைச் சொல்லித் தலைக்கட்டுகின்றது. இந்த ஒன்பது வகையான சம்பந்தங்கள் ஓர் ஆன்மாவுக்கும் பிறிதொரு ஆன்மாவுக்கும் வினைப்பயனால் நேர்கின்ற தந்தை—தனயன் முதலிய உறவுகள் அந்த வினையின் தொடர்பு நீங்கும் போதெல்லாம் மாறி விடுகின்றன. ஆனால் இறைவனுக்கும் ஆன்மாவுக்குமுள்ள சம்பந்தம் 'உன் தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழியாது' (திருப். 28) என்று ஆண்டாள் அருளியவாறு அழியாதிருத்த லாகும். இதனைப் பிள்ளை உலக ஆசிரியர் அருளிச் செய்த நவவித சம்பந்தம் என்ற நூலில் தெளிவாகக் காணலாம்.

ஈண்டு நாம் கருத வேண்டியது நான்காவது சம்பந்த மாகிய நாயக-நாயகி பாவனை என்பது. இந்த உறவே அகப் பொருள் தத்துவமாக விரிகின்றது. இந்தஉறவே ஏனையவை எல்லாவற்றுள்ளும் சிறந்தது; உயிராயது. இந்த முறையில் பரமான்மாவைத் தலைவனாகவும் சீவான்மாவைத் தலைவி யாகவும் வைத்து விளக்கும் பாடல்களை நாலாயிரத்திலும் தேவாரத்திலும் காணலாம். ஆயினும், வைணவப் பெரு மக்களே சங்க கால நெறியையொட்டி பிற்காலத் தத்துவ முறையைக் கலந்து ஓர் அகப்பொருள் நெறியினை அமைத்துக் காட்டிய பெருமையினைப் பெற்றனர்.

ஆழ்வார்கள் தாமான தன்மையை விட்டுப் பெண் பாவனையை ஏறிட்டுக் கொள்ளுதல் எற்றுக்கு? என்ற வினா எழுகின்றது. இதற்கு விடை காணவேண்டும். ஆழ்வார்கள் பெண் தன்மையைத் தாமாக ஏறிட்டுக் கொள்ளுகின்றன ரல்லர். இந்த நிலை (அவஸ்தை) தானே பரவசமாக வந்து சேருகின்றது. புருடோத்தமனாகிய எம்பெருமானின் பேராண்மைக்கு முன் உலகம் அடங்கப் பெண் தன்மையதா யிருக்கையாலும், சீவான்மாவுக்கு சுவாதந்திரிய நாற்றமே யின்றிப் பாரதந்திரியமே வடிவாயிருப்பதாலும் இவ்வகை களுக்கேற்ப பெண் பாவனை வந்தேறியன்றே என்று கொள்ளலாம். எனவே, ஆழ்வார்கள் குறிப்பாக நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பெண்தன்மை எய்திப் பல திருக்கோயில் எம்பெருமான்களைப் பாடி அநுபவித்ததை அவர்களுடைய திருப்பாசுரங்களில் கண்டு மகிழலாம்.

வைணவர்களிடையே நிலவும் இன்னொரு மரபும் உண்டு. தண்டகாரணிய முனிவர்கள் இராமபிரானது பேரழகில் ஈடுபட்டுப் பெண்மையை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆயமங்கையர்களாகிக் கண்ணனைக் கூடினர் என்ற வழக்கு ஒன்றுண்டு. ஆனால், ஆழ்வார்கள் அப்படியின்றி அப்பொழுதே பெண்மை நிலையை அடைந்து எம்பெரு மானாகிய புருடோத்தமனை அநுபவிக்கக் காதலிக்கின்றனர். நம்மாழ்வார் போன்ற ஞானச் செல்வர்களிடத்தில் சில சமயம் ஞானம் தலைதூக்கி நிற்கும்; சில சமயம் பிரேமம் (காதல்) மீதூர்ந்து நிற்கும். இந்த இரண்டு நிலையிலிருக்கும் பொழுதும் அவர்கள் பாசுரம் அருளியுள்ளனர். இதனை,

> **ஞானத்தில் தம்பேச்சு**
> **பிரேமத்தில் பெண்பேச்சு (118)**

என்று 'ஆசாரிய ஹிருதயம்' என்ற நூல் குறிப்பிடும். அதாவது, ஞான நிலையில் இருக்கும்போது அவர்கள்

தாமான நிலையிலிருந்து பேசுவர். பிரேம நிலையிலிருக்கும் பொழுது பெண்தன்மையை அடைந்து வேற்று வாயாலே பெண்பேச்சாகப் பேசுவர். அப்போது நம்மாழ்வாருக்குப் 'பராங்குசர்' என்ற ஆண்மைப் பெயர் நீங்கிப் 'பராங்குச நாயகி' என்ற பெண்மைப் பெயரும், திருமங்கை யாழ்வாருக்குப் 'பரகாலர்' என்ற ஆண்மைப் பெயர் நீங்கிப் 'பரகால நாயகி' என்ற பெண்மைப் பெயரும் வழங்கப் பெறும்.

இங்ஙனம் ஆழ்வார்கள் பெண்மை நிலையிலிருந்து கொண்டு எம்பெருமானை அநுபவிக்கும் பொழுது, அவர்கள் தோழி, தாய், மகள் என மூவருள் ஒருவரின் தன்மையைத் தாம் அடைந்து கூற்றுகள் நிகழ்த்துவர்.

> **சம்பந்த உபாய பலன்களில் உணர்த்தி துணிவு பதற்றம் ஆகிய பிரஜ்ஞாவஸ்தைகளுக்குத் தோழி தாயார் மகள் என்று பேர் (133)**

> [பிரஜ்ஞாவஸ்தை - மூன்று காலங்களையும் அறியும் அறிவின் நிலை]

என்று 'ஆசாரிய ஹிருதயம்' கூறுகின்றது. இங்ஙனம் மூன்று நிலைகளாக வடிவெடுக்கும் பாசுரங்கட்குத் தத்துவமும் கூறுகின்றது. இந்த மூன்று நிலைகளையும் மூன்று 'பிரஜ்ஞாவஸ்தைகள்' (அவஸ்தை-நிலை) என்று விளக்கமும் தருகின்றது. அந்த விளக்கங்களைப் பின்னர்க் காண்போம்.

இங்ஙனம் ஆழ்வார்கள் பெண்மை நிலையிலிருந்து கொண்டு எம்பெருமானை அநுபவிக்கும் பொழுது அவர்கள் பாசுரங்களும் தாய் சொல்வதுபோல் வடிவெடுத்துத் 'தாய்ப் பாசுரம்' என்று பெயர் பெறும்; தோழி சொல்வதுபோல் உருக்கொண்டு 'தோழிபாசுரம்' என்று திருநாமம் பெறும்; தலைவி பேசுவதுபோல் வடிவெடுத்து 'மகள் பாசுரம்' என்று வழங்கப்பெறும். இங்ஙனம் மூன்று வகையாகக் கூற்றுகள்

நிகழ்ந்து பாசுரங்களாக வெளிவந்தாலும் பாசுரங்கள் பேசுகின்றவர்கள் ஆழ்வார்களேயாவர். இதனைப் பதிகங்கள் தோறும் வரும் பலசுருதிப் பாடல்களால் (திருக்கடைக் காப்புச் செய்யுட்களால்) தெளிவாகும். திருவரங்கப் பெருமான்மீது தாய்ப்பாசுரமாக அருளிய பதிகத்தில்[2] 'வண்குருகூர்ச் சடகோபன், முகில்வண்ணன் அடிமேல் சொன்ன சொல் மாலை ஆயிரத்துள் இப்பத்தும்' என்றும்; மலைநாட்டுத் திருப்புலியூர் எம்பெருமான்மீது[3] தோழி பாசுரமாக அருளின பாசுரத்தின்[3] பல சுருதிப் பாசுரத்தில் 'தொண்டர் தொண்டர், தொண்டர் தொண்டர் சடகோபன் சொல், நேர்பட்ட தமிழ் மாலை ஆயிரத்துள் இப்பத்தும்' என்றும், மலைநாட்டுத் திருமூழிக்களத்து உறையும் எம்பெருமான்மீது மகள் பாசுரமாக அருளிய பதிகத்தின்[4] திருக்கடைக்காப்புச் செய்யுளில் 'வண்குருகூர்ச் சடகோபன் வாய்ந்துரைத்த அழிவு இல்லா ஆயிரத்துள இப்பத்தும்' என்றும் கூறியிருப்பதனால் இதனை அறியலாம். ஏனைய அகப்பொருள் பாசுரங்களிலும் இதே போக்கு இருப்பதையும் கண்டு மகிழலாம். ஓர் ஆறானது பல வாய்க்கால்களாகப் பெருகி வேறு வேறு பெயர்களைப் பெற்றாலும் அவற்றில் பாய்ந்து செல்லும் நீர் ஒரே ஆற்று நீராகவே இருக்கும் என்பதை நாம் அறிவோம். அங்ஙனமே ஆழ்வாரது சொல் மாலைகள் மூன்று நிலைகளாக வழிந்து புறப்பட்டாலும், அவை ஆழ்வார்களது பாசுரங்களாகவே தலைக்கட்டும்.

திருவாய்மொழியில் 27 பதிகங்கள் பெண் பாவனையில் பேசியவைகளாக அமைந்துள்ளன. பெண் நிலையிலிருந்து பேசியவற்றுள் தோழி பாவனையில் பேசியவை மூன்று

2. திருவாய். 7.2. 'கங்குலும் பகலும்'
3. ஷெ. 8.9. 'கருமாணிக்க மலைமேல்'
4. ஷெ. 9.7. 'எங்கானல் அகம்'

பதிகங்கள்; தாய் பாவனையில் பேசியவை ஏழு பதிகங்கள்; மகள் பாவனையில் பேசியவை பதினேழு பதிகங்கள். இந்த மூன்று நிலைகளும் 'ஞானாவஸ்தைகள்' என்னாமல் 'பிரஜ்ஞாவஸ்தைகள்' என்றது மூன்று விதமான நிலைகளும் அவர்கட்கு எல்லாக் காலங்களிலும் உண்டு என்னுமிடம் தோற்றுகைக்காக. திருவெட்டெழுத்தின் முப்பதப் பொருள் களைப் பற்றிய ஞானமும் இவர்கள் திருவுள்ளத்தில் எப்பொழுதும் நிலைத்தேயன்றோ இருப்பது? பெரிய திருமொழியில் உள்ள அகப்பொருள் நுவலும் திருமொழிகள் 23; திருநெடுந்தாண்டகத்தில் 2; மடல் 2; ஆகமொத்தம் 27 திருமொழிகள். இவற்றுள்ளும் தாய்ப் பாவனையில் உள்ளவை 10; மகள் பாவனையில் உள்ளவை 17; தோழிப் பாவனையில் ஒன்றுகூட இல்லை.

இங்ஙனம் மூன்று வகையாகச் செல்லும் பாசுரங்கட்குத் திருமந்திரத்தின் அடிப்படையில் விளக்கமும் தந்துள்ளனர் நம் முன்னோர்கள். 'ஓம் நமோ நாராயணாய' என்பது திருமந்திரம். இதிலுள்ள மூன்று பதங்களும் முறையே மூன்று பொருள்களைச் சொல்லுகின்றன.[5] அவை சேஷத்துவம், பாரதந்திரியம், கைங்கரியம் என்பன.[6] அதாவது 'பிரணவம்' சேஷத்துவத்தையும் (பிறருக்கு அடிமையாயிருத்தலையும்) 'நமஸ்ஸு' பாரதந்திரியத் தையும் (பரன் அல்லது பகவானுக்கு வசப்பட்டிருத் தலையும்), 'நாராயணாய' சேதநன் ஈசுவரனுக்குப் புரியவேண்டிய கைங்கரியத்தையும் தெரிவிக்கின்றன. மற்றும் 'ஓம்' என்னும் 'பிரணவம்' பிரிந்திருக்கும் நிலையில் அ,உ,ம என்ற மூன்று எழுத்துக் கொண்டது. இந்த மூன்று எழுத்துகளும் மூன்று பதங்களாய் மூன்று பொருள்களைத் தெரிவிக்கும். அதாவது அகாரம் பகவானையும், அதில் ஏறி மறைந்துள்ள வேற்றுமை சேஷத்துவத்தையும் (அடிமைத்

5. முமுட்க-29.
6. ஷெ -230

தன்மையையும்), உகாரம் அந்த அடிமைத் தன்மையின் அநந்யார்ஹத்துவத்தையும் (மற்றவருக்கில்லாமல் ஈசுவர னுக்கே உரித்தாயிருத்தலையும்), மகாரம் ஞானவானாகிய சீவான்மாவையும் தெரிவிக்கின்றன. திருவெட்டெழுத்தின் மூன்று சொற்களாலும் குறிப்பிடப்பெறும் ஞானம் ஆழ்வா ருடைய திருவுள்ளத்தில் எப்பொழுதும் நிலைத்தே இருக்கும் என்பதை உணர்த்தவே தோழி, தாய், மகள் என்ற மூன்று நிலைகளும் எல்லாக் காலங்களிலும் இருந்தன என்று சொல்லப் பெற்றன. இவற்றை ஆ.ஹி. சூத்திரம் 138 **அவஸ்தா திரயவிருத்தி** (திரயம் - மூன்று; அவஸ்தை - நிலை) என்று பேசும்.

**தோழிப் பாசுரங்கள் :** மேற்கூறிய விளக்கத்திலிருந்து தோழியின் பாசுரங்களினால் ஆன்மாக்கள் யாவும் பிற தெய்வங்கட்கு அடிமைப்பட்டது அன்று எனவும், அவை தமக்குத்தாமே அடிமை அன்று எனவும் ஆகிய அநந்யார்ஹ சேஷத்துவத்தைத் தெளிவாக அறிய முடிகின்றது.

**தாய்ப் பாசுரங்கள் :** தாய்ப்பாசுரங்கள் ஈசுவரபாரதந்திரி யத்தையும் அவனே உபாயமாகின்றான் என்பதையும் தெரிவிக்கின்றன. இதனை விளக்க வேண்டியது இன்றியமை யாததாகின்றது. பெண்பிள்ளையைப் பெற்று வளர்ப்பவள் தாய். அப்பெண் தக்க வயதை அடைந்ததும், பேராண்மைக்கு இருப்பிடமாகவுள்ள எம்பெருமானிடம் கழிபெருங்காதலை யுடையவளாகின்றாள். அவன் இருக்கும் இடத்தைப் போய்ச் சேர வேண்டும் என்று பதறுகின்றாள். இங்ஙனம் பதறும் தன் மகளைத் தடுத்து நிறுத்துகின்றாள் திருத் தாயார். தலைவனே தலைவி இருக்கும் இடத்திற்கு வர வேண்டும் என்பது நடைபெற வேண்டிய ஒழுங்குமுறை என்றும், அங்ஙனமின்றித் தலைவியே தலைவனிருக்கும் இடத்திற்குப் புறப்படுவது குலமரியாதைக்குச் சிறிதும் பொருந்துவதன்று என்றும் நினைக்கின்றாள் தாய்.

திருமந்திரத்தின் இரண்டாவது சொல்லாகிய நம என்பது இந்நிலையைக் குறிக்கின்றது. இச்சொல்லை ந+ம; என்று இரண்டாகப் பிரிக்கலாம். இவ்விரண்டு எழுத்துகளும் தனித்தனிப் பொருளைத் தருதலின் பதங்களாயின.[7] இவற்றுள் ஆறாம் வேற்றுமையுடன் கூடிய 'ம' என்னும் பதம் 'சேதநன் ஈசுவரனுக்கே உரியவன்' என இயம்பும் நான்காம் வேற்றுமையின் பொருளுக்கு மாறாய்த் 'தனக்குத் தான் உரியன்' என்னும் பொருளைக் கொடுக்கின்றது. ஆனால் 'ந' என்னும் பதமோ அதற்கு எதிர்மறைப் பொருளால் அதைத் தடுத்து நிறுத்தித் 'தனக்குத்தான் உரியனல்லன்' என்பதை அறிவிக்கின்றது.[8] இதனால் 'நான் பிறனுக்கு (ஈசுவரனுக்கு) உரியவன்' என்பது பெறப்படு கின்றது. இம்முறையில் இச்சொல் ஈசுவர பாரதந்திரி யத்தைத் தெரிவிக்கின்றது. இன்னும் விளக்கிக் கூறினால் இச்சொல் ஞானத்தினால் ஏற்படும் சுதந்திரத் தன்மையை ஒழிக்கின்றது. இதன் காரணமாய் ஏற்படும் 'தன்னைத் தானே காத்துக் கொள்ள முடியும்' என்ற எண்ணத்தையும் நீக்குகின்றது. இனி, இவனைக் காத்து இரட்சிப்பவன் ஈசுவரனே ஆகின்றான் என்ற துணிவு பிறக்கின்றது. அஃதாவது, ஈசுவரனே உபாயம் என்ற பொருள் கிடைக் கின்றது. இந்த மன நிலைதான் 'தாய்' என்று குறிக்கப் பெறுகின்றது, திருவாய்மொழியில் தாய் பாவனையில் பேசும் ஏழு பதிகங்களும் ஈசுவர பாரதந்திரியத்தையும், அவனே உபாய மாகின்றான் என்ற கருத்தையும் தெரிவிக் கின்றன. ஆகவே, இவை உபாயத்தில் உறுதி பூண்டிருக்கும் நிலையிலே எழுந்த பேச்சுகள் என்பது தெளிவாகின்றது.

மகள் பாசுரங்கள் : மகள் பாசுரமாக நடைபெறுகின்ற பதிகங்களின் தத்துவப் பொருளையும் எடுத்துக்காட்டு

7. முமுட்சு-78.
8. ஷெ. 79, 80.

வோம். பெற்றோர் அல்லது உறவினர் கூட்டாமலேயே தலைவனுடன் இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து தலைவனுடைய ஒப்புயர்வற்ற வனப்பு முதலியவற்றில் ஈடுபட்டு இருப்பவள் மகள்; குடியின் கட்டுப்பாட்டையும் பாராமல் 'அவனைக் கிட்டியல்லது உயிர் வாழ்ந்திருக்கமாட்டேன்' என்னும் பதற்றத்தை உடையவள் இவள். காலக் கழிவை இவளால் சிறிதேனும் பொறுக்கமுடிவதில்லை. பிரணவத்தினாலும் நமஸ்ஸாலும் எல்லோருக்கும் சேஷியாய் (தலைவனாய்), சரண்யனாய், அறுதியிடப் பெற்றவன் எம்பெருமான். எல்லோருக்கும் புகலிடமாக இருப்பவனும் இவனே, பிரணவத்தாலும் நமஸ்ஸாலும் இவை உணரப் பெற்றபின்பு 'நாராயணாய' என்ற சொல்லினால் கூறப் பெற்றுள்ள சொரூபம், ரூபம், குணம், விபூதி முதலியவற்றின்[9] சேர்க்கையாலுள்ள பெருமையை நினைந்து மகிழ்பவள் இவள். எம்பெருமான் சாத்தியோபாயமாக[10] இருந்தால் தான் செய்யும் சாதனங்கள் முடிவுற்ற பிறகே சாத்தியமாகின்ற பேறு கிடைக்கக் கூடும் என்று பொறுத்திருக்கலாம். ஆனால், அவன் சித்தோபாயமாக[11] இருப்பவன். அதனால் அவனைத் தாமதித்து அநுபவிக்கக் காரணம் இல்லை; 'அவனே உபாயம்' என்ற கோட்பாட்டையும் மீறித் தான் நினைத்த பேற்றினை உடனே பெறவேண்டும் என்ற பதற்றத்தை உடையவளாக இருக்கின்றாள் இவள். இந்த

9. சொரூபம்: ஈசுவரனின் தியானத்திற்குரியசொரூபம்; ரூபம்—பகவானுடைய திவ்விய மங்கள விக்கிரகம்; குணம்—ஆன்ம குணம், விக்கிரக குணம். ஆன்ம குணங்கள்—ஞானம், சக்தி முதலியன; விக்கிரக குணம்—அழகு மென்மை முதலியன, விபூதி—நியமிக்கப்படும் பொருள் (ஐசுவரியம்).
10. சாத்தியோபாயம்—மக்களால் சாதித்துக் கொள்ளுகின்ற உபாயம் எடு. பக்தி, பிரபத்தி,
11. சித்தோபாயம் முன்னமே இருக்கும் உபாயம்; அஃதாவது இறைவனாகிய உபாயம்.

மன நிலைதான் 'மகள்' (தலைவி) என்று குறிப்பிடப் பெறுகின்றது. திருவாய்மொழியில் மகள் பாவனையில் பேசும் பதிகங்களும் இந்த நிலையையே குறிக்கின்றன என்பதை இந்தப் பதிகங்களை ஊன்றிப் படிப்பதனால் அறியலாம். இம் மூன்று நிலைகளும் தோன்றுவதை ஆசாரிய ஹ்ருதயம் (சூத்திரம்-131) விளக்குகின்றது.

வேதாந்தங்களில் குறிப்பிடப்பெறும் பக்தி இங்ஙனம் ஆழ்வார்களிடம் காதல் முறையில் பரிணமித்து நிற்றலை அறிய முடிகின்றது. இவர்கள் எம்பெருமான்மீது கொள்ளும் காமம் 'பகவத்விஷய காமம்' என்று வழங்கப் பெறும். இங்ஙனம் இவர்கள் மாதவன்மீது கொள்ளும் காமம் மங்கையர்மீது கொள்ளும் காமத்தினின்றும் வேறுபட்டது. ஆயினும், சிற்றின்ப அநுபவமாகியகாதலுக்குக் கூறப் பெறும் அகப்பொருள் துறைகள் யாவும் இந்த பகவத் விஷய காமத்திற்கும் கூறப்பெறும். சிற்றின்ப அநுபவத்திற்குக் கொங்கை முதலியன சாதனமாயிருப்பது போல, பகவத் விஷயாநுபவத்திற்கும் பரபக்தி[12], பரஞானம்[13], பரமபக்தி[14] என்பவை இன்றியமையாதனவாக இருப்பதால் அவையே கொங்கை முதலான சொற்களால் இவ்வாழ்வார்களின்

12. பரபக்தி - எம்பெருமானை நேரில் காண்வேண்டும் என்ற ஆவல்.
13. பரஞானம் - எம்பெருமானை நேரில் காணல்
14. பரமபக்தி - எம்பெருமானை மேன் மேலும் இடையறாது அநுபவிக்க வேண்டும் என்னும் ஆவல்.

அன்றியும், எம்பெருமானோடு கூடினபோது சுகிக்கும் படியாகவும் பிரிந்தபோது துக்கிக்கும்படியாகவும் இருப்பது பரபக்தி;பகவானுடைய முழுமையான நேர்காட்சி பரஞானம்; அவனுடைய அநுபவம் பெறாவிடில் நீரைவிட்டுப் பிரிந்த மீன்போல மூச்சு அடங்கும் படி இருத்தல் பரமபக்தி. இவ்வாறு நம் பண்டைய ஆசாரியர்கள் நிலைப் படுத்துவர்.

அருளிச் செயல்களில் கூறப்பெறுகின்றன என்று சமயச் சான்றோர்கள் கொள்வர்.

காதல் சுவையின் தொடர்பு சிறிதுமின்றியே பக்திச் சுவையின் அடிப்படையாகவே பாசுரங்கள் அருளிச்செய்தல் கூடும். அங்ஙனமிருக்க, காதல் சுவையையும் கலந்து பாசுரங் கள் அருளிச் செய்யப் பெற்றிருப்பதற்குக் காரணம் என்னெ? உடல்நலத்திற்குக் காரணமான வேப்பிலை உருண்டையை உட்கொள்ள வேண்டியவர்கட்கு வெல்லத்தை வெளியிற்பூசிக் கொடுத்து உண்பிப்பது போலவும், கொயினாமாத்திரைகட்குச் சருக்கரைப் பாகு பூசி இனிப்புச் சுவையை உண்டாக்கித் தின்பிப்பது போலவும் சிற்றின்பம் கூறும் வகையால் பேரின்பத்தை நிலை நாட்டுகின்றனர் என்று பெரியோர்கள் பணிப்பர், இது கடையாய காமத் தினை யுடையவர்கட்குக் காட்டப் பெறும் உக்தி முறையாக இறையனார் களவியலிலும் கூறப்பெற்றுள்ளமையை ஈண்டு ஒப்பு நோக்கி உணர்தல் தகும். ஆழ்வார்களின் முறுகிய பக்தி நிலையை உணர்த்துவதற்கேற்ற ஓர் இலக்கிய மரபே இஃது என்று கொள்ளினும் இழுக்கில்லை என்க.

இனி, இந்த மூன்று நிலைகளில் உள்ள நம்மாழ்வாரின் பாசுரங்களை அடுத்துவரும் இயல்களில் காண்போம்.

# 8. தோழிப் பாசுரங்கள்

திருவாய்மொழியில் தோழியின் கூற்றாக வருபவை 'தீர்ப்பாரையாம் இனி' (4.6), 'துவளில் மணிமாடம் (6.5), கருமாணிக்கமலை' (8 9) என்பவையாகும். இந்த மூன்றிலும் அநந்யார்ஹத்துவம் தெரியும் (ஆ.ஹி. 134). அநந்யார்ஹத்துவம் என்பது, மற்றவருக்கில்லாமல் ஈசுவரன் ஒருவனுக்கே அடிமைப் பட்டிருத்தலாகும். இதில் முதற் பதிகமாகிய 'தீர்ப்பாரையாமினி' (4.6) என்ற பதிகம் 'வெறிவிலக்கு' பற்றியது.

1. **வெறிவிலக்கு :** தலைவிக்கு எம்பெருமானுடன் இயற்கைப் புணர்ச்சி நடைபெற்று விடுகின்றது. பிறகு பிரிவு ஏற்படுகின்றது. பிரிவாற்றாமையால் தலைவி வருந்துகின்றாள். இவள் நிலையைக் கண்டு தாய்மார்கள் இவள் நோயினையும் அது அவளுக்கு ஏற்பட்ட காரணத்தையும் அதற்குரிய மருந்தினையும் அறியாமல் வெறியாட்டெடுக்கின்றனர். தலைமகள் இதனைக் கேட்டு மிக வருந்துகின்றாள். தலைவியின் துன்பத்திற்குக் காரணமுணர்ந்த தோழி இச்செயலைக் கண்டித்துக் கூறுகின்றதாக நடை பெறுகின்றது இப்பதிகம்.

**தீர்ப்பாரை யாம்இனி எங்ஙனம்**
**நாடுதும், அன்னைமீர்!**
**ஓர்ப்பாலிவ் ஒண்ணுதல் உற்றநன்**
**நோய்இது தேறினோம்;**

**போர்ப்பாகு தான்செய்து அன்றுஐவரை**
**வெல்வித்த மாயப்போர்த்**
**தேர்ப்பாக னார்க்கிவள் சிந்தை**
**துழாய்த்திசைக் கின்றதே(1)**

[தீர்ப்பாரை - நோயைத்தீர்ப்பாரை; நாடும் - தேடிப் பிடிப்பது; ஓர்ப்பால் - மெய்ப்பிக்குமளவில்; உற்ற இது - அடைந்திருக்கும் இந்நோய்; நல்நோய்-அழகான நோய்; தேறினோம் - திண்ணமாக அறிந்தோம்; தேர்ப்பாகனார் - கண்ணன்; சிந்தை - மனம்; துழாய் - துழாவப் பெற்று; திசைக்கின்றது - அறிவழியாநின்றது]

இதில் பராங்குசநாயகியின் தோழி 'இந்நோய் கண்ணன் அடியாக வந்ததாலே இதற்கு நீங்கள் பரிகாரமாக நினைத்துச் செய்கின்றவை பரிகாரமல்ல' என்று கடிகின்றாள்.

இவ்வொண்ணுதல்; 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பது பழமொழி. இவளுடைய திருமுக மண்டலத்தின் தெளிவை நோக்கும்போதே இவளுடைய நோய்க்கு நிதானம் தெரியவில்லையோ? இங்கே ஈடு: "அம்புபட்ட வாட்டத்தோடே முடிந்தாரையும் நீரிலே புக்கு முடிந்தாரையும் முகத்திலே தெரியாதோ? குணாதிக விஷயத்தை ஆசைப்பட்டுப் பொறாமையால் உண்டான மோகமாகையாலே முகத்தில் செவ்விக்கு ஆலத்தி வழிக்கும் படியாயிருக்கின்றது''

**நன்னோய்;** நோன்பு நோற்றுப் பெறவேண்டிய நோய். இது வளர்வதற்கு வழிதேட வேண்டுமேயல்லது இதைப் பரிகரிக்க முயல்வது முறையன்று—இக்கருத்து வெளிப்படை.

**தேறினோம்;** தெளிவு பெற்றோம். இது தோழி சொல்லும் வார்த்தை யாகையாலே அங்குள்ளாரெல்லாரும் கலக்க முற்றிருப்பதாக ஏற்படுகின்றது. இந்தக் கலக்கமே

இவர்கட்கு நிதியாம்; ''மகரிஷிகளின் கோஷ்டியில் கலக்கம் காணக்கிடைக்காது; ஆழ்வார்களின் கோஷ்டியில் தெளிவு காணக் கிடைக்காது.'' என்பர் நம் முதலிகள்.

மாயப்போர்; ஆச்சரியமான போர்; அன்றிக்கே வஞ்சனை யுடைய போர் என்னுதல். பகலை இரவாக்குவது, 'ஆயுதம் எடேன்' என்று உறுதி கூறி ஆயுதம், எடுப்பது ஆனவை பாண்டவர் பக்கலிலும் உண்டு. மகாரதர் பலர் கூடி தனியனாக நின்ற அபிமன்யுவைக் கொன்றது தொடக்கமா னவை கௌரவர்கள் பக்கலிலும் உண்டு. இவற்றைச் சொன்னபடி,

இத்தலைவிக்கு உண்டான நோய் இன்ன வகைத்து என்பதைப் பின்னிரண்டடிகள் மெய்ப்பிப்பவை. கண்ண பிரானுடைய ஆச்ரித பட்சபாதம், ஆச்ரிதசௌலப்பியம் முதலிய திருக்குணங்களில் ஈடுபட்டதனால் ஏற்பட்ட நோய் காண்மின் என்று தெரிவிக்கின்றாள் தோழி.

**திசைக்கின்ற தேஇவள் நோய்;இது**
**மிக்க பெருந்தெய்வம்;**
**இசைப்புஇன்றி நீர்அணங் காடும்**
**இளந்தெய்வம் அன்றிது;**
**திசைப்பின்றி பேசங்கு சக்கரம்**
**என்றிவள் கேட்க, நீர்**
**இசைக்கிற்றி ராகில்நன் றேஇல்**
**பெறும், இது காண்மினே** (2)

[திசைக்கின்றது - அறிவு கெடுவது; மிக்க பெருந் தெய்வம் - பராத்பரமான தெய்வம் அடியாக வந்தது; திசைப்பு - மனக் குழப்பம்; அணங் காடுதல் - தெய்வம் ஆவேசித்து ஆடுதல்; கேட்க- காதில் விழும்படி; இசைக்கிற்றீர் ஆகில் - சொல்ல வல்லீராகில்; இல்பெறும் - இல்லிருப்புப்பெறுவாள்; இது காண்மின் - செய்து பாருங்கள்]

இதில் ''சிறு தெய்வங்கட்குச் செய்யும் சாந்திகளால் இவளுடைய நோய் போக்கவரிது; இவள் காதில் 'சங்கு சக்கரம்' என்று ஓதினால் இவளுடைய நோய் நீங்கும்'' என்கின்றாள் தோழி.

இவ்விடத்தில் ஓர் ஐதிகம்: பட்டர் காலத்தில் ஆய்ச்சி மகன் என்ற பாகவதரொருவர் நோவுகண்டு உணர்வற்றுக் கிடக்கும் காலத்தில் பட்டர் அவரைப் பார்க்க எழுந்தருளினாராம் அப்போது அந்த ஆய்ச்சி மகன் அடியோடு அறிவு நடையாடாதபடி இருப்பதைக் கண்ட பட்டர், அவர் அழகிய மணவாளனிடத்தில் மிக்க பக்தியுடையவர் என்பதை அறிந்தவராதலாலே அவருடைய திருச்செவியில் மெல்ல ஊதினாப்போலே 'அழகிய மணவாளப் பெருமாளே சரணம்' என்றாராம்; அதனால் அந்த ஆய்ச்சி மகன் உணர்ச்சி உண்டாகி நெடும்போதெல்லாம் அந்த வார்த்தையையே சொல்லிக் கொண்டிருந்து திருநாட்டுக்கு நடந்தாராம்.

இவ்விடத்தில் ஆழ்வாரின் திருவிருத்தத்தில் ஒரு பாசுரம் அநுசந்திக்கத் தக்கது

**சில்மொழி நோயோ கழிபெருந்**
**தெய்வம்இந் நோய்இனதென்(று)**
**இல்மொழி கேட்கும் இளந்தெய்வம்**
**அன்றிது வேல'நில்நீ;**
**என்மொழி கேண்மின், என்அன்னைமீர்!**
**உலகேழும் உண்டான்**
**சொன்மொழி மாலைஅந் தண்ணந்**
**துழாய்கொண்டு சூட்டுமினே(20)**

[சில்மொழி - சில பேச்சுகளே பேசவல்லவள்; பெரு - மிகப் பெரிய; இனது - இப்படிப்பட்டது; சொல் மொழி - திருநாமத்தைச் சொல்லுதல்]

கட்டுவிச்சியின் சொற்கேட்டு வெறியாட்டாளனை அழைப்பித்து முருக பூசை செய்யத் துணிகின்றாள் செவிலித் தாய். இதனைக் கண்ட தலைமகள் மிகவும் வருந்துவதைக் காண்கின்றாள் தோழி. உடனே அவள் வேலனையும் தாயரையும் நோக்கிக் கண்டித்துச் சில கூறி வெறி விலக்கு வதாகச் செல்கின்றது இப்பாசுரம். நாடக அரங்கில் எதிர் பாராத பாத்திரம் ஒன்று திடீர் பிரவேசம் நடைபெறுவது போல் தோழி வெறியாடு களத்தில் திடீர் பிரவேசம் செய் கின்றாள்.

வேலனையும் தாய்மாரையும் நோக்கித் தோழிகூறுவது: "இந்த நங்கைக்கு இப்பொழுது நேர்ந்துள்ள நோயானது நீங்கள் நினைக்கின்றபடி சிறு தெய்வம் அடியாக வந்ததன்று; மிகப்பெருந் தெய்வமான எம்பெருமான் விஷயமாக உண்டானது.

வேலன் பக்கம் திரும்பி: "வேல! நில்நீ' என்று அவன் வெறியாட்டைத் தடுத்து நிறுத்தி,

பின்னர் அன்னைமாரைப் பார்த்து, "நீங்கள் இங்ஙனம் கலங்குவது உசிதமன்று; உங்களை விட நான் மிகச் சிறியளே யாயினும், இப்போது என் பேச்சைக் கேளுங்கள். இந்த விபரீதமான முயற்சிகளைக் கைவிட்டு உலகம் உண்ட பெருவாயனுடைய திருநாமங்களை இவளது செவியில் படுமாறு ஓதுங்கள்; அவன் மாலையில் திகழும் திருத்துழாய் பிரசாதத்தைக் கொணர்ந்து கொடுங்கள். இதுவே இவ ளுடைய நோய்க்கு ஏற்ற மருந்தாகும். 'நோய் நாடி நோயின் குணம் நாடி அது தணிக்கும், வாய்நாடி வாய்ப்பச் செய்வது' அல்லவா முறை?" என்கின்றாள் தோழி. 'மறந்தும் புறந்தொழா மாந்தர்' வழி வந்தவளாதலால், 'இளந் தெய்வ' ஏற்பாட்டை நீக்கி, 'கழிபெருந் தெய்வத்தை' வழிபடுமாறு கூறுவது எண்ணி மகிழத்தக்கது.

"உலகேழும் விழுங்கி உமிழ்ந்திட்ட பெருந்தேவன் திருநாமங்களை இப்பெண் பிள்ளையின் செவிப்படச் சொல்லுங்கள் (4); 'மதுவார்துழாய்முடி மாயப்பிரான் கழல் வாழ்த்துங்கள்; அதுவே! இவள் உற்ற நோய்க்கு அருமருந்து. 'தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடி மேலும், தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் அம்மானது' (திருவாய் 1 9:7) திருவடிகளை நினைந்து 'உன் சேவடி செவ்வி திருக்காப்பு' (திருப்பல்) என்று பல்லாண்டு பாடுவதே போதும்' (3) என்கின்றாள். மேலும்,

இவளைப் பெறும்பரிசு இவ்வணங்கு
ஆடுதல்அன்று; அந்தோ!
குவளைத் தடங்கண்ணும் கோவைச்
செவ்வாயும் பயந்தனள்;
கவளக் கடாக்களிறு அட்ட
பிரான்திரு நாமத்தால்
தவளப் பொடிகொண்டு நீர்இட்
டிடுமின்; தணியுமே (5)

[பரிசு - மார்க்கம்; அணங்கு ஆடுதல் - வெறி ஆடுதல்; பயந்தனள் - நிறவேறுபாடு அடைந்தனள்; கவளம்- மதகரமான மருந்துகளைக் கவளம் கொண்டதாய்; கடா - மதம் பெற்றதான; அட்ட - தொலைத்த; தவளம் பொடி - பரிசுத்தமான பாத தூளி; இட்டிடுமின் - தூவுங்கள்; தணியும் - தீரும்]

என்று சொல்லி வெறிவிலக்குகின்றாள். "எம்பெருமானுடைய திருநாமத்தை உச்சரித்து வைணவர்களுடைய பாத தூளியைக் கொண்டு வந்து இவள்மீது தூவுங்கள்" என்று உண்மையான பரிகாரத்தை எடுத்துக் காட்டுகின்றாள்.

"அன்னைமீர்! சிறிதும் ஓய்வின்றி வெறியாடலைச் செய்து வருகின்றீர்கள். இதனால் நோய் தீராத மாத்திரமே

யன்றி மேலும் பெருகி வளர்கின்றது. ஆகவே, எம்பெரு மானுடைய அடியார்களின் பாத தூளியைக் கொண்டு வந்து இடுவதற்கு முயற்சி செய்யுங்கள், 'அதைக் கொண்டு வந்து அவளுக்கு அதை இடவேண்டும்' என்று எண்ணினாலும் போதும்; இதனாலேயே நோய் நீங்கிவிடும்." இப்பாசுரத்தில் ஸ்ரீவைணவ பாததூளியின் பெருமையைக் குறித்து ஓர் ஐதிகம் ஈட்டில் காணப்படுகின்றது. அகளங்க நாட்டாழ்வான் இரண்டு ஸ்ரீவைணவர்களோடே ஓரிடத்திற்குச் செல்லுகை யில் வழியிடையே ஒரு சமணக் கோயில் தென்பட்டது; அப்போது இராக்காலமாகவும் இருந்தது. அக்கோவில் வாசலில் சிங்கமுகப் பதுமை இருப்பதைக் காட்டி அவ் வாழ்வான் 'பகவத் சந்நிதி; சேவியுங்கள்' என்று வேடிக்கையாகச் சொல்ல, அவர்களும் மெய்யென்றெண்ணி சேவித்த பிறகு இது சமணக் கோயில் என்று அறிந்தவாறே மோகித்து விழுந்தார்களாம். அப்போது அருகிலிருந்த பிள்ளையுறங்கா வில்லிதாசர் தம்முடைய ஸ்ரீபாத தூளியை அவர்கட்கு இட, அவர்கள் தெளிந்து எழுந்தார்களாம் (6).

இவளுடைய நோய்க்குப் பரிகாரமாக சிறு தெய்வ வழிபாடு நடத்தினால் அஃது இழிவாக முடியும். இவள் பிழைக்க வேண்டுமாகில், ஸ்ரீவைணவர்களைப் பணிவதே பாங்கு (7). வேதவித்துக்களான ஸ்ரீ வைஷ்ணவர்களைப் புருஷ காரமாகக் கொண்டு எம்பெருமான் திருவடிகளைப் பணிந்து இவளுடைய நோயைத் தீர்த்துக் கொள்ளாமல் சிறு தெய்வங்களைப் பணிதல் பிறந்த குடிக்கே கீழ்மை (8). 'நீங்கள் அணங்காடுவதை நான் கண்கொண்டு காண மாட்டேன்; இவள் பிழைக்க வேண்டுமென்றால் கண்ணபிரா னுடைய திருவடிகளை நினைந்து வாழ்த்துங்கள். நீங்கள் மேற்கொண்டுள்ள முறைகளைத் தவிர்த்துக் கண்ணன் திருவடிகளை வாழ்த்துவது 'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்' நன்மை பயப்பதாகும் (9). பிள்ளைப் பிராயத்திலிருந்து

மற்றொரு தெய்வத்தைத் தொழாத பாங்கை அறிந்து நீங்கள் அதற்குத் தகுதியாக நடத்து கொள்வதே யுக்த மாகும். 'பிறைதொழும் பருவத்திலும் பிறைதொழு தறியாள்' என்பர் நம்பிள்ளை. 'அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து' (திருவாய் 2.3;3) என்னும்படியிருக்கின்ற இவளுக்குச் சிறுதெய்வ வழிபாடு சிறிதும் பொருத்தமில்லை. வேதாந்த விழுப்பொருளான வண்துவராபதி மன்னனுடைய திருநாமத்தைச் சொல்லி ஏத்துதல் செய்யவே இவள் நோய் நீங்கும் (10). இவ்விடத்தில்,

முலையோ முழுமுற்றும் போந்தில;
மொய்பூங் குழல்குறிய;
கலையோ அரையில்லை; நாவோ
குழறும்; கடல்மண்ணெல்லாம்
விலையோ எனமிளி ருங்கண்;
இவள்பர மே!பெருமான்
மலையோ திருவேங் கடமென்று
கற்கின்ற வாசகமே (60)

[போந்தில - தோன்றவில்லை; மொய் - அடர்ந்த; பூகுழல் - மென்மையான தலைமயிர்; குறிய - குட்டையாயுள்ளன; கலை - ஆடை; அரை - இடுப்பு; நா-நாக்கு; குழலும்-குதலைச் சொல்லாடு கிறது; கற்கின்ற வாசகம் - பயில்கின்ற வார்த்தை]

என்ற திருவிருத்தப் பாசுரம் அநுசந்திக்கத் தக்கது.

இந்தப் பதிகம் முழுவதும் தலைவி எம்பெருமான்மீது ஈடுபட்டிருக்கும் நிலையைக் (அநந்யார்ஹத்துவம்) காண முடிகின்றது.

2. **தலைவியின் பெருமை:** இதைத் தோழி வாயில் வெளிப்படச் செய்கின்றார் ஆழ்வார். தம் பெருமையைத் தாமே வெளியிட்டுக் கொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டு

அது சுவையுடைத் தாவதற்காக அதை வேறொருவர் தலையில் ஏற்றப் பார்த்துத் தோழியின் பாசுரமாக வைத்து இத்திருவாய் மொழியை (6.5) அமைத்தருள்கின்றார் ஆழ்வார். 'துவளில் மாமணி மாடத்து' (6.5) என்ற திருவாய் மொழியின் அவதாரிகையில் சட்டாசிரியர், "இத்திருவாய் மொழிக்கு முன்னும் பின்னும் எல்லாம் எம்பெருமானைக் கவிபாடினார்; இத்திருவாய்மொழியில் தம் படி சொல்லு கின்றார். சிங்கநோக்காலே 'பொய்ந்நின்ற' (திருவிருத். 1) என்னும் பாசுரம் தொடங்கி இவ்வளவும் வர தமக்கு பகவத் விஷயத்தில் உண்டான பிராவண்யத்தின் மிகுதியை அந்யாப தேசத்தாலே பேசுகின்றார். இத்திருவாய்மொழி 'ஆழ்வார் தம்மைச் சொல்லுகிறது' என்று நம் முதலிகள் எல்லாரும் போர விரும்பியிருப்பர்கள். பகவானுடைய திருவருளாலே அடைந்த ஞான நிலையை உடையவராய் 'வேத வாக்குகள் அந்த ஆனந்த குணத்தினின்றும் திரும்பின்' என்கிற விஷயத்தை மறுபாடு உருவப் பேசின தாமே வேணுமாகாதே தம்படி பேசியபோதும்" - என்று பேசுவர் நம்பிள்ளை.

அவதாரிகையில் மேலும் நம்பிள்ளை கூறுவது: ஸ்ரீஜனகராஜன் திருமகள் பிறந்தபோது சோதிடர்களை அழைத்து, 'இவளுடைய அத்ருஷ்ட பாகங்கள் எப்படி யிருக்கிறது? சொல்லுங்கள்' என்று கேட்கையில், சோதி டர்கள் (அவள் பிறந்தநாள் குறிப்பைப்) பார்த்து, 'இவள் பெற வேண்டிய பேறு நன்றாக உள்ளது; ஒரு குறையும் இல்லை; எல்லா உலகங்களையும் உடைய ஒருவனைக் கை பிடிக்கவும் கடவள்; ஆனால் வனவாசம் அநுபவிக்கவுமே கடவள்' என்றார்கள்; அப்படியே இப்பெண் பிள்ளை பிறந்தபோதும் இவள் திருத்தாயார் உள்ளிட்டார், காரணம் அறிந்தவர்களை அழைத்து பேறு பற்றிய சிறப்புகளை உசாவுகையில், 'எல்லாம் நன்றாகவே உள்ளது; இவள் உயர்வற உயர்நலமுடையவனான அயர்வறும் அமரர்கள்

அதிபதியால் மயர்வு அற மதிநலம் அருளப் பெறுவள்; உலகம் நிறைந்த பொருள் பெறுவள்; தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல்மாலைகள் சொல்லுவள்' என்று பலவும் சொல்லிவிட்டு, 'ஆனால் இவளுக்கு ஓர் அகால மரணம் உண்டு; அதற்குத் தப்பினாளாகில் சுகமே ஜீவிக்கும். அஃது என்னென்னில்: 'திருதொலைவில்லிமங்கலத்தேகொடு போகாதே ஒழியப்பெறில் இவளுடன் நெடுங்காலம் வாழலாம். இவளை அங்குக் கொண்டு சென்றீர்களாகில் இவளை இழக்க நேரும்; ஆகவே இந்த ஒரு கண்டத்திற்குத் தப்பிப் பிழைப்பது கஷ்டமே' என்று சோதிடர்கள் சொல்லியிருந்தார்கள். ஆகிலும் இவளைத் தொலைவில்லி மங்கலத்திற்குக் கொண்டு போகாதிருக்கும்படியான குடியல்லவே. இவள் அங்குப் புக்கு இறப்பினும் அமையும். அங்கு அழைத்துப்போய் சேவை பண்ணி வைத்தே தீருவது என்றிருக்கும குடியாகையாலே அப்படியே செய்ய நேர்ந்தது. அதனால் விளைந்த தீங்கை எடுத்துரைக்கின்றாள் தோழி.

**துவளில் மாமணி மாடம் ஓங்கும்**
**தொலைவில் லிமங்க லம்தொழும்**
**இவளை நீரினி யன்னை மீர்! உமக்**
**காசை இல்லை; விடுமினோ**
**தவள வொண்சங்கு சக்கர மென்றும்**
**தாம ரைத்தடங் கணென்றும்**
**குவளை யொண்மலர்க் கண்கள் நீர்மல்க**
**நின்று நின்று குமுறுமே (1)**

[துவள்இல் - குற்றமற்று; தவளம் - வெண்ணிறம்; நீர் மல்க - நீர்பெருக; குமிறும் - குமிறாநின்றாள்.]

என்பது முதல் பாசுரம். இதில்: தாய்மார்கள் பராங்குச நாயகியை இடுப்பில் எடுத்துக்கொண்டு தொலைவிலி மங்கலம் சென்றனர். இவள் அங்குச் சென்றதும் எம்பெரு

மானது கோல மேனியையும் திவ்விய பூஷணங்களையும் திவ்வியாயுதங்களையும் நீர்வள நிலவளங்களையும் கண்டு மெய்மறந்து அவற்றையே வாய் வெருவத் தொடங்கினாள்; மீண்டும் தாய்மாருடன் உறவு செய்து கொள்ளும்படியான நிலைமையும் இல்லையாயிற்று. இந்நிலைமைகண்ட தாய்மார்கள், தோழியிடம் வந்து, ''ஐயோ! இச்சிறுமியின் நிலைமை இப்படியாய் விட்டதே! இவளை மீட்கும் வழி ஏதேனும் பார்த்துச் சொல்லலாகாதோ?'' என்ன, அதற்குத் தோழியானவள், ''அந்தோ, தண்ணீர் வழிந்தோடிச் சென்ற பின்பும் அணைகட்ட முயல்வாருண்டோ? ஏற்கெனவே இவளைத் தொலைவிலி மங்கலம் கொண்டு போகாமல் இருந்திருக்க வேண்டும். இவளது இயல்பு உங்கட்குத் தெரிந்திருந்தும் நீங்களே படிகடந்து சென்று இவளுக்குப் பிராவண்யாதிசயத்தை விளைத்திட்டு இப்போது மீட்க வழி தேடுவதால் பயன் இல்லை. இனி இவள் பக்கல் கொண்டுள்ள நசையறுத்து இவள்வழியே செல்லப் பாருங்கள்'' என்கின்றாள். தலைமகளின் நிலைமையை எடுத்துரைத்து ''நீங்கள் கண்படைத்த பயனைப் பெறுமாறு பார்த்துக் கொண்டிருக்க வன்றோ தகுவது?'' என்று சொல்லிக் காட்டுகின்றாள்.

தவளவொண்சங்கு சக்கரமென்றும்: 'இவள் சங்கு சக்கரங்களின் அழகைப்பற்றிப் பேசுகின்றபடியைப் பாருங்கள். 'சாமளமான திருமேனிக்குப் பரபாகமாக வெளிய சங்கொன்று விளங்குகின்ற அழகுஎன்னே!' என்கின்றாள். இது சங்கின் இயற்கை நிறத்தைச் சொன்னதாகக் கொள்ளாமல் வேறுவகையாகவும் கொள்ளலாம்.

> உண்பது சொல்லில்
> உலகளந்தான் வாயமுதம்;
> கண்படை கொள்ளில்
> கடல்வண்ணன் கைத்தலத்தே —(நாச்-திரு 7:4)

என்று ஆண்டாள் சொல்லுகிறபடியே, 'சங்கே, நீ இடையீடின்றி பகவதநுபவம் பெற்றிருந்தும் அநுபவம் சிறிதும் இல்லாதவள்போலே உடம்பு வெளுக்கப் பெற்றாயே! உன் நிலையே இதுவானால் உன்னுடைய அநுபவத்தில் ஓரளவு கூட இல்லாத என் நிலை எப்படியாக வேண்டும்?' என்கின்றாள்'' என்றும் கொள்ளலாம்.

தாமரைத்தடங்கண் என்றும்: இதில்,

'பெருங்கேழ லார்தம் பெருங்கண்
மலர்ப்புண் டரீகம் நம்மேல்
ஒருங்கே பிறழவைத் தார்' (திரு. விருத். 45)

என்று தாமே கூறியபடியே 'என்னை இவ்வளவிலே கொண்டு நிறுத்தியது இத்திருக்கண் அல்லவா?' என்று கண்ணைப் பற்றிப் பேசாநின்றாள்.

குவளை ஒண் மலர்க்கண்கள் : இதில்,

கரிய வாகிப் புடைபரந்து மிளிர்ந்து
செவ்வரி யோடி நீண்டஅப்
பெரிய வாய கண்கள் என்னைப்
பேதைமை செய்தனவே (அமனாதி-8)

என்று பாண் பெருமாள் சொல்லியவாறு அத்திருக்கண்களின் நீர்மையை நினைந்தவாறே இவளுடைய கண்கள் நீர் மல்க நிற்பதற்கு மேற்படவுண்டோ? உலகர்கள் சாதாரணப் பொருள்களின் லாபா லாபங்களில் கண்ணீர் பெருகவிட்டுக் கிடக்க, இவள் பகவத்விஷயத்தில் கைவைத்து 'உள்ளஞ் சோர வுகந்தெதிர்விம்மி உரோம கூபங்களாய்க் கண்ணநீர்கள் துள்ளஞ்சோரத் துயிலணை கொள்ளேன்' ( ) என்று கூறும்படியான நிலைமை பெற்றிருக்க, இவ்வழகிய நிலையைக் கண்ணாரக் கண்டு கொண்டு களிக்க வேண்டாவோ?' என்பது உள்ளுறையும் கருத்தாகும்.

இராஜ கோஷ்டியில் 'உகும், இறும்' என்று பொருள் சொல்ல, விக்கிரமசிங்கன் என்பான் ஒருவன் 'அங்ஙன் அன்று, கன்றைக் கடக்கக் கட்டி வைத்தால் முலைக் கண்கடுத்துப் பசு அலமந்து படுமாறுபோலே, உள்ளோடு கிலேசம் வாய் விட மாட்டாதே நோவுபடுகின்ற இவளுக்கு இது வார்த்தையோ?' என்றான். பெருவெள்ளத்தில் சுழிக்குமாறு போலே, அகவாயில் உள்ளது வெளியிடமாட்டாள்; உள்ளே நின்று சுழிக்கிறபடி.

இப்பாசுரத்தில் 'தொலைவில்லி மங்கலம் தொழும் என்கையாலே சரீரத்தின் செயல் சொல்லிற்று; 'தவள ஒண் சங்கு சக்கரம் என்றும், தாமரைத் தடங்கண் என்றும்' என்று சொல்லுகையாலே வாக்கின் செயல் சொல்லிற்று; 'குழறும்' என்கையாலே, மனத்தின் செயல் சொல்லிற்று.

மேலும் தோழி கூறுகின்றாள்: 'தொலைவில்லி மங்கலத்தின் இயற்கைச் சூழலே கவர்ச்சிகரமாக இருக்கும். திருவிழாக் காலங்களில் ஓத்துச்சொல்லுவார், சங்கீர்த்தனம் பண்ணுவார், பாடுவார், இயல் விண்ணப்பம் செய்வாராய் எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி விரவிக்கொண்டு எழுகின்ற ஒலியையுடைய திருநாளில்—அதாவது 'வேத ஒலியும் விழாவொலியும்' (7 3:1) – என்றவாறு பலவகையான தொனிகள் செவியமுதமாக இருக்கும். இப்படிப்பட்ட திருவிழாக் காலங்களில் தாய்மார் இப்பெண் பிள்ளையை அங்கு இட்டுக் கொண்டு சென்றதால் இவளுடைய ஈடுபாடு அதிகமாய் விட்டது. பிரம்மஞானம் பெற்ற சுவாதகேது போல் தம்பித்து நிற்கின்றாள், தேவபிரான் என்றே நெளிகின்ற வாயோடு கண்களில் நீர்பெருகி நிற்கும்படியாகக் கட்டுக் குலைந்து தளர்ந்து உருகுகின்றாள்.'' (2)

'தண்பொருநையாற்றங்கரையை விளாக்குலை கொண்டிருக்கின்ற பரந்த சோலைகளையும் குளிர்ந்த நீர் நிலங்களையும் இவளுக்கு நன்கு காட்டிக் கொடுக்கவே, இவள் அத்

திருப்பதிதன்னில் ஈடுபட்டு உங்களோடு உறவு அறும்படி யானாள். நம்பிள்ளை கூறுவார்: "ஆற்றங்கரையில் சோலைகள் எப்படிப் பேர்க்கவும் பேராதபடி பொருந்தி இருக்கின்றதோ, அப்படியே இப்பெண்பிள்ளையும் இத்தலத்தில் பொருந்திவிட்டாள். அச்சோலைகளைக் குறித்து இதவசனம் எப்படிப் பயன்படாதோ அப்படியே இவளைக் குறித்தும் இத வசனம் பயன்படாது. செவிடன்காதில் ஊதின சங்கொலியின் நிலைதான். ஆர்த்தர்களின் கூக்குரல் கேட்கைக்காகத் திருப்பாற்கடலில் கண்வளர்ந்தபடியையும், மாணியுருவாய் மாவலியிடத்துச் சென்று மூன்றடி மண் இரந்து அங்கு நின்று ஆழ்கடலும் மண்ணும் விண்ணும் முடிய ஈரடியால் அளந்து கொண்டபடியையும், பராத்பரனாயிருப்பவன் இடையனாய்ப் பிறந்து பசுக்களையும் மேய்த்துத் திரிந்த எளிவந்த தன்மையையும் வாய்வெருவிக்கொண்டு தாரை தாரையாய்க் கண்ணீர் பெருக நிற்கின்றாள். இங்ஙன் அவ்விடத்தில் மூழ்கிக் கிடக்கும் இவளை மீட்கப் பார்க்க வழியுண்டோ?'(3)

"இத்திருத்தலத்திற்குச் சென்ற இவள் அந்தணர்கள் நான்மறையோதும் அழகைக் கண்டு 'இந்த மறைகளை ஆதியில் எம்பெருமான் நான்முகனுக்கு உபதேசித்தவன் அன்றோ?' என்று கொண்டு அவன்மீது காதல் மிகப் பெற்றாள்; அவனது கட்டளையாகின்ற நான்மறைகளையும் ஓதுகின்ற பாகவதர்களன்றோ இவர்கள்?' என்று ஸ்ரீவைணவர்களிடத்திலும் பக்திப் பெருங்காதல் மிகப் பெற்றாள்; 'இப்படிப் பகவத் பாகவத் பக்தியே வடிவெடுத்தவளான இவளைச் சம்சாரிகளான நீங்கள் இனி உறவு கொண்டாடி விரும்பத் தகுதி உண்டோ?' பெண்களுக்கு முக்கியமான அடக்கம் அடியோடு போயிற்று. இருக்க வேண்டிய மரியாதையை மீறி நின்றாள்". திருமங்கை மன்னனும்,

திருமந்திரத்தின் இரண்டாவது சொல்லாகிய நம என்பது இந்நிலையைக் குறிக்கின்றது. இச்சொல்லை ந+ம; என்று இரண்டாகப் பிரிக்கலாம். இவ்விரண்டு எழுத்துகளும் தனித்தனிப் பொருளைத் தருதலின் பதங்களாயின்.[7] இவற்றுள் ஆறாம் வேற்றுமையுடன் கூடிய 'ம' என்னும் பதம் 'சேதநன் ஈசுவரனுக்கே உரியவன்' என இயம்பும் நான்காம் வேற்றுமையின் பொருளுக்கு மாறாய்த் 'தனக்குத் தான் உரியன்' என்னும் பொருளைக் கொடுக்கின்றது. ஆனால் 'ந' என்னும் பதமோ அதற்கு எதிர்மறைப் பொருளால் அதைத் தடுத்து நிறுத்தித் 'தனக்குத்தான் உரியனல்லன்' என்பதை அறிவிக்கின்றது.[8] இதனால் 'நான் பிறனுக்கு (ஈசுவரனுக்கு) உரியவன்' என்பது பெறப்படு கின்றது. இம்முறையில் இச்சொல் ஈசுவர பாரதந்திரி யத்தைத் தெரிவிக்கின்றது. இன்னும் விளக்கிக் கூறினால் இச்சொல் ஞானத்தினால் ஏற்படும் சுதந்திரத் தன்மையை ஒழிக்கின்றது. இதன் காரணமாய் ஏற்படும் 'தன்னைத் தானே காத்துக் கொள்ள முடியும்' என்ற எண்ணத்தையும் நீக்குகின்றது. இனி, இவனைக் காத்து இரட்சிப்பவன் ஈசுவரனே ஆகின்றான் என்ற துணிவு பிறக்கின்றது. அஃதாவது, ஈசுவரனே உபாயம் என்ற பொருள் கிடைக் கின்றது. இந்த மன நிலைதான் 'தாய்' என்று குறிக்கப் பெறுகின்றது, திருவாய்மொழியில் தாய் பாவனையில் பேசும் ஏழு பதிகங்களும் ஈசுவர பாரதந்திரியத்தையும், அவனே உபாய மாகின்றான் என்ற கருத்தையும் தெரிவிக் கின்றன. ஆகவே, இவை உபாயத்தில் உறுதி பூண்டிருக்கும் நிலையிலே எழுந்த பேச்சுகள் என்பது தெளிவாகின்றது.

மகள் பாசுரங்கள் : மகள் பாசுரமாக நடைபெறுகின்ற பதிகங்களின் தத்துவப் பொருளையும் எடுத்துக்காட்டு

7. முமுட்ச-78.
8. ஷை. 79, 80.

என்று நாலடியாரும் கூறுவதால் ஏழை என்ற சொல் அறிவிலி என்று பொருளாயிற்று.

**இழைகொள்சோதி...காட்டினீர்:** ''ஆபரணத்துக்கு அழகு கொடுக்கும் பெருமாள், என்னும் படி எந்த ஆபரணமும் வேண்டாமல் இயற்கையான அழகையும் செந்தாமரை போன்ற திருக்கண்களையுமுடையனாய்விற்றிருக்கும்படியைப் 'பெண்ணே பார் பார்' என்று நீங்களே காட்டிக் கொடுத்த தனால் வந்த விளைவு இது. பின்னிரண்டு அடிகளால் தெரி விப்பது: பின்னிருந்தமையைக் கண்டவுடனே கண்ணீரானது மழை பொழிந்தாற்போல் தாரைதாரையாய் பெருகத் தொடங்கிற்று; அதற்குமேல் மயக்கமும் வந்து குடிபுகுந்தது; மயக்கம் சிறிது தெளிந்தவாறே அவனது திருக்குணங்களிலே நெஞ்சு உட்புகாநின்றது; அத்திருப்பதியுள்ள திக்கையே உற்று நோக்கி ஓயாமல் அஞ்சலி செய்யா நின்றாள்; இதுவா யிற்று இவளது நிலைமை. இனி இவளை இதினின்றும் மீட்க முடியுமோ?'' என்கின்றாள்.

மேலும் தோழி கூறுவாள் : ''இப்பெண்பிள்ளை பெரும் பாலும் மோகித்திருக்கும் இருப்பேயல்லது கண்ணைத் திறந்து பார்ப்பதே இல்லை. ஒருகால் பார்த்தாளாகில் அத் திருப்பதியுள்ள திசையையே பார்ப்பாள். எவ்விடம் பார்த்தாலும் கருப்பஞ் சோலையும் செந்நெற் பயிர்களும் தாமரைக் காடுகளும் திகழாநின்ற தண்பொருநையின் வட கரையிலே விளங்குவதான தொலைவில்லி மங்கலத் திருப்பதியையன்றி மற்றொரு திக்கைக் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை; பேசப்புகுந்தாலோ வாயில் வரும் பேச்செல் லாம் மணிவண்ணனைப் பற்றியதாகவே இருக்கும்'' உள்ளுறையில் கரும்பு - வைணவர்களின் மிக்க நல்லியல்பை யும், செந்நெல் - 'வரம்புற்ற கதிர்ச்செந்நெல்தாள் சாய்த்துத் தலைவணங்கும் தண் அரங்கமே' (பெரியாழ். திரு. 4. 9:8) என்று பெரியாழ்வார் அருளிச் செய்தபடி வித்தைகள்

நிரம்பப் பெற்று விநயமே வடிவெடுத்திருக்கும் படியையும், செந்தாமரை - சாரகிராகிகளால் சேவிக்கப்படும் தன்மையை யும் உணர்த்துவனவாகும். (6)

'அன்னைமீர்! அழகிய பெருமை பொருந்திய மயிலையும் இளையமானையும் போன்றவளான இவள், நம்மை விஞ்சித் திருதொலைவில்லி மங்கலம் என்ற பெயலரயல்லாமல் வேறு எந்த வார்த்,தையையும் கேட்கின்றாள் இல்லை; முற்பிறவி களில் செய்த புண்ணியம் தானோ? முகில் வண்ணனாகிய எம்பெருமானுடைய மாயம்தானோ? அறியேன்; அவ்வெம் பெருமானுடைய சின்னங்களும் திருந்த இவள் வாயின ஆயின'

'பட்டர் 'அழகிய மணவாளப் பெருமாள்' என்றால் திருநாமம் நிறம்பெறுமாறு போலவும், சோமாசியாண்டான் 'எம்பெருமானார்' என்றால், 'திருநாமம் நிறம்பெறுமாறு போலவும், அனந்தாழ்வான் 'திருவேங்கடமுடையான்' என்றால், திருநாமம் நிறம்பெறுமாறு போலவும் எம்பெரு மான் இலட்சணங்களும் திருநாமங்களும் இப்பெண்பிள்ளை வாயில் நுழைந்து புறப்படுங்கால் அழகு பெறுகின்றன. (7)

'திருந்திய வேதங்களும் யாகங்களும் அழகிய செல்வமும் ஆகிய இவற்றால் நிறைந்திருக்கின்ற பார்ப்பனர்கள் நிறைந்து இருந்து வாழ்கின்ற தண்பொருநைக்கு வடகரையி லுள்ள வளப்பம் பொருந்திய திருதொலைவில்லி மங்கலம் என்னும் திவ்வியதேசத்தை, கரிய விசாலமான கண்களை யுடைய இவள் கை கூப்பி வணங்கிய அந்த நாள் தொடங்கி இந்தநாள் வரையிலும் இருந்து இருந்து 'தாமரைக்கண்ண!' என்று என்றே உருக்குலைந்து மனமும் கரையா நின்றாள்.' (8)

'இவள் நாள்தோறும் இரங்கி வாய்வெருவிக் கண்களிலே நீர்தேங்கும்படியாக மரங்களும் இரங்கும்படி 'மணிவண்ணா!' என்று கூவுகின்றாள்; பேசுதற்குக் கற்றுக் கொண்ட பிறகு, கேசி என்னும் அசுரனது வாயினைப் பிளந்த எம்பெருமான் நித்தியவாசம் செய்கின்ற 'திரு தொலைவில்லி மங்கலம்' என்று சொல்லித் தன்னுடைய கைகளைக் குவித்துத் தொழுவாள்.'

எம்பாரை 'மரங்களும் இரங்கக் கூடுமோ?' என்று கேட்க, 'இத்திருவாய்மொழி அருளிச் செய்த அன்று தொடங்கி எத்தனை பாவசுத்தி இல்லாதார் வாயிலே புக்கது என்று தெரியாது; இங்ஙனே இருக்கச் செய்தே, இயமம் நியமம் முதலிய யோக உறுப்புகளாலே பதம் செய்யப் பார்த்தாலும் சுக்கான் பருக்கைப் போலே நெகிழாதே இருக்கின்ற நெஞ்சுகளும் இன்று அழிகின்றபடி கண்டால், சமகாலத்தில் மரங்கள் இரங்கச் சொல்ல வேண்டுமோ?' என்று அருளிச் செய்தார்.

மரங்கள் நின்று மதுதாரைகள் பாயும்;
மலர்கள் வீழும்; வளர்கொம்புகள் தாழும்
(பெரியாழ் 3.6:10)

என்று அவதாரத்தில் திருக்குழல் ஓசையில் பட்ட எல்லாம் இத்துன்ப ஒலியிலே படுமாயின (9).

இப்பதிகத்தின் இறுதிப் பாசுரம் (பலச் சுருதிப் பாசுரத்திற்கு முன்னுள்ளது) மிகவும் அற்புதமாக அமைந்துள்ளது.

பின்னை கொல்,நில மாம கள்கொல்,
திருமாம கள்கொல் பிறந்திட்டாள்
என்ன மாயங்கொ லோ!இ வள்நெடு
மாலென் றேநின்று கூவுமால்

முன்னி வந்தவன் நின்றி ருந்துறை
　　யும்தொ லைவில்லி மங்கலம்
சென்னி யால்வணங் கும்அவ் வூர்த்திரு
　　நாமம் கேட்பது சிந்தையே; (10)

[பின்னை - நப்பின்னை; நிலமாமகள் - பூமிப்பிராட்டியார்; திருமாமகள் - பெரியபிராட்டியார்; மாயம் - அதிசயம்; கூவுதல் - அழைத்தல்; சென்னி - தலை; சிந்தை - எண்ணம்]

இவளது ஈடுபாட்டின் மேம்பாட்டினைக் கண்டு, 'இவள் நப்பின்னைப் பிராட்டிதானோ? பூமிப் பிராட்டிதானோ? பெரிய பிராட்டியார்தானோ? என்ன ஆச்சரியமோ? இவள் நெடுமால் என்றே கூவா நிற்பாள்; முன்னதாகவே அவன் நின்று இருந்து உறையும் திருதொலைவில்லி மங்கலம் என்னும் திவ்வியதேசத்தைத் தலையால் வணங்குவாள்; அந்தத் திருத்தலத்தின் திருநாமத்தைக் கேட்பதுவே சிந்தையாக இராநின்றாள்' என்கின்றாள் தோழி.

ஆழ்வார் கிருஷ்ணாவதாரத்திலே ஈடுபட்டிருக்குந் தன்மையை நோக்குங்கால், 'நப்பின்னைப் பிராட்டி தானோ?' என்று நினைக்கத் தோன்றும். வராகப் பெருமான் திறத்தில் ஈடுபட்டிருக்கும் தன்மையை நோக்குங்கால் 'பூமிப் பிராட்டிதானோ? என்று நினைக்கத் தோன்றும். இராமவதாரத்தில் இவள் கொண்டுள்ள ஈடுபாட்டை நோக்கினால் சீதாப்பிராட்டிதானோ? என்று நினைக்கத் தோன்றும்.

பிறந்திட்டாள் : இங்கே ஈடு: ''அவர்களுக்கு இவள் படி இல்லாமையாலே அவர்கள் ஒப்பன்று; லோகமெல்லாம் வாழுகைக்கு இவள் ஒருத்தி பிறந்தாளோ! என்றுமாம்' என்பது.

'கொண்டஎன் காதல் உரைக்கில் தோழி
மண்திணி ஞால மும்ஏழ் கடலும்
நீள்வி சும்பும் கழியப் பெரிதால் (திருவாய் 7.3:8)

என்று தானே பேசலாம்படி அளவற்ற தன் வியாமோகத்தை மறந்து அவன் மோகத்தையே கனக்கப் பேசுகின்றாள்.

இந்தப் பதிகம் முழுவதும் தலைவி எம்பெருமான்மீது ஈடுபட்டிருக்கும் (அநந்யார்ஹத்துவம்) திறத்தைக் காண முடிகின்றது. பிரணவத்தில் உகாரத்தின் பொருள் அநந்யார்ஹத்துவம் என்பது ஈண்டு நினைவு கொள்ளத்தக்கது.

3. **அறத்தொடுநிலை** : குட்டநாட்டுத் திருப்பதி (கேரளம்) எம்பெருமான் மாயப்பிரான்மீதுள்ள திருவாய்மொழி தோழிப் பாசுரமாக நடைபெறுகின்றது (8.9.). இந்தத் திருவாய்மொழி 'தோழி அறத்தொடு நிற்றல்' என்ற அகப் பொருள் துறையில் அமைந்துள்ளது. 'அறத்தொடு நிற்றல்' என்பது என்ன? அறம் என்பது பல பண்புகளையும் தழுவிய சொல். அகப்பொருள் இலக்கியத்தில் பெண்ணுக்குரிய முதற் பண்பு கற்பு. கற்பென்னும் கடைப்பிடியில் நின்று களவொழுக்கத்தைப் பெற்றோருக்கு வெளிப்படுத்தல் என்பது இதன் பொருள். தோழி இதனைத் தலைமகளின் பெற்றோருக்குக் குறிப்பாக வெளிப்படுத்துவாள். தொல்காப்பியர் இதனை 'புரைதீர் கிளவி' என்றும், இறையனார் களவியலுரையாசிரியர் 'மாறுகோள் இல்லா மொழி' என்றும் குறிப்பிடுவர்.

பாரங்குசநாயகி வயதுமுதிர்ந்து மங்கைப் பருவம் அடை கின்றாள். கணவனை நாடி அடையவேண்டிய வயதல்லவா இது? திருப்புலியூர் எம்பெருமானுடன் இயற்கைப் புணர்ச்சியும் நடைபெற்றுவிடுகின்றது. தலைவியின் உயிர்தோழியானவள் தலைவியின் உருவ வேறுபாட்டாலும் சொற்களின்

வேறுபாட்டாலும் புணர்ச்சி நடைபெற்றமையை ஒருவாறு அறிகின்றாள். தன் மகளின் உண்மை நிலையை அறியாத தாய் தந்தையர் இவளுடைய திருமணத்தை உறுதி செய்து மணமுரசும் அறிவிக்கின்றனர். இதனை அறிந்த தோழி மனம் கவல்கின்றாள். 'பரதனே அரசன்' என்று அறிவித்த முரசொலி கேட்டபோது பரதாழ்வான் எங்ஙனம் மனக் கிலேசம் அடைந்தானோ அங்ஙனமே தோழி இப்போது துயர் அடைகின்றாள். இவ்வாறு சிந்திக்கின்றாள்: 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' (நாச். திரு. 1:5) என்று கூறியவள் இவள். 'அன்றிப்பின் மற்றொருவர்க்கென்னைப் பேசவொட்டேன் மாலிருஞ் சோலை எம்மாயற்கல்லால்' (பெரியாழ். திரு. 3.4:5) என்ற பிடிவாதத்தைப் பிடிக்கின்றவள். மாறாக ஏதேனும் நடை பெற்றால், இவள் உயிர்தரியாள். அப்படி நடைபெறுவதை எப்படியாயினும் தடுத்தேயாக வேண்டும். அங்ஙனம் செய்ய முயலுங்கால் திருப்புலியூர் நாயனாருடன் புணர்ச்சி உண்டானமையை அறிவிப்பின் அஃது என் காவற் சோர்வாலே நிகழ்ந்தது என்று ஏற்பட்டுவிடும். அறிவியாது ஒழியில் இவள் வாழாள். இந்த நிலையில் செய்யவேண்டியது என்ன?' என்பதாக.

தோழி இங்ஙனம் சிந்தித்துக் கொண்டிருக்கும் பொழுது தலைவியின் பெற்றோரும் அவளுடைய வடிவ வேறுபாட்டிற்குக் காரணம் யாதாக இருக்குமோ என்று ஆராயும் நிலையைக் காண்கின்றாள். தான் அவர் களுடன் ஆராய்வதாகச் சேர்ந்துகொண்டு இதனை விலக்க வேண்டும் என்று உறுதி செய்கின்றாள். இந்த முறையைக் கூறுவதாக அமைந்ததே இத் திருவாய்மொழி. இதுவே அகப்பொருள் நூலார் குறிப்பிடும் 'அறத்தொடு நிலை' என்பதாகும். திருப்புலியூர் எம்பெருமான்மீதுள்ள திருவாய் மொழி இதனையே கூறுகின்றது.

கருமா ணிக்க மலைமேல் மணித்தடந்
 தாமரைக் காடுகள்போல்
திருமார்பு வாய்கண் கைஉந்தி கால்உடை
 யாடைகள் செய்தபிரான்
திருமால் எம்மான் செழுநீர்வயல் குட்ட
 நாட்டுத் திருப்புலியூர்
அருமாயன் பேரன்றிப் பேச்சிலள், அன்னைமீர்!
 இதற்கென் செய்கேனோ? (1)

[மணித்தடம் - தெளிந்த தடாகம்; உந்தி - கொப்பூழ்; கால் - திருவடி; உடை - தரித்திருக்கும்; செய்ய - ஆடை எனக் கூட்டுக; பேர் - திருநாமம்]

என்று தோழி முதலில் இவ்வாறு தொடங்குகின்றாள். இதில் திருப்புலியூர் எம்பெருமானுடைய திருமேனியின் அழகினைக் கண்டு அதில் ஈடுபட்டாள் இத்தலைவி என்று தோழி தாய்மார்க்கு உரைக்கின்றாள்.

அநுபவிப்பார் நெஞ்சு குளிரும்படி கருமையுடையதாய் பிரகாசத்தால் மிக்கு இருப்பதாய், தனக்கு மேல் ஒன்று இல்லாததான இனிமையுடையதாய் இருப்பது ஒரு மலை மேலே என்று கருத்துத் தோன்ற 'கருமாணிக்க மலைமேல்' என்கின்றாள். இத்தகைய ஒரு மலைமீது தெளிந்த ஒரு தடாகம் தாமரைக் காடுகள் பூத்தன போல் எம்பெருமானது எழில் நீலமேனியில் திருமார்பு, திருவதரம், திருக்கண்கள், திருக்கைகள், திருவுந்தி, திருவடிகள் முதலிய உறுப்புகள் அமைந்துள்ளன என்பது தோன்ற 'மணித்தடம்...ஆடைகள் செய்ய பிரான்' என்கின்றாள். பக்தர்கட்குப் பற்றுக்கோடாக வுள்ள பெரியபிராட்டியார் எழுந்தருளியிருக்கும் திருமார்பா தலால் அது சிவந்து காணப்பெறுகின்றது. அப்பிராட்டி வழியால் உறவு செய்தாருக்கு அநுகூலமன சொற்களைப் பேசுகின்றது அவரது திருப்பவளம். இச்சொற்கள்

சொல்லப்புக்கு இனியனான தன்னைக் கண்ட காட்சியாலே தடுமாறினால், குறையும் தலைக்கட்டிக் கொடுப்பது செவ்வரி படர்ந்த திருக்கண். அவனது நோக்கிற்குத் தோற்றாரை அணைப்பது திருக்கை. உத்தேசியமான நிலத்தில் (அதாவது திருவடியில்) விழா நின்றால் காற்கட்ட வல்லது திருவுந்தி. இது நடுவே அழுக்கும் சுழியன்றோ? இவை எல்லாவற்றுக்கும் தோற்று விழும் இடம் எம்பெருமானது திருவடிகள். இவை யாவும் காட்டிலெறிந்த நிலாப் போலாகாமல் பக்தர்கட்கு அநுபவிக்கக் கொடுக்குமவன் என்பதைக் குறிப்பிடவே 'பிரான்' (உபகாரகன்) என்கின்றாள் இங்ஙனம் எம்பெருமானின் திருமேனி அழகினை,

> **என் அரங்கத்து இன்னமுதர்**
> **குழலழகர் வாயழகர்**
> **கண் அழகர் கொப்பூழில்**
> **எழுகமலப் பூஅழகர்** (நாச். திரு. 11 : 2)
> [குழல் - திருமுடி]

என்று ஆண்டாள் கூறி அநுபவித்ததையும் நினைந்து பார்க்கின்றோம். மேலும், இங்குப் பரவி யூகம் விபவம் இவற்றிற்குரிய திருநாமங்களையும் சொல்லாமல் அல்லாத உகந்தருளின திவ்விய தேசங்களில் நிற்கின்றவர்களின் பெயர்களையும் சொல்லாமல் குட்டநாட்டுத் திருப்புலியூர் எம்பெருமானுடைய திருநாமங்களையே வாய்வெருவா நிற்கின்றாள் என்பது தோன்ற, 'திருப்புலியூர், அருமாயன் பேரன்றிப் பேச்சிலள்' என்கின்றாள். அவள் நிலை தனக்கு அப்போது தான் தெரியும் என்பது தோன்ற 'அன்னைமீர் இதற்கு என் செய்வேன்?' என்கின்றாள்.

இந்த எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருப்பதியைச் சதா புகழ்ந்து கொண்டிருக்கிறாள் தலைவி என்பதனையும் குறிப்பிடுகின்றாள் 'புன்னையம் பொழில் சூழ் திருப்புலியூர் புகழும் இவளே' (2) என்பதாக.

அணிமேருவின் மீதுலவும்
துன்னு சூழ்சுடர் ஞாயிறும்
அன்றியும்பல் சுடர்களும்போல்
மன்னுநீள்முடி யாரம்பல்கலன்
தானுடை எம்பெருமான் (2)

[அணி - அழகிய; துன்னு - செறிந்து; ஞாயிறு - கதிரவன்; பல்சுடர் - கோள்கள், உடுக்கள்; முடி - கிரீடம்; ஆரம் - மாலை]

என்ற பாசுரப் பகுதியால் அத்திருப்பதி எம்பெருமானது திவ்விய ஆபரண அழகில் தலைவி ஈடுபட்டுப் பேசும் படிகளை விரித்துரைக்கின்றாள். "மேரு மலையின்மீது ஆயிரம் கதிர்கள் விரிந்தாற் போன்ற திருவபிடேகமும், விண்மீன் கூட்டங்கள் மின்னினாற் போன்ற பல மாலை வரிசைகளும், மற்றும் அணி வகைகளும் ஒளிரும் அழகை என்னவென்று சொல்வது?" என்று வாய்வெருவி நிற்கின்றாள் என்று குறிப்பிடுகின்றாள் தோழி. இவளுக்கு அத்தலத்து எம்பெருமானோடு கலவி நேர்ந்ததாகவே நினைக்கத் தோன்றுகின்றது என்பது தோழியின் குறிப்பு.

ஆழ்வார் நாயகி இரவும் பகலும் திருப்புலியூர் வளத்தையே புகழ்ந்து கொண்டிருக்கின்றாள் என்பதை அடுத்துக் குறிப்பிடுகின்றாள் தோழி.

புகழும் இவள்நின் றிராப்பகல்
பொருநீர்க்கடல் தீப்பட்டு எங்கும்
திகழும் எரியொடு செல்வ
தொப்பச் செழுங்கதிர் ஆழிமுதல்
புகழும் பொருபடை ஏந்திப்
போர்புக் கசுரரைப் பொன்றுவித்தான்

திகழும் மணிநெடு மாடம்
நீடு திருப்புளி யூர்வளமே (3)

[பொருநீர்கடல் - அலை எறியும் கடல்; தீப்பட்டு - நெருப்புக் கொளுத்தி; எரி – தீக்கொழுந்து; ஆழி - சக்கரம்; பொருபடை - போர் செய்யும் ஆயுதங்கள்; பொன்றுவித்தான் - அழித்தவன்]

என்பது பாசுரம். கடல் வண்ணனான எம்பெருமான் திருவாழியாழ்வான் முதலான திவ்யாயுதங்களை அணிந்து கொண்டு எழுந்தருள்வது 'ஒரு கடல் நெருப்புக் கொளுத்தி நடந்து செல்லுகின்றதோ?' என்று ஐயுறும்படியாகவுள்ள தென்கின்றாள். அன்றியும் 'இந்த எம்பெருமான் திருவாழி திருச்சங்கு முதலிய திவ்யாயுதங்களுடன் போர்க்களத்தில் சென்று அரக்கர்களைத் தொலைத்தருளும் பேராற்றலை இரவும் பகலும் இடையூடின்றிப் புகழ்ந்து கூறா நின்றாள். இதனாலும் இத்திருப்பதி எம்பெருமானுடன் இவளுக்கு ஒரு சம்பந்தம் நிகழ்ந்ததாகத் தோன்றுகின்றது' என்று குறிப்பாகப் புலப்படுத்துகின்றாள் தோழி.

மேலும் தோழி கூறுகின்றாள்: 'வண்டினம் முரலும் சோலை, மயிலினம் ஆலும் சோலை, கொண்டல்மீ தணவும் சோலை, குயிலினம்கூவும்சோலை, அண்டர்கோன் அமரும் சோலை,(திருமாலை-14)என்றெல்லாம் சோலை வளத்தைப் பேசுகின்றாள். ''வயலடங்கலும் கரும்பும் செந்நெலுமாய் வளர்ந்திருக்கும் அழகைச் சொல்லுகின்றாள். அங்கு உழுவதும் நடுவதுமான பண்ணையில் நடைபெறும் செந் நெல்களின் அழகினையும், சுற்றிலும் நீர் நிலைகள் சூழ்ந் திருக்கும் வனப்பையும் வாய்வெருவுகின்றாள். இங்ஙனம் பெண் பிள்ளை பேசும் அழகுகளை என் சொல்லுவேன்? இத்துடன் நின்றாளா?

வ ளம்கிளர் மூவுல
குண்டுமிழ் தேவபிரான்
பேர்வ ளம்கிளர்ந் தன்றிப்
பேச்சிலன் இன்றுஇப் புனைபிழையே (4)

இத்தலத்து எம்பெருமானின் 'ஆபத்தில் தோழன்' என்றிருக்கும் திருக்குணத்தில் ஈடுபட்டு அவன் பிரளய காலத்தில் எல்லா உலகங்களையும் தன் திருவயிற்றில் வைத்துப் படைப்புக் காலத்தில் அவற்றை வெளிநாடு காண உமிழ்ந்த அற்புதச் செயலையும் பேசுகின்றாள். இவற்றை யெல்லாம் சொல்லும்போது 'இவளுடைய வடிவு ஆபரணம் பூண்டாற் போன்று விளங்கும் அழகு சொல்லுந்தரமன்று' என்று குறிப்பிடுகின்றாள். 'இதனாலும் இத்தலத்து எம்பெரு மானுடன் கலவி நேர்ந்திருக்க வேண்டும்போல் தோன்று வதை ஊகிக்க வேண்டும்' என்கின்றாள் தோழி.

இன்னும் இத்தலத்து எம்பெருமானுடன் புணர்ச்சி நடைபெற்றிருத்தல் கூடும் என்பதற்குச் சான்றுகளையும் காட்டத் தொடங்குகின்றாள்.

புனைபிழைகள் அணியும் ஆடை
யுடையும் புதுக்க ணிப்பும்
நினையும் நீர்மைய தன்றிவட்கிது
நின்று நினைக்கப் புக்கால
சுனையி னுள்தடத் தாமரை
மலரும் தண்திருப் புலியூர்
முனைவன் மூவுல காளி
அப்பன் திருவருள் மூழ்கினளே (5)

[புனை - பூணுதல்; புதுக்கணிப்பு - வடிவில் பிறந்த புதுமை; முனைவன் - முன்னோன்; ஆளி - ஆள்பவன்]

என்பது பாசுரம். தலைமகளிடத்துக் காணப்பெறும் மூன்று சிறப்புகளை எடுத்துக்காட்டித் தன் ஊகத்தை உறுதிப்படுத்துகின்றாள் தோழி 'அவள் அணிந்திருக்கும் திருவாபரணங்கள் முன்பு நாம் பூட்டினாற் போல இல்லை; கலைத்துப் பூண்டாற் போல் தோன்றுகின்றதன்றோ?' என்கின்றாள். 'உடுத்தின ஆடையும் நாம் உடுத்தின்படி இல்லை. தலைப்பு மாற்றி உடுத்தினபடியல்லவா உள்ளது? வேறுபாடு தோன்றவில்லையா?' என்று ஆடையின்மீது கவனத்தை ஈர்க்கின்றாள். 'இவள் வடிவிலும் பிறந்திருக்கும் புதுமைகள் தோன்றவில்லையா? இதற்கு முன்பு இது கோடையோடின வயல் போலேயன்றோ இருந்தது? இப்போது நீர் பாய்ந்த வயல் போலே தோன்றும் செவ்வாயைப் பாருங்கள்' என்கின்றாள். 'காலம் என்னும் ஒரு பொருள் உள்ளவரையிலும் நின்று ஆராயப் புகுந்தாலும் இவளிடம் பிறந்துள்ள அழகுகள் நினைத்துக் கூடப் பார்க்க முடியாதவை' என்பதையும் உணர்த்துகின்றாள். 'எம்பெருமானுடைய படிகளையே நினைக்க முடியாதபோது அவன்திறத்தில் ஈடுபட்டாருடைய படிகளை (பாகவதருடைய படிகளை) நினைக்கும் தரமன்று' என்பதனையும் பெறவைக்கின்றாள். இவற்றால் 'முனைவன் மூவுலகாளியப்பன் திருவருள் மூழ்கினளே' என்று இயற்கைப் புணர்ச்சி நடைபெற்று விட்டதை உறுதிப்படுத்துகின்றாள்.

மேற்கூறிய சான்றுகள் மட்டுமா? 'வேறு சான்றுகளும் உள்ளன' என்கின்றாள்.

திருவருள் மூழ்கி வைகலும்
செழுநீர் நிறக்கண்ணபிரான்
திருவருள் களும்சேர்க் தலைக்கடை
யாளம் திருந்தவுள (6)

[வைகலும் - நாள்தோறும்]

என்று கூறுவதை நோக்குக. 'எப்பொழுதும் அவன் திருவருளிலேயே மூழ்கிக் கிடக்கின்றாள். அவனுடைய திருவருள் இவளிடம் சேர்ந்தமைக்கு மறைக்க முடியாத அடையாளங்கள் பல உள்ளன' என்று கூறி ஒன்றினை மட்டிலும் காட்டுகின்றாள்.

திருவருள் கமுகு ஒண்பழத்தது
மெல்லியல் செவ்விதழே (6)

[கமுகு - பாக்கு மரம்; இதழ் - உதடு]

'எம்பெருமான் திருவருளால் இத்திருப்பதியில் வளர்ந்த கமுகு—திருவருள் கமுகு—ஈன்ற செவ்விய பழத்தின் நிறத்தையல்லவா ஒத்துள்ளது இவளுடைய உதடுகளின் நிறம்? இதனை, நீங்களே ஆராய்ந்து பார்க்கலாமே' என்கின்றாள். இவ்விடத்தில் 'திருவருள் கமுகு' என்பதற்கு இன்சுவை மிக்க ஈட்டின் ஸ்ரீசூக்தி: ''திருவருள் கமுகு என்று சில உண்டு; அதாவது நீரால் வளருகையன்றிக்கே பெரிய பிராட்டியாரும் சர்வேசுவரனும் கடாட்சிக்க, அத்தால் வளருவன சில'' என்ற பகுதி எண்ணி எண்ணி மகிழத் தக்கது.

இத்திருப்பதியின் இயற்கைச் சூழலைக் கூறுவான்போல் அங்கு அஃறிணைப் பொருள்களும்கூட ஒன்றோடொன்று கலந்து பரிமாறி வாழா நிற்கும் என்பதனையும் காட்டு கின்றாள். மெல்லிய இலைத்தழைப்பையும் அழகினை யுடைய வெற்றிலைக் கொடி முதிர்ந்து இளகிப் பருத்த கமுக மரத்தைத் தழுவி நிற்கின்றது. ''(வெற்றிலை) தன் கணவனான கமுகுக்குத் தன் உடம்பை முற்றூட்டாகக் கொடுக்கும் போலே காணும்'' என்பது ஈடு. இதற்குமேல் தென்றற்காற்று வாழைத் தோப்பில் வீசா நிற்கின்றது. ''இப்படிப்பட்ட வாய்ப்பு அமைந்த தலத்தில் இவளும் தான் உகந்த பொருளை அணையப் பெற்றது வியப்பு அன்று,

முலைறயே'' என்று குறிப்பிடுகின்றாள். ''மல்லல்அம், செல்வக் கண்ணன்தாள் இம்மடவரலே'' (7) என்ற தோழியின் கூற்றும் சிந்திக்கத்தக்கது. அத்திருப்பதி எம்பெருமானின் திருநாமமேயன்றி வேறொரு பெயரையும் சொல்லுவதற்கில்லை. அங்ஙனமே, 'பரவாள் இவள் நின்று இராப்பகல்... திருப்புலியூர் புகழன்றி மற்றே' (9). திருப்புலியூரின் புகழை வாய்விட்டுச் சொல்லுவது தவிர, வேறொன்றும் அறியாள் இத்தலைவி' என்கின்றாள். இதனாலும் இத்தலத்து எம்பெருமானுடன் இவளுக்குக் கலவி நேர்ந்திருக்கவேண்டும் என்பதனை மேலும் உறுதிப்படுத்துகின்றாள்.

இறுதியாக, மேற்கூறிய காரணங்கட்கெல்லாம் முத்தாய்ப்பு வைத்த மாதிரி இதற்கு வேறுவிதமான முடிவும் கூற இயலாதவாறு, பிறிதொரு காரணம் காட்டுகின்றாள் தோழி.

'அன்றிமற் றோருபாய மென்? இவள்
அம்தண்து ழாய்க்கமழ்தல்
.......... ...... ..........
நின்ற மாயப்பி ரான்திரு
வருளாமிவள் நேர்பட்டதே (10)

[உபாயம் - காரணம்; கமழ்தல் - மணம் வீசுதல்]

இவளது உடம்பில் அழகிய குளிர்ந்த திருத்துழாயின் மணம் வீசுவதற்கு வேறு என்ன காரணம் இருக்கமுடியும்? என் உடம்பிலாவது உங்கள் உடம்பிலாவது திருத்துழாயின் மணம் வீசுவதற்குக் காரணம் உண்டோ?' என்கின்றாள். ''இராஜபுத்திரனை அணையாதார்க்குக் கோயில் சாந்து நாறுகைக்கு விரகு உண்டோ?'' என்பது ஈடு. இதனால் திருப்புலியூரில் நின்ற மாயப்பிரானுடைய திருவருளுக்கு இவள் இலக்காயினாள் என்று சொல்லித் தலைக்கட்டுகின்றாள்.

தோழியின் மதிநுட்பமெல்லாம் புலப்படுமாறு அமைந்த இத்திருவாய்மொழியால் ஆழ்ந்த தமிழ்ப் பண்பாடு தெள்ளி தின் விளங்குவதைக் கண்டு மகிழ்கின்றோம். மேலும், தோழியின் பேச்சால் தலைமகள் திருப்புலியூர் எம்பெரு மானைத்தவிர பிறருக்குஅடிமைப்பட்டவள் அல்லள்" என்பது- அநந்யார்ஹத்துவம் - தெரிகின்றது என்பதனையும் அறிய முடிகின்றது.

இங்ஙனம் இந்த மூன்று பதிகங்களாலும், "இந்த ஆன்மா பிற தெய்வங்கட்கு அடிமைப்பட்டது மன்று; தனக்குத் தானே உரியது மன்று; பகவான் ஒருவனுக்கே உரியது" என்ற கருத்தாகிய 'அநந்யார்ஹசேஷத்துவம்' தெளிவாக விளங்குகின்றது.

# 9. தாய்ப் பாசுரங்கள்

திருவாய்மொழியில் தாய்ப் பாசுரமாக நடைபெறு பவை ஏழு பதிகங்கள்.[1] இவை ஈசுவர பாரதந்திரியத்தை யும், அவனே உபாயமாகின்றான் என்ற கருத்தையும் தெரி விப்பதாகச் சுட்டினோம் (ஆ.ஹி சூத்திரம் 134). பாசுரங் களைக் கொண்டு இவற்றை விளக்குவோம்.

1. ஆடி ஆடி (2.4) என்ற திருவாய்மொழியின் அவ தாரிகையில் நம்பிள்ளை கூறுவது; 'அஞ்சிறைய மடநாராய்' (1.4) என்ற திருவாய்மொழி பேசும்போது இருந்த ஆர்த்தி எப்படிப்பட்டது? 'வாயுந் திரையுகளும்' (2.1) என்ற திருவாய்மொழி பேசும்போது இருந்த ஆர்த்தி எப்படிப் பட்டது? இப்போது இத்திருவாய்மொழி பேசுகையிலும் ஆர்த்தி எப்படிப்பட்டது? என்பதை ஆராய்கின்றார். 'பெரு நிலங்கடந்த நல்லடிப் போதை' (1.3:1) யநுபவிக்க (அவ தாரம்) ஆசைப்பட்டுக் கிடையாமையால் வந்த] ஆற்றாமை 'அஞ்சிறைய மடநாரையில்' 'நம்பியைத் தென்குறுங்குடி நின்ற' (1.10:9) என்ற அர்ச்சாவதாரத்தில் ஆசைப்பட்டுக் கிடையாமையால் வந்த ஆற்றாமை 'வாயுந் திரையுகளில்'; இங்கு இத்திருவாய்மொழிக்கு முன் ஆழ்வார் ஆசைப் பட்டது 'அடியார் குழாங்களை (நித்ய;சூரிகள்) உடன் கூடுவது என்று]கொலோ' (2.3:10) என்பது. இத்] திருவாய்

---

1. திருவாய் : 2.4; 4.2; 4.4; 5.6; 6.6; 6.7; 7.2.

# சடகோபன் செந்தமிழ்




பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார்

## எம்பெருமானார்

பிடிக்கும் பரசமயக் குலைவேழம்
பிளிற வெகுண்டு
இடிக்கும் குரல்சிங்க ஏறனையான்
எழுபாரும் உய்யப்
படிக்கும் புகழெம் மிராமா
நுசமுனி பல்குணமும்
வடிக்கும் கருத்தி னர்க்கேதிரு
மாமணி மண்டபமே.[1]

—பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்

1. திருவரங்கக் கலம்பகம்—எம்பெருமானார் துதி.

# சடகோபன் செந்தமிழ்

(ஆசிரியரின் 74-வது அகவை வெளியீடு)


'அருங்கலைக்கோன்' 'ஸ்ரீசடகோபன் பொன்னடி'

பேராசிரியர்

டாக்டர் ந. சுப்புரெட்டியார்

(எம்.ஏ., பி.எஸ்சி., எல்.டி., பிஎச்.டி.)

தமிழ்ப் பேராசிரியர்—துறைத்தலைவர் (ஓய்வு)

திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி



விற்பனை உரிமை :

பாரி நிலையம்

184. பிராட்வே · சென்னை · 600108

முதற்பதிப்பு : அக்டோபர், 1989.



---

பக்கம் : xxxvi+408=444

---

விலை : ரூ. 42.00

VENKATAM PUBLICATIONS
AD-13; Plot No. 3354
Anna Nagar, Madras-600 040
Phone 61 55 83.

---

அச்சிட்டது : கவின்கலை அச்சகம், கந்தசாமி நகர்,
பாலவாக்கம், சென்னை-600041
தொலைபேசி : 41 71 41

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. (குறள்-215)

நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு (குறள்-953)



சொர்ணாவூர் வைகுந்தவாசி
திரு கே. சந்தானம் ரெட்டியார்

பிறப்பு :
ஏப்பிரல் 6, 1929

பரமபதித்தது :
ஜூலை 17, 1981

வைணவச் செல்வரும் ஈத்துவக்கும்.
இன்பங் கண்டவரும்
வைகுந்தவாசியுமான சொர்ணாலூர்
திரு. கே. சந்தானம் ரெட்டியார் அவர்கட்கு

## அன்புப் படையல்

திங்கள்நேர் முகத்து நாரணன் அருளில்
 திளைத்தவர்; திருமகள் அருளால்
மங்கலச் செல்வம் யாவையும் பெற்று
 மகிழ்ந்தவர்; நாதயா முனர்போல்
துங்கமார் பண்பால் பிரபந்தம் யாண்டும்
 துலங்குறத் தொண்டுசெய் வள்ளல்;
எங்குல தீபம் பொருவில் சந்தான
 ஏந்தலார்க் குரியதிந் நூலே.

# சிறப்புப் பாயிர மாலை

**'பாவலர் மணி', 'சித்தன்', 'வைணவமணி'**
**பல் மருத்துவர்**

## வித்துவான் மு. இராதாகிருஷ்ணன்

**புதுவை**

1. *சுகரென்னும் மாமுனிபோல் பிறந்த போதே*
*துறந்தவர்நம் சடகோபர்! அவர்தம் ஆற்றல்*
*சகந்தனிலே விரித்திடயார் சதுரர்? அந்தச்*
*சாமி,உயர் சேனையர்கோன் அவதா ரந்தான்!*
*அகந்தனிலே உன்னுதொறும் அமுதம் பெய்யும்*
*அரியதமிழ் இவர்தந்தார்! காரி மாறர்*
*பகர்ந்ததமிழ் கேட்பதற்கே ஆண்டு தோறும்*
*பத்துநாள் ஒதுக்குகிறார் அரங்கத் தண்ணல்!*

2. *வண்பொருநை யாற்றின்தென் கரையில் வாய்த்த*
*வளவயல்சூழ் திருநகரி எனும்பேர் பூண்ட*
*தண்குருகூர் நகருறையும் காரி என்னும்*
*தவமுடைய நல்லார்க்கும், பொறைக்கோர் சான்றாம்;*
*பெண்குலத்துப் புகழ்விளக்கம் உடைய நங்கைப்*
*பெருமாட்டி யாரவர்க்கும் உலகம் உய்ய*
*மண்ணிலொரு வைகாசிப் பருவ மாக*
*மலர்ந்தவிசா கத்திலிவர் அவத ரித்தார்!*

3. *அவதாரம் செய்தருளும் நாள்தொ டங்கி*
*அழுததிலை, முலையுண்ணும் அவதி இல்லை!*
*தவராசன் போல்வாட்ட மின்றி, மௌனச்*
*சாமியென இவரிருந்தார்! கண்கள் மூடி;*
*இவரிருந்த நிலைகண்டே பெற்றோர் உள்ளம்*
*எய்தியதாம் துன்பத்தை எழுதல் ஆமோ?*
*நவமணியாய்க் குறுங்குடியுள் நின்ற நம்பி*
*நல்லருளும் ஈதேஎன் றயர்ந்தார் பெற்றோர்!*

4. பொருநைத்தென் கரையினிலே பொலிந்து நின்ற
பூரணனின் திருவுளத்தை ஏற்றே ஆங்கோர்
திருப்புளியின் கிளையினிலே தொட்டில் கட்டித்
திருக்கண்கள் விழியாத இவரை வைத்துக்
குருகூர்க்கு விடைகொண்டார் பெற்றோர்! அன்றே
குவலயம்நல் வருள்பெற்ற பனிரண் டாம்நாள்!
ஒருமுனிபோல் யோகநிலை கூடப் பெற்றே
உணர்வொன்றிப் பதினாறாண் டிருந்தார் ஐயர்!

5. வடதிசைக்கண் இருக்கின்ற திருக்கோ யில்கள்
மாண்பெல்லா மறிந்தவற்றை வணங்கச் சென்ற
திடமுடைய மதுரகவி அயோத்தி தன்னைச்
சேவித்துத் திரும்பிடுமோர் இரவு தன்னில்
கடலெழுந்த பகலவனின் ஒளிபோல் விண்ணில்
கண்டனரோர் பேரொளியைத் தெற்குத் திக்கில்!
''சுடர்இதுவேன்? காடெரியும் ஒளியோ? அன்றிச்
சுற்றியுள்ள சிற்றூர்தான் எரியும் தீயோ?''

6. எனவியந்தார்! பின்னிரண்டு மூன்று நாட்கள்
இவ்வாறே ஒளிகாட்ட ''இதுவென்—தேர்வோம்''
எனவெழுந்தார்! இரவெல்லாம் நடந்து பன்னாள்
எழிலரங்கம் தனையடைந்தார்! அதற்கும் அப்பால்
மனமடங்காப் பேரொளிதான் இருக்கக் கண்டு
மாமதுர கவிமீண்டும் நடக்க லானர்!
வனம்,ஆறு கடந்தேபின் குருகை சென்றார்,
மற்றந்த ஒளியங்கே மறைந்த தோர்ந்தார்!

7. ஊரெல்லாம் தேடிப்பின் அனந்தாழ் வானாம்
உறங்காத புளியின்கீழ் வீற்றி ருக்கும்
மாறர்தம் யோகநிலை கண்(டு) இவர்தாம்
மானுடரன் றென்றுணர்ந்தார்!அவர்முன் னங்கோர்

சீருடைய கல்லொன்றை இட்டார், கேட்டே
திருக்கண்கள் திறந்தாராம் குருகூர் நம்பி!
நாருடைய மதுரகவி கேள்வி ஒன்றை
நயமாகக் கேட்டவர்பால் ஞானம் பெற்றார்!

8. "செத்தத்தின் வயிற்றினிலே சிறிய வொன்று
சேர்ந்துபிறந் தாலிந்த வையந் தன்னில்
எத்தைத்தின் றெங்கதுவும் கிடக்கும்?" என்ற
இனியதொரு கேள்வியினை விடுத்தார்; மாறர்
"அத்தைத்தின் றங்கேயே கிடக்கும்" என்றே
அருளினரால்! மதுரகவி கேட்டி வர்தாம்
வித்தகரென் றேஓர்ந்தார்! அவர்பொற் றாளில்
வீழ்ந்தடிய ராயவர்க்குத் தொண்டு பூண்டார்!

9. நம்பெருமாள் என்றரங்கர் தம்மைச் சொல்வர்;
நம்முடைய மாறனையும் கற்று வல்லோர்
நம்மாழ்வார் என்கின்றார் உரிமை யோடே!
நன்மகிழ மலர்மாலை சூட லாலே
நம்பிவகு ளாபரணர் என்பர் மேலோர்!
நாயகியாய்ப் பாசுரங்கள் நல்க லாலே
அம்புவியோர் பராங்குசநா யகிஎன் கின்றார்;
அருள்மாறன், சடகோபன் ஐயர் நாமம்!

10. வேதத்தில் ஒன்றான சாம வேத
விரிவுக்குள் சாந்தோக்யந் தன்னில் கண்ட
கோதற்ற "உத்"என்னும் பகுதி தன்னைக்
குலவின்பப் பாட்டாக்கி—மக்கள் உய்யத்
தீதற்ற நெறிகாட்டித் திருமால் காட்டும்
"திருவாய்நன் மொழி"யாக்கித் தந்தே, இன்றும்
ஓது"திரு விருத்த" "மொடாசிரியம்" மிக்கிங்
குயர்ந்த"திரு வந்தாதி" நான்கும் தந்தார்.

11. இவரிடத்துப் பாடல்பெறத் திவ்ய தேசத்
தெய்வப்பெருமான் பலரிவர்முன் காட்சி தந்தார்!
தவமுடையார் அறியாத சித்த சித்தில்
வரனென்னும் தத்துவநன் நெறிவி ளக்கிப்
புவிமுழுதும் வணங்குகிற சோழ நாட்டுள்
புகழ்மிக்கத் திருப்பதிகள் ஐந்தினுக்கும்
கவிதந்தார்! நால்வேதக் கருக்காய் நிற்கும்
கனிதமிழாம் இவர்தமிழும்! மற்று முள்ள

12. பாண்டியநாட் டுப்பதிகள் தம்முள் நம்மின்
பராங்குசரும் பாடியவை பன்னி ரண்டாம்!
நீண்டமலை நாட்டிலுள்ள ஆறி ரண்டு
நிறைபுகழ்கொள் விண்ணகரம் தம்மில் உள்ள
ஆண்டகையும் இவரிடத்துப் பாடல் பெற்றார்!
அடுத்துவரும் வடநாட்டுத் தலங்கள் உள்ளே
பூண்டஎழில் வேங்கடத்தை முதலாக் கொண்ட
புண்ணியநற் றலமைந்தைப் பொலியச் செய்தார்!

13. ஆழ்வார்கள் பதின்மர்களாம்! அவர்க ளுள்ளே
ஆழ்வாரென் றாலிவரைத் தான்கு றிக்கும்!
ஆழ்வார்கள் உறுப்புக்கள் என்னில் இந்த
ஆழ்வாரோ உயிராவர் என்பர் மேலோர்!
வாழ்வாகக் கருதுகிற திருமால் தன்னை
வணங்கிடவே நாம்சென்றால், "உமக்கு வாழ்விங்(கு)
ஆழ்வாரே" என்றவரைத் தூக்கி நாமும்
அருள்பெறவே சடாரியெனத் தலையில் வைப்பார்!

14. ஆதித்தன் ஓர்சுடராம்! அடுத்த தான
அவதார இராகவனாம் பகல வன்தான்!
சோதியெனும் கண்ணனுமோர் கதிர்என் பார்கள்!
சொலுமிந்த மூவர்களும், சடகோ பர்தாம்

மேதினியில் செஞ்சடராய் எழுந்த பின்னர்
விண்சுடர்முன் மின்மினியாய்ப் பொலிவி ழந்தார்!
ஓதுமவர்க் கேகாத உள்ளி ருள்தான்
உடையநங்கை மகனார்க்கண் டொதுங்கிற் றையா!

15. இங்கிவர்தம் தமிழ்கொண்டே கற்று வல்லோர்
எளிதாக மறைநிலங்கள் தெளிகின் றார்கள்;
தங்கிஅதில் உளநயங்கள், சாத்தி ரங்கள்
தமையெல்லாம் சான்றோர்தம் உரையுள்
கொண்டார்!
இங்கவற்றைப் பாலைப்போல் யாரும் கொள்ள
எளிதாக—இனிதாக—அளித்தா ரெங்கள்
பொங்குபுகழ்ச் சுப்புரெட்டி யாராம் தோன்றல்;
புலமைமிகும் தமிழ்வலவர் இவர்யா ரென்னில்!

16. சிவவாக்ய ரெனும்பேர்கொள் சித்தர் இங்குத்
திருமழிசைப் பிரானாகி, ஆழ்வார் தம்முள்
யுவராச ராய்விளங்கும் தன்மை போல,
உவமையிலா நம்சுப்பு ரெட்டி யாரும்
சிவநெறியி லேநின்றும் விசிட்டாத் வைதச்
செந்நெறியில் ஆழங்கால் பட்டே நின்றார்!
நவமான வைணவநூல் பலவும் தந்த
நற்புலவர் இவர்ப்பற்றிச் சிலசொல் வேனே!

## வேறு

17. நற்றமிழ்த் துறைகள் என்னும்
கடல்களைக் கடந்த நல்லார்!
விற்பனர் வியக்கும் வண்ணம்
விரிவுரை ஆற்றும் சூரர்!
கற்றவர் அவையை நீங்காக்
கல்வியர்! கவிகள் தேரும்
பெற்றியர்! அவைவி ளக்கும்
பெருமையும் பெற்ற சீலர்!

18. "அருங்கலைச் கோன்" என் இன்ற
அரியதோர் பட்டத் திற்கே
உரியவர்! கணமும் சோரா(து)
உழைத்திவர் உயர்வு பெற்றார்!
பொருளினைப் பெரிதென் றெண்ணாப்
புண்ணியர்! உலகம் வாழ
அருளினால் பன்னூல் தந்தார்!
ஆரிவர் திறம்தேர் வாரே!

19. பல்கலை ஆய்ந்து, நூல்கள்
பற்பல தந்து தம்மை
வெல்பவர் இன்றி நிற்கும்
மேன்மையர்! விரிந்த கேள்விச்
செல்வராம் இவரோர் ஆசான்!
செந்தமிழ் இவர்பால் கற்றோர்
நல்லராய் வல்ல ராக
விளங்குவர் நானி லத்தே!

20. கலைகளின் களஞ்சி யத்தைக்
கனிச்சுளை யாக்கித் தந்த
பலகலைச் செல்வர்! நல்ல
பதிப்புக்கள் வரஉழைத் தோர்!
தலைமுறை பலவும் வாழத்
தத்துவம் சமய மோடு
விலைமதிப் பில்லா நூல்கள்
விளக்கமாய்த் தந்த மேலோர்!

21. நஞ்சட கோபர் செய்த
செந்தமிழ் நமக்குத் தேனாய்
விஞ்சிய புலமை யாலே
விரித்தளித் துள்ளார்! அர்த்த

பஞ்சக மான இந்தப்
பண்புநூல் நுணுக்க மெல்லாம்
செஞ்சுடர் எனவி ளக்கம்
செய்துநற் றமிழர்க் கீந்தார்!

22. அகப்பொருள் தத்து வங்கள்,
அகம்கவர் தோழிப் பாக்கள்
தகவுடைத் தாய்ப்பாட் டின்னும்
தண்டமிழ்ச் சுவைகள் பொங்கும்
மக(ள்)அருட் பாட்டு, வேத
மந்திரப் பாடலெல்லாம்
வகையுற உரையிட் டிங்கே
வானமு தாகத் தந்தார்!

23. சித்தசித் தீச னென்று
செப்பிடும் தத்து வங்கள்
புத்தியுள் நிற்கும் வண்ணம்
பொலிவுறக் காட்டி, நங்கள்
வித்தகர் சடகோ பர்தம்
திருவுளம் விளங்க வைத்தார்,
எத்தனை தரம்உண் டாலும்
இனித்திடும் அமுத மொத்தே!

24. "மாசறு சோதி'' தன்னில்
மடலெடுத் தினிமை தேக்கும்
பாசுரக் கருத்தை நேர்த்தித்
தமிழினால் பலரும் கொள்ள
ஆசற விளக்கும் சுப்பு
ரெட்டியார் ஆயி ரத்துள்
மீசுர மாக நின்ற
ஒருவராய் மேன்மை உற்றார்!

25. தூதெனில் மாறன் சொன்ன
தூதுதான் தமிழில் மேலாம்!
ஓதுமத் தூதில் காணும்
உள்ளுறை நயங்கள் தம்மைத்
தீதறக் காட்டி, ஞானம்
சிறந்தநல் லனுட்டா னங்கள்
மேத(கு)அப் பறவை தன்னின்
விரிசிற கிரண்டென் கின்றார்!

26. அன்னமும் கிளியும் வண்டோ
டருங்குயில் மயில்கள் பூவை
என்னுமிப் பறவை யெல்லாம
பறவையோ? இல்லை, இங்கே
நன்னயத் தாழ்வார் நாத
முனிக ளாசாரி யர்கள்,
முன்னைய சான்றோர் என்ற
மேலவர் முழக்கம் தானும்

27. இப்புவி மாந்தர் நெஞ்சில்
இடங்கொளும்; யாரும் கொள்ள
ஒப்பிலாச் சடகோ பர்தம்
உளத்தினை—அருங்க லைகோன்
எய்ப்பினில் வைப்பாய் நாட்டுக்
கீந்தவிந் நூலின் மேன்மை
செப்பிடற் குரியன் யானோ
சேடனே விளக்க வல்லான்!

28. கண்ணனைக் குருகூர் வள்ளல்
காதலால் பாடிச் சென்ற
வண்ணங்க ளாயி ரத்தின்
வகைகளை அலசி, யாரும்

உண்ணுதற் கேற்ற நீராய்
உரையிடு ரெட்டி யாராம்
அண்ணலின் புகழிங் காழ்வார்
புகழுள வரையி ருக்கும்!

29. உலைவிலா துழைப்ப தொன்றே
உயர்நெறி யாகக் கொண்டு,
பலகலை நூல்கள் தந்த
பன்மொழிப் புலமை யாளர்
நலமிகு சுப்பு ரெட்டி
யாரெனும் நம்பிக் கிங்கே
''தலையலால் கைம்மா றில்லை''
என்பரே தமிழச் சான்றோர்!

30. பற்பல பரிசு பெற்றார்;
பல்கலைக் கழகத் தார்கள்
விற்பன ரிவருக் கீந்த
மேன்மைகள் எண்ணி லாத!
சொற்றிறம் வல்ல சுப்பு
ரெட்டியா ரென்னும் தோன்றல்
நற்றமிழ் நன்னூ லின்னும்
ஆயிரம் நல்கி வாழ்க!

31. மூச்செலாம் தமிழ்தான் இந்த
மூதறி வாளர்க் கென்பேன்;
பேச்செலாம் இலக்கி யந்தான்!
பிறழ்ந்தொரு நாளும் ஐயர்
''ஆச்செலாம்'' எனஓய்ந் தாரில்!
தமிழ்ப்பயிர்க் கருளும் கங்கைப்
பாய்ச்சலாம் இவரின் தொண்டு!
வாழிய இவர்பல் லாண்டே!

28, இலால் பகதூர் தெரு,
புதுச்சேரி-1
18-7-'89

மு. இராதாகிருட்டிணன்
—'சித்தன்'

# அணிந்துரை

## பேராசிரியர் டாக்டர். தி. வைத்தமாநிதி

எம்.ஏ., பி.டி., பிஎச்.டி.

'**சடகோபன் செந்தமிழ்**' என்னும் இந்த 'நன்னூல்' பேராசிரியர் டாக்டர் **ந. சுப்புரெட்டியார்** அவர்கள், தமிழ் கூறும் நல்லுலகிற்கு, இப்போது, புதிதாக ஆக்கித் தந்துள்ள ஒன்று. பேராசிரியர் அவர்கள் பயன்மிக்க பல நூல்களை, எழுதிப் பெரும் எழுத்துப் பணியாற்றியுள்ளவர்கள். அவர்கள் தந்துள்ள நூல்கள் தம் பொருளாலும், பொருளைச் சொல்லும் வகையாலும் தரத்தில் உயர்ந்தவை என்ற பாராட்டை அறிஞருலகிடமிருந்து பெற்றவை. அத்தனையும் சிறப்பானவையே. அவர்களது உயர்நிலைப்பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகத் தலைவர் ஆகிய, பேராசியப் பணியில் ஈடுபாட்டோடு, தம்மிடம் பயில்வோரைத் 'திருத்திப் பணி கொண்ட' அநுபவத்திற்கும், தமிழ் இலக்கிய, சமய இலக்கிய நூல்களில், அவர்களுக்குள்ள ஆழ்ந்த புலமைக்கும், தெளிந்த பார்வைக்கும் எடுத்துக் காட்டுகளாக விளங்குபவை. அத்தகைய அறிவு சான்ற பெரியாரின் எழுத்தாற்றல், இப்போது **சடகோபன் செந்தமிழ்** என்ற நூலை மிகுந்த ஆர்வத்துடன் தமிழ் உலகிற்கு அளிக்கின்றது.

**சடகோபன் செந்தமிழ்** பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்களது அடிமனத்தில், அநுபவமாகப் பல நாட்கள் படிந்து, படிந்து, அன்னாரின் மனம் முழுவதையும் நிறைக்க முயல்கின்ற வொன்று இலக்கிய ஆக்கம் பெற்று எழுத்து முயற்சியாகிவிட்டது என்றே தோன்றுகின்றது. ஏனென்றால், சைவ மரபினரான அவர்கள் வைணவ நெறி

யின் தலைவராம் 'வேதம் தமிழ் செய்த வித்தகரான'' நம்மாழ்வாரின் பாசுரங்கள் தேக்கித் தரும் இறையநுபவத்திலும் 'ஈரத் தமிழிலும்' மனதுமைக் கொடுத்த அந்தந் தாராளம் இந்த நூலில் பயில்வதைப் பார்க்கின்றோம்.

அவ்வப்போது இந்நூலின் பகுதிகளிலும் அடிக்குறிப்புகளிலும் சடகோபன் வாழ்வோடும் 'மொழி' யோடும் தொடர்புள்ள செய்திகளுக்குச் சைவத்திலிருந்து ஒப்புமை காட்டும்போது இதனைப் புரிந்து கொள்ளுகின்றோம். அந்த ஒப்புமை தரும் முயற்சியின் பின்னால் அவர்களது மனதுக்குள்ளேயே, ஓங்கி வளர்ந்துள்ள ஒரு சிந்தனை,

> ''வைணவத்தில் இந்த நிலையும், அதைச் சொல்லும் தமிழ்ச் சுவையும் வேறோர் ஒப்பின்றி உயர்வது போலுள்ளதே!'' என்பது.

அவர்கள் நூலின் தொடக்கத்திலிருந்து முடிவுவரை, இந்த உணர்வு நிலைபெற்றிருக்கின்றது. அதனால்தான் அவர்கள் நம்மாழ்வாரின் வாழ்க்கை வரலாற்றை நூலின் முதல் இயலாகத் தந்துள்ளார்கள். ஆங்கே, வழிவழியாக வந்துள்ள செய்திகளையும், தலபுராணச் செய்திகளையும் ஏற்றுக் கொண்டு, அவற்றின் ''புராணிகத் தன்மை'' வாயிலாக (Mystical quality and language) வலியுறுத்தப் பெறும் என்றுமுள உண்மைகளை இனங்காண முயல்கின்றார்கள். T.S. எலியட் என்ற மேனாட்டு அறிஞர் 'Myth is the emotional equivalent of Philosophy' என்று குறிப்பிடுவார். அதன் பொருளும் இந்த நிலையில் தெளிவாகின்றது. அதிலிருந்து தொடங்கும் சடகோபன் செந்தமிழ் பதினைந்து இயல்களாக, தம் நோக்கான நம்மாழ்வாரையும் அவர் தாயாக விளங்கி ஈன்ற தமிழ் மறையையும் ஒரு சேர இணைத்துப் பயில்கின்ற முயற்சியை எடுத்துக்காட்டி நிறைவு செய்கின்றது. அதனோடு கூட இலக்கியத்திற்கும் சமயத்திற்கும் உள்ள பிரிக்க இயலாக உறவினைக் காட்டும் வகை

யிலும், இந்நூல் நம்மாழ்வாரின் பக்தியில் விளைந்த பாசுரங்களை விளக்குகின்றது. ஆக, இந்தப் பார்வையில் வழிவழியாக வைணவ நெறி பேணி வரும் அடிப்படையை இலக்கிய வழியாக்கி, நூல் உருவாகியிருப்பதை உணரலாம். இதைச் சற்றே விளக்க விரும்புகின்றேன்.

வைணவநெறி நிற்போர் 'பிரமாணம்' (ஆதாரம்), பிரமேயம் (சொல்லப்படும் பொருள்), 'பிரமாதா' (ஆதாரம் கொண்டு பொருளை அளந்தறிபவன்) என்ற மூன்றம்ச அடிப்படையில் தம் கொள்கைகளை வகுத்துக் காட்டுவர். அதன்படி, தென்புலத்து வைணவ நெறியில் அடிப்படைச் சட்டம், தமிழ் வேதங்களான திவ்வியப் பிரபந்தங்களே. அவற்றிற்கு இந்நெறியினர் அளித்துள்ள தமிழ் இலச்சினையே ''அருளிச் செயல்கள்'' என்ற பெயர்.

ஒரு காலம் செல்வாக்கோடு எல்லா நிலைகளிலும் பயன் பெற்றுப் பின், சில காலம் மறைந்த அல்லது விடுபட்ட தமிழ் மறைகளை மறுபடியும் தம் நிலையில் குறைவில்லாமல் வடமொழி மறைக்கு மேலாகப் பயன்படும்படிச் செய்தவர் மணவாள மாமுனிகள் என்ற ஆசாரியர். ''இம்மணவாள மாமுனிவன் தோன்றாவிடில் ஆற்றில் கரைத்த புளியலவோ தமிழ் ஆரணங்கள்'' என்று வைணவத் தமிழ்ப் பக்தியுலகு பெருமையோடு கேட்கும். அந்த மாமுனிகளின் மங்களா சாசனத்தினை — வாழ்த்தினைப் — பலமாக்கிக் கொண்டன அருளிச் செயல்கள். மாமுனிகளின் குரல் வாழ்த்தியது:

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாதுமில் குரவர் தாம்வாழி — ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி!
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

ஆக, அருளிச் செயல்களே, அவை தோன்றிய காலத்திலிருந்தே தென்புலத்து வைணவ நெறியின் பிரமாணம் (ஆதாரம்) ஆயிற்று.

ஆழ்வார்கள் அனைவருமே அர்ச்சாவதாரத்திலே ஈடு பட்டவர்கள். திருக்கோயில்களில் உறையும் உருவத் திருமேனியே அவர்களுக்கு எல்லா இறைநிலையுமாகத் திகழ்கின்றது. பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை ஆகிய ஐந்து நிலைகளையும் திவ்வியப் பிரபந்தங்கள் பேசினாலும், அவற்றின் விசேஷ நோக்கு அர்ச்சாவதாரமே என்று ஆசாரிய ஹிருதயம் என்ற தத்துவ நூல் அறுதியிடும். ஆக, அர்ச்சாவதாரத்தின் நிலைக்களங்களான திருக்கோயில் கள் கண்டுள்ள திவ்விய தேசங்களின் பெருமையைப் பேசுவதே, அருளிச் செயல்களின் பெருமையாகின்றது. அத்திவ்விய தேசங்கள் அல்லது திருப்பதிகள் இந்நெறியின் **பிரமேயம்** (சொல்லப்படும் பொருள்) ஆயின.

அருளிச் செயல்களையும் திருக்கோயில்கள் திகழும் திவ்விய தேசங்களையும் ஒன்றாகவே பரவிப் போற்றிய ஆசாரியர்கள் 'பொலிக, பொலிக' என்ற திருவாய்மொழி யில் (5,2) நம்மாழ்வார் திருவாக்கு கூறுவதுபோல "கடல் வண்ணன் பூதங்களாகப் பொலிந்து வியாக்கியானங்களை ஆக்கித் தந்து, ஆழ்வார்களுடன் சேர்ந்து **பிரமாதாக்கள்** (ஆதாரத்தில் நின்று பொருளை அளந்து ஆய்பவர்கள்) ஆயினர்.

'பிரமாணம்', 'பிரமேயம்', 'பிரமாதா' என்ற மூன்றம்சம் கொண்ட வைணவ சமயநெறிக் கொள்கையை அப்படியே இலக்கியத்தோடு சமயம் பக்தி வழியில் கண்ட உறவாக்கிச் **சடகோபன் செந்தமிழ்** நூலில், பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் விளக்குகின்றார்கள். அந்த விளக்கம் கம்பநாட்டாழ்வாரின் 'சடகோபரந்தாதி' நூலின் ஒரு பாசுரத்தின் பொருளை அப்படியே விரிவாக்கியது போலத் திகழ்கின்றது. பாடல் இதுதான்:

நாடிநாடி நரசிங்கா என்று
வாடி வாடும்இவ் வாணுதலே (1)

[அகம் - மனம்; கரைந்து-உருகி;மல்கி - நிரம்பப்பெற்று]

என்பது பாசுரம். இதில் 'பிரகதாழ்வான் அபேட்சித்த சமயத்தில் நரசிங்கமாய் வந்து தோன்றி, உதவியருளின பெருமான் அந்தோ எனக்கு உதவுகின்றிலனே' என்று பெண் பிள்ளை வருந்துவதாகத் திருத்தாயார் சொல்லுகின்றாள்.

எங்கும் நாடி நாடி : திக்குகள் தோறும் கண்களைச் சுழலவிட்டுப் பார்த்தபடியே இருக்கின்றாள். இந்த அடியைப் பட்டர் உபந்யசிக்கும்போது 'பராங்குச நாயகி தன் சேலையை உதறி உதறிப் பார்க்கின்றாள் காணும்' என்று அருளிச் செய்வாராம். அதாவது தன் கொய்சகம் உட்படப் பாராநின்றாள் என்றபடி.

வாணுதல் : ஒளியுடன் கூடிய நுதலையுடைய இவள். 'ஊனில் வாழ் உயிரில்' (2.3) கலவியாலுண்டான புகர் இன்னம் அழிந்தில்லை யாதலின் இவ்வாறு கூறுகின்றாள். எம்பெருமானுடைய அருள் இவளுக்குக் கிடைத்தே திரு மென்பது திருமுக மண்டலத்தில் நிழலிட்டுத் தோற்றுகைக் காக இவ்வாறு கூறப்பெற்றது. அம்பு பட்டு முடிந்தாரையும் முகத்திலே அறியலாமாதலின், குணாதிக விஷய விரகத் தாலே வந்த இழவு என்னுமிடம் முகத்தின் எழிலிலே தெரியா நின்றது என்றபடி.

'தகவுடை யவனே!'என்னும்; பின்னும்
'மிகவிரும் பும்பிரான்!' என்னும்எனது
அகவுயிர்க் கமுதே! என்னும்உள்ளம்
உகவு ருகிநின் றுள்ளுளே (6)

[தகவு - தயவு; மிக விரும்பும் - மிகவும் குதூகலம் கொள்ளா நின்றாள்; பிரான் - உபகாரகன்; எனது அகம் உயிர்க்கு - என் உள்ளுயிர்க்கு]

இதில், ''மனமானது நிலைகெடும்படி நீர்ப் பண்டமாக உருகி நின்று, மேலும் மேலும் அருளுடையவனே!' என்கின்றாள்; அதற்குமேல் மிகுதியாக விரும்புகின்றாள்; 'எனக்கு உதவியினைச் செய்தவனே!' என்கின்றாள்' 'என்னிடத்துள்ள ஆன்மாவிற்கு அமுதே!' என்கின்றாள்'' என்று கூறுகின்றாள்.

**உள்ளம் உக உருகின்று :** என்று ஏதோ சொல்ல நினைத்த திருத்தாயார் அதைச் சொல்ல மாட்டாதே 'உள்ளுளே' என முடிக்கின்றாள். வாக்குக்கு எட்டாதது (வாசா மகோசரம்) என்றபடி.

(2) **'பாலனாய்'** (4.2) என்ற திருவாய்மொழியும் தாய்ப் பாசுரமாக நடைபெறுகின்றது. இதன் அவதாரிகையில் நம்பிள்ளை கூறுவது: 'முடியானே' (3.8) என்ற திருவாய்மொழியில் பிறந்த விடாய் இடைப்பிறவரலாக 'வீடுமின் முற்றவும்' (1.2) 'சொன்னால் விரோதம்' (3.9), 'ஒரு நாயகமாய்' (4.1) என்ற மூன்று திருவாய்மொழிகளாலே ஒருவாறு மடிந்து கிடந்தது; இப்போது அது 'தலையெடுத்து நிற்கின்றது. வீடணன் இராவணனுக்குச் சொன்ன அறிவுரை அவனுக்குப் பயன்படாமல் தனக்குப் பெருமாளைப் பற்றுவதற்குக் காரணம் ஆனாற் போலவும், பிரகலாதன் இரணியனுக்குச் சொன்ன இதம் அவனது நெஞ்சில் படாமல் தனக்கு பகவத் பக்தி மிகுதற்குக் காரணம் ஆனாற் போலவும் மேற்குறிப்பிட்ட மூன்று திருவாய்மொழிகளிலும் ஆழ்வார் செய்தருளின பரோபதேசங்கள் பிறருக்கு உறுப்பாகாமல்][மூன்று களையும்[3] பறித்துச் சங்காயமும்[4] வாரின பயிர் நாறு கிளை

3. இவர்கட்குக் களை - பகவானுக்கு வேறு பட்ட விஷயங்களும், சேவிக்கத்தகாதாரைச் சேவை செய்து திரிகையும், ஐசுவரியத்தைப் புருஷார்த்தம் என்று இருக்கையும்
4. **சங்காயம் :** ஆனைப்புல். பயிர்களின் இடை இடையே முளைத்து அறியாதார்க்குப் பயிர்

களாகப் பணைத்துப் பலிக்குமாறு போலே அவன் பக்கலிலே காதல் நூறு கிளைகளாகப் பணைக்கைக்குக் காரணம் ஆயிற்று. ஆகவே, என்றைக்கோ கழிந்து போன எம்பெருமான் படிகளை அக்காலத்திற் போலவே இன்று அநுபவிக்க வேண்டும் என்ற விடாய் பிறந்தது. ஆசைப் பட்டபடியே கிடையாமையாலே எம்பெருமானோடு கலந்து பிரிந்தாளொரு பிராட்டி நிலைமையை யடைந்து தான்மோகித்து கிடக்க, அவள் படியை அநுசந்தித்த திருத்தாயார் பெண் பிள்ளையின் நிலையைப் பேசுகின்ற முகத்தாலே சுய நிலையை வெளியிடுவதாய்ச் செல்லுகின்றது இத்திருவாய் மொழி.

பாலனாய் ஏழுலகு உண்டு பரிவின்றி
ஆலிலை அன்ன வசம்செயும் அண்ணலார்
தாளிணை மேலணி தண்ணம் துழாய்என்றே
மாலுமால் வல்வினை யேன்மட வல்லியே (1)

[பரிவு - வருத்தம்; அன்னவசம் செய்யும் - உறக்கம் கொள்ளும்; இணை - இரண்டு; தண் அம் - குளிர்ந்து அழகிய; மாலும் - வியாமோகிக் கின்றாள்.]

என்பது முதற்பாசுரம். இதில், 'பண்டு ஆலிலையில் பள்ளி கொண்ட எம்பெருமானுடைய திருவடிகளிலே சாத்தின திருத்துழாயை இப்போது பெறவேண்டும் என்று என் மகள் ஆசைப்படுகின்றாள்' என்று திருத்தாயார் பேசுகின்றாள்.

பாலனாய் : என்ற சொல்லாற்றலால் நம்பிள்ளை அருளிச் செய்வது: "பருவம் நிரம்பின பின்பு உலகத்தை எடுத்து வயிற்றிலே வைத்து ஆலிலையில் சாய்ந்தானாகில்

போலே தோற்றி அதனை வாரிப் போகடாதபோது நெல் பதர்க்கும் படியாய் இருப்பது ஒன்று. அப் படியே கைவல்யமும்.

என்மகள் இப்பாடு படாள் கிடீர்'' என்பதாக. வயது சென்ற வனாயிருந்து இவ்வருந் தொழில் செய்தால் அவ்வளவாக ஈடுபடவேண்டியிராது; பச்சைப் பசுங் குழந்தையாயிருந்து கொண்டே செய்த செயலாகையாலே ஈண்டு ஈடுபாடு மிக்கது போலும்!

**பாலனாய் ஏழுலகுண்டு** : என்ற சொற்சேர்க்கையில் ஒரு பொருளின்பம் காட்டுகின்றார் ஈட்டாசிரியர். சிறு குழந்தையின் கையிலே எது கிடைத்தாலும் சடக்கென எடுத்து வாயிலே போட்டுக் கொள்வது இயல்பாதலால் ஆலிலைப் பாலகனும் ஏழுலகுண்டது அறிவு பூர்வாக அன்று; பிள்ளைத்தனத்திற்கு ஏற்ப 'இது சாத்மிக்கும் இது சாத்மியாது' என்று அறியாமலேயே உலகங்களை வாயிலிட்டுக் கொள்ள, இரட்சகனுடைய வியாபாரமாகையாலே, அஃது இரட்சணமாய் முடிந்தது என்பதாம்.

**தண்ணந்துழாய் என்றே** : 'பாலனாய் ஏழுலகுண்டதும் ஆலிலை அன்னவசம் செய்ததும் எப்போதே கழிந்தாயிற்றே! அப்போது அணிந்த திருத்துழாய் மாலை இப்போதுகிடைக்க வழிஇல்லையே!' என்று எவ்வளவு சொன்னாலும் கேளாமல் மீண்டும் மீண்டும் அதனையே வாய் வெருவுகின்றாள் என்ற படி.

**'என்றே மாலுமால்'** : 'திருத்துழாய், திருத்துழாய்' என்று வாய்வெருவுவதோடு நிற்கவில்லையே! உள்ளமும் குலையா நின்றாளே!' என்கின்றாள். இங்கே ஈட்டு ஸ்ரீசூக்தி: ''மணிப்ரபையிலே அக்நி புத்தி பிறந்தால் அது பின்னைச் சுடவும் வேணுமோ?'' என்பது. உலகில் மணி யொளியிலே சிலருக்கு நெருப்பு என்ற ப்ரமம் உண்டாகலாம்; இங்ஙனே ப்ரமம் உண்டானதற்கான அவ்வஸ்துவானது அக்னியின் காரியமான சுடுகையைப் பண்ண மாட்டாது; சுடுமாகில் ஆச்சரியப்பட வேண்டியதாகும். அதுபோல இங்குக் காண்க.

ஆலிலை யன்னவசம் செய்யும் அண்ணலாருடைய தாளிணை மேலணி தண்ணந்துழாய் மாலை என்பது இப்போது இல்லாத பொருளே. அதனை வாயாற் சொல்வது ப்ரமத்தின் காரியமாக இருக்கட்டும்.

'மாலுமால்' என்னும்படி வ்யாமோகமும் உண்டா கிறதே! என்ன ஆச்சரியம்! என்றபடி.

**நங்கைமீர்! நீரும்ஓர் பெண்பெற்று நல்கினீர்**
**எங்ஙனே சொல்லுகேன் யான்பெற்ற ஏழையை**
**சங்குஎனும் சக்கரம் என்னும் துழாய்எனும்**
**இங்ஙனே சொல்லும் இராப்பகல் என்செய்கேன்?** (9)

[ஏழை - பேதை; நல்கினீர் - வளர்த்திருக்கின்றீர்கள்.]

என்ற பாசுரத்தில 'என் மகள் எம்பெருமானுடைய திவ்வியாயுதங்களைச் சொல்லுவதாகத் தொடங்கி முற்ற முடியச் சொல்ல மாட்டாமல் இடையிடையே தளர்ந்து படுகின்றாள்' என்கின்றாள்.

''சங்கு சக்கரம் திருத்துழாய் என்றிப்படி பகவானுக்குரிய பொருள்களைச் சொல்ல நினைத்தவள் அவற்றை ஒருசேரச் சொல்ல மாட்டாமல் 'சங்கு' என்று சொல்லி அதுதான் மலை எடுத்தாற்போல் இருக்கையாலே, பெரு வருத்தத்தோடே நின்று, மீண்டும் ஒரு நாழிகை கழித்து 'சக்கரம்' என்று சொல்லி, அதன் பிறகு ஒரு நாழி கழித்து 'துழாய்' என்று சொல்லி ஆக இப்பாடு படா நின்றாள்'' என்கின்றாள்.

(3) **'மண்ணையிருந்து துழாவி'** (4 4.) என்ற திருவாய் மொழி தாய்ப்பேச்சாக ஆழ்வாருடைய பரம வைண வத்தை வெளியிடுகின்றது. எம்பெருமான் சம்பந்தம் பெற்ற பொருள்களையும் எம்பெருமானுக்குப் போலியான பொருள்களைக் கண்டு அப்பெருமானையே கண்டதாகக் கொண்டு களித்தலே பரம வைணவத்துவமாகும். இந்த

நிலைமையே இத்திருவாய்மொழியில் உண்டாகின்றது. இதற்கு முன்னைய திருவாய் மொழியில் (4.3) ஆழ்வார் தாமான தன்மையிலிருந்து கொண்டே எம்பெருமானுடைய காதல் குணத்தை அநுசந்தித்தார்; ஏன் பெரிய திருவந்தாதியிலும்,

> பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
> காவிமலர் என்றும் காண்தோறும், பாவியேன்
> மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும், அவ்வவை
> எல்லாம் பிரான்வுருவே என்று (73)

என்று போலிப்பொருள்களைக் கண்டு பூரிப்பு அடைந்தவரல்லவா? ஆகவே, இத்திருவாய்மொழியில் பிச்சேறி நிற்கின்றார்.

இத்திருவாய்மொழிக்கு அவதாரிகை அமைத்த நம்பிள்ளை கூறுவார்: சென்ற திருவாய்மொழியில் பிறந்த நிரவதிகப் பிரீதியானது இவருடைய சொரூபமும் அழியும்படியாக இருந்தது. இந்த நிலைமையைக் கண்ட எம்பெருமான் அந்த ரசத்தை அரையாறுபடுத்திப் பொறுக்கும்படி செய்கைக்காக அந்தக் கலவியைச் சிறிது குறைத்து நின்றான்; இதனால் ஆழ்வாருடைய ஆற்றாமை மீதூர்ந்தது. பண முடிப்பைப் போக்கடித்தான் ஒருவன் அதோடு போலியான முடிப்புகள் எல்லாவற்றையும் அவிழ்த்தவிழ்த்துப் பார்க்குமாப்போலே அவனோடொத்த பொருள்களையும் அவனோடு சம்பந்தப்பட்ட பொருள்களோடு ஒத்த பொருள்களையும் எல்லாம் அவனாகக்கருதி மயங்கிக் கிட்டிப் பார்த்துப் பிச்சேறுகிறபடியாக நடைபெறுகின்றது இத்திருவாய்மொழி. 'வைப்பாம் மருந்தாம்' (1.7:2) என்று சொல்லும்படி இவர்க்குச் சேம நிதி அன்றோ அவன்?

திருத்தாயார் பேசுகின்றாள்:

> மண்ணை யிருந்து துழாவி
> 'வாமனன் மண்ணிது' என்னும்;
> விண்ணைத் தொழுதவன் மேவு
> வைகுந்தம் என்றுகை காட்டும்;

**கண்ணையுள் நீர்மல்க நின்று**
**'கடல்வண்ணன்' என்னும்; அன்னே!என்**
**பெண்ணைப் பெருமயல் செய்தாற்கு**
**என்செய்கேன் பெய்வளையீரே? (1)**

[மண் - பூமி; விண் - ஆகாயம்; உள்நீர் - அகவாயில், கண் நீர்; பெருமயல் - அதிகமான மயக்கம்]

என்பது முதற் பாசுரம். இதில் பராங்குச நாயகியின் திருத் தாயார் மகளுடைய செய்தியை வினவ வந்தவர்கட்கு 'இப்படி இவளை எம்பெருமான் பிச்சு ஏற்றினான்; இதற்கு என் செய்வேன்?' என்கின்றாள்.

உலகத்தில் எல்லோரும் மண்ணை மண்ணாகவே நினைப்பர்; ஆழ்வார் நாயகி வேறு விதமாக நினைக் கின்றாள். எம்பெருமானுடைய நறுமணம் மிக்க திருவடியின் சம்பந்தம் பெற்றதனால்தான் மண்ணுக்கு மணம் உண்டாயிற்று என்பது இவள் நினைப்பு. கையினுடைய செயலாலே திருநாட்டைக் காட்டியதுடன், திருநாட்டில் அவன் இருக்கின்றபடியைக் காணப் பெறமையாலே கண்ணீர் மல்க நின்று தன் ஆற்றாமையாலே திருவடிவத்தை நினைத்துக் 'கடல் வண்ணனே!' என்கின்றாள். 'கடல் போன்ற திருமேனியைக் காட்டியன்றோ என்னை இங்ஙனம் வியாமோகிக்கச் செய்தது' என்று தெரிவித்தவாறு. 'இங்ஙனம் என் மகளைப் பிச்சேறும்படி செய்த பெருமான் விஷயத்தில் நான் செய்யக்கூடியது யாது? அவரை இங்கு வந்து சேரும்படி செய்ய வல்லேனோ? ஒன்றும் மாட்டுகிறிலேன்' என்பது கருத்து.

இத்திருவாய்மொழியில் இன்னொரு பாசுரத்தைக் காண்போம்.

**கோமள ஆன்கன்றைப் புல்கிக்**
**'கோவிந்தன் மேய்த்தன' என்னும்;**
**போமிள நாகத்தின் பின்போய்**
**'அவன்கிடக் கையீ' தென்னும்;**

**ஆமள வொன்றும் அறியேன்**
**அருவினை யாட்டியேன் பெற்ற**
**கோமள வல்லியை மாயோன்**
**மால்செய்து செய்கின்ற கூத்தே** (5)

[கோமளம் - இளமை, அழகு; கிடக்கை - படுக்கை;
ஆம் அளவு - ஆகும் அளவு; மால் - மயக்கம்]

என்பது ஐந்தாம் பாசுரம். 'இவளுக்கு இத்துன்பம் எவ்வளவாய் முடியக் கூடியது? என்று அறிகிலேன்' என்கின்றாள்.

கண்ணபிரான் கன்றுகளை மேய்த்தான் என்பதறிந்த பராங்குச நாயகி தெருவில் திரிகின்ற பருவத்தால் இளையனவாய் பெருத்திருக்கின்ற கன்றுகளைப் பிடித்துப் அணைத்துக் கொண்டு 'நம் கண்ணபிரான் மேய்த்த கன்றுகள் இவை' என்கின்றாள். இங்கே ஈட்டின் ஸ்ரீசூக்தி : "கன்றின் கழுத்தைக் கட்டிக் கொண்டவாறே அது துள்ளிப் போகா நிற்குமே; அவன் பரிகரமாகவே இருந்ததென்னும்" என்பதாம். 'காற்றினும் கடியனாய் ஓடி அகம்புக்கு மாற்றமும் தாரான்' என்கின்றபடியே கைக்கு எட்டாமல் ஓடுகின்ற தன்மை கண்ணபிரானுக்கு இருப்பதைப் போலவே கன்றுக்கும் கண்டதனால், 'கோவிந்தனுடைய பரிகரமே இவை' என்று திண்ணமாகச் சொல்லுவள் என்றபடி. கோவிந்தன் - பசுக்களையும் கன்றுகளையும் மேய்த்த பெருமேன்மைக்கு முடி சூடினவன்.

பாம்பினைக் கண்டால் அஞ்சாமல் அதன் பின்னே ஓடி 'எம்பெருமானுடைய திருப்பள்ளி மெத்தை இது' என்கின்றாள். 'ஐந்து பைந்தலை யாடரவினை மேவிப் பாற்கடல் யோக நித்திரை சிந்தை செய்த எந்தாய்! உன்னைச் சிந்தை ,செய்து செய்தே' என்கின்றபடியே அவனுடைய சேஷசயன வைபவத்தையே

விடாது சிந்திப்பவராதலால் அதுவே நினைவானபடி. அவனோடே கூடித் தானும் படுக்கலாம் என்ற ஆசையோடே நாகத்தின் பின்னே நடந்தாள் போலும். 'மாயோன் அருவினையாட்டியேன் பெற்ற கோமளவல்லியை மால் செய்கின்ற கூத்து ஆமளவொன்றும் அறியேன்' என்றும் அந்வயிக்கலாம். 'ஆமளவு ஒன்றுமறியேன் என்றும் அந்வயித்தால் 'கூத்தே' என்பது 'இப்படியும் ஒரு கூத்து ஆவதே!' என்று முடியும்.

(4) கடல்ஞாலம் (5.6): தலைவி பிரிந்து வருந்தும் காலத்தில் 'அநுகரித்துத் தரித்தல்'[5] என்று ஒருவகையுண்டு. இதை நம்பிள்ளை விளக்குகின்றார் அவதாரிகையிலே. அவர் கூறுவார்: கண்ணபிரான் பிரிந்து சென்ற காலத்தில் கோபியர் பிருந்தாவனத்தில் திரள்திரளாகக் கூடி ஒருவர்க்கொருவர் இங்ஙனமே பேசிக் கொண்டார்கள்; 'நான் கண்ணன்; இதோ அழகான நடை நடக்கின்றேன் பார்' என்றாள் ஒருத்தி; 'நான் கண்ணன்; செவிக்கினிதாகக் குழலூதுகின்றேன் கேள்' என்றாள் மற்றொருத்தி; 'நான் கண்ணன்; கொடிய காளிய நாகமே, நில்' என்றாள் இன்னொருத்தி. தோளைத் தட்டிக் கொண்டு கண்ணபிரான் செய்யும் லீலைகளையெல்லாம் செய்தாள் வேறொருத்தி; 'கோபாலர்களே! நீங்கள் மழைக்கு அஞ்சாதே நில்லுங்கள்; இதோ நான் கோவர்த்தனமென்னும் கொற்றக் குடையைத் தூக்கி விட்டேன். பாருங்கள்' என்றாள் ஒருத்தி. 'தேநுகாசுரனை இதோ நான் மாய்த்து விட்டேனாகையால் இனி கன்று காலிகள் எல்லாம் அச்சமின்றி உலாவலாம்' என்கின்றாள் ஒருத்தி (இதனை விஷ்ணு புராணம் 5.13:26,27 சுலோகங்களிலிருந்து எடுத்துக் காட்டுவர் ஈட்டாசிரியர்.

5. அநுகரித்தல் - அவன் சொல்லும் வார்த்தைகளைத் தானும சொல்லுதல்.

இங்ஙனம் அநுசரித்துத் தரிக்கும்விதம் ஆண்டாளிடத்திலும் கண்டதுண்டு அல்லவா? நோன்பு நோற்பதாகக் கொண்டு திருப்பாவை பாடியது ஆய்ச்சியர்களின் அநுட்டானத்தை அநுகரித்த படியத்தனையிறே. ஆழ்வாருக்கு இந்த அநுகாரப்ரகாரமே இத்திருவாய்மொழியில் (5.6) செல்லநின்றது. அதுதானும் தாய்ப்பாசுரத்திலே வெளிப்படுகின்றது. மகளின் அநுகாரத்தைத் தாய்முறையிடுகின்றாள்.

பராங்குச நாயகி ஞானமுத்திரையும் தானுமாய் கீதாசாரியனைப் போலே தன்னைப் பாவித்துக் கொண்டு 'கடல் ஞாலம் செய்தேனும் யானே, கடல் ஞாலம் ஆவேனும் நானே, மலை எடுத்தவனும் யானே...' என்றாற் போலப் பாசுரங்களைச் சொல்லிக் கொண்டு இருக்கக் கண்ட திருத்தாயார் 'இஃது என்ன நிலைமை?' என்று ஆராயத் தொடங்கினாள். 'எம்பெருமானைப் பிரிந்ததனால் உண்டான ஆற்றாமையினாலே அநுகரித்துத் தரிக்கின்றாள்' என்று அறிய மாட்டாதவளாய்க் கலங்கிக் கிடந்தாள்; அப்போது சில உறவினர்கள் அங்கே வந்து சேர்ந்து 'இஃது என்?' என்று வினவ, 'சர்வேசுவரன் இவள் பக்கலிலே ஆவேசித்தான்போலே இருக்கின்றது' என்று விடை கூறுகிற படியாய் இத்திருவாய்மொழி நடைபெறுகின்றது.

இதில் ஒரு பாசுரத்தைப் பார்ப்போம்.

'இனவேய்மலை யேந்தினேன் யானே' என்னும்
'இனஏறுகள் செற்றேனும் யானே' என்னும்:
'இனஆன்கன்று மேய்த்தேனும் யானே' என்னும்.
'இனஆநிரை காத்தேனும் யானே' என்னும்:
'இனஆயர் தலைவனும் யானே' என்னும்;
இனத்தேவர் தலைவன்வந் தேறக் கொலோ?
இனவேற்கண் நல்லீர்க் கிவையென் சொல்லுகேன்—
இனவேற் கண்ணி யென்மகள் உற்றனவே? (6)

[இனவேய் — திரள்திரளான மூங்கில்கள்; மலை -

கோவர்த்தனம்; இன் ஆன்கன்று - கூட்டம் கூட்ட மான கன்றுகள்; இன ஆநிரை - திரளான பசுக் கூட்டங்கள்; இன ஆயர் - இடையர் கூட்டம்; இனத் தேவர் - நித்திய சூரிகள்; தலைவன்-சர்வேசுவரன்]

என்பது ஆறாம் பாசுரம். இதில் 'கோவர்த்தன மலையைத் தூக்கித் தரித்திருத்தல் முதலான கண்ணனுடைய செயல்களையெல்லாம் செய்தேன் நான் என்னா நின்றாள்' என்று தன் மகள் சொல்வதாகக் கூறுகின்றாள் திருத்தாயார்.

**இளஏறுகள் செற்றேனும் யானே :** நீளா தேவியின் அம்சமாகப் பிறந்த நப்பின்னைப் பிராட்டியை மணந்த வரலாறு இதில் அடங்கியுள்ளது. இளவேறுகள் - அசுர ஆவேசம் பெற்ற ஏழு காளைகள்.

**இளவான் கன்று மேய்த்தேனும் யானே :** திருமங்கை யாழ்வார் 'கன்று மேய்த்து 'விளையாடவல்லானை' (பெரிதிரு. 2.5:3) என்றார்; இங்கே விளையாட- வல்லான் என்ற சொற்போக்கு மிகவும் குறிக்கொள்ளத் தக்கது; 'யானை கொல்லவல்லான்' 'சிங்கம் கொல்லவல்லான்' என்றால் ஏற்கும்; இங்ஙனே 'விளையாடவல்லான்' என்ன லாமோ? விளையாட்டுக்கும் ஒரு வல்லமை வேண்டுமோ?' என்ற ஐயம் தோன்றும். அதற்குப் பரிகாரமாக ஆழ்வார் தாமே அடுத்தபடியாக அருளிச் செய்கின்றார். 'வரைமீ கானில் தடம்பருகு கருமுகிலை' என்று. இவ்விடத்திற்கு பட்டர் அருளிச் செய்யும் சிறப்புப் பொருள்: மலை மேல் காட்டிலேயுண்டான தடாகங்களில் கன்றுகள் தண்ணீர் குடிக்கப் புகுந்தால் இளங்கன்று களாகையாலே நீரிலே முன்னே இறங்கிக் குடிக்க இறாய்க்குமாம்; அக்கன்றுக்கு நீருண்ணும் விதத்தைப் பழக்குவிப்பதற்காகக் கண்ணபிரான் தன் முதுகிலே கையைக் கட்டிக் கவிழ்ந்து நின்று தண்ணீரமுதுசெய்து காட்டுவானாம். அதைச் சொல்லு

கின்றது. 'வரை மீகானில் தடம் பருகு' என்று இப்படிப் பட்ட வல்லமையை நினைந்து 'கன்று மேய்த்து விளையாட வல்லானை' என்றார் மங்கை மன்னன். 'அங்ஙனம் விளையாடினது தான் என்கின்றாள்' என் மகள்.

**இளவாநிரை காத்தேனும் யானே:** 'இளமையிலே கன்று களை மேய்த்துப் பருவம் நிரம்பின பிறகு பசுக்களை மேய்த்ததும் நானே' என்கின்றாள்.

**இளவாயர் தலைவனும் யானே :** ஆயர்களுக்குள்ளே கண்ணபிரான் தலைவனாயிருக்கையாவது: தன்னேராயிரம் பிள்ளைகள்' (பெரியாழ். திரு.3I.1:1) என்கின்றபடியே தன்னோடொத்த பருவத்துப் பிள்ளைகளும் தானுமாய்த் தீம்பு செய்து திரியுமிடத்தில் தீம்பில் தாமே தலைமை பெற்றிருப்பதாகும். இத்தகைய தீம்புகள் செய்ததும் தானே என்கின்றாள். 'இப்படி இவள் சொல்லுவது நித்திய சூரிகளின் நாதன் வந்து ஆவேசித்ததனாலே போலும்!' என்கின்றாள் திருத்தாயார்.

'ஆழங்காலிலே இழிந்தார் படியைக் கரையிலே நின்றா ராலே சொல்லப்போமோ?' என்பது நம்பிள்ளை ஈடு.

(5) **'மாலுக்கு'** (6.6). என்ற இத்திருவாய்மொழியும் தாய்ப் பாசுரமாகவே நடைபெறுகின்றது. இதற்கு அவதாரிகை அருளிச் செய்த நம்பிள்ளை கூறுவது: தோழிப் பாசுரமாகச் செல்லும் துவளில்மணிமாடம்(6-5) முன்னைய திருவாய்மொழியில் இவளுக்குப் பிறந்த தசை முற்றி வியசனம் அதிகரிக்கையாலே மயங்கினவளாய்க் கிடக்க, அது கண்டு ஆற்றாளாய் இவளுடைய தோழியும் மயங்க, இந்த நிலையிலும் இவளைப் பிழைப்பிப்பதற்குரிய விரகு களை எண்ணுகையாலே தரித்திருக்கின்ற திருத்தாயார் இவளுடைய வளை முதலானவை காணக் காண உருக்குலை கின்ற படியைக் கண்டு அவற்றைத் தனித் தனியே சொல்லிக்

கூப்பிடுகின்றாள். ஒரு நகரிலுள்ள பேட்டை வேவப்புக்கால், 'ஒருமாடம் முறிந்தது, மாளிகை முறிந்தது' என்பாரைப் போலே. இதில் பாசுரங்கள் தோறும் 'இழந்தது' என்று வாராநின்றது. சங்கை இழந்தாள், மாமையிழந்தாள், சாயை இழந்தாள், மாண்பிழந்தாள், கற்பு இழந்தாள், கட்டு இழந்தாள் — என்றிப்படிப் பலவும் இழந்ததாகச் சொல்லப் படுகின்றது. எம்பெருமானுடைய ஒரே அவதார சேஷ்டிதங்களையும் ஒரே திவ்விய குணங்களையும் நினைக்க நினைக்க, தாம் பரவசராய் மேனி மெலிந்து ஆவிநீராய் உருகுகின்றன்மையை ஆழ்வார் அந்யாபதேசத்தாலே (வெளிப்படையாகவே) அருளிச் செய்கிறாராயிற்று.

**மாலுக்கு வையம் அளந்த மணாளற்கு**
**நீலக் கருநில மேக நியாயற்கு**
**கோலச்செந் தாமரைக் கண்ணற்கு என் கொங்கலர்**
**ஏலக் குழலி இழந்தது சங்கே (1)**

[மால் — அடியார் பக்கம் வியாமோகம் உடையவர்; வையம் — பூமி; மேகநியாயன் — மேகம் போன்ற தன்மையன்; ஏலம் — வாசனை; சங்கு — சங்கு வளையல்]

என்பது முதற் பாசுரம். இங்கு 'செந்தாமரைக் கண்ணற்கு' என்பதற்கு கண்களையுடையவன் என்று பொருளானாலும் கண்கள் என்ற அளவிலேயே பொருளை நிறுத்திக் கொள்க. எதற்காக இப்படியெனில்; ஒவ்வொரு சிறப்புக் கூறுகளையும் நினைத்து தன் மகள் தளர்கின்றாள் என்று சொல்லுவதே இங்குச் சுவையுடைத்து.

'என்மகள் மாலுக்குச் சங்கிழந்தாள், வையமளந்த மணாளற்குச் சங்கிழந்தாள், கோலச் செந்தாமரைக் கண்ணற்குச் சங்கிழந்தாள் — என்று இங்ஙனம் தனித் தனியே சிந்தித்து அவன் அடியார் பக்கலில் கொண்ட வியா

மோகத்தை நினைந்தவாறே சங்கிழந்தாள், அவன் வைய மளந்த சீல குணத்தை நினைந்தவாறே சங்கிழந்தாள், அவனது திருநிறத்தை நினைந்தவாறே சங்கிழந்தாள், அவனது செந்தாமரைக் கண்களை நினைந்தவாறே சங்கிழந்தாள்' என்கின்றாள் என்க. சங்கிழப்பதாகக் கூறுதலின் கருத்து பிரிவினால் மேனி மெலிந்தாள் என்பதாம்.

மாலுக்கு : என் அடியார்கள் என்மீது எவ்வளவு வியாமோகம் கொண்டிருக்கின்றார்களோ நானும் அவ்வளவு வியாமோகம் அவர்களிடத்தில் கொண்டிருப்பேன்; என்னிற் காட்டில் மேற்பட்டவர்களிடத்தில் நான் எப்படி வர்த்திப் பேனோ (வர்த்தித்தல் — இருத்தல்) அப்படி அவர்கள் திறத்திலும் வர்த்திப்பேன் என்பது கருத்து. இப்படிப்பட்ட வியாமோக குணத்தை நினைத்து என் மகள் உருகுகின்றாள் என்றவாறு.

வையமளந்த மணாளற்கு : 'மூவடி மண்கொண்டளந்த மன்னன் சரிதைக்கே மாலாகிப் பொன் பயந்தேன்' (பெரி. திரு. 9, 4·2). அவன் இரந்து மண் பெற்றான். இவள் உகந்து பொன் பெற்றாள். உகப்பாலே பெறுமது உரை பெற்றிருக்குமே. மணாளன் - அநுபவிக்கின்றவன்.

நீலக்கருநிற மேகவியாயற்கு : மேகத்தின் வடிவு போன்ற வடிவை நினைத்து, அம்மேகத்தின் தன்மைபோன்ற தன்மையை நினைத்து உருகுகின்றாள் என்கை. பெய்ய வேண்டிய இடம் அளவும் சென்று பெய்யும் மேகம்; எம்பெருமான் 'வந்தருளி என் நெஞ்சிடங்கொண்ட வானவர் கொழுந்து' (திருவாய் 5.7:7) என்று ஆங்காங்குச் சென்று அருள் புரிவான். மின்னலுள்ள காலம் நீர் நிரம்பி யிருக்கும் மேகம்; எம்பெருமானுக்கும் பிராட்டியோடு கூடி யிருக்கும் காலத்திலே கருணை விஞ்சியிருக்கும். 'இவள் சந்நிதியால் காகம் தலைபெற்றது; அதில்லாமையாலே

இராவணன் முடிந்தான்' (முமுட்சுப்படி 135) காண்க. இன்ன காலத்திலே மேகம் பெய்யும் என்று அறுதியிட வல்லார் ஆருமில்லை. பெய்ய வேண்டியது பெய்யாதொழியவும் பெய்வதற்குச் சந்தர்ப்பம் இல்லாத காலத்தில் எண்ணாத தாகவும் வந்து பெய்யவும் கடவது மேகம்; எம்பெருமானும் அப்படியே; 'வந்தாய் போலவாராதாய், வாராதாய் போல் வருவானே' (திருவாய் 6.10.9) 'திரௌபதிக்கு ஆபத்திலே வந்து முகம் காட்டாதொழிந்தான்: விரும்புதலை எதிர் பாராமல் 'தாவியன்றுலகமெல்லாம் தலைவிளாக் கொண்டான்' (திருமாலை-35) என்றிப்படிப் பல படிகளாலே மேகத்திற்கும் எம்பெருமானுக்கும் நியாயங்கள் (சாம்யங் கள்) ஒத்திருக்கும். இவற்றைப் பேசி உருகுகின்றாள் என்கை.

**கோலச் செந்தாமரைக் கண்ணற்கு:** 'பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேல், ஒருங்கே பிறள வைத்தார்' (திருவிருத். 45) என்று தாமே பேசும் படி எம்பெருமான் தனது செந்தாமரைக் கண்ணோக்கத்தைத் தலைமேல் ஒருமைப்படுத்தி 'எங்கும் பக்க நோக்கியறியான் என்பைந்தாமரைக்கண்ணனே' (          ) என்று நாச்சிமார் திருமுலைத்தடத்தாலே நெருக்கியணைத்தாலும் புரிந்து பார்க்க வறியாதிருந்த தன்மையை நினைத்து உருகு கின்றாள் என்கை.

**என்கொங்கு அலர் ஏலக்குழலி :** கூந்தல் தலைக்கு அழகாயிருக்கும். கூந்தலில்லாத தலை வெறுக்கத்தக்கதாக இருக்கும். அதுபோல வணக்கத்தோடு கூடிய தலை கொண் டாடத்தக்கதாகவும் இருக்குமாதலால், கூந்தல் என்பதற்கு வணக்கத்தை உள்ளுறைப் பொருளாகக் கொள்ளலாம். வணக்கத்திற்குப் பரிமளமாவது—அந்த வணக்கம் பகவத் விஷயத்தளவிலே நிற்காமல் பாகவத விஷயம் அளவும் செல்லுதல்' திருமால் திருப்பேர் வல்லார் அடிக்கண்ணி சூடியமாறன்' (          ) என்று தாமே பணித்தபடி பாகவத பக்தி நிரம்பியவர்.

மேலும், 'என்கொங்கு அலர் ஏலக் குழலி'- தேன் பெருக்கு எடுக்கின்ற பூக்களையுடைத்தாய், நறு மணம் கமழும் குழலையுடைய என்பெண் பிள்ளை. கொங்கு - தேன், அலர் - பூ. ஏலம் - நறு மணம், இவள் மயிர் முடிஒன்றுக்குத் தோற்றுக் குமிழ்நீர் உண்ணும் அவன்கண்டீர் இவளை அழித்தான் பங்களப்படை கொண்டு தனிவீரம் செய்வாரை அழிக்குமாபோலே. (பங்களப்படை - கூளப்படையான கூட்டுப் படை) 'தனிவீரம் செய்வார்' என்னது கொங்கலர் ஏலக் குழலியை'

**இழந்தது சங்கே :** இவள் மயிர்முடி கண்டு அவன் இழக்கக் கடவதனை இவள் இழந்தாள்.

(6) **'உண்ணுஞ் சோறு'** (6, 7) என்ற திருவாய்மொழி யும் தாய்ப் பாசுரமாக நடை பெறுகின்றது. தலைவனது நகர் நோக்கிச் சென்ற தலைமகளைக் குறித்துத்தாய் இரங்கு வதாக அமைந்தது, ''மேல் திருவாய்மொழியிலே (6, 6) மோகித்துக் கிடக்கின்ற 'தன் மகளுடைய துன்பத்தைக் கண்ட திருத்தாயார்' அது போயிற்று, இதுபோயிற்று' என்று அவன் திருநாமத்தைச் சொல்லிக் கூப்பிட்டு இவள்தானும் மோகித்தாள்; அவன் திருநாமத்தைச் சொல்லுகையாலே பெண்பிள்ளை உணர்ந்து எழுந்து புறப்பட்டுத் திருக்கோளூர் ஏறப் போனாள்; திருத்தாயாரும் வாசனையாலே உணர்ந்து படுக்கையைத் தடவிப் பார்த்தாள்; வெறும் படுக்கையாய்க் கிடந்தது. இனி, இவள் என்வயிற்றில் பிறப்பாலும், தன் தன்மையாலும் இங்கு இருந்த நாட்களில் தேகயாத்திரை இருந்தபடியாலும் இவள் திருக்கோளூர் புறப்பட்டுப் போனாள் என்று அறுதியிடுகின்றாள்'' - இஃது இத்திருவாய் மொழியின் அவதாரிகையில் நம்பிள்ளை கூறியது. மேலும், ''வளை முதலாயினவற்றை எல்லாம் இழந்தாலும், நாம் இவளை இழக்க வேண்டியிராது என்றே இருந்தாள் மேல்

திருவாய்மொழியில், இவள் தன்னையும் இழந்தோம் என்று கூப்பிடுகின்றாள்'' என்று கூறுவார்.

ஆளவந்தார் குழுவில் 'உண்ணும் சோறு' (6.7) பிராட்டிக்கு அஞ்சவேண்டுவது அதிகமா? 'கள்வன் கொல்' (3.7) பிராட்டிக்கு அஞ்ச வேண்டுவது அதிகமா? என்ற ஓர் ஆராய்ச்சி நடைபெற்றதாம். முன்னதில் பராங்குச நாயகி தனியாகப் போனமை சொல்லுகிறது; பின்னதில் பரகால நாயகி காதலனுடன் சென்றைச் சொல்லுகின்றது. "இருவராய்ச் சென்றவர்கள்பற்றி அஞ்சவேண்டியதில்லை. தனியே போனவளுக்கு அன்றோ வயிறு எரிய வேண்டுவது' என்று அங்கிருந்த முதலிகள் சொல்ல, ஆளவந்தார், ''அங்ஙன் அன்று, தனியே போனவளைப் பற்றிப் பயமொன்றும் இல்லை; இருவராய் போனவள்பற்றித்தான் வயிறெரிய வேண்டும்'' என்றாராம் இது பற்றிய ஆராய்ச்சி முடிவு பிறிதோரிடத்தில் கண்டுகொள்க.[6]

உண்ணும் சோறு பருகுநீர்
தின்னும்வெற் றிலையுமெல்லாம்
கண்ணன் எம்பெருமான் என்றென்
றேகண்கள் நீர்மல்கி
மண்ணினுள் அவன்சீர் வளம்மிக்
கவனூர் வினவி
திண்ண மென்னிள மான்புகு
மூர்திருக் கோளூரே (1)

என்பது முதற் பாசுரம். படுக்கைத் தலையிலே மகளைக் காணாத திருத்தாயார் 'என் மகள் திருக்கோளூருக்குத்தான் சென்றிருக்க வேண்டும்' என்று அறுதியிடுகின்றாள். ஆழ்வாருடைய உண்மையான தன்மை முதலிரண்டடிகளில்

6. 'இலக்கியக் காலாயிரம்' (பாரி நிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை-108) பக் 237 - 239, காண்க.

கூறப்படுகின்றது. ஆசாரிய ஹிருதயத்தில்[7] ரிஷிகளிற் காட்டில் ஆழ்வார்க்கு நெடுவாசி அருளிச் செய்யுமிடத்து,

**'அவர்கட்குக் காயோடு என்னும் இவையே**
**தாரகாதிகள்; இவர்க்கு எல்லாம் கண்ணனிறே'**
(சூத்திரம்-60)

[அவர்கட்கு - இருடிகட்கு; இவர்க்கு - ஆழ்வாருக்கு]

எனவரும் சூத்திரத்தில் இருவருக்கு முள்ள வேறுபாடு தெரிவிக்கப் பெறுகின்றது. அவர்கட்குக் காய் கனி கிழங்கு இலைகள் காற்று தண்ணீர் என்னும் இவைகளே தாரக போஷக போக்கியங்கள்[8]. இவர்க்கு உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன். கண்ணனே தாரக போஷக போக்கியாதிகள்.

''சோறும் நீரும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்'' என்றால் போதுமே; உண்ணும் சோறு என்றும், பருகு நீர் என்றும், தின்னும் வெற்றிலையென்றும் அடைமொழி கொடுத்துப் பேச வேண்டுமோ? சோறாகில் அஃது உண்ணக் கடவதுதானே; நீராகில் அது பருகக் கடவது தானே; வெற்றிலையாகில் அது தின்னக்கடவது தானே; உண்ணும், பருகும், தின்னும் என்ற அடைமொழிகள் வீண் என்று நினைக்க வேண்டா வயிறு நிறைய உண்டவனுக்குப் பரமான்னம் கிடைத்தாலும் அஃது உண்ணும் சோறாகாது; கங்கைக் கரையிலே திரியுமவனுக்குக் கிணற்றுநீர் பருகு நீராகாது; அவ்வவற்றிற்கு விருப்பம் சில சமயங்களிலும் வேண்டாமை சில சமயங்களிலும் இருப்பது உலக இயல்பு.

7. **ஆசாரியர்** - நம்மாழ்வார்; ஹிருதயம்-மனம், மாறன் மனம் என்றபடி.
8. **தாரகம்** - தரிக்கச் செய்வது: நீர் முதலாயின. **போஷகம்** - புஷ்டியைத்(பலத்தைத்) தருவது; சோறு முதலாயின. **போக்கியம்** இன்பத்தைத் தருவது; தின்னும் வெற்றிலை முதலாயின.

ஆதலால் பெரும் பசியனுக்குக் கிடைத்த சோறுதான் உண்ணும் சோறு, பெருவிடாயனுக் கிடைத்த நீர்தான் பருகுநீர் என்று கொள்ள வேண்டும். பெரும்பசியனுக்குச் சோற்றிலும், விடாய்த்தவனுக்கு நீரிலும் எப்படிப் பட்ட ஆர்வமோ அப்படிப்பட்ட ஆர்வம் ஆழ்வாருக்கு பகவத் விஷயத்தில் என்றதாயிற்று.

**எல்லாம் கண்ணன் :** இப்படிக் கருதுகின்ற மகாத்மா கிடைப்பது மிகவும் அரிது என்கை. அவ்விழவு தீர வகுளா பரணமகாத்மா வந்து தோன்றினாராயிற்று.

**கண்ணன் எம் பெருமான் என்றென்றே கண்கள் நீர் மல்கி:** ''எனக்குச் சகலவிதமான தாரக போஷக போக்கியங்களும் கண்ணன் எம்பெருமானே'' என்று பலகால் சொல்லிக் கொண்டு நீர் மல்கு கண்ணராயிருப்பதே ஆழ்வாருடைய இயல்பு. இப்படிப்பட்ட பராங்குச நாயகி ''அப் பெருமானுடைய திருக்குணங்களும் திவ்வியமான ஐசுவரியமும் மிகமிக விளங்குமிடமான திருக்கோளூர் எங்குளது? எவ்வளவு தொலைவில் உளது? என்று கேட்டுக் கொண்டே திருக் கோளூர்க்கே சென்று புகுந்திருப்பாள்;வேறு எங்கும் செல்லக் காரணம் இல்லை; இது திண்ணம்'' என் கின்றாள் திருத்தாயார்.

**புகுமூர் :** இவ்விடத்தில் ஈடு: ''காட்டுத் தீயிலே அகப் பட்டவன் பொய்கையும் பொழிலும் தேடிப் புகுமாறுபோலே சம்சாரமாகிய பாலை நிலத்தில் காட்டுத் தீயில் அகப் பட்டவனுக்கு உகந்தருளின நிலங்களானவை பொய்கையும் பொழிலும் போலேயிறே. 'புகுமூர்' என்கையாலே புக்கார் போகுமூர் அன்றென்கை''

எம்பெருமானார் திவ்யதேச யாத்திரையாக எழுந்தருளுகையில் திருக்கோளூருக்கு எழுந்தருளாநின்றார்; அப்போது அங்கு நின்றும் வெளியேறுகின்றாளொரு அம்மை

யாரைப் பார்த்து 'எங்கு நின்றும் புறப்பட்டபடி?' என்று கேட்க, அவள் 'திருக்கோளூரில் நின்றும்' என்று மறுமொழி கூற, அது கேட்ட எம்பெருமானார் ''அவ்வூரில் புக்க பெண்களும் வெளியே போகக்கடவரா யிருப்பார்களோ?' என்றாராம். 'புகுமூர்' என்ற சந்தையின் சுவடறிந்து அருளிச் செய்தபடி.

(7) 'கங்குலும் பகலும்' (7. 2) என்ற திருவாய்மொழியும் தாய்ப் பாசுரமாக நடப்பது. திருவரங்கப் பெருமானிடம் தன் மகள் மிகவும் மோகித்திருப்பதைக் கண்ட திருத்தாயார் அரங்கனைப் பார்த்து வினவுவதாக அமைந்தது இத் திருவாய்மொழி.

முன்னர் 'உலகம் உண்ட' (6-10) என்ற திருவாய்மொழியில் பெரிய பிராட்டியின் முன்னிலையில் திருவேங்கடமுடையான் திருவடிகளில் விழுந்து சரணம் புக்கவிடத்திலும் ஆழ்வார் தாம் எம்பெருமானுடைய திருவடிவாரத்தில் நிற்கக் கண்டிலர். இன்னமும் இந்தப் பிரகிருதி மண்டலத்திலேயே தம்மைக் கண்டார். உண்ணிலாவிய (7.1) என்ற திருவாய்மொழியில் தம்மைச் சப்தாதி விஷயங்களும் இந்திரியங்களும் நடையாடுகின்ற சம்சாரத்தில் வைத்தபோதே தம் பக்கவில் நின்றும் நம்மை அகற்றப் பார்த்தானேயன்றோ? என்று கூப்பிட்டார்.[9] இந்த ஆர்த்தியை எம்பெருமான் அறியாதவன்

9. 'உலகம் உண்ட பெருவாயா'வில் பிரணவத்தின் பொருள் சொல்லப்பட்டது. 'உண்ணிலாவிய'வில் 'நம :' என்ற சொல்லின் பொருள் பலவகையாலும் சொல்லப்பட்டது. 'கங்குலும் பகலும்' என்பதில் 'நாராயணாய' என்பதன் பொருள் சொல்லப்படுகின்றது. இஃது எப்படி? 'ஆய' என்ற நான்காம் வேற்றுமையின் பொருள் கைங்கரியமாதலாலும், அந்தக் கைங்கரியந்தான் அநுபவத்தால் உண்டாகும் பிரீதியின் காரியமாதலாலும், அந்த அநுபவந்தான் பிராவண்யத்தின் காரியமாதலாலும் அந்தப் பிராவண்யமே இத் திருவாய்மொழியில் சொல்லப் படுதலால் என்க.

அல்லன். எப்படியும் இவருக்கு நாம் பேறு பெறுவிப்பது திண்ணம்; இவர் இங்கே வந்து செய்யும் காரியத்தை அங்கே யிருந்துதான் செய்யட்டுமே'' என்றிருந்தான். மக்களைப் பட்டினியிட்டு வந்த விருந்தினரைப் பேணுவாரைப் போலே 'இவ்வாழ்வார்தாம் நாலுநாள் நோவு பட்டா ராகில் படுகின்றார்; இவருடைய திவ்வியப் பிரபந்தத்தைக் கொண்டு நாட்டை வாழ்விப்போம்' என்றிருந்தான். இவர் ஒரு நொடிப் பொழுது இங்கிருந்தாலும் எம்பெருமானாலும் திருத்தவொண்ணாத சம்சாரம் எவ்வளவோ திருந்தி வாழும்படியாயன்றோ இருப்பது? அதற்காகவே இவரை இங்கு வைத்தான் அவன். இங்கு இருப்புப் பொருந்தா தாரைக் கொண்டே காரியம் பார்க்க வேண்டும் என்பதே எம்பெருமானுடைய பிடிவாதமாயிற்று.

இங்ஙனம் எம்பெருமானைப் பிரிந்து துடிக்க வேண்டிய தாயிற்றே என்று நிலை கலங்கின ஆழ்வார் தாமான தன்மையை இழந்து தமது பரிதாபத்தைத் தம் வாயாலே சொல்ல முடியாதவராய்த் தாய் சொல்லவேண்டும்படியான தளர்ச்சியுண்டாக, திருத்தாயார் பாசுரமாகச் சொல்லு கின்றது இத் திருவாய்மொழி.

திருத்தாயார் பராங்குச நாயகியைப் பெரிய பெருமாள் (அரங்கநாதர்) திருவடிகளிலே இட்டு வைத்துக் கொண் டிருந்து ''இவள் அழுவது தொழுவது மோகிப்பது பிரலாபிப்பது அடைவுகெடப் பேசுவது நெடுமூச்செறிவது அதுவும் மாட்டாதொழிவது தன்னை மறந்திருப்பது முதலியவற்றை ஒவ்வொன்றையும் எடுத்துச் சொல்லி 'இவள் திறத்திலே நீர் என்செய்வதாகத் திருவுள்ளம் பற்றியுள்ளீர்?' என்று கேட்கின்றபடியாய்ச் செல்லுகிறதாயிற்று.

நம்பிள்ளை ஈடு : 'இத்திருத்தாயாரும் எல்லா பாரங் களையும் அவன் தலையிலே போகட்டுப் பெண்பிள்ளையைத்

திருமணத் தூணுக்குள்ளே[10] பொகட்டுப் பற்றிலார் பற்ற நிற்றல் முதலிய அவனுடைய குணங்களை விண்ணப்பம் செய்யா நின்று கொண்டு ஒரு காலநியதியாதல் ஒரு தேச நியதியாதல் அதிகாரி நியதியாதல் இன்றிக்கே எல்லோரும் சென்று பற்றலாம் படி இருக்கின்ற படியை நினைத்து, தன் பெண் பிள்ளையினுடையத் திருவுள்ளத்திலே படுத்து கின்றாள் இத்திருவாய்மொழியிலே.''

''பட்டர் இத்திருவாய்மொழி அருளிச் செய்யும்போ தெல்லாம் 'ஆழ்வாருக்கு ஓடுகிற நிலையறியாதே அவருடைய உள்ளக்கிடக்கையும் இன்றிக்கே இருக்கிற நாம் என்சொல்லு கின்றோம்?' என்று திருமுடியிலே கையை வைத்துக் கொண்டிருப்பர்.''

கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்;
 கண்ணநீர் கைகளால் இறைக்கும்;
சங்குசக் கரங்கள் என்றுகை கூப்பும்;
 தாமரைக் கண்என்றே தளரும்;
எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டு என்னும்;
 இருநிலம் கைதுழா இருக்கும்;
செங்கயல் பாய்நீர்த் திருவரங் கத்தாய்!
 இவள்திறத் தென்செய்கின் றாயே (1)

[கங்குல் - இரவு; துயில் - உறக்கம்; கண்ணநீர் - கண்ணீர்; தரிக்கேன் - தரிக்க முடியேன்: இருநிலம் - பெரிய நிலம்]

என்பது முதல் பாசுரம். இதில் பேச்சுக்கு நிலமல்லாதபடி தன் மகளுக்குண்டாயிருக்கின்ற நிலைமையைப் பெரிய பெருமாளுக்கு அறிவித்து இவள் விஷயமாக நீர் செய்தருள

10. மணத்தூண் : அழகிய மணவாளன் சந்நிதியில் கருவறைக் கருகிலுள்ள இரண்டு தூண்களுக்குத் 'திருமணத்தூண்' என்பது சம்பிரதாயத்திருநாமம்.

நினைத்திருப்பது என்னோ?' என்று கேட்கின்றாள் பராங்குச நாயகியின் திருத்தாயார்.

**கங்குலும் பகலும் கண்துயிலறியாள் :** 'கண்ணாரக் கண்டு, கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே' (திருவிருத். 97) என்று அருளிச் செய்தவர் இவ்வாழ்வாரேயாதலால் இரவோடு பகலோடு வேற்றுமை யின்றிக் கண்துயிலாத இவர்க்கு. சம்சாரிகள் உறக்கமே யாத்திரையாயிருப்பவர்கள். ஆழ்வார் இந்நிலத்தில் இருந்த போதிலும் இமையோர் நிலையிலிருப்பார். விசாரமுள்ளவர் கட்குக் கண் உறங்குமோ? என்று கொல் சேர்வதுவே' (5.10-1) என்றும், உன்னை என்று கொல் கூடுவதே' (5.10:9) என்றும் இடையறாத விசாரம் கொண்ட இவர்க்குக் 'கண்ணுறங்க விரகில்லையன்றோ? 'கண் துயில் கொள்ளாள்' என்னாது 'கண்துயில் அறியாள்' என்றதன் கருத்தை நம்பிள்ளை காட்டியருள்வது: சம்ஸ்லேஷத்தில் (சேர்ந்திருக்கும்போது) அவன் உறங்க வொட்டான்; விச்லேஷத்தில் (பிரிவில்) விரகவியசனம் உறங்க வொட்டாது; ஆகையாலே இவளுக்கு இரண்டுபடியாலும் உறக்கமில்லாமையாலே அறியாளென்கிறது.''

**கண்ணநீர் கைகளால் இறைக்கும் :** 'தூராத மனக்காதல் தொண்டர் தங்கள் குழாம் குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி, ஆராதமனக்களிப் போடழுத கண்ணீர் மழைசோர (பெரு.திரு.1:9) என்றும்! ஏறடர்த்ததும் ஏனமாய்க் கிடந்ததும் முன்னிராமனாய் மாறடர்த்ததும் மண்ணளந்ததும் சொல்லிப் பாடி வண்பொன்னிப் பேராறு போல்வரும் கண்ணநீர் கொண்டு அரங்கன் கோயில் திருமுற்றம் சேறு செய் தொண்டர்' (                ) என்றும், சொல்லுகிறபடியே எம் பெருமானுடைய ஒவ்வொரு குணசேஷ்டிதங்களை நினைத்து தாரை தாரையாய்க் கண்ணீர் பெருகவிடுவது பக்தர்களுக்கு

நித்திய காரியமாதலால் அதனைச் சொல்லுகிறது. 'கைகளால் இறைக்கும் என்றது' கண்ணீரின் மிகுதியைச் சொன்னபடி.

**சங்கு சக்கரங்கள் என்று கைகூப்பும் :** 'சங்கும் சக்கரமும் சிரித்த முகமும் தொங்கும் பதக்கங்களுமாய் நம் பெருமாள் சேவை சாதிக்கின்ற அழகு காண்மின் காண்மின்! காண வாரீர்!' என்றுசொல்லி அதிக நினைவினால் (பாவநாப்ரகர்ஷத்தாலே) சங்கு சக்கரங்களை நோக்கிக் கை கூப்புகின்றாள். 'இன்னார் என்று அறியேன், அன்னே! ஆழியொடும், பொன்ஆர் சாரங்கம் உடைய அடிகளை' இன்னார் என்று அறியேன்' (பெரி. திரு 10.10:9) என்று பரகால நாயகி அசாதாரண லட்சணங்களைக் காணா நிற்கச் செய்தேயும் இன்னாரென்று அறுதியிடமாட்டாதே பேசுகின்றாள்; இப்பராங்குச நாயகி திருவாழி திருச்சங்கு களைக் காணாதபோதும் கண்டதாக நினைந்து வாயால் மொழிந்து அஞ்சலி பந்தம் (கைகூப்புதல்) பண்ணாநின்றாள்.

**தாமரைக்கண் என்றே தளரும் :** 'தாமரைக் கண்களால் நோக்காய்' (9.2:1) என்று சொல்ல வேண்டுமென்று நினைத்துத் தொடங்கினாள்; தாமரைக் கண் என்ற அளவில் விகாரப்பட்டு மேலே சொல் எழமாட்டாமல் தளர்கின்றாள். 'பெருங்கேழலார்தம் பெருங்கண் மலர்ப் புண்டரீகம் நம் மேல் ஒருங்கே பிறழ வைத்தார் இவ்வகாலம்'(திருவிருத். 45) என்று அத்தலையில் திருக்கண்ணோக்கம் அடியாகவே தாம் ஒரு பொருளாகப் பெற்றதாய் அருளிச் செய்தாராகையாலே அந்தத் திருக்கண்களை நினைத்து, 'என்னை இவ்வளவனாக ஆக்கின திருக்கண்களுக்கு இப்போது உபேட்சிக்கை (அலட்சியம் செய்தல்) பணியாயிற்றே என்கிறாளாகவுமாம்'

**உன்னைவிட்டு எங்ஙனே தரிக்கேன் என்னும் :** 'உண்டியே, உடையே உகந்தோடும் இம்மண்டலத்தவரிலே' (பெரு

திரு 3:4) என்னையும் ஒருவனாக (=சம்சாரியாக) வைத்திருந்தால் நான் சூது சதுரங்க மாடியும் விஷயாந்தரங்களிலே மண்டியும் உறங்கியும் ஓடியும் உழன்றும் ஒருவாறு பொழுது போக்கித் தரித்திருக்க மாட்டேனோ? வேறொன்றால் தரிக்கவொண்ணாதபடி என்னை இப்படியாக்கி இப்போது கைவாங்கி நிற்கின்றாயே! பிரானே! இது தகுதியோ?' என்கின்றாள். 'கார்கலந்த மேனியான் கைகலந்த ஆழியான் பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான் - சீர்கலந்த சொல்நினைந்து போக்காரேல் சூழ்வினையின் ஆழ்துயரை, என்னினைந்து போக்குவரிப் போது' (பெரிய திருவந். 86) என்ற அடியிலே பேசினவான்றோ இவர்? கார்கலந்த, மேனியான், சீர்கலந்த சொல்லும், கைகலந்த நேமியான் சீர் கலந்த சொல்லும், பார்கலந்த வல்வயிற்றான் சீர்கலந்த சொல்லும், பாம்பணையான் சீர்கலந்தசொல்லும் நினைத்துப் போதுபோக்கலாமே யன்றி வேறொன்றால் பொழுது போக்கவரிது என்று அறுதியிட்டார்; எப்போதும் சீர்கலந்த சொல் நினைந்தே போதுபோக்க வொண்ணுமோ? இடை இடையே காட்சியும் வேண்டாவோ? 'காணாது திரிதருவேன் கண்டு கொண்டேன்'' (                ) என்று பேசுவதற்கும் இலக்குக் கிடைத்தாலன்றோ தரிக்கலாவது என்கிருக் கின்றாள் போலும்.

'எங்ஙனே தரிக்கேன்' என்றவுடனே வரக் காணாமை யாலே' 'இருநிலம் கைதுழாவிருக்கும்' ''மகாப்பிருதிவி ஒரு பீங்கானுக்குட்பட்ட சந்தன பங்கம்பட்டது படாநின்றது' என்பது ஈடு. ''துழாவியிருக்கும்'' என்பது தொக்கித் ''துழாவிருக்கும்'' என்று கிடக்கின்றது. நிலத்தைத் துழாவிருத்தல் ஒருவகையான உந்மாத இருத்தியம்.

செங்கயல்பாய் திருவரங்கத்தாய் : இங்குக் கயலை நினைப்பூட்டுவது ஒரு கருத்தாலேயாம், அவ்வூரில்

வசிக்கிற திர்யக்குகளின் (பிராணிகள்) தன்மை இவளுக்கு அரிதாவதே. அவை நிறம்பெற்று வாழ்கின்றன; இவள் நிறம் இழந்தாள், நாரத்தைப் பற்றினது களித்து வாழாநின்றது. நாராயணனைப் பற்றிய இவள் துக்கிப்பதே? செம்கயல் - அழகியகயல். அக்கயல் தண்ணீரைப்பிரிந்து தரிக்கில் அன்றோ இவள் உம்மைவிட்டுத் தரிக்கவல்லது? உம்முடைய ஊரிலிருக்கும் பொருள்கள் பெற்றதும் பெற வேண்டாவோ, உம்மை ஆசைப்பட்ட இவள்?

இந்த ஏழு பதிகங்களும் பாரதந்திரியத்தையும் அவனே உபாயமாகின்றான் என்ற கருத்தையும் தெரிவிப்பவை என்று விளக்கப் பட்டன.

# 10. மகள் பாசுரங்கள்

திருவாய்மொழியில் மகள் பாவனையில் நடைபெறும் பதிகங்கள் பதினேழு (அ.ஹி. சூத்திரம் 134). இவற்றுள் தூதுப் பதிகங்களாக நடைபெறுபவை நான்கு.[1] இவற்றின் விளக்கத்தை அடுத்த இயலில் காண்போம்.[2] ஏனையவை பதின்மூன்றையும்[3] ஈண்டுக் காண்போம். மகள் பாசுரத்தின் தத்துவம் முன்னர் விளக்கப்பட்டது.[4]

(1) 'வாயுந்திரையுகளும்' (2.1) என்ற திருவாய்மொழியின் அவதாரிகையில் நம் பிள்ளை அருளிச் செய்வது: மேல் திருவாய்மொழியில் 'மணியை 1, வானவர் கண்ணனை', 'தன்னதோர் அணியை' (1-10 : 11) என்பதில் மணியை' என்பதனால் எளிமையும், 'வானவர் கண்ணனை' என்பதனால் மேன்மையினையும், 'தன்னதோர் அணியை' என்றதனால் வடிவழகினையும் அருளிச் செய்தார்.[5] இந்த மூன்று திருக்குணங்களுள் ஒரொன்றே மேல் விழப் பண்ணுகைக்குப்

1. திருவாய் 1.4; 6.1; 6.8; 9.7 என்பவை.
2. இயல் 11 காண்க.
3. திருவாய் 2.1; 4.8; 5.3; 5.4; 5.5; 5.9; 6.2; 7.3; 8.2; 9 5; 9.8; 9.9, என்பவை.
4. இயல்-7 காண்க.
5. நூறு பாசுரங்கள் கொண்ட தொகையைப் பத்து என்றும், பத்துப் பாசுரங்கள்கொண்ட பதிகத்தைத் திருவாய்மொழி என்றும் வழங்குவர்.

போதியதாம். இங்ஙனமிருக்க, இறைவனிடத்து இம்மூன்று குணங்களும் நிறைந்து குறைவற்றிருக்குமாயின் அவனை அநுபவியாதிருக்க முடியுமா? ஆதலால் 'அவனை இப்பொழுதே அணைதல் வேண்டும்' என்னும் அவா மிக்கு எழுகின்றது. அப்பொழுதே நினைத்தவாறு அணையப் பெறாமையாலே பிறந்த பெருந்துன்பத்தை, எம்பெருமானோடே கலந்து பிரிந்த ஆற்றாமையாலே நோவுபடுகிறானாகிய ஆற்றாமை கைகொடுக்க விளையாடும் பூஞ்சோலைக்குப் புறப்பட்டு அங்கே வாழ்கின்ற பொருள்களைக் கண்டு அவை யாவும் பகவானைப் பெறாத காரணத்தால் நோவுபடுகின்றனவாகக் கொண்டு, அவற்றுக்குமாகத் தாம் நோவுபடுகின்ற பாசுரத்தால் பேசுகின்றார். இத் திருவாய்மொழில் நாரை (1), அன்றில் (2), கடல் (3), காற்று (வாடை-4), வானம்-மேகம் (5), சந்திரன் (6), இருள் (7), கழி (8), விளக்கு (9) ஆகிய பொருள்களை நோக்கி அவற்றுக்குண்டான சில தன்மைகளை இயற்கையாகக் கருதாது எம்பெருமானின் பிரிவினால் ஏற்பட்டவையாகக் கொண்டு அவற்றுக்குமாகத் தானும் சேர்ந்து கொண்டு வருந்துகின்றார்.

> வாயுந் திரையுகளும் கானல் மடநாராய்
> ஆயும் அமருலகும் துஞ்சிலும் நீதுஞ்சாய்
> நோயும் பயலைமையும் மீதூர வெம்மேபோல்
> நீயும் திருமாலால் நெஞ்சங்கோட் பட்டாயே (1)

> [திரை - அலை; உகளும் . தாவும்; கானல் - கடற்கரைச் சோலை; ஆய் - தாய்; பயலை - பசலை; கோள் படுதல் - பறித்துக் கொள்ளப் பெறுதல்]

என்பது பாசுரம். பிரிந்தவர்கள் இரங்குவது நெய்தல் நிலமாதலால் ஆழ்வார் இப்போது கடற்கரைச் சோலையில் இருப்பதாகக் கொள்ள வேண்டும். இந்தச் சோலையில் உணவுக்காக ஊக்கம் கொண்டிருக்கும் நாரைபொன்று

ஆழ்வார் நாயகியின் கண்ணுக்கு இலக்காகின்றது. அதன் உடம்பில் இயற்கையாகவுள்ள வெண்மை நிறத்தைக் கண்டு அதுவும் தம்மைப் போலவே பிரிவாற்றாமையினால் நிறம் வேறுபட்டிருக்கின்றதாகக் கருதி 'நாராய்! நீயும் நான் அகப்பட்டுத் தவிக்கும் துறையில் அகப்பட்டு இப்படி ஆனாயோ? என்பதாகச் செல்லுகின்றது இப்பாசுரம்.[6]

வாயும்...நாராய் : 'பெரியமலைபோல் வந்து இட்டு கின்ற அலைகள் மேலே தாவிப் போகா நின்றாலும் நினைத்தது கைப்புகும் அளவும் சலியாமல் கடற்கரைச் சோலையில் தங்கியிருக்கின்ற நாரையே! பகவானைத் தியானிப்பவர்கள் சலியாமலிருப்பது போன்று சலியாமலிருக் கின்ற நாரையே!' என்கின்றாள். அதாவது,

அலைகடல் நீர்குழம்ப அகடாட
ஓடி அகழ்வா னுரிஞ்ச முதுகில்
மலைகளை மீது கொண்டு வருமீனை
—பெரி திரு. 11.4 : 1

மறவாதிருப்பார்க்குப் போலியாய் இரா நின்றது. அலை களை மீது கொண்டு வருமீனை மறவாதிருக்கின்ற இந்

[6] இப்பாசுரம் 'தன்னுட்கையாறெய்திடு கிளவி' என்ற அகத்துறையின்பாற் படும். அதாவது, தனக்கு நேர்ந்த துன்பத்தை, தன் ஆற்றாமையினால் பிறிதொன்றன்மேலிட்டுக் கூறுதல். இவ்வாறு கூறுதற்குப் பயன்-களவொழுக்கத்திலே நின்று சிறைப்புறத்தானாய தலைமகன் கேட்பின் விரைவில் வெளிப்படையாக வந்து இவளை மணந்து கொள்வான்; தோழி கேட்பின் தலைவ னுக்குச் சொல்லி விரைவில் மணந்து கொள்ளச் செய்வாள்; யாரும் கேளாயின் தலைவி தானே சொல்லி ஆற்றினளாம். இதனைக் 'காமம் மிக்க கழிபடர்கிளவி' என்று கூறுதலும் உண்டு. இத் திருவாய்மொழியின் முதல் ஒன்பது பாசுரங்களும் இத்துறையின் பாற்படும்.

நாரையும் என்றபடி. இனி மீனைக் குறிக்கோளாகக் கொண்டு சலியாமல் நிற்கின்ற நாரையே! என்று கொள்ளாது "சர்வேசுவரனே காப்பவன் என்றிருப்பார் மூவகைத் துன்பங்களாலும்[7] வந்த இடையூறுகட்கு இடையாதே இருக்குமாறு போன்று" மலைகள் போன்ற அலைகள் மேலே தாவிச் சென்றாலும் அதற்குச் சலியாமல் இருக்கின்ற நாரையே! என்று கோடலுமாம்.

கிராமணிகள் (கிராமத்தில் தலைமை பெற்றவர்கள்) பிறர்க்குத் துன்பம் செய்து கொண்டே யாகங்களும் பண்ணிப் பவித்திரங்களும் முடித்திட்டுத் 'தார்மிகர்' என்னும்படி திரிவது போன்று நாரையும் நினைத்த பெரியமீன் கைபுகுமளவும் சிறிய மீன்கள் வந்தாலும் அவற்றில் விருப்பமற்றிருத்தலின் 'மடநாராய்' என்கின்றாள். மடப்பமாவது— பற்றிற்று விடாமை.

என்னைப் பெற்ற தாயும், உறங்காமையே வடிவமான உம்பர் உலகமும் உறங்கினாலும் நீ உறங்குவதில்லையே! இதற்குக் காரணம் அறிகிலேன்; இப்படி நீ இருப்பதைக் காணுமிடத்து இதற்கொரு சிறந்த காரணம் இருத்தல் வேண்டும்; உள்ளே உருகி நைந்து அது காரியமாகப் பசலை நிறமும் மேலே தெளிவாகத் தெரியும்படியிருந்து நான் நோவுபடுவது பகவத் விஷயத்தில் ஈடுபட்டதனாலே; இப்படிப்பட்ட நோயை நீயும் உற்றிருப்பதாகக் காண்கின்ற படியால் என்னைப் போலவே நீயும் திருமாலால் நெஞ்சு கொள்ளை கொள்ளப் பெற்றாய் போலும்.

ஆழ்வார் பெண்ணிலைமை எய்திப் பேசுகிற பதிகம் இது என்பது இரண்டாம் அடியின் முதற்பதமாகிய 'ஆவும்'

7. மூவகைத் துன்பங்கள் : தெய்வம்பற்றி வருவனவும் தன்னைப்பற்றி வருவனவும் பிற உயிர்களைப் பற்றி வருவனவும் ஆம்.

என்பதனால் விளங்கும். என் தாய் உறங்கினாலும் நீ உறங்குவதில்லை என்றதனால் பராங்குச நாயகியாகிய இத்தலைமகளின் தாய்க்கு உறக்கமே இல்லை என்பது வெளிப்படை. மகளின் உறக்கமின்மை கண்டு வருந்தித் தாயும் உறங்குவதில்லை. தம்முடைய கண்களுக்குத் துஞ்சுதலில்லாமையை ஆழ்வார் இவ்வழியால் வெளியிட்டது ஒரு சமத்காரம். இங்கே நம் பிள்ளை ஈடு : "இவளைப் பெற்ற தாய்க்கு உறக்கமின்றிக்கே யொழிவான் என்னெனில் : "முன்பெல்லாம் இவள் இளமைப் பருவத்தில் 'இவளுக்குத் தக்கானாயிருப்பான் ஒருவனைப் பெற்றுக் கொடுத்தோமாக வல்லோமே!' என்று கண் உறங்காது; பின்பு நாயகனைப் பிரிந்து இவள் நோவுபடுகின்றபடியைக் கண்டு அத்தாலே கண் உறங்காது." இமையோடு இமைகொட்டாமல் எப்பொழுதும் இறைவனைப் பார்த்துக் கொண்டே இருப்பவர்கள் நித்தியசூரிகள் ஆதலின், 'அமருலகும் துஞ்சிலும்' என்கின்றாள்.

**நோயும் பயலைமையும் :** மனத்தின் துன்பமும் அத்தாலே வந்த பசலை நிறமும். நோய் கண்ணுக்குத் தெரியாது; பசலை கண்ணுக்குத் தெரியும். தன் பக்கலில் காண்கையாலே அவ்விரண்டும் நாரைக்கும் உண்டு என்றிருக்கின்றாள்.

**திருமாலால்...கோட்பட்டாயே :** நோயும் பசலையும் இருந்தபடி கண்டேனுக்கு நீயும் நான் அகப்பட்ட துறையிலே அகப்பட்டு நெஞ்சு பறியுண்டாயாகாதே! மைந்தனை மலராள் மணவாளனையோ நீயும் ஆசைப்பட்டாய் என்பாள் 'திருமாலால்' என்கின்றாள். தோற்புரையன்றியோ மறுபாடுருவ வேர்ப்பற்றிலே[8] நோவுபட்டாயாகாதே! என்பாள் 'நெஞ்சமும் கோட்பட்டாயே' என்கின்றாள்.

8. வேர்ப்பற்று—நெஞ்சு. எல்லாவற்றுக்கும் காரணமாகையாலே நெஞ்சை 'வேர்ப்பற்று' என்கிறார். தோற்புரை - உடல். மறுபாடுருவல்—பின்னே ஊடுருவிப்போதல்

அடுத்து வரும் பாசுரங்களில் அன்றில் வாயலகு நெகிழ்த்தவாறே கதறுகையும் (2), கடல் எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி கூப்பிடுதலும் (3), காற்று (வாடை)வேறுபாடின்றி எப்பொழுதும் திரிதலும் (4) மேகம் நீராய் இற்று இற்று விழுதலும் (5), சந்திரன் தேய்வது வளர்வது என்றிருத்தலும் (6), இருள் பொருள் களைக் காணவொண்ணாமல் தடுத்தலும் (7), கழி அலை வாய் முகமாய் ஏறுவதும் வடிவதுமாயிருத்தலும் (8) விளக்கு இற்றிற்று எரிதலும் (9) –இங்ஙனம் இவற்றிற்கு இத்தன்மை எப்பொழுதும் உள்ளவை என்றறியாமல், இவையெல்லாம் தம்மைப் போன்று இறைவனைப் பிரிந்த பிரிவால் நோவுபடு கின்றனவாகக் கொண்டு அவற்றுக்குமாகத் தாம் வருந்தி, துக்கத்தையுடையவர்கள் தங்களோடு ஒத்த துக்கத்தை யுடையவர்களைக் கழுத்தைக் கட்டிக்கொண்டு கிடந்து கூப்பிட்டு ஆற்றாமைக்குப் போக்குப் போக்கு விட்டுத் தரிக்கு மாறு போன்று ஆழ்வார்நாயகியும் கண்ணுக்கு இலக்காகும் பொருள்கள் எல்லாவற்றோடும் கழுத்தைக் கட்டிக் கொண்டு கிடந்து 'நீ பட்டதோ? நான் பட்டதோ?' என்று கூப்பிடு கின்றாள் என்பதைக் காணலாம்.

(2) 'ஏறாளும் இறையோனும்' (4 8): இத்திருவாய் மொழியின் அவதாரிகையில் நம்பிள்ளை அருளிச் செய்வது: "கேட்டாரெல்லாரும் நீரரம்பபடியாக ஆழ்வார் எம்பெரு மானை அழைத்தும் அவன் வந்து முகம் காட்டவில்லை. அதனால் எம்பெருமான் தம்மை வேண்டா என்று வெறுத்து விட்டதாக அறுதியிடுகின்றார். அவனுடைய வெறுப்புக்கு இலக்கான இந்த ஆன்மாவும் அந்த ஆன்மாவுடன் சம்பந்தப் பட்ட பொருள்களும் (ஆத்மீயங்களும்) வேண்டாவென்று இவரும் வெறுகின்றார்."

என்பதனால் விளங்கும். என் தாய் உறங்கினாலும் நீ உறங்குவதில்லை என்றதனால் பராங்குச நாயகியாகிய இத்தலைமகளின் தாய்க்கு உறக்கமே இல்லை என்பது வெளிப்படை. மகளின் உறக்கமின்மை கண்டு வருந்தித் தாயும் உறங்குவதில்லை. தம்முடைய கண்களுக்குத் துஞ்சுதலில்லாமையை ஆழ்வார் இவ்வழியால் வெளியிட்டது ஒரு சமத்காரம். இங்கே நம் பிள்ளை ஈடு: ''இவளைப் பெற்ற தாய்க்கு உறக்கமின்றிக்கே யொழிவான் என்னெனில்: ''முன்பெல்லாம் இவள் இளமைப் பருவத்தில் 'இவளுக்குத் தக்கானாயிருப்பான் ஒருவனைப் பெற்றுக் கொடுத்தோமாக வல்லோமே!' என்று கண் உறங்காது; பின்பு நாயகனைப் பிரிந்து இவள் நோவுபடுகின்றபடியைக் கண்டு அத்தாலே கண் உறங்காது.'' இமையோடு இமைகொட்டாமல் எப்பொழுதும் இறைவனைப் பார்த்துக் கொண்டே இருப்பவர்கள் நித்தியசூரிகள் ஆதலின், 'அமருலகும் துஞ்சிலும்' என்கின்றாள்.

**நோயும் பயலைமையும்:** மனத்தின் துன்பமும் அத்தாலே வந்த பசலை நிறமும். நோய் கண்ணுக்குத் தெரியாது; பசலை கண்ணுக்குத் தெரியும். தன் பக்கலில் காண்கையாலே அவ்விரண்டும் நாரைக்கும் உண்டு என்றிருக்கின்றாள்.

**திருமாலால்...கோட்பட்டாயே:** நோயும் பசலையும் இருந்தபடி கண்டேனுக்கு நீயும் நான் அகப்பட்ட துறையிலே அகப்பட்டு நெஞ்சு பறியுண்டாயாகாதே! மைந்தனை மலராள் மணவாளனையோ நீயும் ஆசைப்பட்டாய் என்பாள் 'திருமாலால்' என்கின்றாள். தோற்புரையன்றியோ மறுபாடுருவ வேர்ப்பற்றிலே[8] நோவுபட்டாயாகாதே! என்பாள் 'நெஞ்சமும் கோட்பட்டாயே' என்கின்றாள்.

8. வேர்ப்பற்று—நெஞ்சு. எல்லாவற்றுக்கும் காரணமாகையாலே நெஞ்சை 'வேர்ப்பற்று' என்கிறார். தோற்புரை - உடல். மறுபாடுருவல்—பின்னே ஊடுருவிப்போதல்

**மேகலையால் குறையிலகே (8)**
(மேகலை—அரைவடம்)

**உடம்பினால் குறையிலமே (9)**

**உயிரினால் குறையிலமே (10)**
(உயிர்—ஆன்மா)

இங்ஙனம் பகவத்கைங்கரியத்திற்கு உறுப்பல்லாதவை தியாஜ்யம் என்ற சாஸ்திரார்த்தம் வெளியிடப்பட்டதாகும் இத்திருவாய்மொழி.

(3) '**மாசறு சோதி**' (5.3): இத்திருவாய்மொழியின் அவதாரிகையில் நம் பிள்ளை அருளிச் செய்வது: 'மணியும் சுடரொளி மூர்த்தி மாயப்பிரான் கண்ணன் தன்னை' (5.2 : 11) என்று எம்பெருமானின் வடிவழகையும் குணங்களையும் அநுசந்திக்கவே, முன்னர் ''ஏறாளும் இறையோனும்'' (4.8) என்கிற திருவாய்மொழியில் உண்டாயிருந்த காதலே மீண்டும் கிளர்ந்தெழுந்து எம்பெருமானுடன் மெய்யுறு புணர்ச்சியை விரும்பி அவனை அணைக்கக் கை நீட்ட, அவன் அகப்படாமல் கைகழிந்து நிற்க, அதனாலே கலங்கி ஒரு பிராட்டியின் நிலையை அடைந்து 'மடலூர்வேன்' என்று அச்சமுறுத்திக் காரியம் கொள்ளப் பார்க்கின்றார்.

சக்கரவர்த்திருமகன் வருணனைச் சரண் புகுந்து வழி வேண்டின இடத்தும் அக்கடலரையன் இறுமாப்பையே பாராட்டி முகம் காட்டாமல் அலட்சியம் செய்து கிடக்க, பெருமான் சீறிச் சிவந்த கண்ணினராய், 'இதோ இக்கடலை வற்ற அழித்துவிடுகின்றேன்; இலட்சுமணா, சார்ங்கவில்லைக் கொண்டு வா; வானர முதலிகள் காலாலே நடந்து செல்லட்டும்; ஒருக்கணத்தில் இக்கடல் படுகிற பாட்டைப் பார்' என்றருளிச் செய்து கடலரையனையே அழிக்க முயன்றாப்போலே 'நமது விருப்பத்தை நிறைவேற்றாத எம்

பெருமான் எதுக்கு?' என்று பகவத் தத்துவத்தையே இல்லையாம்படிச் செய்துவிடப் பார்க்கின்றார் என்று மடல் எடுக்கையில் புகுகின்றார் இத்திருவாய்மொழியில். 'மடல் எடுக்கையாவது, போர் சுட்டுப் பொறி கொறிக்கையைப் போன்றது ஒன்றாகும். மடல் எடுத்தல் என்பது, துணிவுள்ள காரியமுமாய் மிகச் சிறிய பலமுமாயிருக்கும் என்பதனைக் காட்டுகின்றார். பகவத் விஷயத்தில் ஈடுபடும்படியாய்ப் பிறரைத் திருத்துகின்ற இவரைப் 'பகவானிடத்தில் ஈடுபாடு ஆகாது' என்று திருத்தப் பார்த்தால் திருந்தாரேயன்றோ?

மடலூர்தல் என்று தமிழிலே ஒருமுறை உண்டு. நாயகனும் நாயகியும் ஊழ்வசத்தால் சந்தித்து அவர்களிடையே கண்கலவி உண்டாக, பின்னர் அதே ஊழ்வினையின் காரணமாகப் பிரிவோடே முடிவுற்றுப் பிரிய, இருவரும் குணாதிகர்களாகையாலே இருவருக்கும் ஆற்றாமை விஞ்சி நிற்க, அவனுடன் கூடுதற்காக நாயகி செய்யும் சாகசச் செயலே மடலூர்தல் என்பது. நாயகனை ஒரு படத்தில் எழுதி வைத்தகண் வாங்காமல் அதனைப் பார்த்துக் கொண்டு மலர் சந்தனம் முதலிய மணப் பொருள்களையும் நஞ்சென உதறித்தள்ளி ஊணும் உறக்கமும் நீராடலுமின்றி பனைமடலைக் கையிலே ஏந்திக் கொண்டு அதனால் உடம்பையும் குருதிவர மோதிக் கொண்டு விரித்த கூந்தலுடன் 'இன்ன படுபாவி என்னைக் கைவிட்டான்; அவன் கண்ணோட்டமில்லாத கடியன்; அவனிலும் விஞ்சிய கொடியன் இல்லை' என்று கூறிய வண்ணம் தெருவேறக் கதறிக் கொண்டே கேட்டாரெல்லாரும் நடுங்கும்படியும் இரங்கும் படியும் திரிந்து உழல்வதைத்தான் தமிழர்கள் மடலூர்தல் என்று திருநாமம் இட்டனர்.

மடலூருவதற்குப் பயன்: இந்தச் சாகசச் செயலைக் கண்டு அரசரும் பெரியோரும் இந்த ஆர்த்தியைப் பொறுக்க மாட்டாத கருணையினால் இருவரையும் கூட்டிவைப்பர்

உறவு முறையாராவது கூட்டிவைப்பர்; தோழிமாராவது கூட்டிவைப்பர்; பழிக்கு அஞ்சி நாயகனே வந்து கைபிடிப்பன். இவையொன்றுமில்லையாகில் நாயகிதான் முடிந்து பிழைத்துப் போவாள். இவையே பயன்கள். ஆழ்வார் இப்படி எம்பெருமானைப் பழித்துக் கொண்டு சாகசத் தோற்றத்துடன் தெருவில் கிளம்பினாளா? எனில்; இல்லை. 'மடலூர்வன்' என்று சொல்லி அச்சமுறுத்தின மாத்திரமேயன்றி அதை முற்ற முடிய கொண்டு செலுத்தவில்லை. "தோழி உலகு தோறலர் தூற்றி ஆம் கோணைகள் செய்து குதிரியாய் மடலூர்துமே" (5.3:9), என்றும், "ஆம் மடம் இன்றி தெருவுதோறயல் தையலார், நாமடங்கப் பழி தூற்றி, நாடும் இரைக்கவே" (5.3:10) என்ற பாசுரங்களால் இதை அறியலாம். திருமங்கையாழ்வாரும் "பெருந்தெருவே, ஊரார் இகழிலும் ஊராதொழியேன் நான், வாரார் பூம் பெண்ணைமடல்.' (சிறி.திரு) என்றும் "உலகறிய ஊர்வன் நான், முன்னி முளைத்தெழுந் தோங்கி யொளிபரந்த, மன்னிபூம் பெண்ணை மடல்" (பெரி. திரு) என்றும் மடலூர்வதாகச் சொல்லி அச்ச முறுத்துவதைக் காணலாம். இத் திருவாய்மொழியில் ஆழ்வார், நாயகி சமாதியில் நின்று தம்முடைய ஆசையின் மிகுதியைக் காட்டுவது இதன் உள்ளுறையாகும்.

'எம் பெருமான் தனக்குத் திருவுள்ளமான போது நம்மை நோக்கியருள்வன்; நாம் பதறவொண்ணாது' என்று அநுசந்தித்து ஆறியிருக்கவேண்டியதன்றோ சொரூபம்? அங்ஙனம் இராமல் தாம் பதறி இயல்புக்கு மாறாக நடந்து கொள்வது பெருங்குற்றமன்றோ? அதிலும் பிரபந்த ஜன கூடஸ்தரான ஆழ்வார் இப்படி மடலூர்வதாகச் சொல்வது பொல்லாங்கன்றோ என்னில்: அன்று; அடைய வேண்டிய பொருளின் மீது கழிபெருங்காதலினால் ஏற்படும் முயற்சி எம்பெருமானுக்குத் தீங்குவிளைவிக்க வேண்டும் என்ற கெட்ட

எண்ணத்தினால் உண்டாகின்ற முயற்சி அல்ல. மீறி நிற்கும் காதலையுடையார்க்கு இது குற்றமுமன்று. 'ஞானம் கனிந்த நலம்' என்றபடி ஞான பரிபாக ரூபமான பக்தியின் காரியமாகச் சம்பவிக்கின்ற கழிபெருங்காதலால் வரும் சிறப்பு முயற்சிகள் யாவும் மிகவும் ஆதரிக்கத் தக்கவையே. கருமமடியான அஞ்ஞானத்தினால் வருபவையே விடத்தக்கவை; கீழ்த்தரமானவை.

ஆனாலும் சேதநனிடத்து ஒரு வகையான முயற்சியும் சகியாத சித்தோபாயத்தின் தத்துவத்திற்கு இந்த முயற்சிக்கு இடையூறாக மாட்டாதோ என்னில்; இந்த முயற்சியும் சித்தோபாயமான எம்பெருமான் பண்ணின கிருஷியின் பயன் எனக் கருதத்தக்கது. "பேரமர்காதல் கடல்புரைய விளைவித்த காரமர் மேனி நம்கண்ணன்." (5.3:4) என்று இப்படிப்பட்ட அதிப்ரவர்த்திக்குக் காரணமான பக்தியைப் பிறப்பிப்பவனும் வளரச் செய்பவனும் அவ்வெம்பெருமான் தான் என்றன்றோ சொல்லப்பட்டுள்ளது? ஆகையால் இம்முயற்சி உபாயபலம் என்பது பூருவாசாரியர்களின் சித்தாந்தம். அன்றியும், பலனைக் கடுகப் பெற வேண்டுமென்ற விரைவின் மிகுதியால் கண்ணாஞ் சுழலை யிட்டு இத்தலைப் படுகின்ற அலமாப்பெல்லாம 'நம்மை யாசைப் பட்டு இங்ஙனம் துடிக்கப் பெறுவதே!' என்று அவன் திருமுகம் மலருகைக்கு உறுப்பாகையால் இத்தகைய முயற்சிகள் எல்லாம் அவனுடைய முகமலர்ச்சிக்காகப் பண்ணும் கைங்கரியத்தோடொத்து உபேயத்தில் கலந்து மறைந்து விடும் என்றே அறுதியிடத்தக்கது.

மாசறு சோதிஎன் செய்யவாய்
    மணிக்குன் றத்தை
ஆசறு சீலனை ஆதி
    மூர்த்தியை நாடியே

**பாசற வெய்தி அறிவி**
**ழந்துஎனை நாளையம்**
**ஏசறும் ஊரவர் கவ்வை**
**தோழி! என்செயுமே? (1)**

*[மாசு - அழுக்கு; செய்ய - சிவந்த; ஆசு - குற்றம்; ஆதி மூர்த்தி - முழுமுதற்கடவுள்; பாசு - பசுமை நிறம்; அறிவு இழந்து - அறிவும் இழக்கப் பெற்று; எனை நாளையம் - எத்தனை காலமுடையேம்; கவ்வை - பழிமொழி.]*

என்பது முதற் பாசுரம். பராங்குச நாயகி மடலூர்வதாக எண்ணினபடியை அறிந்த தோழி அதனை விலக்கப் புகுந்து 'ஊரார் பழிசொல்வர்காண்' என்ன; 'அவனுடைய அழகு முதலியவற்றில் அகப்பட்டுக் கலங்கின நான் ஊரார் பழியை இலட்சியம் பண்ணும் நிலையில் இலேன்' என்கின்றாள் தலைவி. ''மடலெடுக்கை மாசு என்றிருக்கின்றாள் தோழி; மடல் எடாதொழிகை மாசு என்றிருக்கின்றாளிவள். பிரிவில் இப்படி ஆற்றாமை விளையாதாகில் நாம் காண்கின்ற விஷயங்களைப் போன்றது ஆகுமே. வடிவிலே அணைந்தவள் ஆசையாலே முற்படவடிவிலே மண்டுகிறாள்'' என்பது ஈடு.

'வெறும் வடிவழகை மட்டிலும் கண்டு துடிக்கின்றேன் அல்லேன்; அகவாயில் சீலகுணத்தைக் கண்டு துடிக்கின்றேன் காண்' என்கின்றாள் - மாசறு சோதி என்பதனால்.

எம்பெருமான் நம்மை நாடிக் கொண்டு வரவேண்டுமே யன்றி நாமாக அவனை நாடுவது சொரூப ஞானத்திற்குப் போராதே என்று சிலர் சொல்ல, 'அறிவிழந்து எனை நாளையம்' என்கின்றாள். அறிவு (சொரூப ஞானம்) அடியோடே தொலைந்து எத்தனையோ நாள் ஆயிற்றே என்பது இதன் கருத்து.

இங்கே நம் பிள்ளை ஈடு : ''மயர்வற மதிநலம் அருளப் பெற்ற அன்றே போயிற்று நம்முடைய அறிவு, பறவை

முதலானவற்றின் (திர்யக்குகள்) காலிலே விழுந்து தூதுவிட்ட அன்று 'அது ஞானகாரியம்' என்றிருந்தாயோ இன்று இருந்து கற்பிக்கைக்கு; அன்றே மதியெல்லாம் உள்கலங்கிற்று இல்லையோ? தன் பக்கல் கைவைத்தால் மற்றொன்று அறியாதபடி செய்யும் விஷயமன்றோ? 'பேரின்பமெல்லாம் துறந்தார் தொழுதார், அத்தோள்' என்னக் கடவதன்றோ? பேற்றினைப் பெறுகின்ற சமயத்திலே இவ்வருகுள்ளவற்றை நினையாதபடி செய்கையே அன்றிக்கே, ஞானம் பிறந்த சமயமே பிடித்தும் இவ்வருகுள்ளவற்றை நினையாமே பண்ணவல்ல விஷயமன்றோ? தன்னையும் அநுசந்தித்து உலக யாத்திரையையும் அநுசந்திக்கும்படியோ அவன்படி'' என்பதாம்.

ஆனாலும் ஊரால் சொல்லும் பழிக்கு அஞ்ச வேண்டாவோ என்ன, 'ஏசறும் ஊரவர் கவ்வை தோழி' என் செயுமே' என்கின்றாள். ஏசுவதற்கென்றே பிறந்திருக்கின்ற ஊராருடைய பழிமொழிகள் நமக்குப் பழியோ? அதுவே நமக்குத் தாரகம் அன்றோ?என்கின்றாள். அவர்கள் பழிதாரகமாக அன்றோ மடல் எடுக்க இருக்கிறது?

4. 'ஊரெல்லாம் துஞ்சி' (5.4) இத்திருவாய்மொழியின் அவதாரிகையில் நம்பிள்ளை கூறுவது: கீழ்த்திருவாய்மொழியில் (5.3) மடலூரும் முயற்சி வலிதாய்ச் சென்றது. மடலூர வேண்டுமானால் நாயகனை ஒரு படத்தில் எழுதவேண்டுமல்லவா? அதை எழுதுவதற்கு அவகாசமில்லாதபடி கங்குல் இருள்வந்து புகுந்தது. 'ஆழிகொண்டு அன்று இரவிமறைப்ப' (பெரியாழ். திரு. 4.1:8), என்கின்றபடி பண்டு பாரதப் போரில் சயத்திரதனின் வதத்திற்காக சூரியனை ஆழியால் மறையும்படிபண்ணினது போல் இப்போதும் அப்பெருமான்தானே பகலவனை மறையச் செய்தான் போலும், இவள் மடல் எடுத்தால் அது தனது பெருமைக்குக் கேடுவரும் என்று நினைத்து அதற்கு இடையூறு

செய்ய ஒருப்படுபவனே எம்பெருமான். அந்த இரவு சராசரங்களெல்லாம் ஒடுங்கும்படி நடு நிசியாய் இருந்தது. பழி சொல்லுவாரோடு அநுகூலராய் இதஞ்சொல்லி விலக்குவாரோடு வேற்றுமையின்றி எல்லோரும் உறங்குகையாலே ஓர் உசாத்துணையும் இல்லாத நிலையில் சர்வரட்சகனான எம்பெருமானது திருக்குணங்களை அநுசந்தித்தார். இந்த அநுசந்தானம் பிரிவில் இருந்ததாகையால் மிகவும் ஆற்றாமைக்கு உறுப்பாயிற்று; அசோகவனத்தில் முடியத் தேடின பிராட்டியைப்போல இவர்க்கும் முடிய வேண்டிய அளவாயிற்று. அந்த வருத்தமெல்லாம் இந்தத் திருவாய்மொழியில் வெளிவருகின்றது.

ஊரெல்லாம் துஞ்சி
உலகெல்லாம் நள்ளிருளாய்
நீரெல்லாம் தேறிஓர்
நீளிரவாய் நீண்டதால்
பாரெல்லாம் உண்டநம்
பாம்பணையான் வாரானால்
ஆர்?எல்லே! வல்வினையேன்
ஆவிகாப் பார்இனியே (1)

[துஞ்சி - உறங்கி; நீண்டது - நெடுகிச் சென்றது; ஆல்-அந்தோ; பார் - பூமி; பாம்பணையான் - சேஷசாயி; ஆவி - உயிர்.]

என்பது முதற் பாசுரம். ஈடு : "பிரளய ஆபத்திலே வந்து உதவினவன், என்னைக் காதல் நோயாகிய பிரளயம் கொள்க, வந்து உதவாத பின்னர், இனி நான் பிழைத்திருத்தல் என்பது ஒரு பொருள் உண்டோ?" என்று தான் வாழ்வதில் நசை அறுகின்றாள் பராங்குச நாயகி.

"ஊராருடைய பழிமொழியே எருவாகத் தன்னுடைய காதல் வளருவதாகையாலே அந்த எருவுக்கு அவகாசம்

இல்லாதபடி ஊரெல்லாம் துஞ்சிற்றே!'' என்று வருந்து கின்றாள். ''இலங்கையினுள் திருவடி செல்லுகிற கணத்திலே அரக்கிமார் அனைவரும் உறங்கினாற் போன்று பழிசொல்லு வார் அடங்கலும் உறங்கிப் போனார்கள். இவள் பிறந்த ஊராகையாலே இவளுடைய நிலைமையைக் கண்டு சோகித்து கோரை சாய்ந்தாற்போன்று எல்லாரும் ஒக்க உறங்கின படியைச் சொல்விற்றாகவுமாம். பண்டு இராம - ராவணப் பெரும் போரில் நாகபாசத்தால் கட்டுண்ட அன்று ஒரு சாம்பவான், மகாராசர், திருவடி தொடக்கமானார் உணர்ந் திருந்தமை அன்றோ? இங்கு அங்ஙனம் ஒருவர் கூட இலரா யிற்று. ஆக, பழிசொல்லுவாரோடு இதம் சொல்லுவா ரோடு உசாத்துணையாவாரோடு வாசியற எல்லோரும் ஒரு சேர உறங்கினார்கள்'' என்கின்றாள்.

''ஊரைவிட்டு வெளியே சென்று தரிக்கைக்கும் அவகாசம் இல்லாமல் உலகெல்லாம் நள்ளிருளாயிற்று. கண்ணாலே ஒரு பொருள் காண முடியாத நிலைமையா யிற்று. நீரில் வாழும் பிராணிகள் முழுவதும் ஆழ இழிந்து அங்குள்ள ஒலியும் அடங்கிற்று. இரவு-பகல் என்ற வேற்றுமை யின்றி ஒரே காளராத்திரியாயிற்று. மானிடர்களின் இரவைக் காட்டிலும் தேவர்களுடைய இரவுக்கு அதிக நீட்சியுண்டு; அதனிலும் விஞ்சிய நீட்சியாயிற்று'' என்கின்றாள்.

''இந்த நிலையில் பரமகாருண்யனான அந்தப் பாம் பணையானும் வாராதொழிந்தான். பிரளயாபத்து வந்த வாறே உலகங்களையெல்லாம் திருவயிற்றில் வைத்துப் புரக்கும் பெருமான் இப்பேராபத்தில் வந்து முகம் காட்டி உதவுகின்றிலன். இப்படியான பின்பு தரிக்கும் வகை என்னோ?'' என்கின்றாள்.

இப்பதிகத்திலுள்ள எல்லாப் பாசுரங்களும் கல்நெஞ்சத் தையும் உருக்குபவை; படித்துப் படித்து, சிந்தித்துச் சிந்தித்து அநுபவிக்க வேண்டியவை. விரிவஞ்சி விடப்பெற்றன.

5. 'எங்ஙனேயோ அன்னைமீர்காள்' (5.5): நம்பிள்ளை உரையவதாரிகையில் கூறுவது; கீழ்த் திருவாய்மொழியில் (5.4) ஆழ்வார் இருளுக்கும் பனிக்கும் வருந்தினபடி சொல்லிற்று. இதுதான் இருள்தருமா ஞாலமாகையாலே தமோ குணம் மேலிட்டு நலிந்தபடியைச் சொன்னதாக உள்ளுறைப் பொருள் கொள்ளலாம். இருட்போது கழிந்து பகற்போது காண்கிறாப்போலே தமோ குணத்தின் மேலீடு கழிந்து சத்துவ குணத்தின் தலையெடுப்பு காணத் தொடங்கிற்று. அதனால் நெஞ்சு தரிப்புற்றுத் திருக்குறுங்குடி எம்பெருமானுடைய வடிவழகையும் திவ்வியாயுத திவ்வியா பரணசேர்த்தியழகையும் வாய்வெருவும்படியாயிற்று.

உருவெளிப்பாடு என்பதொன்றுண்டு; இதனை வடமொழியில் 'மானச சாட்சாத்காரம்' என்று சொல்வர். கண்ணுக்கு நேர்காட்சியாகத் தோற்றாமல் நெஞ்சுக்கு நேர் காட்சியாகத் தோற்றுதலே இது. மனத்தில் இடைவிடாது நினைக்கப்பட்ட பொருள் அந்தப் பாவனையின் மிகுதியால் கண்ணுக்கு எதிரில் காணப்பட்டாற்போலத் தோன்றுதல் இயல்பு. சூர்ப்பணகையால் வருணிக்கப்பட்ட சீதையின் வடிவத்தை இடைவிடாது சிந்தித்து நின்ற இராவணன் அவ்வடிவத்தைக் கட்புலனாகக் காண்பதும், இங்ஙனமே சூர்ப்பணகை இராமனை இடைவிடாது சிந்தித்தலால் அவன் வடிவத்தைக் கட்புலனாகக் காண்பதும் இவ்வுரு வெளித்தோற்றத்திற்கு எடுத்துக்காட்டுகளாகும்.[10] இங்குப் பிராட்டி நிலையில் உள்ள ஆழ்வாருக்கு திருக்குறுங்குடி எம்பெருமான் காட்சியளிக்கின்றான். தாய்மார் தலைமகட்கு அடைவு சொல்லி மீடகப் பார்க்க, தலைமகள் 'எனக்கோ நீங்கள் அடைவு சொல்வது? திருக்குறுங்குடி நம்பியின் வடிவழகில் நெஞ்சு பறியுண்டு கிடக்கும் என்னை

10. கம்ப-ஆரணிய-மாரீசன்வதை. 142-153

நீங்கள் அடக்கப் பார்ப்பது முறையல்ல' என்று சொல்லுவ தாக நடைபெறுகின்றது இத் திருவாய்மொழி.

முதல்பாசுரத்தில் ''தாய்மார்களே, என்னை நீங்கள் சீறுவது எதற்கு? சீறிப் பயன் என்? வேண்டுமாகில் திருக் குறுக்குடி நம்பியின் வடிவழகைச் சீறுங்கோள்; 'ஏதுக்கு நீ இப்படிப்பட்ட வடிவழகு கொண்டாய்?' என்று நம்பியைச் சீறில் சீறுமத்தனையொழிய என்னைச் சீறுவது முறையன்று. நான் ஏதேனும் பொருத்தமற்ற புருஷனைக் கண்டு மோகிக் கின்றேனா? அழகுதானே உருக்கொண்ட திருக்குறுங்குடி நம்பியையன்றோ நான் சேவிக்கப்பெற்றது? அப்படி சேவிக்கப்பெற்ற கணமே தொடங்கிச் சங்கும் சக்கரமும் செந்தாமரைக் கண்களும் செங்கனி வாயுமே என் முன்னே தோன்றா நிற்க, நான் அவற்றை வாய்வெருவாதே பின்னை எதை வாய்வெருவுவேன்? ஆதலால் நீங்கள் என்னை முனிவது முறையன்று'' என்கின்றாள். மேலும்,

> என்னெஞ்சினால் நோக்கிக் காணீர்
> 
> என்னை முனியாதே;
> 
> தென்னன் சோலைத் திருக்குறுங்குடி
> 
> நம்பியை நான் கண்டபின்,
> 
> மின்னு நூலும், குண்டலமும்,
> 
> மார்பில் திருமறுவும்
> 
> மின்னு பூணும் நான்குதோளும்
> 
> வந்து எங்கும் நின்றிடுமே (2)

[நெஞ்சால் - நெஞ்சைக் கொண்டு; நோக்கி - அநுபவித்து முனியாதே - சீறாமல்; மறு - ஸ்ரீவத்ஸம்]

என்பது இரண்டாம் பாசுரம். இதில் 'நங்காய், திருக்குறுங்குடி நம்பியை நீ மாத்திரமா கண்டாய்? நாங்களும் பார்த்தோமே. நாங்களும் சேவித்திருக்கின்றோம்; ஆனாலும், உனக்கு இப்படிப்பட்ட முறைகேடு ஆகாது'' என்று தாய்மார்

சொல்ல அதற்குத் தலைமகள் 'என் நெஞ்சினால் நோக்கிக் காணீர்;' என்கின்றாள். "என் நெஞ்சை இரவலாக வாங்கி வைத்துக்கொண்டு நீங்கள் நம்பியை சேவித்தீர்களாகில் இவ்வாறு என்னைப் பொடிய மாட்டீர்கள்" என்கின்றாள்.

"நீ கண்டது எவ்வாறு?" என்று தாய்மார் கேட்க, "நம்பியை நான் கண்டபின் மேகத்தில் மின்னியது போலிருக்கின்ற யஜ்ஞோப வீதமும், பரந்த மின் ஓரிடத்தில் சுழித்தாற் போல் இருக்கின்ற மகரகுண்டலமும், வெறும் புறத்திலே ஆலத்தி வழிக்கும்படியா யிருக்கின்ற ஸ்ரீவத்ஸமும், நாய்ச்சிமாரோடு கலக்கும்போதும் கழற்ற வேண்டாதபடி யிருக்கின்ற திருஆபரணங்களும், ஆபரணங்களுக்கு ஆபரணமாகக் கற்பகத் தரு பணைத்தாற்போலே இருக்கின்ற திருத்தோள்கள் நான்கும் 'உங்கள் இத வசனப்படியே செய்ய வேணும்' என்று நான் கடக்க நிற்கவும், அங்கேயும் சுற்றிச் சுற்றி என்னை நெருக்கா நின்றனவே! இதுவே நான் கண்ட காட்சிக்கு வாசி" என்கின்றாள். எல்லாப் பாசுரங்களுமே உள்ளத்தை உருக்கும் அநுபவங்கள்.

6. 'மானேய் நோக்கு நல்லீர்' (5.9): கீழ்த் திருவாய்மொழியில் (5 8) திருக்குடந்தையில் சென்று புக்கவிடத்திலும் தம் எண்ணம் நிறைவேறப்பெறாமையாலே 'திருவல்லவாழ்' ஏறப்போக ஒருப்பட்டார் அங்குப் போகவும் முடியாமல் அவ்வூருக்கு அருகில் சோலைகளும் அங்குள்ள பரிமளத்தைக் கொய்து கொண்டு புறப்படுகின்ற தென்றலும் வண்டுகளின் இனிதான மிடற்றோசைகளும் முதலானவை தம்மை மிகவும் நலிய அவற்றாலுண்டான நோவுபாட்டைத் தோழிமாரைக் குறித்துத் தலைவி சொல்லும் பாசுரமாகச் (மகள் பாசுரம்) செல்லுகின்றது இத் திருவாய்மொழி; திருவல்லவாழ் செல்லுதலைத் தடுக்கும் தோழியர்க்குத் தலைவி கூறுவதாக நடைபெறுகின்றது. இதில்,

மானேய் நோக்குநல்லீர்!
வைகலும்வினை யேன்மெலிய
வானார் வண்கமுகும்
மதுமல்லிகை யுங்கமழும்
தேனார் சோலைகள்சூழ்
திருவல்ல வாழுறையும்
கோனா ரைஅடியேன்
அடிகூடுவ தென்றுகொலோ? (1)

[மான்ஏய் - மான்போன்ற; வைகலும் - எப்போதும்; வான்ஆர் ஆகாயத்தை அளாவிய; கமழும் - மணக்கும்; கோனார் - எம்பெருமான்; அடிநீறு - ஸ்ரீபாதரேணு]

என்பது முதல் பாசுரம். தோழிமாரைக் குறித்து திருவல்ல வாழிலே நின்றருளின சாவேசுவரன் திருவடிகளைக் கிட்டப் பெறுவது என்றோ? என்கின்றாள்.

'மான் ஏய் நோக்கு நல்லீர்!' என்பதற்கு, ''நான் திருவல்லவாழிலே போய்ப்புகுமபடி உங்கள் கண்களாலே குளிர நோக்கித் திருவருள் புரியவேணும் என்கின்றாள்'' என்று பிள்ளான் பணிப்பர். 'மெலிய' என்கின்ற வினையெச்சம் ஒரு வினையிலே அந்வயிக்க வேண்டும்; 'வானார்' என்ற விடத்து 'ஆர்' என்ற வினையிலே அந்வயிக்கவுமாம. 'உறையும்' என்ற வினையிலே அந்வயிக்கவுமாம் முந்தைய தில் 'நான் மெலிவதற்காகவே கமுகுகள் ஆகாசத்தளவும் ஓங்கியிருக்கின்றன என்கின்றாள்' என்றும், பின்னையதில் 'நான் மெலிவதற்காகவே அவன் திருவல்லவாழிலே உறை கின்றான் என்கின்றாள்' என்றும் பொருள்படும்.

வண்கமுகு : 'தலையார்ந்த பழுக்காயும் பசுங்காயும் பாளை முத்தும், தலை ஆர்ந்த இளங்கமுகு' என்னுமாப் போலே இருத்தல்; அன்றிக்கே கொடி தொடரவேண்டாதே

தானே கொடிக்கு உடம்பு கொடுத்து நிற்கின்ற ஔதார்யம் எனலுமாம். மெய்யே கொடுக்கும் ஔதார்யம் அன்றோ இது?

**'மது மல்லிகை கமழும்'** : மதுவையுடைத்தான மல்லிகையின் பரிமளம் இவள் இருந்த இடத்திலே வந்து அலை எறிதலின் 'மல்லிகை கமழும்' என்கின்றாள், மலட்டுக் கொடியாக இராமல் பூகத்தோடே அணைந்து பரப்பும் பூவாயிருத்தலின், 'மது மல்லிகை' என்கின்றாள். இதற்கு முன்பு சொன்னவையெல்லாம் (கமுகு, மல்லிகை) ஆஸ்ரய மாத்திரமேயாய்த் (ஆஸ்ரயம் - இடம்) தேனே மிக்கிருத்தலின் 'தேனார் சோலைகள்' என்கின்றாள். ஆக, வானார் வண்கமுகுகள் தேன் வெள்ளத்திலே அலைந்து, பிரளய காலத்தில் மார்க்கண்டன் பட்டனவெல்லாம் படாநின்றன என்றபடி. இருவரும் கூட இருந்து மதுபானம் பண்ணிக் களிக்க வேண்டியிருக்க, நான் மெலியத் தாமே மதுபானம் பண்ணி வாழ்கின்றவர் என்பாள், தேன்வெள்ளமிடுகின்ற சோலைகள் சூழ்ந்த திருவல்லவாழ் உறையும் கோனாரை' என்கின்றாள்.

''இவர் இவ்வாற்றாமையோடு இருந்து கவிபாடுகிறது, உள்ளே நிற்கின்றவனைப் போன்று இவையும் இனிய பொருளாக இருக்கையால் அன்றோ? மனத்தினை உள்முகமாக்கி அநுபவிக்கமாட்டதார்க்கு, தன்னை அவர்கள் கண்களுக்கு இலக்காக்கிக் கொண்டு உபாய வஸ்து நிற்கிறாப் போலே காணும் இவையும். யாவர்க்கும் தொழுகுலமான சர்வேசுவரனுடைய உபாய பாவத்தில் நிலை போலே நித்தியப் பிராப்பியனாகக் (அடையத்தக்கவனாகக்) கொண்டு அங்கே இருக்கின்றவன், அடியார்கள் உகந்தது ஒரு பொருளைத் திருமேனியாகக் கொண்டு முகம் கொடுத்துக் கொண்டு நிற்பதுபோலே அங்குள்ளாரும் இங்கே போந்து தாவரங்களாயும் ஜங்கமங்களாயும் விலங்குகளாயும் அவனை

விடமாட்டாதே நிற்கிறபடி நித்தியரும் முக்தரும் சம்சாரி களில் ருசியுடையாரும் உகந்தருளின நிலங்களைப் பற்றி யன்றோ கிடப்பது?"—என்ற ஈட்டுப் பகுதி சுவைத்துச் சிந்திக்கத்தக்கது.

'இருவராய்க் கொண்டு பரிமாற வேண்டிய தேசத்திலே தனியே நிற்கின்றான் காண்' என்பாள் 'தேனார் சோலைகள் சூழ் திருவல்லவாழ் உறையும் கோனாரை' என்கின்றாள். "அவதாரங்கள்போல் தீர்த்தம் பிரசாதித் தொழியாது தங்கியிருத்தலின் 'உறையும் கோனாரை' என்கின்றாள். அவனைச் சொல்லும்போது தம்மையிட்டல்லது சொல்லப் போகாது: தம்மைச் சொல்லும் போதும் அவனை இட்டல்லது சொல்லப் போகாது. 'கோனாரை' என்ற இடம் நாராயண சப்தார்த்தம்; 'அடியேன்' என்ற இடம் பிரணவார்த்தம். பிரணவம், ஜீவப்பிரதானம்; நாராயண பதம், ஈசுவரப் பிரதானம். 'அடியேன் கூடுவது என்று கொலோ' என்ற இடம், நான்காம் வேற்றுமையின் பொருள் (சதுர்த்தி). 'என்று கொலோ?' என்று பிரார்த்தனையோடு தலைக்கட்டுகின்றதன்றோ?"—என்பது ஈடு.

'கோனாரை அடியேன்'—நாயகன் தைரியத்தையுடைய நாயகன்; இவள் தைரியம் இல்லாதவள். 'அடியேன்' கூடுவது என்று கொலோ?' : சொருபத்திற்குத் தகுதியாக வேற்றுமை யின் பொருளோடே தலைக்கட்டுகிறபடி. எல்லா அளவிலும் சொருபம் அழியாதன்றோ? தாமாகவுமாம், பிராட்டிமார் தசையை அடைந்தவராகுமாம், அதற்கும் அவ்வருகே சில அவஸ்தைகளை (நிலைகளை)யுடையவராகவுமாம்; எல்லாக் காலங்களிலும் சொருபம் மாறாது பிண்டத்துவ, கடத்துவ, கபாலத்துவ, சூர்ணத்துவங்களாகின்ற நிலை வேறுபாடுகளை அடைந்தாலும், மண்ணான வடிவுக்கு

அழிவில்லையன்றோ?[11] தாமான தன்மையில் 'அடிதொழுது எழு' (திருவாய் 1.1 : 1) என்பர்; பரோபதேசத்தில் 'திண்கழல்சேர்' (1.2 : 10) என்பர்; தூதுவிடப் புக்கால் 'திருவடிக்கீழ்க் குற்றேவல்' (1.4 : 2) என்பர்; பிறரைச் சொல்லப்புக்கால், 'தாட்பட்ட தண்துழாய்த் தாமம் காமுற்றாயே' (2.1 : 2) என்பர்; கலங்கி மடல் எடுக்கு மளவானாலும், 'தலையில் வணங்கவுமாங்கொலோ' (5.3 : 7) என்பர்; பித்தேறிச் சொல்லும் போதும் 'கண்ணன் கழல்கள் விரும்புமே' (4.4 : 8) என்னுதல் 'ஏறியபித்தினோடு எல்லா உலகும் கண்ணன் படைப்பு' (4.4 : 7) என்னுதல் சொல்வார் இத்தனை.

7. 'மின்னிடை மடவார்கள்' (6.2) : பிரதிவாதி பயங்கரம் அண்ணங்காசாரிய சுவாமிகள் தமது திவ்வியார்த்த தீபிகையில் இந்தத் திருவாய்மொழியின் அவதாரிகையில் கூறுவது : ஆழ்வாரின் தன்மை பல வகைப்பட்டிருக்கும். இந்தத் திருவாய்மொழியின் தன்மை மிகச் சிறப்பாக இருக்கும், 'என்றும் ஒரு நாள் ஒழியாமை யானிரந்தால் ஒன்றும் இரங்கார் உருக்காட்டார்' ( ) என்றும், 'ஒரு நாள் காணவாராயே' (8.5:1) என்றும் இங்ஙனே பலகாலும் கூப்பிடா நின்ற ஆழ்வாருக்கு இப்பொழுது உண்டான நிலைமை மிக வேறு பட்டிரா நின்றது. எம்பெருமான் வந்து நிற்க, ''இங்கே எதுக்கு வந்தாய்? உனது அந்தரங்க விருப்பத்திற்கு இலக்கானவர்கள் பக்கலிலே எழுந்தருளலாம்; இங்கே என்ன காரியமிருக்கின்றது? கடுகச் செல்வாயாக'' என்று கதவடைத்துத் தள்ளுபடியாயிருக்கின்றது இத்திருமொழி. வடமொழியில் 'பிரணயகலகம்' என்றும், தென்மொழியில் 'ஊடல்' என்றும் சொல்லப்படுவது இது. தம்பதிகள் பரிமாறா நின்றால் இங்ஙனம் 'பிரணய கலகம்' நிகழ்ந்தே தீரும.

11. பண்டம் - மண்தொகுதி. கடம் - குடம். கபாலம் - ஓடு. சூர்ணம் - தூள்.

கீழ்த் திருவாய்மொழியில் (6.1) ஆழ்வார் எம்பெரு மானுடைய பிரிவுக்கு ஆற்றமாட்டாது தூதுவிட்டார். அந்த வருத்தத்தை அறிந்த எம்பெருமான் ஆனைக்கு உதவ வந்தாப்போலே அரை குலையத் தலை குலைய ஓடிவந்து ஆழ்வாருக்குக் காட்சி தரப் பார்த்தான்; இந்நிலையில் ஆழ்வார் பிரணயரோஷம் (ஊடல்) தலையெடுக்கப் பெற்று. 'சுவாமி, இங்கே உமக்குப் பணி இல்லை; பணி போருமிடத்தே எழுந்தருளீர்'' என்று கதவடைத்துத் தள்ளு கின்றார் இத்திருவாய் மொழியில். கிருஷ்ணாவதாரத்தில் கண்ணபிரானோடு பரிமாறிய கோபியர் இங்ஙனே பிரண யரோஷத்தாலே ஊடல் செய்ததுண்டு. அவர்களுடைய பாவனை உறவே இப்போது ஆழ்வாருக்கு ஆகி அவ்வநு காரமே முற்றியிருக்கின்றது. பெருமாள் திருமொழியில் 'ஏர் மலர்ப்பூங்குழல்' (6) என்கின்ற திருமொழியும் பெரிய திரு மொழியில் 'காதில் கடிப்பிட்டு' (10 8) என்கின்ற திருமொழி யும் இந்த நடையில் அவதரித்தவையாகும்.

மின்னிடை மடவார்கள் நின்னருள் சூடுவார்
முன்புநா னதஞ்சுவன்
மன்னுடை இலங்கை யரண்காய்ந்த மாயவனே!
உன்னுடைய சுண்டாயம் நானறி வன்;இனி
யதுகொண்டு செய்வதென்
என்னுடைய பந்தும் கழலும் தந்துபோகு நம்பீ! (1)

[மின்இடை - மின்னற்கொடி போன்ற இடையை யுடைய; அருள் - கிருபை; சூடுவார் - அநுபவிப் பார்; முன்பு - முன்னிலையில்; மன் - அரசன்; அரண் - கோட்டை; காய்ந்த - சிறியழித்த; சுண் டாயம் - தீம்பு; கழல் - அம்மனைக் காய்; போகு - ஏகு]

என்பது முதல் பாசுரம்.

மின்னிடை மடவார்கள் : இப்பாசுரத்தில் 'என்னுடைய பந்தும் கழலும் தந்து போகு நம்பீ!' என்று இருப்பதால் பந்தும் கழலுமான சில விளையாட்டுப் பொருள்கள் (லீலோபகரணங்கள்) எம்பெருமான் கையில் இருப்பதாகவும் அவற்றைப் பராங்குச நாயகி விரும்புவதாகவும் தெரிகின்றது. பந்தும் கழலும் எம்பெருமான் கையில் இருக்கக் காரணம் என்? என்னில் : இதற்கு முன்னே இவளும் தானுமாகக் காதல் விளையாட்டுகள் (லீலைகள்) செய்து கொண்டிருந்தார்கள். அப்படியிருக்கையில் எம்பெருமான் திடீரென்று பிரிந்து போனான். போனவன் சிறிது காலம் கழித்து மீண்டு வந்து நின்றான். அப்போது நாயகிக்கு ஊடல் (பிரணய ரோஷம்) தலையெடுத்திருந்ததனால் பேசாதே கிடந்தாள். எப்படியாவது இவளைப் பேசச் செய்ய வேண்டுமென்று கருதிய அவன் பல விதமான சேஷ்டிதங்கள் செய்து பார்த்தும் ஒன்றும் பலிக்கவில்லை. ஆதலால் விளையாடுவதற்காகக் கீழே வைத்திருந்த பந்து கழல்களை எடுத்துக் கொண்டு அவற்றிலே அளவு கடந்த ஆசை (அபிநிவேசம்) காட்டினான். ''பந்தே! நாயகிதான் பேசாவிட்டாலும் நீயாவது என்னிடம் பேசுவாயன்றோ? கழலே! நாயகியின் கழல் எனக்குக் கிடைக்காவிட்டாலும், நீயாவது கிடைத்தாயன்றோ?' என்று இப்படிப் பலவும் சொல்லித் தன்னுடைய அளவு கடந்தை காதலை (வியாமோகாதிசயத்தை) வெளிக்காட்டத் தொடங்கினான்; அப்போது நாயகி பேசாதிருக்க முடியாமல் பேசத் தொடங்கி இங்ஙனே கூறுகின்றாள் என்கை.

பராங்குச நாயகியை நோக்கி 'மின்னல் போலே இதொருநுண்ணிய இடையழகு இருந்தபடி என்!' என்று வருணித்துப் பேசினான் பெருமான். 'இதுகாறும் நம்மை மதியாதே இதரப் பெண்களுடன் கலந்து போந்த இவர் இப்போது இங்கே வந்து நம்மை வருணிப்பது நன்றாயிருக்

கின்றது!' என்று சீறி 'மின்னிடை மடவார் நானல்லேன்; நின்னருள் சூடும் மின்னிடை மடவார் வேறேயுண்டு' என் கின்றாள்.

'முன்புநான் அதஞ்சுவன்!' 'நீ இங்கே வந்து செய்கின்ற ஊடல்நீக்கும் சாகசங்கள் உன்னுடைய மின்னிடை மடவார் கட்குத் தெரிந்தால், அவர்கள் உன்னை மாத்திரம் தண்டி யாமல் என்னையும் சேர்த்துத் தண்டிப்பர்களே என்று அஞ்சு கின்றேன்.' இப்படியும் கருதலாம். இன்னும் பலவிதமாகவும் கருத்து உரைக்கலாம்.

'மன்னுடை இலங்கை அரண்காய்ந்த மாயவனே': இங்கு 'மாயவனே!' என்பது உயிரான விளி. 'உண்ணாது உறங்காது ஒலிகடலை ஊடறுத்துப் பெண்ணாக்கை யாப்புண்டு' (திரு. விருத். 66) என்று பெண் பிறந்தார் சொல்லும்படி சீதாப் பிராட்டிக்காக நீ செய்த செயலும் - இப்படி ஒரு செயல் செய்து பெண்களுக்குக் காரியம் செய்பவன் போலப்' புகழ் ஈட்டிப் பெண்களை வலையில் அகப்படுத்திக் கொண்டு துடிக்க விடுதற்காகச் செய்த செயலேயாதலால் அதுவும் மாயமேயாகும். இங்கு ஈட்டின் ஸ்ரீசூக்தி : ''ஒரு துறையிலே ஒரு மெய் பரிமாறாவிடில் நமக்கு மேலுள்ளதெல்லாம் ஒரு தொகையில் அகப்படாது என்று செய்தாயத்தனையன்றோ? அபலைகளை அகப்படுத்திக் கொள்ள இட்டவழியன்றோ?''

'உன்னுடைய சுண்டாயம் நான் அறிவேன்' : சுண்டாய மாவது, தன்காரியத்தில் நோக்குடைமை (ஸ்வார்த்த பரத் வம்). நீசெய்கின்ற காரியமெல்லாம் உன்னுடைய செயல்கள் எல்லாம் பண்டே என்னால் அறியப்பட்டவைகாண். நீ செய் கின்றவையெல்லாம் 'மெய்' என்று நினைப்பவள் சனக ராசன் திருமகள்காண். நான் அறிந்தாலென்ன? அறியா விடில் என்ன? இனி உனக்கும் எனக்கும் ஏதேனும் ஒரு

தொடர்பு வைத்துக் கொள்வதாக இருந்தாலன்றோ இந்த விசாரம் என்னும் கருத்துத் தோன்ற 'இனி அது கொண்டு செய்வதென்?' என்கின்றாள்.

ஆகில் 'நான் போகிறேன்' என்று பந்துகழல்களோடு போகப் புறப்பட்டான்; போனால்போகிறான் என்று இருக்க வல்லளோ இவள்? 'ஆகிலும் கொடிய என் நெஞ்சம் அவன் என்றே கிடக்கும் எல்லே' (   ) என்கின்றவளாகை யாலே விடமாட்டாதே மீண்டும் வார்த்தைக்கு இடம் வைக் கிறாள். 'என்னுடைய பந்தும் கழலும் தந்து போகு நம்பீ என்று- இவை உன்னுடையவை எப்படி? என்னுடையவையே என்று அவன் பிணக்குச் செய்ய இடம் தந்தபடி.

8. 'வெள்ளைச் சுரிசங்கொடு' (7.3) கீழ்த் திருவாய் மொழியில் (7.2) பெரிய பெருமாளுடைய திருக்குணங்களை யும் வடிவழகு முதலானவற்றையும் பராங்குச நாயகியான தான் வாய்வெருவியும் திருத்தாயார் சொல்லக் கேட்டும் சிறிது தரிக்கும் நிலை ஏற்பட்டது. மோகமும் தெளிந்தது. பின்பு பிரிவின் வியசனமும் நினைக்க வல்லளாய், 'அவனைக் கிட்டியல்லது நில்லேன்' என்னும் ஆற்றாமை பிறந்து இவள் விடாய்க்கு ஈடாகும்படி தென்திருப்பேரெயிலில் வீற்றிருந்த மகர நெடுங்குழைக்காதனுடைய புன்சிரிப்பு கடைக்கண் நோக்கு முதலியவற்றால் கவரப்பட்டவளாய் 'அவன் இருந்த இடத்து ஏறப் போகவேணும்' என்று புறப்பட, பழைய படியே தோழிமாரும் தாய்மாரும் அவளைச் சூழப் போந்து 'உனக்கு இத்துணை அளவு கடந்த ஈடுபாடு (பிராவண்யம்) ஆகாது. நமக்கு இது பழியாய் விளையும்' என்று சொல்ல, 'நீங்கள் தடை சொல்லுகிறவற்றால் ஒரு பயனும் உண்டாகமாட்டாது; நான் மகரநெடுங்குழைக் காதனாலே நெஞ்சு பறியுண்டேன்; ஆதலால் நானே போன தாக ஏற்படாமல் நீங்கள் என்னோடு உடன்பட்டு அங்கே

கொண்டு போய்ச் சேர்க்கப் பாருங்கள்' என்று பராங்குச நாயகி தனக்குப் பிறந்த துணிவை அவளுக்கு அறிவித்துச் சொல்லுகிறதாகச் செல்லுகின்றது இத்திருவாய்மொழி.

இதன் முதல் பாசுரத்தில் பாரங்குச நாயகி தனது உள்ளத்தினுள்ளே ஒரு பெரிய திருவடித் திருநாள் நடந்து செல்லுகிற படியைப் பேசி, தென்திருப்பேரையிலே போக வேண்டுமென்று தனக்குப் பிறந்த துணிவைத் தாய்மாரிடம் கூறுகின்றாள்.

சேர்வன்சென்று என்னுடைத் தோழி மீர்காள்!
அன்னையர் காள்!என்னைத் தேற்ற வேண்டா;
நீர்கள்உ ரைக்கின்றது என்னி தற்கு?
நெஞ்சும் நிறைவும் எனக்குஇங்கு இல்லை.
கார்வண்ணன் கார்க்கடல் ஞாலம் உண்ட!
கண்ண பிரான்வந்து வீற்றிருந்த
ஏர்வள ஒண்கழ னிப்பழ னத்
தென்திருப் பேரையின் மாநக ரே (9)

[நிறைவு - அடக்கம்; கார்வண்ணன் - நீலவண்ணன்;
ஞாலம் - உலகம்]

என்பது ஒன்பதாம் பாசுரம். இதற்கு முன்னுள்ள பாசுரத்தில் 'தென்திருப் பேரெயில் சென்றுசேர்வன்'என்று கூறின தலைமகளை நோக்கித் தோழிமாரும் தாய்மாரும் 'இங்ஙனே பதற வேண்டுமோ? அப்பெருமானே இங்கு உடன் எழுந்தருள்வன் காண்; நீ புறப்பட்டுச் செல்லுகை யுக்தமன்று' என்று கூற, அதற்கு, 'நீங்கள் என்னையொன்றும் தேற்ற வேண்டா; போகைக்கு நீங்கள் சொல்லுகிற விரோதமென்? போனால் என்ன விரோதம் விளையும்?' என்று இவள் சொல்ல, அவனுடைய அழகு, எளிமை முதலான திருக் குணங்களாலே என்னுடைய துணிவு சாதுரியம் முதலான வைகள் அபகரிக்கப்பட்டுப் போயினவாதலால் உங்கள்சொற்

கேட்பதில் நான் இல்லை; என்னுடன் கலப்பதற்காக அவன் வந்து எழுந்தருளியிருக்கும் தென் திருப்பேரெயில் சென்று சேர்வேன், காண்மின்' என்கின்றாள்.

முன்பாசுரத்தில் (8) 'சேர்வன் சென்று' என்று கூறினதையே திரும்பக் கூறுகையாலே தோழிமாரும் தாய்மாரும் அதனை மறுத்துக் கூறினமை புலப்படும். 'தோழிமீர்காள்! அன்னை மீர்காள்!' என்றது, அவமதித்துச் சொல்லுகிறபடி. 'நீங்கள் எனக்குத் தோழிமாராகவும் தாய்மாராகவும் வாய்த்தது அழகாயிருந்தது! இதுவோ நீங்கள் எனக்குப் பிரியமும் இதமும் பார்ப்பது என்று மறுக்கின்றபடி. அறிவில்லாத மாக்களோ ஞானிகளை உபதேசத்தால் மீட்கப் பார்ப்பார்? விஷயம் காரணமாக வருகின்றதனைச் சாதனத்தில் செலவு எழுதுகின்றவர்களோ எனக்கு வார்த்தை சொல்லுவார்? இவள், தன்னை மறந்து அவனையே பார்த்துப் பேசுகின்றாள்; அவர்கள் அவனைமறந்து, தங்கள் தங்களையே பார்த்து மீட்கத் தேடுகின்றார்கள். இதற்கு நீங்கள் உரைக்கின்றது என்: கலங்கினாரோ தெளிந்தாரைத் தேற்றுவார்? நீங்கள் நிற்கின்ற நிலை எது? என் நிலை எது? போகையிலே துணிந்திருக்கின்ற என்னை 'புறப்படுகை பழி' என்று இருக்கின்ற நீங்கள் சொல்லுவது என்?

'அம்மா, நெஞ்சு இங்கில்லை என்றாயே, நெஞ்சு இல்லையாகில் இந்த வார்த்தை தானும் நீ சொல்ல முடியாதென்றோ? எங்களைக் கண்டித்து நீ இங்ஙனம் பல வார்த்தைகள் சொல்லுவதற்கு நெஞ்சு உடனிருந்துதானே ஆக வேண்டும்' என்று அவர்கள் சொல்ல, 'நிறைவு எனக்கு இல்லை' என்கின்றாள். 'நெஞ்சும் நிறையும் அவன் பக்கலின். நிறைவு-அடக்கம்; நெஞ்சு-அது இட்டு வைக்கும் கலம். உங்களோடு பேசுவதற்குரிய நெஞ்சு வேறு; உங்கள் பேச்சைக் கேட்பதற்குரிய நெஞ்சு வேறு. பேசுகைக்குரிய

நெஞ்சு இருந்தாலும் உங்கள் பேச்சைக் கேட்கைக்குரிய நெஞ்சு இல்லை காண்மின்' என்கின்றாள் என்றுங் கொள்ளலாம்.

நெஞ்சும் நிறையும் போனவிடம் சொல்லப்படுகின்றது பின்னிரண்டடிகளில், கார்வண்ணன் என்பதற்கு நம்பிள்ளை ஈடு : ''தாய்மார் தோழிமார் ஆனவர்கள் வார்த்தை கேளாதபடியாம் வடிவு படைத்தவன்'' என்று. 'அப் பெருமானின் திருமேனி நிறத்தில் நான் ஈடுபட்டவளாத லால் உங்கள் பேச்சைக் கேட்கமாட்டேன்' என்றவாறு. வெறும் வடிவழகு மாத்திரமேயல்ல; ஆபத்து ஏற்பட்டால் இரட்சித்துவிடுபவன் என்கின்றது 'கார்க்கடல் ஞாலம் உண்ட' என்பதனால்,

'இப்படிப்பட்ட எம்பெருமான் தன் பெருமையெல்லாம் தோற்ற வந்து எழுந்தருளியிருக்கும் இடமான நீர்வளம், நிலவளம் மிக்க திருப்பேரெயிலாகின்ற மாநகரிலே சென்று சேர்வேன்; உங்கள் தடைக்கு மீளமாட்டேன்;அவ்வழியிலும் நிற்கமாட்டேன்' என்கின்றாள்.

**9. ஏழையர் ஆவி** (7:7) : முன் திருவாய்மொழியில் (7.6) ஆழ்வார் கூப்பிட்ட கூப்பீடு பரமபதத்தளவும் சென்று பரவாசுதேவனுடைய திருச் செவியில் விழுந்திருக்கும். அது கேட்ட அப்பெருமான் ஆழ்வாரை ஒருவாறு தேற்றுவிக்க உருவெளிப்பாடு தோன்றச் செய்தருளினன். அதாவது அவனது திவ்விய அவயவங்களை மாநச சாட்சாத்கார மாகக் (மனத்தில் நேர்காட்சியாகக்) காணப்பெற்றார். கண்ணுக்கு நேராகத் தோன்றாமல், நெஞ்சுக்கு மாத்திரம் பொருளாதல் உருவெளிப்பாடு என்பது. அஃது இத் திருவாய்மொழியில் நடைபெறுகின்றது.

ஐந்தாம் பத்தில் 'எங்ஙனேயோ அன்னை மீர்கள்' (5.5) என்கின்ற திருக்குறுங்குடிபற்றிய திருவாய்மொழியும்

உருவெளிப்பாடாய்ச் சென்றது. அதைவிட இத்திருவாய் மொழிக்கு வாசி என் எனில்; அங்குப் பிரீதியும் பிரீதி இன்மையும் சமமாக இருக்கும்; இங்குப் பிரீதியின்மை தலை யெடுத்திருக்கும். தொடங்கும்போதே 'இணைக்கூற்றங் கொலோ?' என்கையாலே இங்குத் தீங்கு செய்வதில் (சாயுகத்வத்தின் உறைப்பு) உறைப்பு தெரியவரும்.

ஏழையர் ஆவிஉண்ணும்
இணைக்கூற்றங் கொலோஅறியேன்!
ஆழியங் கண்ணபிரான்
திருக்கண்கள் கொலோஅறியேன்!
சூழவும் தாமரைநான்மலர்
போல்வந்து தோன்றும்கண்டீர்
தோழியர்காள்! அன்னைமீர்
என்செய்கேன் துயராட்டியேனே(1)

[ஏழையர்—பெண்பிறந்தார்; ஆவி—உயிர்; இணை—இரண்டு; ஆழிஅம் கண்ணன்—கடல் வண்ணனான கண்ணபிரான்: சூழவும்—நாற்புறமும்; நான்மலர்—அன்றலர்ந்த மலர்; துயராட்டி—துயருறுகின்ற நான்]

என்பது முதல் பாசுரம். இதில் எம்பெருமானுடைய திருக்கண்ணின் அழகு வந்து தன்னை நலிகின்ற படியைப் பேசுகின்றாள் பராங்குசநாயகி. 'கரியவாகிப் புடைபரந்து செவ்வரியோடி நீண்ட அப் பெரியவாய கண்கள் என்னைப் பேதமை செய்தனவே' (அமலனாதி-8) என்று திருப்பாணாழ்வாரைத் துடிக்கப் பண்ணின திருக்கண்கள் தம்மையும் துடிக்கப் பண்ணுகிறபடியைச் சொல்லுகின்றாள். திருவிருத்தத்தில் 'பெருங்கேழலார் தம்பெருங்கண் கண்மலர்ப் புண்டரீகம் நம்மேல், ஒருங்கே பிறழவைத்தார்' (45) என்றருளிச் செய்தபடி இவரை முதன் முதலாக

விஷயீகரித்தவை திருக்கண்களே யாதலால் அந்த உறவு கொண்டு அவை முதலிலே வந்து தோன்றினபோலும். 'பெண்களின் உயிரைக் கொள்ளை கொள்ளுகின்ற இரண்டு யமன்களோ இவை?' என்று சொல்லுவானேன்? உகந்து அநுபவிக்கலாகாதோ என்னில்: அவயவியான அப் பெருமான் தானே நேராக வந்து தோன்றினானாகில் உகந்து அநுபவிக்கலாம்; அப்படி இல்லையே. அவன்தான் ஒரு விநோதம் செய்வான்போன்று தனது திவ்விய அவயவங் களைத் தனித்தனியே போகவிட்டுக் கூத்துப்பார்க்கின்றானா கையாலே, உகப்பிற்கு இடம் இன்றி நலிவுக்கே இடம் ஆயிற்று; அதனால் 'ஏழையார் ஆவி உண்ணும் இணைக் கூற்றம் கொலே!' என்று அலறிப் பேசுகின்றாள் ஆழ்வார் நாயகி. ஏழையர் என்பது பெண்களுக்குப் பொதுவான பெயர்.

**ஆழியங் கண்ணபிரன் திருக்கண்கள் கொலோ? :** எம்பெருமானுடைய திருக்கண்களே இவை என்று ஆழ்வார் நாயகி அறியாமல் இல்லை; அது முந்துற முன்னம் தெரிந் திருக்கச் செய்தேயும் 'ஏழையராவி உண்ணும் இணைக் கூற்றங் கொலோ' என்பதும், 'திருக்கண்கள் கொலோ அறியேன்' என்பதும் அத்திருக்கண்கள் தரும் துன்பத்தைச் சொல்லுவிக்கும் பாசுரமாயிற்று, 'உயிர்க் கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக் கண்ணன் (பெரி.திரு 7.1.9) என்று கேட்டிருக்க 'அந்தோ! இப்படிக் கொலை செய்யும் கண்களாவதே!' என்று திருவுள்ளம் நொந்து சொல்லு கின்றாள்.

இத்திருக்கண்களுக்குத் தப்பிப் பிழைக்கலாகாதோ என்ன; ''ஐயோ! அவை ஏதேனும் ஒரு பக்கத்தில் தோன்றி னால் வேறு பக்கம் நோக்கி உய்யலாமே; அப்படியின்றி

மூலபலத்தினன்று பார்த்த பார்த்தவிடம் எல்லாம்[12] பெருமாளே யானாற்போல, எந்தப் பக்கமாகத் திரும்பி நின்றாலும் இவையேயாய் வேறொரு பொருள் தோன்றாத படியாயிற்றே; தோழிமார்களே! அன்னைமார்களே! உங்களுடைய இம்சைக்கு நான் ஆற்று வேனா? இத்திருக் கண்களின் இம்சைக்கு ஆற்றுவேனா? என்ன செய்வேன்? சொல்லுங்கள்'' என்கின்றாள்.

அடுத்துவரும் பாசுரங்களில் முறையே மூக்கழகு நலிதல் (2), திருப்பவளத்தின் அழகு நலிதல் (3), திருப்புருவத்தின் அழகு நலிதல் (4), புன்முறுவலின் அழகு நலிதல் (5), திருமகரகுண்டலங்களும் திருக்காதுகளும் நலிதல் (6) திருநெற்றியின் அழகு நலிதல் (7), இந்த ஏழு அங்கங்களும் அடங்கிய திருமுகமண்டலம் நலிதல் (8), திருக்குழல் கற்றையின் அழகு நலிதல் (9) திருவபிடேகத்தின் (கிரீடத்தின்) அழகு நலிதல் (10) அற்புதமாக பேசப் பெறு கின்றன. இதனை உரைநோக்கி அறிந்து அநுபவிக்க வேண்டும்.

10. 'நங்கள் வரிவளை' (8. 2); எம்பெருமான் ஆழ்வாருக்கு முகக்காட்டாமைக்குக் காரணம் தம் பக்கல் இன்னும் சம்சார ருசி இருக்குமோ என ஐயுறுகின்றார். இல்லையானால் எம்பெருமான் தம்மைப் புறக்கணிப்பதற்குக் காரணம் இல்லையே என்று கருது கின்றார். 'உள்ளுவார் உள்ளிற்றெல்லாம் உடனிருந்து அறியும்' (திருமாலை - 34) சர்வேசுவரனுடைய திருவுள்ள மறிய தமக்குச் சம்சார ருசி இருக்கின்றது போலும். இல்லை யாகில் அவன்தம்மைப் புறக்கணிப்பதற்குக் காரணம் இல்லை

12. கம்ப. யுத்த. மூலபலம் வதை, (காந்தர்வாத் திரத்தின் செயலால் நிகழ்ந்தது). செய், 182. திருவிருத். 39 ஐயும் காண்க. மிகப் பொருத்தமாக உள்ளது இப்பாசுரம்.

யன்றோ? புறக்கணிக்கக் காண்கின்றோமாதலால் தமக்குச் சம்சார ருசி இன்னும் அறவில்லை என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றியிருக்கக்கூடும். எல்லாம் அறிந்த அவன் அங்ஙனம் திருவுள்ளம்பற்றினால் அது பொய்யாக இருக்க முடியாதே தம்மையும் அறியாமல் சம்சார ருசி உள்ளத்திலே உறைகின்றதோ என்ற ஐயம் உண்டாயிற்று. இதனால் ஆதமாத்மீயங்களில் தாம் நசையற்ற படியை எம் திருவுள்ளத்தில் படுத்தநினைக்கின்றார். பிராப்பியதிற்குத் தடையாகவுள்ள கிளி முதலானவற்றிலும் பிராபகத்திற்குத் தடையாகவுள்வர்களான தாயார் முதலானோரிடத்திலும் தமக்கு ருசி இல்லாமையை அந்யாபதேசத்தாலே[13] அருளிச் செய்கின்றார் இத்திருவாய்மொழியில். 'காலம் பல சென்றும் காண்பது ஆணை; உங்களோடு எங்கள் இடை இல்லையே' (7) என்றும், 'பாதம் அடைவதன் பாசத்தாலே மற்றவன்பாசங்கள் முற்ற விட்டு' (11) என்றும் உள்ள பாசுரங்கள் இத்திருவாய் மொழிக்கு உயிரானவை.

இத்திருவாய்மொழியில் அந்யாபதேசப் பிரகாரம் இருக்கிறபடி என்? என்னில்: சர்வேசுவரனோடு கலந்து பிரிந்தாள் ஒரு பிராட்டி. மறுபடியும் அவன் தானே வரக் கண்டிருக்கை தவிர்ந்து தானே புறப்படுவாளாய் அவனிருந்த தேசத்து ஏறப்போவதாக முயல, இது கண்ட தோழிமார் முதலானோர் 'படிகடந்து செல்வது உனக்கு ஆகாது காண்' என்று இதம் சொல்லி மீட்கப் பார்க்க, அவர்களைக் குறித்து, தோழிமார் தொடக்கமானவர்களிலும் மற்றும் உள்ளவர்களிலும் நசை இல்லாமையை அவர்களுக்கு அறிவிக்கின்ற பாசுரத்தாலே தமக்கு நசை இல்லாமையைச் சொல்லி அவர்களது பேச்சுக்கு இணங்க முடியாமையைத் தெரிவிப்பதாக அமைகின்றது இத்திருவாய்மொழி.

---

13. அந்யாபதேசம் - வேறு ஒரு வகையாலே

தலைமகள் மேனி மெலிந்து வாடிக்கிடக்கின்ற நிலையைக் கண்ட தோழியர் "நீ இப்படி மாறுபட்டமைக்குக் காரணம் என்ன? சொல்லாய்" என்ன, இவள் நாணத்தால் ஒன்றும் சொல்லாதிருக்க, "நங்காய், உகவாத பிறர்க்கன்றோ நாணப்பட வேண்டுவது? எங்களுக்குக் கூடவா நாணப் படுவது? உனது உள்ளத்திலுள்ளதை உள்ளபடி சொல்ல லாகாதோ?" என்று தோழியர் வற்புறுத்திக் கேட்க, "பிறர்க்கு மறைத்து உங்கட்குச் சொல்லக்கூடிய வார்த்தை ஒன்றும் எனக்குத் தோன்றவில்லையே; எனது நிலைமையை நீங்கள் கண்ணால் காண்கின்றீர்கள் அன்றோ? திருவேங்கட முடையானைச் சென்று சேவித்துவருவோம் என்று நினைத்த அளவிலே இந்நிலை எய்தினேன் காண்மின்" என்று அவர்கட்குமறு மாற்றம் உரைப்பதாகவுள்ளது முதற் பாசுரம் (1). ஒவ்வொருபாசுரத்தையும் உரை நோக்கி அநுபவிக்க வேண்டும். விரிவஞ்சி இத்துடன் இப்பாசுரத்துடன் நிறுத்தப் பெறுகின்றது.

11. 'இன்னுயிர்ச் சேவலும்' (9. 5) : ஈட்டின் அவதாரி கையில் நம்பிள்ளை கூறுவது; "தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல் மாலைகள் சொன்னேன்" (9.4 9) என்று களித்தவர், தம்முடைய உயிரைப் பாதுகாப்பதற்குப் பறவைகளின் காலிலே விழும்படியாயிற்று. "தேவர்கட்கு எல்லாம், கருவாகிய கண்ணனைக் கண்டு கொண்டேனே" (9.4.7) என்னும்படி தெளிவு பிறந்தபோதே புறத்திலே காண வேண்டும் என்ற ஆசை பிறந்தது. 'இவர்க்கு இன்னம் விடாயைப் பிறப்பித்து முகம் காட்டவேண்டும்' என்று இவர் விருப்பத்தைச் சடக்கென முடித்திலன் இறைவன். நினைத்த போதே விரும்பியது பெறாமையாலே தளர்ந்தார்; தளர்ந் தவர் உலகப் பொருள்களிலே கண்வைத்தார். பரமவிரக்த ராக இருக்கும இவர் உலகப் பொருள்களில் கண்வைப்பான் என்? என்னில்; உலகப் பொருள்களை நினைக்கும்

நினைவா லேமனத்தினை வேறு ஒன்றில் செலுத்தித் தரிப் போம் என்ற நோக்கத்தாலே. அன்றியும், அவனுக்குப் போலியான பொருளைக் கண்டாயினும் தரிப்போம் என்று கண்வைத்தார் என்றும் கருதலாம்.

பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவிமலர் என்றும் காண்தோறும், பாவியேன்
மெல்ஆவி மெய்மிகவே பூரிக்கும் அவ்அவை
எல்லாம் பிரான்உருவே என்று. (பெரி.திருவந். 73)

என்பது இவர் அநுபவம் அல்லவா? ஆனால், அவை தரிப் புக்குக் காரணம் ஆகாமல் அவனுடைய நினைப்பினை ஊட்டுவனவாகத் துன்பினைத் தரப்புக்கனவற்றில் யாதாலும் ஒருபொருள் தோற்றினும் அப்பொருளின் உளதாம் தன்மை அவனையொழிய இல்லாமையாலே, அவனைக் காட்டிக் கொண்டே யன்றோ தோற்றுவது? ஆக, உலகத்துப் பொருள் கள் அவனை நினைப்பு ஊட்டுவனவாய் நலிய, அவற்றால் நோவு படுகின்றபடியை அந்யாபதேசத்தாலே பேசுகின்றார்.

இத்திருவாய்மொழி நாயகி சமாதியில் பெண் பேச்சாக நடை பெறுகின்றது. சோலைக்குச் சென்ற ஆழ்வார் நாயகியை அங்குள்ள குயில், மயில் முதலானவை அவனுடைய பேச்சையும் வடிவவையும் நினைப்பூட்டி நலிய, ‘இவை தாமாக நலிகின்றன அல்ல; நம்மை முடிக்க வேண்டு மென்று பார்த்த எம்பெருமானாலே ஏவப்பட்டு நலிக் கின்றன’ என்றெண்ணி, அப்பறவைகளை நோக்கி, ‘உங்களுக்கு என்னை நலிய நினைவாகில் இவ்வளவு பாரிப்பு வேண்டுமோ? என் உயிரை நானே கொடுக்கச் சித்தமாக இருக்கின்றேனே.’ என்று சொல்லியும் அவனுடைய திருக் குணங்களை ஒருவாறு நினைத்துத் தரித்தும் நடைபெறு கின்றது இத்திருவாய்மொழி.

இன்னுயிர்ச் சேவலும் நீரும்
கூவிக்கொண்டு இங்கெத்தனை
என்னுயிர் நோவ
மிழற்றேன்மின் குயிற்பேடைகாள்
என்னுயிர்க் கண்ணபிரானை
நீர்வரக் கூவுகிலிர்
என்னுயிர் கூவிக்கொடுப்பார்க்கும்
இத்தனை வேண்டுமோ?(1)

[சேவல் - ஆண்குயில்; நோவ - நோவும் படி; கூவுகிலீர் - அழைக்க மாட்டீர்கள்; இத்தனை - இவ்வளவு பாரிப்பு]

என்பது முதற் பாசுரம். அடுத்த பாசுரங்களில், அன்றிற் பேடைகள் (2,3), கோழிகள் (4), பூவைகள்(5) கிளிப்பைதல் கள் (6) மேகக் குழாங்கள்(7) வண்டு தும்பிகள்(8) நாரைத் திரள்கள்(10)-இவற்றை நோக்கிப் பேசுகின்றாள். பாசுரங்கள் யாவும் உரைநோக்கிப்படித்து இன்புறத்தக்கவை.

12. 'அறுக்கும் வினையாயின்' (9 8) : கீழ்த் திருவாய் மொழியில் (9.7) திருமூழிக்களத்து எம்பெருமான் பக்கல் தூதுவிட்டார்.'[14] தூது சென்றவர்கள் மீண்டுவந்து செய்தி சொல்லுமளவும் ஆற்றியிருக்க வேண்டுமே. ஆழ்வார் நாயகிக்கு அது முடியவில்லை. 'திருநாவாயிலே சென்று கிட்டுவோம்' என்று பார்த்தார். 'காலாழும் நெஞ்சு அழியும் கண் சுழலும்' (பெரி.திருவந்.34) என்ற நிலையிலிருக்கும் இவர் எங்ஙனம் திருநாவாய்க்குச் செல்வர்? அந்த மனோரதமே இத்திருவாய்மொழியாகப் பரிணமிக்கின்றது. "திருவடிசென்று பிராட்டியைத் திருவடி தொழுது மீண்ட பின்னர் பெருமாளைக் கிட்டுவதற்கு முன்பு பிராட்டிக்குப் பிறந்த மனோரதம் போலே கீழ் விட்ட தூதர் அத்தலைப்

14. மகள் பாசுரங்கள்—தூதுபற்றியவை என்றதலைப்பி லுள்ள கட்டுரை காண்க. (இயல்—11)

பட்டு அவனைக் கொண்டு வருவதற்கு முன்னே நடுவுஇவர்க்குப் பிறந்த மநோரதத்தைச் சொல்லுகின்றது''என்பது ஈடு.

பெரிய முதலியார் (ஆளவந்தார்) பேற்றினைப் பெறுவதில் உள்ள விரைவாலே எப்போதும் இத்திருவாய்மொழியினைச் சொல்லிக் கொண்டே இருப்பர். ஆகையாலே இத்திருவாய் மொழியினைப் 'பெரியார் முதலியார் திருவாய்மொழி' என்று வழங்கப்படுகின்றது.

**கண்டே களிக்கின் றதிங்**
**கென்று கொல் கண்கள்**
**தொண்டே யுனக்காய்**
**ஒழிந்தேன் துரிசின்றி**
**வண்டார் மலர்சோலைகள்**
**சூழ்திரு நாவாய்**
**கொண்டே யுறைகின்ற**
**எங்கோவலர் கோவே (6)**

[இங்கு—இத்திருப்பதியில்; என்று கொல்—என்றைக்கோ; துரிசு—உலகவிஷயங்களில் மனம் செல்லுதல்; கொண்டு - உகந்த விடமாகக் கொண்டு; உறைகின்ற—எழுந்தருளியுள்ள]

என்பது இத்திருவாய்மொழியின் ஆறாம் பாசுரம். ''எனக்காகத் திருநாவாயைக் கோயிலாகக்கொண்டு, உறைகின்ற கோவலர் கோவே, உன்பக்கலில் பிறரல்லாதாருக்குப்பயனான (அநந்ய பிரயோஜனம்) அன்பே உடையேனான என்னுடைய கண்களின் விடாய் சொல்லுந்தரமன்று; என் பசி தீரா விட்டாலும் என் கண்களின் பசி தீர்ந்தால் போதும்'' என்கின்றார். உலகில் யாசிப்பவர்கள் 'என்பசி கிடக்கட்டும்; என்குழந்தை படுகிற பாடு பாருங்கள்; அதன் பசியை முன்னர்த் தீர்த்தாலே போதும் என்பர்களே; அது போலச் சொல்லுவது இது.

13. 'மல்லிகைகமழ்' (9.9) : நம்முடைய முதலிகள் இத் திருவாய்மொழியை 'மாலைப்பூசல்' என்று வழங்குவர். இதன் இறுதிப் பாசுரத்தில் 'மாலைப் பூசல்' என்று வருவது காண்க. பின்னர் வரும் பத்தாம் பத்தில் வேய்மருதோளிணை மெலியுமாலோ' (10.3) என்ற திருவாய்மொழிக்குக் 'காலைப் பூசல்' என்று நம் ஆசாரியர்கள் வழங்கும் திருநாமம். கண்ண பிரான் விடியற்காலத்தில் பசுமேய்க்கப் போனானாக அதிசங்கை பண்ணி அவன் முகத்தைப் பார்த்து 'நீ பசு மேய்க் கப் போனால், நலியக்கடவ பதார்த்தங்கள் நலியாநின்றன என்று முறையிடுவது' காலைப் பூசலான அத்திருவாய் மொழியிலே' மாலைப் பூசலான இப்பதிகத்திலோ வென்னில் 'காடுகளூடு போய்க் கன்றுகள் மேய்த்து மறியோடிக் கார்க்கோடல் பூச்சூடி வருகின்ற தாமோதரன்' மாலைப் பொழுதிலே திருவாய்ப்பாடியேறத் திரும்பி வரும் போது சில நாட்களில் பசுக்களையெல்லாம் பின்னே வர விட்டுத் தான் முன்னே குழலூதிக் கொண்டுவருவான்; சில நாட்களில் பசுக்களை முன்னே போகவிட்டுத் தான் பின்னே வருவது முண்டு. அப்படிவருகின்ற நாளில் அப்பெருமானைப் பசுக்களின் முற்கொழுந்தில் காணாமல் திருவாய்ப்பாடியில் பெண்கள் பட்டபாட்டை ஆழ்வார் தாம் ஏறிட்டுக் கொண்டு சொல்லுகின்றது இத்திருவாய்மொழி.

நம்பிள்ளை ஈடு : படைவீட்டிலிருந்தால் மாமியார் மாமனாருக்குக் கூசிப்பெருமாளுடன் நினைத்தபடி பரிமாறப் போகாதென்று காட்டிலே ஏகாந்தமாய் அநுபவிப்பதாக மனோரதித்துப் போந்த பிராட்டியை 'மனிதர்கள் இல்லாத காட்டின் நடுவிலே விடப்பெற்ற இளம் பெண் போன்று, அந்தச் சிதை அழுதாள்' என்கின்றபடியே, கூப்பிடச் செய் தாற் போன்று, திருநாவாய் என்ற திவ்விய தேசத்திலே புக்கு அநுபவிப்பதாக எண்ணம் கொண்ட இவர்க்கு துன்புறுத்துகின்ற பொருளுக்கு (பாதகவர்க்கத்துக்கு) அஞ்சிக் கூப்பிடும் படியாய் விளைந்தது'' என்பது.

"அடையத்தக்க இறைவனைப் பெறும்படியை எண்ணி னார் மேல் திருவாய் மொழியிலே; எண்ணினவுடனே பெறக் காணாமையாலே திருவாய்ப்பாடியில் உள்ள பெண்கள் கண்ணனைப் பிரிந்து ஓர் இரவிலே பட்டதுன்பத்தை இவர் ஒருவரும் படுகின்றார்" என்று ஆளவந்தார் அருளிச் செய்வர். அதனை எம்பெருமானார் கேட்டருளி, "முன்பே ஆற்றாமையாலே தற்பு அற்று (தரிக்கமுடியாமல்) இருக் கின்றவர் ஆகையாலே அத்தனை ஆடல் கொடுக்கைக்கு உடல் நிலை இடம் தராது; ஆனபின்பு, அவர்கள் அவனைப் பிரிந்து ஒரு மாலை நேரத்தில் பட்ட நோவினை இவர் ஒரு வரும் படுகின்றார்" என்று அருளிச் செய்வர்.[15]

உள்ளுறை : இத்திருவாய்மொழியில் செய்ததாகின்றது என்? என்னில்! ஞானம் பிறந்த பிறகு விரோதியான சம்சாரத்தில் நின்றும் கால்வாங்கவும் மாட்டாதே இருத்த லாலும் பெறத்தகக திருநாட்டினைப்பற்றிய சிந்தனையி னாலும் துன்புறுத்தும் பொருள்களுக்கு ஈரலாம்படி (துன்புறுத்தலாம் படி) பதம் செய்தபடி ஆயிற்று. 'பொய்ந் நின்ற ஞாலம்' (திருவிருத்.1) என்ற திருப்பாசுரத்தில் 'பகவத் விஷயத்தில் ஞானம் பிறந்தபோதே, விரோதியான சம்சாரத்தில் சம்பந்தத்தை அறுத்துத் தந்தருளவேண்டும் என்று விரும்பச் செய்தேயும், 'இவரைக் கொண்டு சில பிரபந்தங்களைச் செய்து முடிக்க வேண்டும்' என்று இருக்கை

---

15. ஆளவந்தார் நிர்வாகத்திலே 'மாலை' என்பதற்கு 'இரவு' என்று பொருள், எம்பெருமானார் நிர்வா கத்திலே 'அந்திப் பொழுது' என்பது பொருள். பூசல் - நோய். என்றது, பிரிந்த தலைவி பிரிவாற் றாது. அந்திமாலையில் பட்ட துன்பத்தினைத் தெரிவிப்பது இத்திருவாய்மொழி என்றவாறு, பிரிந் தவர்க்கு மாலைப் பொழுது துன்புறுத்துதலை அகப்பொருள் நூல்களில் கண்டு தெளியலாம்.

யாலே அப்போதே அப்படிச் செய்திலன். விரோதியான சம்சாரத்தில் ஏற்பட்ட அந்த ருசி இன்மை இவ்வளவும் வர நிலைநின்றபடி சொல்லுகின்றது.

மல்லிகை கமழ்தென்றல் ஈரு மாலோ!
வண்குறிஞ் சியிசை தவரு மாலோ!
செல்கதிர் மாலையும் மயக்கு மாலோ!
செக்கர்நன மேகங்கள் சிதைக்கு மாலோ!
அல்லியந் தாமரைக் கண்ணன்எம்மான்
ஆயர்கள் ஏறரியேறெம் மாயோன்
புல்லிய முலைகளும் தோளும் கொண்டு
புகலிடம் அறிகிலம் தமிய மாலோ!

[கமழ் - மணம்வீசும்; ஈருதல் - அறுத்தல்; தவரும் - துளைக்கின்ற; மயக்கும் - மோகிக்கச் செய்யும்; செக்கர் - செந்நிறம்; அல்லி - மலர்ந்த; அரிஏறு- சிங்கஏறு; புல்லிய முன்பு அணைந்த; தமியம் - பிரிந்து வருந்திக் கிடந்து தனிமைப் பட்டோம் ]

என்பது முதல் பாசுரம். இதில் மாலைப் பொழுதில் தென்றல் முதலான பொருள்கள் தனித் தனியே தனக்கு நலிவை விளக்கும்படியைச் சொல்லிக் கதறுகின்றாள் ஓர் ஆய்ச்சி.

**மல்லிகை கமழ் தென்றல் ஈருமாலோ:** எனக்கொரு துணையின்றியே தென்றலே தனியாய் நின்று நலியக் கூடும். அது மல்லிகை மணத்தையும் துணை கொண்டால் நலியும் விதம் சொல்லலாகுமோ? கூடியிருக்குங் காலத்து பரம போக்கியமாயிருந்து பரமானந்தத்தை விளைக்கும் பொருள்களெல்லாம் பிரிவுக் காலத்தில் துயரத்தை விளைக்கும் என்பது யாவரும் அறிந்ததே.

**வண்குறிச்சி இசைதவரும்:** குறிஞ்சி, மருள், காமரம், கந்தாரம் என்பவை பண்களின் பெயர்; தோடி, சாவேரி, பைரவி, சங்கராபரணம் என்று சங்கீதப் புலவர்கள் இராகங்களுக்குப் பெயர் வழங்குமாப்போலே வண்டு, குயில்

முதலானவற்றின் பண்கள் குறிஞ்சி, மருள், காமரம், கந்தாரம் முதலான சொற்களால் வழங்கப்படுவதை நாலாயிரத்தில் காண்கின்றோம்.

**செல்கதிர் மாலையும் மயக்கும் :** பகற்போதாயிருந்தால் கண்ட பொருள்களையெல்லாம் பார்த்துக் கொண்டும் கண்டாரோடும் பேசிக் கொண்டும் ஒருவாறு பொழுது போக்கலாம். அதற்கு அவகாசம் இல்லாதபடி சூரியன் மறையும்படியான மாலைப்பொழுது வந்து மயங்கா நின்றது.

**செக்கர்நன் மேகங்கள் சிதைக்கு மாலோ :** மாலை நேரத்தின் செந்நிறத்தையும் கருமையான நிறத்தையும் உடைய முகிற் கூட்டங்கள் அவனுடைய அவயவங்களின் காந்திக்கும் போலியாய் 'இவை என் அம்பு செய்தது' என்று அவற்றைப் பழித்துக் கொண்டு 'சரீரம் கிடக்கவோ நலிவது?' என்று வயிரத்தைச் செற்றா நின்றது.

**அல்லிஅம் தாமரைக்கண்ணன் :** முதலில் உறவு செய்வன கண்களே யன்றோ? கண்ணொடு கண்ணினைக் கௌவி ஒன்றையொன்று உண்டபின் அன்றோ மெய்யுறு புணர்ச்சி உண்டாவது?

அடுத்துவரும் பாசுரங்களில் மணி ஒலி, தென்றல், ஆம்பல், சந்தனம், தீங்குழலின் ஓசை (3), வாடை, சந்திரன், மலர்ப் படுக்கை, அழகிய பூ (4), ஆபுகு மாலை, ஆயன் தீங்குழல் (5), மாலை (6), வாடை, அகிற்புகை, யாழ்நரம்பின் ஓசை, பஞ்சமப் பண், பசிய சந்தனம், மல்லிகை (7), செவ்வானம், வாடை, மல்லிகை, வளவிய சந்தனம் (8), மணியொலி, வேய்ங்குழலோசை, முல்லை, கருமுகை, மல்லிகை, வண்டின் ஒலி கடல் ஒலி (10) — இவை யாவும் நலியும்படியைப் பேசு கின்றாள் ஆழ்வார் நாயகி. இந்தப் பதின்மூன்று பதிகங் களும் 'எம்பெருமானைக் கிட்டியல்லது தரியேன்' என்ற தலைவியின் பதற்றத்தைப் புலப்படுத்துவன வாகின்றதைக் கண்டு மகிழலாம்.

## 11. மகள் பாசுரங்கள்—தூது பற்றியவை

தூது என்பது, ஒருவர் தம்முடைய கருத்தை வேறொரு வருக்கு இடை நின்ற ஒருவர் வாயிலாகக் கூறி விடுப்பது சங்க இலக்கியங்களில் 'காமம் மிக்க கழிபடர்கிளவிகளாக' இருந்த துறையே பிற்காலத்தில் தூது இலக்கியங்களாக வடிவு கொண்டது என்பது ஆய்வாளர்களின் கருத்து. பக்தி இலக்கியங்கள் வளர்ந்த காலத்தில் ஆழ்வார் பெருமக்கள் இந்த அகத்துறையைப் பயன்படுத்திய அருமைப் பாட்டினை ஈண்டுக் காண்போம். ஆழ்வார் திருமொழிகளில் அவர்கள் தாமான தன்மையை விட்டுப் பிராட்டியாரின் நிலையை ஏறிட்டுக்கொண்டு பாசுரங்கள் அமைக்கப்பெற்றிருக்கும். பெரும்பாலும் ஆழ்வார்கள் புள்ளினங்களையே தூது போகும்படியான பாசுரங்களை அமைப்பர்; குருகினங்கள், நாரைகள், அன்னங்கள், பூங்குயில்கள், கிளி, மயில், பூவை, அன்றில்கள், வண்டினங்கள் முதலியவை தூதுவிடும் பொருள்களாக அமைந்திருப்பதைக் காணலாம். இவற்றைத் தவிர வாடை, மேகம், நெஞ்சு போன்றவற்றையும் இவர் தம் பாசுரங்களில் தூதுப் பொருளாக அமைத்திருப்பதையும் கண்டு மகிழலாம்.

இங்ஙனம் பறவைகளைத் தூது விடுத்தற்கு உட்பொருள் உண்டு. ஆசாரிய ஹிருதயம்,

சேர்ப்பாரைப் பட்சிகளாக்கி ஜ்ஞான கர்மங்களைச் சிறகென்று, குரு ஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்ய ஸ்தானே பேசும. (சூத்திரம் - 150)

[ஸப்ரமசாரி - ஒரு சாலை மாணாக்கர்; ஸ்தானே - இடத்தில்]

என்று குறிப்பிடுகின்றது. 'விண்ணோர் பிரானார், மாசுஇல் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே' (திரு விருத். 55) என்று ஆழ்வாரே அருளிச் செய்துள்ளமையால் பகவத் விஷயத்தில் கொண்டு சேர்க்குமவர்கள் பறவைகளாகக் கொள்ளப் பெறுவர். இரண்டு சிறகுகளைக்கொண்டு பறவைகட்கு எங்ஙனம் விசும்பில் பறந்து செல்லுதல் இயலுகின்றதோ அங்ஙனமே ஞானம், ஒழுக்கம் (அநுட்டானம்) என்னும் இரண்டாலும் இறைவன் அடையப் பெறுகின்றான் என்பது ஆன்றோர் கொள்கை. எனவே, ஞானத்தையும் அநுட்டானத்தையும் சிறகுகளாகக் கொள்ளல் வேண்டும். ஆசாரியர்களும் ஒரு சாலை மாணாக்கர்களும், புத்திரர்களும் இறைவனை அடையும் பேற்றுக்குத் துணையாக இருப்பார்கள் என்பது அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் கருத்தாகும்.

மேற்குறிப்பிட்ட பறவைகளிலும் அன்னம் வண்டு முதலியவையாகச் சொல்லப் பெறுபவர்கள் இன்னார் இன்னார் போன்றவர்கள் என்னும் உள்ளுறைப் பொருளும் அருளிச் செய்யப்பெற்றுள்ளது. அவற்றை ஈண்டு குறிப்பிடுதல் மிகவும் பொருத்தமாகும். அன்னமாகப் பேசப் பெறுபவர்கள் செல்வ நம்பி, பெரியாழ்வார், நாதமுனிகள் ஆளவந்தார் ஆகியோர்.[1] நாரதமுனிவர், உலோக சாரங்க

1. ஆ. ஹி. 151. சூத்திர உரையில் விளக்கம் தரப் பெற்றுள்ளது.

முனிவரால் தாங்கப் பெற்ற திருப்பாணாழ்வார், தம்பிரான்மார் (அரையர்) போன்றவர்கள் தும்பி என்றும் வண்டு என்றும் பேசப்பெறுவர்.[2] அதே நூல் கிளி, பூவை, குயில், மயில் என்றவற்றிற்கு உள்ளுறைப் பொருளாக அமைபவர்கள் மதுரகவிகள், தொண்டரடிப் பொடியாழ்வார், கூரத்தாழ்வான், திருமாலை யாண்டான், எம்பார், அருளாளப்பெருமாள் எம்பெருமானார் முதலாயினோர் களைக் கூறும்.[3]

நாரை, கொக்கு, குருகு என்னும் பறவைகட்குக் குலசேகரப் பெருமாள், ஆசாரியபதத்தில் நின்றவர் களான முதலிகள் போல்வார் உள்ளுறைப் பொருள்களாக அமைவர்.[4] மேகத்திற்கு உள்ளுறையாக திருமழிசைபிரான், திருமங்கையாழ்வார், இராமாநுசர் முதலியோர் பேசப் பெறுவர்.[5]

**தூதுப் பதிகங்கள் :** மயர்வற மதிநலம் அருளப் பெற்ற நம்மாழ்வார் அருளிய திருவாய் மொழியில் தூதுவிடும் பதிகங்களாக அமைந்தவை நான்கு உள்ளன. இவை யாவும் 'மகள் பாசுர'மாகவே அமையும். தூது விடுபவள் தலைவியே யன்றோ? அவை 'அஞ்சிறைய மடநாராய்' (1:4), 'வைகல் பூங்கழிவாய்' (6.1), 'பொன்னுலகாளீரோ?' (6 8 'எம்கானல் அகங்கழிவாய்' என்பவையாகும். இதனை,

தம்பிழையும் சிறந்த செல்வமும் படைத்த பரப்பும் தமரோட்டை வாசமும் மறப்பித்த க்ஷமா தீக்ஷா ரஸ்ய

2. ஷெ. 152. (விளக்கம் உரையில் காண்க).
3. ஷெ. 153 (விளக்கம் உரையில்)
4. ஆ. ஹி. 154 (உரை காண்க)
5. ஷெ. 155 (ஷெ)

சேர்ப்பாரைப் பட்சிகளாக்கி ஜ்ஞான கர்மங்களைச் சிறகென்று, குரு ஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்ய ஸ்தானே பேசும். (சூத்திரம் - 150)

[ஸப்ரமசாரி - ஒரு சாலை மாணாக்கர்; ஸ்தானே - இடத்தில்]

என்று குறிப்பிடுகின்றது. 'விண்ணோர் பிரானார், மாசுஇல் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே' (திரு விருத். 55) என்று ஆழ்வாரே அருளிச் செய்துள்ளமையால் பகவத் விஷயத்தில் கொண்டு சேர்க்குமவர்கள் பறவை களாகக் கொள்ளப் பெறுவர். இரண்டு சிறகுகளைக்கொண்டு பறவைகட்கு எங்ஙனம் விசும்பில் பறந்து செல்லுதல் இயலு கின்றதோ அங்ஙனமே ஞானம், ஒழுக்கம் (அநுட்டானம்) என்னும் இரண்டாலும் இறைவன் அடையப் பெறுகின்றான் என்பது ஆன்றோர் கொள்கை. எனவே, ஞானத்தையும் அநுட்டானத்தையும் சிறகுகளாகக் கொள்ளல் வேண்டும். ஆசாரியர்களும் ஒரு சாலை மாணாக்கர்களும், புத்திரர்களும் இறைவனை அடையும் பேற்றுக்குத் துணையாக இருப் பார்கள் என்பது அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் கருத்தாகும்.

மேற்குறிப்பிட்ட பறவைகளிலும் அன்னம் வண்டு முதலியவையாகச் சொல்லப் பெறுபவர்கள் இன்னார் இன்னார் போன்றவர்கள் என்னும் உள்ளுறைப் பொருளும் அருளிச் செய்யப்பெற்றுள்ளது. அவற்றை ஈண்டு குறிப் பிடுதல் மிகவும் பொருத்தமாகும். அன்னமாகப் பேசப் பெறுபவர்கள் செல்வ நம்பி, பெரியாழ்வார், நாதமுனிகள் ஆளவந்தார் ஆகியோர்.[1] நாரதமுனிவர், உலோக சாரங்க

1. ஆ. ஹி. 151. சூத்திர உரையில் விளக்கம் தரப் பெற்றுள்ளது.

காட்டாமைக்குக் காரணம் தம்பிழை, சிறந்த செல்வம், படைத்த படைப்பு, தமரோட்டைவாசம். தூது விடு கைக்குப் பற்றாசு' என்றது க்ஷமை, தீக்ஷை, ஸாரஸ்யம், சௌந்தர்யம் என்பவையாகும். 'அதற்கு விஷயம்' என்றது வியூக விபவ பரத்துவ துவய அர்ச்சைகளை 'பரத்துவதுவயம்' என்றது பரமபதத்திலிருக்கும் நிலையினையும், கரந்த சில்லிடந்தோறும் இடம்திகழ் பொருள்தோறும் கரந்து எங்கும் பரந்துறையும் அந்தர்யாமித்துவ நிலையினையும் குறிக்கும். இவ்விரண்டும் முதன்மைக்கு அறிகுறிகள் ஆதலின் 'பரத்துவ துவயம்' என்கின்றார். இதனை மேலும் விளக்குவோம்,

1. **வியூகத்தில் தூது**: 'அஞ்சிறைய மடநாராய்' (1.4) என்ற திருவாய்மொழியில் 'கடல் ஆழி - நீர் தோற்றி அதனுள்ளே கண் வளரும் அடலாழி அம்மானைக் கண்டக்கால்' (10) என்பதால் வியூகத்தில் தூது அறியக் கிடக்கின்றது. 'என் பிழையே நினைத்தருளி' (7) என் பதனால் எம்பெருமான் தனது சீலகுணத்தினால் முதலில் ஆழ்வாருடன் கலந்து விட்டான்; கலந்த பிறகு அவரிடமுள்ள குற்றங்களைக் கண்டான். அதனால் அவரை வெறுத்துப் பிரியலுற்றான். அவனிடத்தில் பொறுக்கும் பண்பு (க்ஷமை குணம்) நிரம்பியிருக்கும்போது ஆழ்வாரின் பிழைகளைப் பொருட்படுத்தக் காரணம் இல்லை. தன்னுடைய பிழைகள் அவனுடைய பொறுக்கும் பண்பையும் மறப்பித்தனபோலும் என்று கருதிய ஆழ்வார் நாயகி அப்பெருங் குணத்தைச் சிறிது நினைப்பூட்டி விட்டால் போதும் என்று நினைத்துப் பறவை களைத் தூது விடுகின்றாள். சீதாப்பிராட்டியை ஆயிரக் கணக்கான வானரங்கள் தேடுவதைப் போலவே, தன் கண்களில் கண்டவற்றையெல்லாம் தூது போகுமாறு ஏவு கின்றாள் ஆழ்வார் நாயகி. பறவைகளைத் தூதுவிடும் ஐதிகத்தைக் குறிப்பிடும் பராசர பட்டர், "சக்கரவர்த்தித்

திருமகனார் திருவவதரித்தபின்பு வானர ஜாதி வீறுபெற்றது போல, ஆழ்வார்கள் திருவவதரித்த பின்பு பட்சி ஜாதி வீறுபெற்றது'' என்று சுவையுடன் அருளிச் செய்வர். இத் திருவாய்மொழியில் 'நாரை, குயில், அன்னம், அன்றில், குருகு, வண்டு, கிளி, பூவை ஆகிய பறவைகளைத் தூது விடுவதைக் காண்கின்றோம்.

நஞ்சீயர் காலத்தில் சாமான்யமாயிருப்பான் ஒருவன். விரக்தர்களும் வைதிகர்களுமான மகான்கள் பலரும் திருவாய்மொழி காலட்சேபத்தில் இது தத்துவ பரமாயிருக்கு மென்று கருதி இத்திவ்வியப் பிரபந்தத்தைச் சேவித்து வந்து, இத்திருவாய்மொழியில் வந்தவாறே 'இது காமுக வாக்கிய மாயிருக்கிறது' என்று வெறுப்புக் காட்டிச் சென்றானாம். வேதாந்தங்களில் விதிக்கப்படுகிற பகவத் காமமே இப்படிப் பட்ட பாசுரங்களாகப் பரிணமித்ததென்று அவன் அறிந்திலன் கருவிலே திருவில்லாமையாலே — என்று நம்பிள்ளை வருந்திப் பேசுவர்.

பிரிவாற்றாமையுடன் இருக்கும் பராங்குச நாயகி நெய்தல் நிலத்தில் இருக்கின்றாள். பிரிந்தார் இரங்குவது நெய்தல் நிலத்திலன்றோ? நீர்நிலத்தருகே இரா நின்ற ஆழ்வார் நாயகி அண்மையிலிருக்கும் நாரையைப் பார்த்து, 'நாராய் நீ என் நிலைமையைக் கருடக் கொடியானுக்கு அறிவித்து என்னையும் அவனையும் சேர்க்க வேண்டும்' என்று இரக்கின்றாள்.

> அஞ்சிறைய மடநாராய்
> அளியத்தாய் நீயும்நின்
> அஞ்சிறைய சேவலுமாய்
> ஆஆ என்று எனக்கருளி

திருமகனார் திருவவதரித்தபின்பு வானர ஜாதி வீறுபெற்றது போல, ஆழ்வார்கள் திருவவதரித்த பின்பு பட்சி ஜாதி வீறுபெற்றது'' என்று சுவையுடன் அருளிச் செய்வர். இத் திருவாய்மொழியில் 'நாரை, குயில், அன்னம், அன்றில், குருகு, வண்டு, கிளி, பூவை ஆகிய பறவைகளைத் தூது விடுவதைக் காண்கின்றோம்.

நஞ்சீயர் காலத்தில் சாமான்யமாயிருப்பான் ஒருவன்.. விரக்தர்களும் வைதிகர்களுமான மகான்கள் பலரும் திருவாய்மொழி காலட்சேபத்தில் இது தத்துவ பரமாயிருக்கு மென்று கருதி இத்திவ்வியப் பிரபந்தத்தைச் சேவித்து வந்து, இத்திருவாய்மொழியில் வந்தவாறே 'இது காமுக வாக்கிய மாயிருக்கிறது' என்று வெறுப்புக் காட்டிச் சென்றானாம். வேதாந்தங்களில் விதிக்கப்படுகிற பகவத் காமமே இப்படிப் பட்ட பாசுரங்களாகப் பரிணமித்ததென்று அவன் அறிந்திலன் கருவிலே திருவில்லாமையாலே — என்று நம்பிள்ளை வருந்திப் பேசுவர்.

பிரிவாற்றாமையுடன் இருக்கும் பராங்குச நாயகி நெய்தல் நிலத்தில் இருக்கின்றாள். பிரிந்தார் இரங்குவது நெய்தல் நிலத்திலன்றோ? நீர்நிலத்தருகே இரா நின்ற ஆழ்வார் நாயகி அண்மையிலிருக்கும் நாரையைப் பார்த்து, 'நாராய் நீ என் நிலைமையைக் கருடக் கொடியானுக்கு அறிவித்து என்னையும் அவனையும் சேர்க்க வேண்டும்' என்று இரக்கின்றாள்.

> **அம்சிறைய மடநாராய்**
> **அளியத்தாய் நீயும்நின்**
> **அம்சிறைய சேவலுமாய்**
> **ஆஆ என்று எனக்கருளி**

முன்செய்த முழுவினையால்
திருவடிக்கீழ்க் குற்றேவல்
முன்செய்ய முயலாதேன்
அகல்வதுவோ விதியினமே (2)

[முன் - எனக்குத் தெரியாத காலம் முதலாக; வினை - பெரும்பாவம்; குற்றேவல் - அடிமைத் தொழில்]

என்பது. 'அநாதி காலமாகத் திரட்டின பாவத்தாலே திருவடி வாரத்திலே அந்தரங்க கைங்கரியம் பண்ணுவதற்கு ஏற்கெனவே முயலப்பெறாத நான் அகன்று போக வேண்டியதுதானோ? என்று கேளுங்கள்'' என்கின்றாள்.

முழுவினை : என்றவிடத்து நம்பிள்ளை காட்டும் ஓர் ஐதிகம் : பட்டர் திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருந்த காலத்து அங்குத் தெற்காழ்வான் என்றும், கோளரியாழ்வான் என்றும் இருவர் வாழ்கின்றனர். கோளரியாழ்வான் நற்குண நல்லொழுக்கமுடையவன்; தெற்காழ்வான் சாதாரணமாகக் காணப்பெறும் ஒரு மனிதன். இருவரும் ஒரு சிறப்பான திதியன்று ஒரு குளக்கரையில் சந்திக்கின்றனர். கோளரியாழ்வான் தெற்காழ்வானை நோக்கி, ''அப்பா, இன்று புண்ணிய தினமாயிற்றே. இன்றாகிலும் ஒரு முழுக்கிட மாட்டாயா?'' என்கின்றாள். அது கேட்ட தெற்காழ்வான், ''முழுக்கிட வேணுமென விதிக்கின்ற உன் அபிப்பிராயம் என்னுடைய பாவங்கள் இந்த முழுக்கினால் சில தொலையக் கூடும் என்பதுதானே; அந்தோ! என்னுடைய பாவம் திருக் கோட்டியூர் சௌமிய நாராயணப் பெருமாளுடைய திருக்கையிலுள்ள திருவாழியால் போக்கினால் போகுமே யல்லது ஒன்றிரண்டு முழுக்கால் போகக் கூடியது அன்று காண்!'' என்கின்றான். இச்சொற்கள் பட்டருடைய திருச் செவியில் விழுந்த அளவில், ''ஆ! ஆ!! எவ்வளவு ஆத்திகனா இருந்தால், இந்த வார்த்தை சொல்ல முடியும்? இவனை மேலெழுந்தவாரியாகப் பார்த்து நாத்திகன் என்று நினைத்

திருந்தோமே. இவ்வளவு பேசும் பரிபாகமுடையவனா இவன்!'' என்று மிகவும் ஈடுபட்டதாக வரலாறு.

நாயகி நிலையிலிருக்கும் ஆழ்வார் ''கொம்மை முலைகள் இடர்தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல்' (நாச்.திரு. 13 : 9) என்ற ஆண்டாளைப்போல் ''முலையால் அணைக்க என்று சொல்ல வேண்டியிருந்தும் 'திருவடிக்கீழ்க் குற்றேவல்' என்று சொல்லுகின்ற அழகு காண்மின்! இங்கே நம்பிள்ளை ஈடு : ''பிராமணர் பிச்சேறினாலும் ஒத்துச் சொல்லுமாப் போலே இவர் பிராட்டியானாலும் முலையாலணைக்க நினையார்; திருவடிகளில் அணையத் தேடும் அத்தனை'' என்பதாக. வேதமோதிய அந்தணனுக்குப் பைத்தியம் பிடித்தாலும் வேதாத்யயனமே சொல்லித் திரிதல் போல ஆழ்வாருக்கு நிலைமை மாறினாலும் பாசுரம் பேசும் முறைமை மாத்திரம் மாறவில்லை என்பது ஈண்டு அறியத் தக்கது. ''தேறியும் தேறாதும் மாயோன் திறத்தினளே இததிருவே'' (திருவாய் 4.4 : 7) என்பதும் ஈண்டு அநுசந்திக்க உரியது.

பராங்குச நாயகியின் கண்வட்டத்தில் பேடையொடு களித்திருக்கும் அன்னங்கள் தென்படுகின்றன. அவற்றை நோக்கித் தூது செல்ல வேண்டிய இடத்தையும் தூதுச் செய்தியையும் குறிப்பிடுகின்றாள்.

விதியினால் பெடைமணக்கும்
மென்னடைய அன்னங்காள்
மதியினால குறள்மாணாய்
உலகிரந்த கள்வர்க்கு
மதியிலேன் வல்வினையே
மாளாதோ என்றொருத்தி
மதியெல்லாம் உள்கலங்கி
மயங்குமால் என்னீரே (3)

[விதி - பாக்கியம்; குறள் மாணாய் - வாமன பிரமமச்சாரியாய்; கள்வர் - வஞ்சகர்; மயங்கும் - அறிவிழந்து கிடக்கும்]

என்ற பாசுரத்தில் 'விதி' என்பதற்குச் 'சாத்திரவிதி' என்றும் 'பாக்கியம்' என்றும் இரண்டு விதமாகப் பொருளுரைப்பர். பின்னதே சிறந்தது. இதனையொட்டி நம்பிள்ளை ஈடு காண்மின் : ''பெருமாள் பிராட்டியைப் பிரிந்து கடலும் மலையும் அரித்துக் கொண்டு வாரா நிற்கச் செய்தே இராஜ்ய தாரங்களை இழந்து கிடந்த மகாராஜரைக் கண்டு அவர் குறையைத் தீர்த்த பின்னரே தம் இழவில் நெஞ்சு சென்றது. அங்ஙனன்றிக்கே, இப்போது இவை குறைவற் றிருக்கின்ற இதுதான் இவள் பாக்கியமாயிருக்குமிறே''

மேல் வருவதைத் தெரிந்து கொண்டு அதற்கிணங்கக் காரியம் செய்யவல்ல சாதுர்யமே 'மதி', எனப்படும்.[8] அப்படிப்பட்ட சாதுரியத்தினால மாண்குறள் கோல வடிவு காட்டி யாசகனாயினான். 'அந்தக் குணத்தினால் என்னை ஈடுபடுத்தி என்னை இப்பாடுபடுத்துவதற்காகவே' என்ற ஆழ்வார் நாயகியின் கருத்து 'மதியினால்' 'கள்வர்க்கு' என்ற சொற்களில் கண்டு மகிழலாம். 'கள்வம' என்பது முதலில் சிறிய வடிவினைக் காட்டிய பிறகு பெரிய வடிவான வஞ்சகம என்று கூறுவர் திருமாலை ஆண்டான். ஒன்றை நினைத்து ஒன்றைச் செய்த மாயமே கள்வம் என்பதாக எம்பெரு மானார் நிர்வகிப்பர்.

முன்னம் குறளுருவாய்
மூவடிமண் கொண்டளந்த
மன்னன் சரிதைக்கே
மாலாகிப் பொன்பயந்தேன்

[மால் - மயக்கம்; பொன் - மாமை நிறம்]

7. மகாராஜா—சுக்கிரீவன் (வைணவ மரபுப்படி இங்ஙனம் வழங்குவர்)
8 கீழே கழிந்து போன விஷயத்தைப் பற்றின உணர்வு 'ஸ்மிருதி' எனப்படும். மேலே வரப்போகின்ற விஷயத்தைப் பற்றின உணர்வு 'மதி' ஆகும். அப்போதைக்கப்போது நடக்க வேண்டிய உணர்வு 'புத்தி' எனப்படும்; முக்காலங்களையும பற்றின உணர்வு 'பிரஜ்ஞை' என்று வழங்கப்பெறும்.

என்ற பரகால நாயகின் வாக்கும் (பெரி.திரு. 9.4 : 2) ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.

'ஒருத்தி மதியெலாம் உள்கலங்கி மயங்குமால்' என்ற செய்தியைக் கூறி வருமாறு பணிக்கின்றாள். 'ஒருத்தி' என்றால் தெரியுமோ? இன்னாள் என்று குறிப்பிட வேண்டாவோ? என்னில்; வேண்டா; ஒருத்தி என்ற போதே அவள் பராங்குச நாயகி என்று அறிந்து கொள்வான். இங்ஙனம் மதியெலாம் உள்கலங்கி மயங்கும்படியாகத் தன்னால் செய்து வைக்கப் பெற்றவள் இந்நிலத்தில் பராங்குசநாயகி ஒருத்தி தவிர, வேறு யாரும் இல்லையா தலால் சிறப்பித்துச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. இங்கே நம்பிள்ளை ஈடு: ''ஒருத்தி என்றால் அறியுமோ? என்னில் : எய்தவன் கை உணராதோ? இன்ன காட்டிலே மான் பேடை ஏவுடனே கிடந்து உழையா நின்றதென்று ஊரிலே வார்த்தையாடினால் எய்தவன் கை உணராதோ? 'நீயன்றோ எய்தாய்' என்று சொல்ல வேண்டாவிறே.''

பாசுரத்தின் இறுதி அடியின் நயத்தையும் காண்போம். ''ஒருத்தி அறிவு கலங்கினாள்' என்று கூறுங்கள். அது கேட்ட எம்பெருமான் 'தன்னதான அறிவு கலங்கப் பெற்றாலும், நாம் கொடுத்த அறிவு இருக்குமே; அதுகொண்டு ஆறி யிருப்பன்' என்பன்; அப்போது 'மதியெலாம் கலங்கிற்று' என்று கூறுங்கள். அது கேட்ட எம்பெருமான் 'நாம் கொடுத்த அறிவு அப்படிக் கலங்கி விடாது; கலங்கினாலும் மேலெழச் சிறிது கலங்குமேயல்லது உள்ளே கம்பீரமாகவே இருக்கும்' என்பன். அப்போது 'மதியெலாம் உள்கலங்கிற்று' என்று எடுத்து இயம்புங்கள். அது கேட்ட எம்பெருமான் 'எல்லாம் கலங்கிப் போனால் என்ன? நாம் இருக்கிறோம். பின்பு நாம் அணுகும்போது அறிவு கொடுத்துக் கொள்ளு கிறோம்' என்பன். அப்போது 'மயங்குமால்' என்று கூறுங் கள். அதாவது முடியும் தருணமாயிற்று' என்று விளக்குங்

கள். 'மயங்கினாள்' என்று முடிந்ததாகவே சொல்லி விட்டால், 'அப்படியா? முடிந்து போய் விட்டாளா? இனிப் போய் நாம் என்ன செய்து?' என்று சொல்லி ஒரு முழுக்கு போட்டு விட்டு நிற்பன். அப்படியின்றி 'அரைகுறையத் தலைகுறைய ஆனைக்கு உதவ ஓடி வந்தாற் போலே கடுக ஓடிவரும்படியாகச் சிறிது பசையிருப்பதாகச் சொல்லுங்கள்' என்கின்றாளாயிற்று.

'பூவை என்ற ஒரு பறவையிடம் பேசுகின்றாள் பராங்குச நாயகி. "ஏற்கெனவே உன்னை வேண்டிக் கொண்டிருந்தும், எனக்காக நீ தூது செல்லாது அசட்டை யாய் இருந்து விட்டாய்—"நோயெனது நுவலென்ன நுவலாதே இருந்தொழிந்தாய்" என்கின்றாள்.

சாயலொடு மணிமாமை
தளர்ந்தேன்நான் இனியுனது
வாயலகில் இன்னடிசில்
வைப்பாரை நாடாயே (8)

[மணிமாமை - அழகான நிறம்; இன்னடிசில் - மதுர மான இசை]

என்று தற்கால நிலைமையைக் கூறுகின்றாள். சாயல் என்பது சமுதாய சோபை; இது வடமொழியில் 'இலாவண்யம்' எனப்படும். மணிமாமை என்பது அழகு. 'இவ்விரண்டும் நீங்கப் பெற்றேன்' என்கின்றாள். 'இங்ஙனம் இவள் சொல்லக் கேட்ட பூவை 'இதோ விரைந்து சென்று எம்பெருமானுக்கு அறிவிக்கின்றேன்' என்று புறப்படத் தொடங்கும்போது 'இனி உனது வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே' என்கின்றாள். 'நானோ முடியா நின்றேன்; இனி உனக்கு இரட்சகராவாரைத் தேடிக் கொள்' என்கின்றாள்.

இவ்விடத்தில் ஓர் ஐதிகம் : பெரிய திருமலை நம்பி என்னும் ஆசிரியர் 'வெண்ணெய்க் காடும் பிள்ளை' என்கின்ற கிருட்டிணத் திருமேனியை வழிபாடு செய்து வந்தார். அவர்

திருவாராதனம் படைக்க ஆற்றலற்றவராய் அந்திம தசை அடைந்தார்; பெருமாள் சந்நிதி முன்பே தண்டன் சமர்ப்பித்துத் திருத்திரையை நீக்கச் செய்து ''சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான், இனி உனது வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே'' என்று கைகூப்பி விண்ணப்பம் செய்தாராம். "அடியேனோ ஆசாரியன் திருவடி அடையா நின்றேன்; இனித் திருவாராதனம் கண்டருளப் பண்ணுவாரைத் தேடிக் கொள்ளாய்'' என்பது குறிப்பு.

அடுத்து இப்பதிகத்தில் அன்றில்கள், சிறுகுருகு, வண்டு, கிளி, வாடைக் காற்று, நெஞ்சு ஆகியவற்றைத் தூது விடுப்பதாகவுள்ள பாசுரங்களின் நயங்கள் விரிவஞ்சி விடப் பெற்றன.

2. விபவத்தில் தூது : 'வைகல் பூங்கழிவாய்' (6.1) என்ற திருவாய்மொழி விபவாவதாரத்தில் தூது விடுவதாக அறுதி யிடப்பெற்றுள்ளது. மணவாள மாமுனிகள் தம் நூற்றந் தாதியில் ''வைகல் திருவண்வண்டூர் வைகும் இராமனுக்கு (61) என்று அருளிச் செய்ததும் இது கருதியே. திருவண் வண்டூரில் தூது விடுகிற படியால் 'இஃது அர்ச்சாவதாரத் தில் தூது' என்று கொள்ளலாமோ என்னில்; இத்திருவாய் மொழியின் பாசுரம் ஒன்றில் 'மாறில் போரரக்கன் மதிள் நீறு எழச் செற்று உகந்த, ஏறு சேவகனார்க்கு என்னையும் உளள் உளள் என்மின்களே' (10) என்று அமைந்திருக்கும் படியை நோக்கியும் அர்ச்சாவதாரத் தூதுப் பதிகம் வேறொன்று இருப்பதை நோக்கியும் ஆசாரியர்கள் 'இதனை விபவாவதாரத்தில் தூது' என வகை செய்தது மிகவும் பொருத்தம் என்பது போதரும். இத்திருவாய்மொழியில் பராங்குச நாயகி குருகு, நாரை, புள்ளினம், அன்னம், குயில் கிளி, பூவை, வண்டினம் ஆகிய பறவைகளைத் தூதுவிடு வதைக் காண்கின்றோம்.

வைகல்பூங் கழிவாய் வந்து
மேயும் குருகினங்காள்
செய்கொள் செந்நெல் உயர்திரு
வண்வண் டூர்உறையும்
கைகொள் சக்கரத்தென் கனிவாய்ப் பெரு
மானைக் கண்டு
கைகள் கூப்பிச் செல்லீர்
வினையாட்டியேன் காதன்மையே (1)

[வைகல் - எப்போதும்; கழிவாய் - கழியில்; கழி-கடலையடுத்த நீர்ப்பரப்பு; செய்கொள் - கழனி நிரம்பிய; வினையாட்டி - பாவமுடையவள்; காதன்மை -ஆவல்]

குருகினங்கள் மேய்வது நீர்க்கரையிலாகையால் 'பூங்கழி வாய் வந்து மேயும் குருகினங்காள்!'' என்று விளிக்கின்றாள். பூங்கழி என்பது எழிலார்ந்த நிலையைக் காட்டுகின்றது. வைகல் வந்து மேயும் - எப்போதும் நீங்கள் உணவை மாத்திரமா நோக்குவது? பிறர் காரியமும் சிறிது செய்ய வேண்டாவோ? என்று காட்டுகிறபடியும் இதில் தொனிப்பதைக் காணலாம். திருவண்வண்டூருக்குத் தூது போக வேண்டும் என்கின்றாள். குருகினங்கட்கு அங்குக் கொள்ளையாய் உணவு கிடைக்கும் என்பதைச் 'செய்கொள் செந்நெலுயர்' என்ற அடைமொழியால் பெற வைக்கின்றாள். அங்குள்ள எம்பெருமானை அறிந்து கொள்வதற்கு இரண்டு அடையாளங்களைக் குறிப்பிடுகின்றாள். கீழ்த்திருவாய்மொழியில் (5. 10) 'பிறந்தவாறும்' என்று கண்ணன் அவதாரத்தை அநுசந்தித்து ஈடுபட்டவளாகை யால் கையும் திருவாழியுமாக அவதரித்தபடி திருவுள்ளத் தில் ஊறியிருக்கிற படியால் 'கைகொள் சக்கரத்து' என்று முதலில் அவ்வடையாளத்தைக் கூறுகின்றாள். அடுத்து,

'வளர்ந்தவாறும்' என்று ஆயர்பாடியில் வளர்ந்த படியை அநுசந்தித்தவளாகையால் அவ்விடம் புகுந்து அவ்வாயர் பெண்டிர்க்கு அணுக்கனாய்க் கொவ்வைக் 'கனிவாய் கொடுத்துக்' கூழைமை செய்த படிகளெல்லாம் திருவுள்ளத்தில் நிழலிட்டுத் தோற்றியிருப்பதனால் 'கனிவாய்' என்ற அடையாளத்தைக் கூறுகின்றாள்.

அப்பெருமான் தன்னிடம் வந்தபோது பல்வேறு கள்ளக் குழைச்சல்கள் காட்டித் தன்னுடைய சௌசீல்யம் தோற்ற இருந்தான்; இப்போது பிரிந்து இருக்கும் நிலையில் பரத்துவம் பாராட்டி நிற்கின்றான். அதற்கேற்றவாறு 'கைகள் கூப்பிச் சொல்லீர்' என்று குருகினங்கள் விண்ணப்பிக்கும் முறையையும் சொல்லித் தருகின்றாள். 'இன்னாள் உம்மை ஆசைப்பட்டிருக்கின்றாள்' என்று தெரிவித்தால் போதும் என்கின்றாள். இங்கே, நம்பிள்ளை ஈடு: ''வன்னெஞ்சர்க் காதல் போலன்றிறே மென்னெஞ்சர்க் காதல்; மெல்லியலார் காதல் அளவல்லாத என் காதல் சொல்லீர்; சொல்லுவார் தாழ்வே; வரவு தப்பாது என்றிருக்கின்றாள்'' என்பது. எல்லாக் காலங்களிலும் இன்பம் நுகரும் இடங்கட்குத் தாங்களே சென்று தங்களைப் பிரியில் தரியாத அன்புடைய சீடர்களுடனே கூடப் பகவானுடைய குணங்களை அநுபவம் பண்ணுகின்ற தூய்மையான இயல்புடைய ஆசாரியர் ஒருவரை விளித்துத் தனக்கு இறைவனோடு சம்பந்தம் வேண்டும் என்று அடிபணிந்து கேட்டல் இதற்கு உள்ளுறையாகும்.[9]

பராங்குச நாயகின் கண்வட்டத்தில் சில குயில்கள் தென்படுகின்றன. அவற்றை நோக்கிப் பேசுகின்றாள்:

9. ஆ. ஹி. 154 - இல் இந்த உள்ளுறையின விரிவு காணலாம்.

போற்றி யானிரந்தேன் புன்னை
　　மேலுறை பூங்குயில்காள்!
சேற்றில் வாளை துள்ளும்
　　திருவண்வண் டூர்உறையும்
ஆற்றல் ஆழி அங்கை
　　அமரர்பெரு மானைக்கண்டு
மாற்றம் கொண்டருளீர் மையல்
　　தீர்வதொரு வண்ணமே (6)

[பூகுயில் - அழகிய குயில்; ஆற்றல் - சக்தி மிகுந்த; ஆழி-சக்கரம்; மையல் - காதல்; மாற்றம் - வார்த்தை]

திருவண்வண்டூரில் சென்று எம்பெருமானைக் கண்டு தன் நிலைமையை அறிவித்து அத்தலையினின்றும் ஒரு வார்த்தை கொண்டு வந்து தனக்குரைத்துத் தன் மையலைத் தீர்க்க வேண்டும் என்று இரக்கின்றாள்.

புன்னை மேலுறையும் பூங்குயில்கள் : 'வளர்த்ததனால் பயன் பெற்றேன்' (திருநெடுந். 14) என்னுமாப்போலே ஆசிரியர் பக்கலிலே வளருபவர்கள் (உள்ளுறையில்) குயிலாகச் சொல்லப்பெறுவர். குயில்கட்கு வடமொழியில் 'பரப்ருதம்' என்று பெயர். காக்கையின் கூட்டிலே கொண்டு விடப்பெற்று அவற்றால் உணவூட்டப்பெற்று வளருபவை யாதலால் இப்பெயர் பெற்றது. அதுபோல ஆசாரியனால் வளர்க்கப்பெற்று வளரும் குருகுலவாசிகளைச் சொன்ன தாகின்றது. 'புன்னை மேலுறை' என்றது புன்னையின் மேல் உறை என்றவாறு. இதில் ஒரு சிறப்புப் பொருள் உண்டு. நம் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஒரு மிடறாக ஈடுபட்ட தலமாகிய திருவரங்கம் பெரிய கோயிலில் திருப்புன்னை மரம் நெடுநாளாக இருப்பது யாவரும் அறிந்ததே. பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் இப்புன்னை மரத்தை வருணிக்கின்றார். முன்புள்ள நம் முதலிகள் எல்லாரும் இப் புன்னையின் கீழிருந்து பகவத் விஷயார்த்தம் பற்றிய ஆய்வு

நடத்தினர் என்று தெரிவதால் இங்கு ஆழ்வார்கள் அன்னவர்களை விளிக்கின்றனர் என்று கொள்ளத் தரும். பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வாரும் "மாம் பொழில் தளிர் கோதிய மடக்குயில் வாயது துவர்ப்பு எய்தத் தீம்பலாங்கனி தேனது நுகர்" (பெரி. திரு. 5. 3: 4) என்று குயில்களின் ஓர் இயல்பினை அருளிச் செய்திருப்பதை நாம் அறிவோம். முதலில் மாந்தளிரில் வாய் வைத்ததனால் வாய் துவர்த்துப் போக அந்தத் துவர்ப்பு நீங்குவதற்காகப் பலாப்பழத் தேனைப் பருகுவதாகச் சொல்லுகிற இதனால் முதலில் சாமானிய சாத்திரங்களில் வாய் வைத்துப் பிறகு சிறப்பான சாத்திரங்களில் இன்பமாகப் போதுபோக்கும் படியைச் சொல்லுவதாக அமைகின்றது.

'மையல் தீர்வதொரு வண்ணம் மாற்றம் கொண்டருளீர்': எம்பெருமான் பக்கலிலிருந்து ஏதேனும் ஒரு வார்த்தை கொணர்ந்து அருளினாலல்லது தன்னுடைய காதல் தீர மாட்டாது என்கின்றாள் பராங்குச நாயகி. இங்குப் பொதுவில் 'மாற்றம்' என்றுள்ளதேயன்றி, இன்ன மாற்றம் என்று விளக்கப் பெறவில்லை; இதனால் இஃது அநுகூல மாகவோ, பிரதி கூலமாகவோ அமையலாம். அத்தலையில் ஏதேனும் ஒரு வார்த்தை கிடைத்தால் போதுமானது என்கின்றாள்

பாவிநீ என்றுஒன்று சொல்லாய்
பாவியேன் காண வந்தே (திருவாய் 4. 7: 3)

என்றாற்போல சொன்னாலும் போதும் என்பது குறிப்பு. அடுத்து, வண்டுகளை நோக்கி,

வேறு கொண்டும்மை யானிரந்
தேன்வெறி வண்டினங்காள்!
ஏறு சேவக னார்க்கென்னை
யும் உளள் என்கண் மின்களே(10)

[வெறி - மணம்: சேவகன் - வீரன், இங்கு இராமன்]

என்று பணிக்கின்றாள். ''எமது தலைவர் பெண்பிறந்தார் காரியமெல்லாம் செய்து தலைக் கட்டி விட்டோம் என்றிருப்பர்; அப்படியன்றிக்கே இரட்சக வர்க்கத்தில் நானும் ஒருத்தி இருப்பதாகச் சொல்லுங்கள்'' என்கின்றாள்.

''நான் பல பறவைகளையும் நோக்கித் தூது போம்படி இரந்ததுண்டாகிலும் இப்போது வண்டுகளான உங்களை இரப்பது சாமானியமானதன்று; தனிப்பட்ட காரண மாகவே உங்களை இரக்கின்றேன் என்பாள் 'வேறு கொண்டும்மையான் இரந்தேன்' என்கின்றாள். வேறு கொண்டிரத்தலுக்கு மூன்று காரணங்களை அருளிச் செய் கின்றார். ஒன்று; அப்பறவைகளிலும் இவை பல கால்களை யுடையவை. இரண்டு; இவை சபைக்கு அஞ்சாமல் வளை யத்தே இருந்து வார்த்தை சொல்லவும் வல்லவை. மூன்று இவை தேன் உண்ணும் வண்டுகள். சாரக்ராகிலான ஆசாரியர் களையோ சிடர்களையோ வண்டென்கின்றது. தேனையே தாரகமாகக் கொண்டிருக்கும் வண்டு. 'உளங்கனிந்திருக்கும் அடியவர் தங்கள் உள்ளத்து ஊறியதேன்'' (பெரி. திரு. 4.3: 9) எனப்பட்ட பகவத் விஷயமாகிய தேனையே தாரக மாகக் கொண்டிருப்பார்கள் ஆசாரியர்கள். அடுத்து இப் பதிகத்தில் நாரை, புள்ளினம், அன்னம், கிளி, பூவை ஆகிய வற்றைத் தூதுவிடும் படியாகவுள்ள பாசுரங்களின் நயங்கள் விரி வஞ்சி விடப்பெற்றன.

3. பரத்துவ அந்தர் யாமித்துவத்தில் தூது : 'பொன்னுல காளீரோ?' (6. 8) என்ற திருவாய்மொழி பரத்துவத்தை யும் அந்தர்யாமித்துவத்தையும் நோக்கித் தூது விடப் பெறுகின்றதாக அறுதியிட்டுள்ளனர் ஆசாரியர்கள்.

**மாமது வார்தண்துழாய்**
**முடிவானவர் கோனைக்கண்டு**
**யாமிது வோதக்கவா**
**றென்ன வேண்டும் (4)**

[மாமதுவார் - பெருவெள்ளமாக மது ஒழுகுகின்ற.
வானவர் கோன் - நித்திய சூரிநாதன்]

என்ற பாசுரத்தை உயிராகக் கொண்டு பரத்துவத்திலும்,

எங்குச்சென் றாகிலும்கண்
டிதுவோதக்க வாறென்மினே (5)

[எங்கு ஆகிலும் -எல்விடத்திலாவது; கண்டு - சேவித்து]

என்ற பாசுரத்தைக் கொண்டு அந்தர்யாமித்துவத்திலும் என்று தூதுவிட்ட படியாம் என்று அறுதியிட்டுரைப்பர்.[10]

எம்பெருமான் தனது விபூதிகளை யெல்லாம் ஞானியர் களுடையதாக இலச்சினைப்படுத்தி வைத்திருக்கையாலே அந்த ஞானியரின் ஆணையின்றி ஒருவர்க்கும் ஒன்றுங் கொடான், இவ்வர்த்தகங்களையெல்லாம் ஆழ்வார் இங்கு 'பொன்னுல காளீரோ? புவனிமுழுதாளீரோ?' என்ற கம்பீரமான பாசுரத்தினால் மெய்ப்பிக்கின்றார், புள்ளினங் களை நோக்கிப் பேசுகின்றார் ஆழ்வார் நாயகி.

பொன்னுல காளீரோ! புவனி
முழுதா ளீரோ!
நன்னயப் புள்ளினங் காள்வினை
யாட்டியேன் நானிரந்தேன்
முன்னுல கங்க ளெல்லாம்
படைத்தமுகில் வண்ணன்கண்ணன்
என்னலம் கொண்ட பிரான்தனக்கு,
என்னிலைமை யுரைத்தே(1)

[பொன்னுலகு - நித்திய விபூதி; புவனி லீலாவிபூதி; நல் நலம் - சிறந்த குணம்; புள்ளினம் - பறவைத் திரள்; வினையாட்டியேன் - பாவியான நான்; முன் - முதலில்; முகில் வண்ணன் - காளமேக நிறத்தன்]

10. ஆ. ஹ். 156 (விளக்கம் காண்க)

இதில் பறவை இனங்களை நோக்கி, "நீங்கள் எம் பெருமான் பக்கலிற் சென்று எனது நிலைமையை உரைத்து வந்தால் அதற்குக் கைமாறாக நான் உங்களுக்கு உபயவிபூதிகளையும் பரிசளிப்பேன்" என்கின்றாள்.

நன்னலப் புள்ளினங்காள் : நன்னலம் என்பதாலே தேக குணங்களும் ஆன்ம குணங்களும் சொல்ல விரும்பப் பட்டவை; ஆசாரியனிடத்தில் இரண்டும் உத்தேசியமாகும். விளையாட்டியேன் நான் இரந்தேன்; 'கை புகுந்தவனைக் கைகழியவிட்டு உங்கள் காலிலே விழும்படியான பாவத்தைப் பண்ணினேன். தூது செல்ல வேண்டும் என்று ஆழ்வார் நாயகி இரக்கின்றாள் அல்லள்; உபய விபூதியையும் உங்களுக்கு நான் கொடுக்க நீங்கள் அவற்றை ஆள வேண்டும்' என்று இரக்கின்றாள், எம்பெருமானார் குழுவில் சிடர்கள் ஓர் ஆராய்ச்சி செய்தார்களாம். இவள் உபய விபூதியையும் கொடுத்து விட்டாளாகில் அவன் வந்தால் தானும் அவளும் எங்கிருப்பதென்று, அப்போது அனந்தாழ்வான் பணித் தாராம் - இக் குருவிகட்டின இடத்தே என்று. இரசிகமணி களின் சங்கையும் (வினாவும்) சமாதானமும் பரம போக்கிய மாயிருக்கும். ஈண்டு இன்னொரு வினாவும் எழுகின்றது· பொன்னுலகு ஆளீரோ என்று சொன்னது பொருந்தும்; அது சொன்ன வாயாலே புவனிமுழுதாளீரோ? என்று சொல்வது தகுமோ? உத்தேசியமான நித்திய விபூதியைக் கொடுத்தவள் தாழ்ந்ததாகவுள்ள லீலா விபூதியையும் கொடுக்கத் தேடவேண்டுமோ? என்று. இவை பண்ணுகிற உதவியை நினைத்து இன்னது கொடுப்பது என்றறியாமல் கலங்கிச் சொல்லுகின்றாள் ஆழ்வார் நாயகி என்று கொள்ளல் வேண்டும்.

என் காரியத்தைச் செய்துவந்து உபய விபூதிகளையும் ஆளலாம். எம்பிரான் திறத்து தன்னிலைமை உரைக்க வேண்டும் என்று சொல்லும் பராங்குச நாயகி

எம்பெருமானின் நான்கு சிறப்புகளை நவில்கின்றாள்; (1) "பிரானே, நீ உலகங்களை யெல்லாம் படைத்தவன் 'செடிவைத்தவன் தண்ணீர் வார்ப்பான்' என்பது போல் 'படைத்த நீ அளிக்கவும் வேண்டாவோ?" என்று சொல்லுங்கள்; (2) பிரானே, நீ முகில் வண்ணன் அல்லையோ? நின் வடிவழகைக்காட்டி ஈடுபடுத்திக் கொண்டபின்பு மேன் மேலும் அவ்வழகைக் காட்ட வேண்டாவோ? என்று சொல்லுங்கள்; (3) பிரானே, நீ கண்ணனாக அவதரித்த காலத்தில் ஒவ்வொருவருக்கும் கையாளாய்[11] இருந்தாய்; இப்போது ஒருத்திக்கு அருமைப் படுவது தகுதியோ? என்று சொல்லுங்கள்; (4) பிரானே, ஒருத்தியை இங்ஙனம் முழுவதையும் அபகரித்துக் கொள்ளையடிப்பது பாங்கோ? என்று சொல்லுங்கள்" என்று புள்ளினங்கட்குப் பணிக்கின்றாள்.

அடுத்து, கிளிகளை நோக்கிப் பேசுகின்றாள் பராசங்குச நாயகி.

> மையமர் வாள்நெடுங்கண் மங்கைமார்
> முன்புஎன் கையிருந்து
> நெய்யமர் இன்னடிசில் நிச்சல்
> பாலொடு மேவீரோ?
> கையமர் சக்கரத்துஎன் கனிவாய்ப்பெரு
> மானைக் கண்டு
> மெய்யமர் காதல் சொல்லிக்
> கிளிகாள்!விரைந் தோடிவந்தே (2)

[மையமர் - மையணிந்து; மங்கைமார் - தோழிமார்; முன்பு - முன்னிலையில்; நெய்யமர் - நெய்யோடு பொருந்திய; நிச்சல் - தினந்தோறும்: மேவீர் - உண்ணவேண்டும்; கனி - கொவ்வைக்கனி; மெய் அமர் - உடம் போடு அணைய வேண்டும்படி]

11. பாரதியார்; கண்ணன் - என் சேவகன் ஈண்டு அநுசந்திக்கத் தக்கது.

இதில், "கிளிகாள்! பெருமானைக்கண்டு என் காதலைச் சொல்லி ஓடிவந்து என் கையிருந்து இன்னடிசிலைப் பாலோடு நாள்தோறும் உண்ண வேண்டும்" என்கின்றாள். **மையமர் வாள் நெடுங்கண்;** பரிசனங்களோடு கூடிக் குலாவிச் சத்தான கருத்தைக் கொள்ள வேண்டும் என்று ஆசையாகை யாலே அதுதன்னைக் காட்டுகிறபடி. இது மையணிந்த நெடுங்கண்களையுடைய மங்கைமார்கள் என்பதற்கு அழகிய உள்ளுறையாகும். ஈண்டு பக்தியை மை என்றும், கண் என்பதை ஞானம் என்றும் கொள்ள வேண்டும்.

**நெய்யமர் இன்னடிசில் நிச்சல் பாலொடு மேவீரோ:** நெய், அடிசில், பால் என்ற மூன்றைச் சொன்னதால் தத்துவம், இதம், புருஷார்த்தம் என்ற மூன்றையும் குறிப்பிட்டவாறு. "உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" (திருவாய் 6. 7 : 1) என்று இருக்கக் கூடியவளன்றோ இவள்? பகவானின் பெருமை, பாகவதரின் பெருமை, ஆசாரியரின் பெருமை என்ற மூன்றையும் சொல்லிற்றாகவும் கொள்ளலாம். **மெய்யமர் காதல்;** "அவளுக்கு உன்பக்கலிலுள்ள சிநேகம் மெய்யான சிநேகம் என்று அவனுக்குச் சொல்லி" என்பது ஆறாயிரப்படி அருளிச் செயல். "திருமேனியிலே அணைய வேண்டும் படியான காதல் என்னுதல்; என் உடம்போடே யணைய வேண்டும் படியான காதல் என்னவுமாம்" என்பது ஈடு. **கிளிகாள்;** கிளி வலையுள் அகப்படுமாப்போலே 'மாதரார் கயற் கண்என்னும் வலையுள் படாமல்' ( ) 'தாமரைத்தடங்கண் விழிகளின் அகவலைப் படுப்பான்' ( ) என்கின்றபடி எம்பெருமானுடைய திருக்கண்ணோக்க வலையில் அகப்பட்டும் கிளி வளர்த் தெடுப்பாருடைய கைவசம் இருப்பதுபோலே போஷகர் களாகிய ஆசாரியர்கட்கு அதீனர்களாக இருந்து கொண்டும்' 'சொன்னதைச் சொல்லுமாம் கிளிப்பிள்ளை' என்றவாறு

கிளி தனக்குக் கற்பித்ததையே சொல்லுமாப்போலே, முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப்பின் ஓர்ந்து தாம் அதனைப் பேசுபவர்களாயும் இருப்பவர்கள் கிளியாகப் பேசப் பெறுபவர்கள், இன்னொரு பாசுரத்தில் (5) 'யான் வளர்த்த கிளிகாள்!' என்கின்றாள்! நெய்அமர் இன்னடிசில் நிச்சல் பாலொடும் ஊட்டி வளர்த்ததைச் சொல்லிக் காட்டு கின்றாள். "வளர்த்ததனால் பயன் பெற்றேன்; வருகவென்று மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே" (திருநெடுந். 14) என்கின்றாள் எங்கள் தோழிமார்களுள் ஒருத்தி; அப்படியே நானும் கை கூப்பி வணங்கும் படியாகக் காரியம் செய்யுங்கள்" என்கின்றாள்.

பின்னர் சில பூவைகளைத் தூது விடுகின்றாள் பராங்குச நாயகி.

என்மின்னு நூல்மார்வன் என்கரும்பெரு
　　மான்என் கண்ணன்
தன்மன்னு நீள்கழல்மேல் தண்துழாய்
　　நமக்கன்றி நல்கான்
கன்மின்கள் என்றுஉம்மையான் கற்பியா
　　வைத்தமாற் றம்சொல்லிச்
சென்மின்கள் தீவினை யேன்வ
　　ளர்த்தசிறு பூவைகளே (6)

[மின்னு நூல் - பூணு நூல்; கழல் - திருவடி; கன்மின்கள் - கற்றுக் கொள்ளுங்கள்]

இதில், "தன் ஒப்பனை யழகாலும், வடிவழகாலும் என்னை ஈடு படுத்திக்கொண்ட எம்பெருமானிடம் சென்று 'இதுவோ தக்கவாறு?' என்று செல்லுங்கள்" என்கின்றாள், திருத்துழாயை அவர் பல அவயவங்களிலும் அணிந்து கொள்வர்; எதை எவருக்குக் கொடுத்தாலும் அடிமேல் புனைவது அடியார்களுக்கே யாகையால் திருவடிகளில் சாத்திய திருத்துழாயை நமக்கன்றி மற்றையோர்க்குத்

தந்திடமாட்டார்; ஆகையாலே நீங்கள் சங்கையின்றிச் செல்லுங்கள்'' என்று சொல்லி அனுப்புகின்றாள். ''உங்களுக்கு யான் கற்பித்து வைத்த வார்த்தைகள் பலவும் உண்டே. 'தயிர்ப்பழம் சோற்றொடு பாலடிசிலும் தந்து பயிற்றிய சொற்கள் இல்லையோ? அவற்றைச் சொல்லிக் கொண்டே செல்லுங்கள்.'' என்கின்றாள் ''துயவ அநுசந்தானம் பண்ணிக் கொண்டே செல்லுங்கள்'' என்பது உள்ளுறை.

தீவினையேன் வளர்த்த ; உள்ளத்தைத் தொடும்படியான (மர்மஸ்பர்சியான) பொருளை நம்பிள்ளை வெளியிட்டருள் வதைக் காணீர். ''என்னுடைய பாபம் இருந்தபடி பாருங்கோள்; அவனும் நானும் கூடஇருந்து உங்களைக் கொண்டாடுகை யன்றிக்கே உங்களைக் கொண்டு, காரியம் கொள்ளும்படியான பாபத்தைப் பண்ணினேன், வயிற்றில் பிறந்தாரை இடுவித்துக் காதலனை (அபிமதனை) அழைத்துக் கொள்ளுதலைப் போன்ற புன்மை இல்லையே'' என்பதாக.

இந்தத் திருவாய்மொழியில் ஆழ்வார் நாயகி இவற்றைத் தவிர வண்டினம், தும்பி, பூவை, குருகு பெருநாரை (புதா இனம்), அன்னம் இவற்றைத் தூது விடுவதையும் காண் கின்றோம்.

4. **அர்ச்சையில் தூது** : திருமூழிக்களத்து எம்பெருமானின் அழகையும் குணங்களையும் பற்றாசாகக் கொண்டு அவன் பால் தூது விடுவதாகக்கொள்வது 'எம் கானல் அகம் கழிவாய்'(9. 7) என்ற திருவாய்மொழி. தன் சோலையில் இரைதேடித் திரியும் நாரையைத் தூது போகுமாறு வேண்டு கின்றாள் பராங்குசநாயகி.

**எம்கானல் அகங்கழிவாய்**
**இரைதேர்ந்திங் கினிதமரும்**
**செங்கால மடநாராய்!**
**திருமூழிக் களத்துறையும்**

**கொங்கார்பூந் துழாய்முடியெங்**
**குடக்கூத்தர்க் கென்தூதாய்**
**நுங்கால்கள் என்தலைமேல்**
**கெழுமீரோ நுமரோடே(1)**

[*கானல் - கடற்கரைச்சோலை; அகம் கழி-உள்ளிருக்கும் கழி; கொங்கு-தேன்; கெழுமீரோ-சேர்கின்றீர்களா*]

பறவைகளைத் தூது விடுகின்ற இத்திருப்பதிகத்தின் முதற் பாசுரத்திலேயே ஆசாரியர்களே பறவைகளாகக் கருதப் பெறு கின்றனர் என்பதைத் தெளியவைத்தருள்கின்றார் ஆழ்வார். 'நும்கால்கள் என்தலைமேல் கெழுமீரோ நுமரோடே' என்னும் ஈற்றடி அமைந்த அழகு மிகவும் அற்புதமானது. திருவிருத்தத்தில் தூது போகைக்கு வண்டுகளை அழைக்கும் போது (54) எம்பெருமானுடைய திருவடியிணைக்கீழ் தம்மைச் சேர்ப்பிக்கவல்ல ஆற்றல் வாய்ந்த ஆசாரியர் களையே தூதர்களாகக் கொண்ட அருமைப் பாட்டை நன்கு காட்டியருளினார். அப்படிப்பட்ட ஆசாரியர்கள் தம் சுற்றத்துடன் தம் தலைமீது திருவடிகளை வைப்பதே பெறற்கரிய பேறு என்பதை இத்தூதுப்பதிகத்தில் உயிராக வைத்து அருள்செய்கின்றார். 'செங்கால மடநாராய்!' என்று கால்களைச் சிறப்பித்துச் சொல்வதால் 'ஆசாரி யரின் திருவடிகளே' தஞ்சம் என்ற தொனிப் பொருளைப் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம். 'அகங்கனிவாய் இரை தேர்ந்து'; அந்தரங்கமாய் வந்து இருக்கிறபடியைச் சொன்ன வாறு. "தூதனுப்ப உங்களைத் தேடிப்பிடிக்க வேண்டாதபடி அருகே வந்து இருக்கப் பெற்றபேறு என்னே!" என்று உள் குழைந்து சொல்லுகின்றாள். உள்ளுறையில் ஆசாரியர் களைத் தூதுவிடுவதாகச் சொல்லுகையாலே எம்பெருமானார் திருமாளிகையிலேயே வந்திருந்து காலட்சேபம் செய்தருளின பெரிய நம்பிகளைப் போன்ற ஆசாரியர்களை இங்குக் கருதுவதாகக் கொள்ளலாம்,

எம்பெருமான் தனது அடியார் குழாங்களுடன் திரு மூழிக் களத்தில் கலந்து பரிமாறிக் கொண்டிருக்கும் நிலையில் ஒருகால் தன்னை (பராங்குசநாயகியை) மறந்திருத்தல் கூடும். அஃதன்றித் தன்னைப் புறக்கணித்தற்கும் காரணம் இல்லை. இந்நிலையிலிருக்கும் அவரைப் பார்த்துச் செய்தி சொல்லவேண்டும் என்று குருகினங்களை வேண்டுகின்றாள் ஆழ்வார் நாயகி

நுமரோடும் பிரியாதே
    நீரும்நும் சேவலுமாய்
அமர்காதல் குருகினங்காள்!
    அணிமூழிக் களத்துறையும்
எமராலும் பழிப்புண்டு
    இங்கென் தம்மால் இழிப்புண்டு
தமரோடு அங்கு உறைவார்க்குத்
    தக்கிலமே கேளீரே(2)

[நுமர்-உம் உறவினர்; சேவல்-ஆண்குருகு; எமர்-எம் உறவினர்; தமர்-அவருடைய உறவினர்; உறைவார்-வசிப்பார்; தக்கிலம்-தகுதியுடையோம்]

என்ற பாசுரத்தின் மூலமாக.

எம்பெருமான் உகந்த அடியார் குழுக்களுடன் தானும் வந்து அடிமை செய்வதற்குத் தகுதியற்றவளா என்று கேட்கு மாறு நாரையின் ஒரு பிரிவாகிய குருகினங்களைப் பணிக் கின்றாள். ''அவன் தன் அடியார்களுடன் கூடிக் குலவுவது போல் நீங்களும் உங்கள் உறவினர்களுடன் கூடி வாழ் கின்றீர்கள். அவன் இருக்கும் நிலை உங்கள் திறத்தில் பலித்துள்ளது. அங்ஙனமே என் திறத்திலும் பலிக்க வேண்டாவோ?'' என்கின்றாள். எம்பெருமான் அடியார் களுடன் கூடிவாழ்வது போலவும் குருகு தன் இனத்துடன் கூடி வாழ்வது போலவும், தானும் தன் காதலனாகிய எம்

பெருமானுடன் வாழும்படிச் செய்யவேண்டாமா? என்பது குறிப்பு. "குறைவாளர் காரியம் குறைவற்றார்க்குத் தீர்க்க வேண்டாவோ? உண்டார்க்குப் பட்டினி கிடந்தார் பசி பரிகரிக்கப் (நீக்கற்குப்) பிராப்தமிறே" என்பது. ஈடு "அணி முழிக்களத்துறையும் தம்மால் இழிப்புண்டு எமராலும் பழிப் புண்டு இங்கு ஏன்?' என்று அந்வயித்துப் பொருள் கொள்ள வேண்டும். "திருமுழிக்களத்து நாயனார் யாத்ருசிகமாக (யாரோ ஒருவர் இச்சையில் உண்டாவது) ஒரு கால் கலந்து கைவிட்டார். இப்படி அத்தலைக்குமாகாதே உறவினர்க்கு மாகாதே கைவல்யம் போலிருக்கிற இவ்விருப்புக்கு என்ன பயன்?" என்கின்றாள்.

அடுத்து, கொக்கினங்களையும், குருகினங்களையும் வேண்டுகின்றாள் ஆழ்வார் நாயகி. எம்பெருமானிடம் இரண்டில் ஒன்று கேட்டுவந்து கூறுமாறு குறிப்பிடுகின்றாள்.

**தக்கிலமே கேளீர்கள்;**
**தடம்புனல்வாய் இரைதேடும்**
**கொக்கினங்காள்! குருகினங்காள்!**
**குளிர்முழிக் களத்துறையும்**
**செக்கமலத்து அலர்போலும்**
**கண்கைகால் செங்கனிவாய்**
**அக்கமத்து இலைபோலும்**
**திருமேனி அடிகளுக்கே(3)**

[குருகு-கொக்கில் ஒருபிரிவு (கொய்யடிநாரை); கமலம்-தாமரை; திருமேனி அடிகள்-எம்பெருமான்]

என்பது பாசுரம். இஃது இப்பதிகத்திற்கு உயிரானது. தம்மை அடைந்த அடியார்களுடன் உண்டான சேர்க்கையின் இனிமையால் பிரிந்தார்க்கு உயிர்தரிக்க வொண்ணாதபடி யிருக்கும் தம்முடைய வடிவழகை மறந்து தன்னை நினையா திருத்தல் கூடும் என்பது அவளது உட்கிடக்கை. இவ்வடி

வடிவழகைப் பிரிந்தார் எங்ஙனம் உயிர் தரிப்பர் என்பதனை அறிவித்து விட்டால் உடனே புறப்பட்டு வந்து விடுவார் என்பதாகக் கருதுகின்றாள். எனவே, அவரது வடிவழகை அப்பறவைகட்குக் குறிப்பிடுகின்றாள். அவருடைய உறுப்பு கள் எல்லாம் செந்தாமரைபோல் இருப்பதால் அவருடைய திருமேனி தாமரையின் இலைபோல் உள்ளது என்கின்றாள். தாமான தன்மையில் எம்பெருமானுக்கும் தடாகத்திற்கும் ஒற்றுமைகாட்டி அவனை 'வாசத்தடம் (8.5 : 1) என்று கூறினவரன்றோ? ஆழ்வார் எம்பெருமானை முதன் முதலாகக்காண்பவர்களோடு அவரது திருக்கண்கள் முதலுறவு பண்ணும். 'கரியவாகிப் புடைபரந்து, மிளிர்ந்து செவ்வரி யோடி நீண்ட அப்பெரிய ஆயகண்கள்' (அமலனாதி-8) கண்டாரைச் சொக்கவைத்துவிடும். அத்திருக்கண் நோக்குக் குத் தோற்றவர்களை அவருடைய திருக்கைகள் சேர்த்து அணைத்துக் கொள்ளும்; கைகள் அணைக்குங்கால் அந்த ணைற்றின்பத்திற்குத் தோற்றார் அவருடைய திருவடிகளில் விழுவர்; திருவடிகளில் விழுந்தாரை நல்ல சொற்கள் நல்கி அவர்களைத் தரிப்பிக்கும் அவனுடைய புன்முறுவல். இங்ஙனம் உறுப்புகளின் வனப்பையும் வடிவழகையும் காட்டி அடிமை கொண்டார் அவர். அவ்வடிவழகிற்குத் தோற்றுப் பசலையைத் தரித்திருப்பார் அவருக்குத் தகாதவரோ? என்று கேட்குமாறு பணிக்கின்றாள் ஆழ்வார் நாயகி.

'தக்கிலமே கேளீர்கள்' என்பதற்கு நம்பிள்ளை ஈடு: "நாம் ஒன்றிலே துணியும்படிக் கேட்டுப்பாருங்கள். அவர் இன்னும் இது வேணுமென்றிருந்தாராகில் பிராணன்களை வருந்தி நோக்கிக் கொண்டு கிடக்கவும், வேண்டாமென் றிருந்தாராகில் நாமும் ஒன்றிலே துணியும்படி அறுதியாகக் கேட்டுவிடுங்கோள்; அவர் இன்னும் 'இவள் வேண்டும்' என்று இருந்தாராகில் பின்னை சடையினாலும் தூக்கிவிட்டுக் கொள்ளத் துணிந்த பிராட்டியைப்போல் ஏதாவதொரு

வழியில் துணிவதாக உறுதி கொண்டு 'விருப்பம் உண்டா? இல்லையா?' என்ற இந்த இரண்டில் ஒன்று அறுதியிட்டுக் கொண்டு வாருங்கள்'' என்று வேண்டுகின்றாள்.

மேலும் தூது செய்ய ஆயத்தமாகவுள்ள குருகுக் கூட்டத்திலுள்ள ஓர் இளங்குருகினை விளித்து இவ்வாறு பேசுகின்றாள்.

**பூந்துழாய் முடியார்க்குப்**
**பொன்னாழிக் கையார்க்கு**
**ஏந்துநீர் இளங்குருகே!**
**திருமூழிக் களத்தார்க்கு**
**ஏந்துபூண் முலைபயந்து**
**என்இணை மலர்க்கண் நீர்ததும்பத்**
**தாம்தம்மைக் கொண்டுஅகல்தல்**
**தகவுஅன்று என்று உரையீரே (9)**

[பொன் ஆழி - அழகிய திருஆழி; பூண் - ஆபரணம்; தகவு - தகுதி.]

எம்பெருமானுடைய வடிவழகு நினைக்க நினைக்க ஆழ்வாரை உருக்கி விடுகின்றது என்பது இப்பாசுரத்தில் தெரிவிக்கப்பெறுகின்றது. ''அன்னார் திருமுடியிலே திருத் துழாய்மாலை சாத்திக் கொண்டிருக்கும் அழகு ஒன்று மட்டிலும் போதுமே; அதற்குமேல் கையும் திருவாழியும் ஆன அழகு 'சுடராழியும் பல்லாண்டு' (திருப்பல்-1) என்று ஆலத்தி வழிக்கும்படியன்றோ உளது? இவ்வழகுகளை நினைத்ததனாலன்றோ நான் பசலை நிறம் அடைந்தும் கண்ணீர் சோர்ந்தும் நிற்கின்றேன். இந்நிலையை அவருக்குப் புலப்படுத்துங்கள்'' என்று தெரிவிக்கின்றாள் பராங்குச நாயகி. ''எம்பெருமான் என்னை விட்டுப் பிரிந்து போகும்பொழுது தன்னுடைய திருமேனியை இங்கு வைத்து விட்டன்றோ போயிருக்க வேண்டும்? அந்தத் திருமேனியை

யும் கொண்டு அகன்றனரே. தமக்கு உரிமைப்பட்ட பொருளை விட்டுவிட்டுப் பிறர்க்கு உரிமைப்பட்ட பொருளைக் கொண்டு போவது நியாயமா? பக்தர்கட்கு அல்லவா அவர் உடம்பு இருப்பது?''[12] என்று உரைக்குமாறு பணிக்கின்றாள். உலகில் விநோதமாகப் பேசுகின்றவர்கள் "நடந்தால் உடலும் கூட வருகின்றது; இதுதான் எனக்குப் பெரிய நோய்'' என்று சொல்வதைக் கேட்டிருக்கின்றோம். இஃது ஒரு நகைச்சுவையாகக் கொள்ளப்பெறுகின்றது; இந்த முறையில்தான் உள்ளது ஆழ்வாருடைய வாசகமும். 'தாம் போக வேண்டுமானால் தம்மை வைத்துவிட்டுப் போக வேண்டாவோ?' என்கின்ற வாசகத்தின் கருத்து இவ்வளவே—அவர் இறைப்பொழுதும் பிரிந்துபோகவே தகாது என்பதாம். "இங்ஙனம் செய்தது தகுதியன்று'' என்று தெரிவிக்குமாறும் வேண்டுகின்றாள். 'தமக்கு உரிமைப்பட்ட பொருள்' என்பதை, "தனக்கேயாக எனைக் கொள்ளும் ஈதே'' (திருவாய் 2.9 : 4) என்று மூதலித்தவர் (மெய்ப்பித்தவர்) அன்றோ இவர்?

இந்நிலையில் வானத்தில் உலாப்போகும் சில மேகங்கள் ஆழ்வார் நாயகியின் கண்ணில் படுகின்றன; உடனே அவற்றைத் தூது போகுமாறு வேண்டுகின்றாள்.

திருமேனி அடிகளுக்குத்
　　தீவினையேன் விடுதூதாய்
திருமூழிக் களம்என்னும்
　　செழுநகர்வாய் அணிமுகில்காள்!

12. 'தமக்கு உரிமைப்பட்ட பொருள்' என்றது ஆழ்வாராகிய நாயகியை, 'பிறர்க்கு உரிமைப்பட்ட பொருள்' என்றது இறைவனது திருமேனியை.

**திருமேனி அவட்குஅருளீர்**
**என்றக்கால் உம்மைத்தன்**
**திருமேனி ஒளியகற்றித்**
**தெளிவிசும்பு கடியுமே? (4)**

[திருமேனி அடிகள் - எம்பெருமான்; கடியுமே - தண்டிப்பரோ]

சில மேகங்களை நோக்கி, "என் வார்த்தையை அவனுக்குச் சொன்னால் உங்கட்கு ஏதேனும் தண்டனை நேருமோ?" என்கின்றாள். வடிவழகையே அடையாளமாகக் கொண்டு விளங்கும் எம்பெருமானுக்குத் 'திருமேனி அடிகள்' என்று ஒரு திருநாமம் சாத்துகின்றாள் பராங்குச நாயகி. வடிவழகி னால் ஆன்மாக்கள் அனைத்தையும் தோற்பித்து அடிமை கொள்பவருக்கு இது பொருத்தமான பெயரன்றோ? எதிரிகளையும் அவ்வடிவம் கவருமல்லவா? கண்ணன் தூது போகுங்கால், அவனுக்கு அவையில் எவரும் மரியாதை செலுத்தலாகாது என்று ஆணையிட்டிருந்தான் துரியோதனன். கண்ணபிரான் ஆங்கு எழுந்தருளுங்கால் அவையிலிருந்த அரசர்கள் அனைவரும் கண்ணனின் சோதி வடிவு கண்டு பரவசராய் எழுந்து மரியாதை செலுத்தினர். துரியோதனனும் துடை நடுங்கி எழுந்துவிட்டு உடனே தன் உறுதி தடுமாறியதற்கு வருந்தி 'என்னே இத்திருமேனி அழகு?' என்று கண்ணனை உற்று நோக்கினானாம். இதனைப் பெரியாழ்வாரும்,

**கழல்மன்னர் சூழக்**
**கதிர்போல் விளங்கி**
**எழலுற்று மீண்டே**
**இருந்துஉன்னை நோக்கும்**
**கழலை பெரிதுடைத்**
**துச்சோதனனை** (பெரியாழ் 1.8 : 5)

என்று அருளிச் செய்வர். ''அப்படிப்பட்ட திருமேனியை இழந்து உங்கள், காலில் விழும்படியான 'தீவினையேன்' ஆயினேனே'' என்கின்றாள். எதிர்மறை இலக்கணையால் 'நல்வினையேன்' என்பது குறிப்பு. பரமன் அடியார்களின் திருவடியில் வீழ்தல் நல்வினைப் பயனன்றோ? ''நான் விடு தூதாய் நீங்கள் திருமூழிக்களத்திற்கேகி அத்திருமேனி அடிகளை நோக்கி, 'திருப்புளியடியிலே கிடக்கின்ற ஒருத்தி உம்முடைய திருமேனியில் ஆசை வைத்து நைகின்றாள்; அவருக்கு உமது திருமேனி கொடுத்தருள்வீர்' என்று சொல்லுவீர்களாக'' என்று குறையிரக்கின்றாள். இச் சொல்லுதவி புரியின் அவர்கள் புதிய பொலிவினைப் பெற்றுத் தெளிவிசும்புப் பேறும் பெறுவர் என்கின்றாள்.

மேலும், மேகங்களை நோக்கி இவ்வாறு பேசுகின்றாள் :

**தெளிவிசும்பு கடிதோடித்**
**தீவளைத்து மின்இலகும்**
**ஒளிமுகில்காள்! திருமூழிக்**
**களத்துறையும் ஒண்சுடர்க்கு**
**தெளிவிசும்பு திருநாடாத்**
**தீவினையேன் மனத்துறையும்**
**துளிவார்கட் குழலார்க்கு**
**என் தூதுரைத்தல் செப்புமினே (5)**

[தீ - மின்னல்; தெளிவிசும்பு - பரமபதம்; துளிவார்கள் குழல்-துளித்து ஒழுகும்தேனினையுடைய மயிர்முடி]

இங்கு மேகங்களை ஆசாரியர்களாகக் கொள்ளவேண்டும். விண்ணில் விரைவாகச் சந்தித்தலும் கொள்ளிவட்டம் போல் மின்னல் விளங்கப்பெறுதலும் முகில்களின் இயல்பு. ஆசாரியர்கட்கும் லீலாவிபூதி, நித்திய விபூதி என்ற இடங்களில் சஞ்சரிக்க வல்லமையுண்டாதலால் 'தெளி விசும்பு கடிதோடுகை' அவர்கட்கும் பொருந்தும். நன்றாக மழைபொழியும் சமயத்தில்தான் மேகத்தில் மின்னல்

தோன்றும். அங்ஙனமே சிறப்புப் பொருள்களை அருளும் நிலையில் ஆசாரியர்களும் இருப்பர். மேலும் மேகத்தை 'ஒளிமுகில்' என்று விளித்து, எம்பெருமானையும் 'ஒண்சுடர்' என்று குறிப்பிட்டிருப்பதிலும் ஒரு தனிச்சிறப்பு உண்டு. ஆசாரியர்கள் எம்பெருமானினின்றும் வேறுபட்டவர்கள் அல்லர் என்றும், இருவரும் எல்லாவற்றிலும் ஒப்புமை யுடையவர் என்றும் காட்டற்காகவே இங்ஙனம் கூறப்பெற்ற தாக நாம் கொள்ளல் வேண்டும்.

பரமபதத்தில் காட்டும் பெருவிருப்பத்தை எம்பெருமான் தன் பக்கம் காட்டுவதாக ஆழ்வார் நாயகி கொள்வதால் 'தெளிவிசும்பு திருநாடாத் தீவினையேன் மனத்துறையும்' என்று குறிப்பிடுகின்றாள். நெஞ்சில் எழுந்தருளியிருக்கும் அவனைக் கண்ணால் காணமுடியவில்லையே என்று நைகின்றாள். துன்புறுபவர்களைக் காப்பதற்கென்று திருமுடியில் தனிமாலையிட்டிருக்கும் எம்பெருமானுக்குத் தன் விண்ணப்பத்தைத் தெரிவிக்குமாறு வேண்டுகின்றாள். ஈண்டு ஆறாயிரப்படியின் அருளிச்செயல் சுவை மிக்கது. "அவளுக்கு அருளீர் என்ன அமையுமோ? இன்னாருக் கருளீர் என்ன வேண்டாவோ என்னில்; "யாவள் ஒருத்தி யுடைய நெஞ்சை உமக்குத் திருநாடாகக் கொண்டு நீர் உறைகின்றீரோ அவளுக்கு அருளீர் என்று சொல்லிகோள் என்கின்றாள்" என்பதை எண்ணி எண்ணி மகிழ்வோமாக.

சிறிது நேரத்தில் பராங்குச நாயகி சில அன்னங்களைக் காண நேரிடுகின்றது. அவற்றைப் பார்த்து வேண்டுகின்றாள். ஒருத்தியை இங்ஙனம் கலங்க வைப்பது அவருடைய பெருமைக்குத் தகுதியன்று என்பதை உணர்த்துமாறு செப்பு கின்றாள்.

**தகவுஅன்றுஎன்று உரையீர்கள்**
**தடம்புனல்வாய் இரைதேர்ந்து**
**மிகஇன்பம் படமேவும்**
**மென்னடைய அன்னங்காள்!**

மிகமேனி மெலிவுஎய்தி
　　மேகலையும் ஈடுஅழிந்துஎன்
அகமேனி ஒழியாமே
　　திருமூழிக் களத்தார்க்கே (10)

[தகவு - நியாயம்; தடம் - விசாலமான; அகமேனி - அந்தரங்கமான உடல்]

"தகவு அன்று என்று உரையீர்கள்"—என்பது இதயத்தில் தைக்கும்படியான சொல் என்பது ஆழ்வார் நாயகியின் திருவுள்ளம். எம்பெருமானது பிரிவினால் உடலும் மெலிந்து மேகலையும் தங்காதபடி சீர்குலைந்தது. இனி தன் 'அகமேனி' ஒழிவதற்குமுன் தன் நிலையைத் தெரிவிக்குமாறு அன்னங்களை வேண்டுகின்றாள். எல்லா ஆன்மாக்களும் எம்பெருமானுக்கு உடலாக இருப்பினும் (சரீர-சரீரி பாவனை) தன் ஆன்மாவை 'அகமேனி' என்று சிறப்பிக்கின்றார் ஆழ்வார். இவ்வுலகில் எம்பெருமானுக்குக் கிடைத்தற்கரிய 'மகாத்மா' அன்றோ ஆழ்வார்? ஈண்டு ஆசாரியர்களே அன்னமாக விளிக்கப்படுகின்றனர் என்பது அறியத் தக்கது, தங்கட்குப் பேரின்பம் பயக்கும் நுண் பொருள்களைத் தேடுவதில் நோக்குடையவர்களாதலாலும் நல்ல நடத்தையை யுடையவர்களாதலாலும் அவர்கள் 'மென்னடைய அன்னங்கள்' எனப்பட்டனர்.

இவற்றைத் தவிர ஆழ்வார் நாயகி வண்டினம், தும்பிகள் ஆகியவற்றையும் தூது விடுகின்றாள். விரிவஞ்சி இவை பற்றிய பாசுரங்களின் நயம் காட்டப்பெறவில்லை.

இங்ஙனம் ஆழ்வார் நாயகி பல இடங்களில் தூது விட்டாலும் அடையத்தக்க பொருள் ஒன்றேயாகும். ஐந்து நிலைகளிலும் உள்ள எம்பெருமான் ஒருவரேயாவர். a = b = c = d = e என்பது போல இடத்தின் வேற்றுமையே யொழியப் பொருளில் வேற்றுமை இல்லை.[13] வைணவ சமயத் தத்துவப்படி ஐந்து நிலைகளிலுமுள்ள இறைவன் ஒருவனேயாவன்.

13. ஆ ஹி. 151 (விளக்கம் காண்க)

## 12. இறையநுபவம்

ஆழ்வார் கருவூரிலிருந்தபோதே ஞானத்திரு உடையவர். 'கருஅரங்கத்துள் கிடந்து கைதொழுதேன்' (முத. திருவந்.6) என்று பொய்கையாழ்வார் கூறுவது போலவும், 'கருக்கோட்டியுள் கிடந்து கைதொழுதேன்' (இரண். திருவந். 87)என்று பூதத்தார் கூறுவதுபோலவும் இவர் கருவிலேயே திருவுடையவர். உறையூருக்கு வந்த பிறகும் இவர் ஓதாது உணர்ந்த ஞானச் சிறப்புடையவர் என்று வரலாறு கூறுகின்றது. அறிவு தோன்றுதற்குரியதல்லாத மிக்க இளம்பருவத்திலேயே இவ்வாழ்வார் இறைவன்பால் பேரன்பு கொண்டவர் என்பதை,

> அறியாக் காலத்துள்ளே
> அறியா மாமாயத்து
> அடியேனை வைத்தாயால் —திருவாய் 2.3:3

என்ற இந்த ஆழ்வாரின் திருவாக்காலேயே அறியலாம்.

அறியாக்காலந்தொட்டு இறைவனிடத்து உண்டாகிய ஆழ்வாரின் அன்பு நாளுக்கு நாள் பெருகி வளர்வதாயிற்று. இறைவனை நினைத்தல், அவனை அன்போடு வணங்குதல் என்பன போன்ற செயல்கள் ஒருவித கடமையோடு நடைபெறுவன என்று இல்லாமல், அவை அவரது இயல் பாகவே அமைந்துவிட்டன. அவனை நினைக்காமல் இருக்க முடியாத நிலையும் ஏற்பட்டுவிட்டது. மக்கள் உணவின்றி

உயிர்வாழ இயலாதவராக இருப்பது போல, ஆழ்வார் எம்பெருமானை நினையாதிருக்க—அன்பை விட்டிருக்க—இயலாதவராகி விட்டார்.

அடியேன்நான்
உண்ணா நாள்பசி யாவதொன் றில்லை;
ஓவா தே'நமோ நாரணா!' என்று
எண்ணா நாளும் இருக்கெசுச் சாம
வேத நாண்மலர் கொண்டுன பாதம்
நண்ணா நாள்அவை தத்துறு மாகில்
அன்றெ னக்கவை பட்டினி நாளே

—பெரியாழ். திரு 5.1:6

[நண்ணா - கிட்டாத]

என்பதில் விட்டுசித்தன் 'நான் உண்ணாதபோது பசி என்பது சிறிதும் உண்டாவதில்லை; இடைவிடாமல் 'நமோ நாராயணா!' என்று சொல்லாத நாளும் நான்கு மறை களை நாவினால் நவிற்றிக் கொண்டும் அப்போதலர்ந்த மலர்களை எடுத்து வந்து நின் திருவடிகளைக் கிட்டாத நாட்களும்தான் என் பட்டினி நாள்' என்று சொல்வதுபோல் ஆழ்வார் நிலை ஏற்பட்டுவிட்டது. எம்பெருமான் நினைவு அவர் உள்ளத்தில் இன்ப ஊற்றாகி விட்டது. அதனால் நம் முன்னோர் 'ஆழ்வார் பிரபத்தியை மேற்கொண்டவரே; ஆனால் பக்தி அவருக்கு தேக யாத்ராசேஷம்' (பக்தியின்றி உயிர்வாழ இயலாதவர்) என்று அறுதியிட்டு உரைத்தனர்.

மக்கள் இரண்டு வழிகளில் இன்பம் அடைகின்றனர். ஒன்று, ஐம்பொறிகளால் அறிதற்குரிய பொருள்களை அநுபவிக்கும்பொழுது உள்ளத்தில் இன்பம் உண்டாகின்றது. தமக்கினிய உறவினர்கள், நண்பர்கள், இனிய காட்சிகள் காணும்போதும் அறுசுவை உண்டிகளை உண்ணும்போதும், தம் மக்கள் மழலைச் சொற்கள், இன்னிசைக் கச்சேரி இவற்றைக் கேட்கும்போதும், கற்பமைந்த இல்லாளோடு

உடலுறவு கொள்ளும் போதும் உள்ளத்தில் இன்பம் உண்டாகும். இங்ஙனம் ஐம்பொறிகளால் ஏற்படும் இன்பமே யன்றி, இவற்றின் தொடர்பில்லாமலேயே உள்ளத்தில் இன்பம் உண்டாதலும் உண்டு. இதுவே மிக உயர்ந்த இன்பம்; மானச இன்பம். துன்ப நிகழ்ச்சிகளை அநுபவித்துக் கொண்டே மனத்தில் இன்பம் உண்டாதலும் உண்டு. நாடு விடுதலை பெறும்பொருட்டு நாட்டுப் பற்றாளர்கள் சிறை யில் அநுபவித்த துன்பங்களை இன்பமாகக் கொண்டார்க ளன்றோ? 'அஞ்சிறைய மடநாராய்!' (1.4:1) என்று தொடங்கும் திருவாய்மொழியில் 'வன்சிறையில் அவன் வைக்கில் வைப்புண்டால் என்செயுமோ?' என்ற அடியின் பொருளை விளக்குமிடத்தில் "பரார்த்தமாகச் சிறை இருக்கும் இருப்பு கிடைக்கவேண்டுமே!" என்றார் உடையவர். பரார்த்தமாகச் சிறையிருக்கும் இருப்பு உடலளவில் துன்பமாயினும் மன அநுபவத்தில் இன்பமாகும்-பேரின்பமாகும்—என்பது யதிராசரின் கருத்தாகும்.[1]

இன்பமும் துன்பமும் அவரவர் உள்ளத்தில் உண்டாகும் ஒருவித கொள்கை. ஆதலால், உடல் தொடர்பின்றியும் உடலளவில் துன்பமிருப்பினும் மனத்தில் இன்பம் உண்டாதல் கூடும். வள்ளுவப் பெருந்தகையின் கருத்து ஈண்டு நினைத்தல் தகும்.

> இடுக்கண் வருங்கால் நகுக; அதனை
> அடுத்தூர்வது அஃதொப்பது இல் (621)

என்ற குறளில் 'துன்பம் வரும்போது சோர்ந்து அழியாமல் உள்ளத்தில் மகிழவேண்டும்; வந்த துன்பத்தை வெல்வதற்கு அதைப்போல் சிறந்த வழி இல்லை' என்று விளக்குவார். மேலும்,

1. யதிராசர்—துறவிகளின் தலைவர்; இவர் இராமாநுசர், இவருக்கு உடையவர், எம் பெருமானார் என்ற திருநாமங்களும் உண்டு.

**இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்**
**ஒன்னார் விழையும் சிறப்பு** (630)

என்ற குறளில் இன்பம், துன்பம் என்று பகுத்துணர்வதையும் விட்டு வரும் துன்பத்தையே இன்பமாகக் கொண்டு கடமையைச் செய்துவந்தால் தம் பகைவரும் விரும்பத் தகுந்த சிறப்பு ஏற்படும் என்பர்.

இங்ஙனம் உடல் தொடர்பின்றி உள்ளத்தே உண்டாகும் இன்பம் மிகச் சிறந்தது என்பது தெளிவு. ஆழ்வாருக்கு எம்பெருமானை நினைக்க நினைக்க அவர் உள்ளத்தெழுந்த இன்ப வெள்ளம் உடல் தொடர்பில்லாதது; அஃதாவது ஐம்பொறிகளால் உண்டாகும் இன்பம் அன்று அது; அஃது உயிரையொட்டிய இன்பமாகும். பொறிகளால் ஏற்படும்இன்ப மாயின், அவ்வப் பொறிகளால் அநுபவிப்பதற்குரிய பொருள் கள் இல்லாதபோது இன்பம் உண்டாதல் இல்லை. ஆழ்வார் எம்பெருமானை ஊனக் கண்ணால் கண்டிலர்; ஞானக் கண்ணுக்கு இலக்கான அவனை நினைந்து நினைந்தே இன்புற்றனர்; ஞானக் கண்ணால் கண்டு இன்புற்றனர்; அதனால் அவருடைய இன்பம் தடையின்றி நிகழ்ந்தது. உலகப் பொருள்களில் இன்பம் தரத்தக்க பல்வேறு பொருள்களால் உண்டாகும் இன்பம் எல்லாம் ஒருங்கு சேர்ந்தாற்போல் எம்பெருமானை நினைதலால், ஆழ்வார் உள்ளத்தில் இன்பம் உண்டாயிற்று. இத்தகைய அவர் நிலைமையை அவர்தம் பாசுரங்களில் கண்டு மகிழலாம்.

**தேனும் பாலும் கன்னலும்**
**அமுதும் ஆகித் தித்திப்ப**
**யானும் எம்பி ரானையே**
**ஏத்தினேன்; யான்உய் வானே** (4.3:10)

என்ற பாசுரத்தில் 'தேன்', பால், சருக்கரை, அமுதம் ஆகிய எல்லாவற்றின் இன்பமும் எம்பெருமானை

நினைதலால் எனக்கு உண்டாகின்றது" என்கின்றார். "அப்படி இன்பம் உண்டாவதனால் யான் எம்பிரானை எப்போதும் ஏத்துகின்றேன்" என்கின்றார். "அப்படி அப் பெருமானை நினைந்து ஏத்தி இன்பம் அடைவதால்தான் யான் உயிர் வாழ்ந்திருக்கின்றேன்; அப்படியில்லாவிட்டால் யான் உயிர்வாழ்தல் இயலாது" என்கின்றார். "யான் உய்வான் ஏத்தினேன்" என்பது இக்கருத்தைக் காட்டு கின்றது. உய்தல்—நற்கதி அடைதல் என்பதன்று இங்கு; உயிர் பிழைத்திருத்தல் என்பது பொருள். "அப்பெருமானை நினைக்கும் அன்பே மக்கள் வாழ்வுக்கு இன்றியமையாத சோறும் நீரும் போல எனக்கு 'உண்ணும் சோறும் பருகும் நீரும் ஆகும்" என்கின்றார்.

இறைவன் அன்பினால் உண்டாகிய இவ்வின்பம் பொறி யுணர்ச்சியா லாயதன்று; பொறியுணர்ச்சியைக் கடந்து உயிரின்கண் உண்டாகியது என்று அவரே கூறுவார்.

> வாரா அருவாய் வருமென்
> மாயா! மாயா மூர்த்தியாய்
> ஆரா அமுதாய் அடியேன்
> ஆவி அகமே தித்திப்பாய் (5.8:10)

என்றும்,

> வண்ணம் மருள்கொள் அணிமேக
> வண்ணா! மாய அம்மானே
> எண்ணம் புகுந்து தித்திக்கும்
> அமுதே இமையோர் அதிபதியே! (6.10:3)

என்றும்வரும் பாசுரப் பகுதிகளால் ஆழ்வாருக்கு உண்டான இன்பம் தனி சிறந்தது, உயிரையொட்டியது என்பதை அறியலாம். இத்தகைய போக்கை இன்னும் பல இடங்களில் கண்டு மகிழலாம்.

'உள்ளும்தோறும் தித்திக்கும்' அவனை இடைவிடாது நினைப்பதனால் உண்டான தெவிட்டாத உணர்ச்சி பெருகி வளரவே அஃது உள்ளடங்காத நிலையில் இறைவனைப் பற்றிப் பாடத் தொடங்கினர்.

கண்டுகொண்டு என்கண்இணை
ஆரக் களித்து
பண்டை வினையாயின
பற்றோடு அறுத்து
தொண்டர்க்கு அமுதுண்ணச்
சொல்மாலைகள் சொன்னேன்
அண்டத் தமரர்
பெருமான் அடியேனே (9.4:9)

என்பது அவர்தம் திருவாக்கு இங்கு ஆழ்வார் 'கண்டு கொண்டு என் கண் இணை ஆரக் களித்ததெல்லாம்' தம் ஞானக் கண்ணால் கண்டவையேயாகும் என்றும், அவர் அநுபவமெல்லாம் மானசாநுபவம் என்றும் நம் முன்னோர் முடிவு கொண்டனர். அந்தக் களிப்பே, எக்களிப்பே, சொல் மாலைகள் வடிவம் பெற்றது. இவர்தம் பாசுரங்களில் ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு மலர்; ஒவ்வொரு திருப் பாசுரமும் ஒவ்வொரு மாலை. அச்சொல்லின் பொருள் அம்மலரின் நறுமணம், நறுந்தேன் ஆகும்.

சொல்லென்னும் பூம்போது
தோன்றிப் பொருள்என்னும்
நல்லிருந் தீந்தாது
நாறுதலால்[2]

என்ற கவிமரபு இக்கருத்தினை அரண் செய்யும்.

கருவூரிலிருந்து உறையூருக்கு வந்த பிறகு இவர் இறைவனிடத்து கொண்ட காதல் ஆராக் காதல். இதனை

2. பத்துப்பாட்டு - மதுரைக் காஞ்சி - இறுதி வெண்பா

ஆழ்வார் 'அவா' என்று குறிப்பிடுவர். இந்த அவா இவர் தம் திருவிருத்தத்தில் முளை விடுகின்றது.

> தையல்நல் லார்கள் குழாங்கள்
> குழிய குழுவினுள்ளும்
> ஐயநல் லார்கள் குழிய
> விழவினும் அங்கங்கெல்லாம்
> கையபொன் னாழிவெண் சங்கொடும்
> காண்பான் அவாவுவன் நான்
>
> —திருவிரு. 84

[தையல் நல்லார்கள் - அழகிய பெண்கள்; குழாங்கள் - திரள்கள்; ஐயநல்லார்கள் - சிறந்த ஆண்கள்; விழவு - திருவிழா; கைய-கைகளிலுள்ள; அவாவு வன்-ஆசைப்படுவன்]

என்ற பாசுரத்தால் அறியலாம்.[3] இந்த அவா பெருகி வளர் வதை இவர் தம் பல பாசுரங்களால் அறியலாம். இதனைப் பின்னர் விளக்குவேன்.

3. நெஞ்செனும் உட்கண்ணால் எம்பெருமானைச் சேவிக்கப்பெற்ற ஆழ்வார் அப்பெருமானை மீண்டும் எங்கேனும் காண ஆசைப்பட்டு அவனை நோக்கித் தன்னிலே உரைத்த வார்த்தை என்பது இதன் உள்ளுறைப் பொருள். 'தையநல்லார்கள் குழிய குழு' என்பதன் ஸ்வாப தேசம் (உள்ளுறை)-பரதந்திரராயிருக்கும் தன்மையே பிரதானமாக வுடைய பிரபந்தர்களின் திரள். 'ஐயநல்லார்கள் குழு' என்பதற்கு ஸ்வாபதேசம் - யாகம் முதலிய தொழில்களை நடத்தும் இயல்புடைய கைங்கரிய பிரவிருத்தி சிலர்களின் திரள். இப்பாசுரத்தின் அழகிய மணவாள சீயர் உரையில் — 'நாயகி யானவள் நாயகனான சர்வேசுவரனைப் புறம்பே திரளிடையாகிலும் காண ஆசைப்பட்டுப் புலம்பிய பாசுரம் இது' என்பர். மேலும் அவர், 'குழாங்கள் குழிய குழு என்கையாலே அந்த சமூகத்தான் பலவாய்ச் சேர்ந்த சமுதாயத்தைச் சொல்லுகிறது'

இந்த அவாவின் தன்மை யாது? விரும்பிய பொருளை அநுபவித்து முடியாதது அவாவாகும். (அவா - ஆசை). விரும்பிய பொருளை அநுபவித்து முடிவடையாதது ஆசையாகும் ஒரு பொருளைத் தொடர்ந்து அநுபவிக்க அநுபவிக்க அவா பெருகுவதல்லாது முடிவடைவதில்லை. பிற காரணங்களால் அவ்வநுபவத்திற்கு இடையூறு நிகழ்ந்தால் ஒருவேளை அவ்வாசை தணிவதல்லது அநுபவித்தலால் முடிவடையாது. சிறந்த எடுத்துக் காட்டுகளாக மது அருந்துதலையும் மங்கையர் இன்பத்தையும் கூறலாம். அநுபவிக்க அநுபவிக்க மேலும் விறகு இடப்பெற்ற நெருப்புப்போல் அந்த அவா பெருகுவதல்லது தணியாது என்பர் வள்ளுவப் பெருந்தகை (குறள் - 343 உரைகாண்க). அதனால் அவ்வாசையை முயன்று தடுத்தே ஒழித்தல் வேண்டும். இதனால் வள்ளுவர் பெருமான் அந்த ஆசையின் தன்மையை 'ஆராஇயற்கை அவா' (குறள் 370) என்று சுட்டிக் காட்டுவர்.

ஆழ்வாரின் அவாமுழுவதும் ஆரா அமுதமாகிய ஆண்டவன்பாலே செல்லுவதாயிற்று. இதனை அவரே 'ஆராத காதல் குருகூர்ச்சடகோபன்' (2.1.11) என்று குறிப் பிடுவர். இவர்தம் இந்த இயல்பினை இவரது பிற பாசுரங் களாலும் ஒருவாறு அறியலாம். ஞானக் கண்ணால் கண்ட இறைவனை ஊனக் கண்ணாலும் காண விழைந்து கண்ணீர் பெருக நெஞ்சம் நெக்குருகிப் பன்முறை கூவிக்கூவி அவனை அழைக்கின்றார் ஆழ்வார்.

> என்றும், 'இந்தக் கிளவி "மள்ளர்குழீஇய விழாவினானும், மகளிர்தழீஇய துணங்கையானும், யாண்டுங் காணேன் மாண்டக்கோனை" (குறுந்.31-ஆதி மந்தியார்) என்று அகத்தமிழினும் சொல்லப் பட்டது' என்றும் விளக்குவர். (இக்குறுந்தொகை நொதுமலர் வரைவுழித் தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நின்றது).—ஆழ்வார் பாசுரம் - நாயகனைக் காண நாயகி விரைந்து பேசும் பாசுரம்.

கூவிக் கூவி நெஞ்சுருகிக்
கண்பனி சோர நின்றால்
பாவிநீ என்றொன்று சொல்லாய்
பாவியேன் காண வந்தே.[4] (4.7:3)

என்பது காண்க. காட்சி எய்தவில்லை. "நான் இவ்வூனக் கண்ணால் காணும்படி நீ அன்போடு காட்சியளிக்க விரும்ப வில்லையாயினும் அவ்விருப்பமின்மையை என் கண் எதிரே தோன்றிக் கூறுக. 'நீபாவி; அதனால் உனக்குக் காட்சி தருதல் இயலாது' என்றாவது என் கண்முன் தோன்றிக் கூறுக. அதுவும் எனக்கு அமையும். நீ வெறுப்போடு கூறிய தாயினும், விருப்போடு கூறியதாயினும் அவ்வேறுபாட்டை நான் கருதவில்லை. உன்னைக் காண்டல், உன் சொற் கேட்டல், அவ்வளவே என் ஆசை" என்கின்றார். மேலும்,

சிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம்
இறப்பில் எய்துக, எய்தற்க; யானும்
பிறப்பில் பல்பிற விப்பெரு மானை
மறப்பொன் றின்றி, என்றும் மகிழ்வேனே (2.9:5)

என்ற பாசுரத்தால் இறைவனை நினைந்து மகிழ்வதே தம் விருப்பம் என்பதையும், அவன் தரும் பேற்றினைத் தாம் கருதவில்லை என்பதையும் புலப்படுத்துவர். இங்ஙனம் கூறும் ஆழ்வாரது அன்பு இத்தகையது என்று எடுத் துரைத்தல் கூடுமோ?

4. இப்பாசுரத்தின் கருத்தினைக் குறள் 1199 (நினைந் தவர் புலம்பல்) இன் கருத்துடன் ஒப்பிட்டு மகிழ்க. திருவள்ளுவரின் 'நசையிலார் நல்காரெனினும் அவர்மாட்டு இசையும் இனிய செவிக்கு' என்ற திருக்குறள் கருத்தும் 'பாவி நீ என்றொன்று சொல்லாய் பாவியேன் காண வந்தே' என்ற ஆழ்வார் கருத்தும் ஒத்திருத்தல் காண்க. சிற்றின்ப வேட்கை (விஷய காமம்) உடையார்க்குக் கூறப் பெற்ற இக்கருத்து பேரின்ப வேட்கை (பகவத் விஷய காமம்) யுடையார்க்கு எளிதேயன்றோ?

திருவிருத்தத்தில் முளைவிட்ட ஆழ்வாரது அன்பு பெரிய திருவந்தாதியில் ஆறாகப் பெருகியோடத் தொடங்கு கின்றது. இதனைப் பல பாசுரங்கள் காட்டும். "நீ பேசின உபகாரத்தை வாய்விட்டுப் பேசினால் நீயே பெற்ற தாய்; பிறப்பித்த தந்தை; ஆன்மாவுக்கு உற்ற நன்மைகளைச் செய்து புதிய பிறப்பை நல்கும் ஆசாரியனும் நீ (5); என்னை அடிமைப் படுத்திக் கொண்டு என் கண்களுக்கு உன் திருமேனியின் ஒளியைக் காட்டியருள்க (13); எம்பெருமான் காரணமற்ற கருணையினால் என் பாவங்களைத் தொலைக்கத் தொடங்கினபோது அடியேனும் அடியே னுடையநெஞ்சும் அச்செயலுக்குடன்பட்டிருந்தோம் (26); 'பால்ஆழிநீ கிடக்கும் பண்பையாம் கேட்டேயும்கால் ஆழும்; நெஞ்சு அழியும்; கண் சுழலும்" (34); அடியேன் வானோர் தொழுது இறைஞ்சும் எம்பெருமான் பொன்னார் திருவடிகளைச் சொற்களால் துதிக்கின்றேன் (45);மேகங்கள், பெரிய மலைகள், கருங்கடல், செறிந்த இருள், பூவைப் பூ, மற்றுமுள்ள கார் உருவங்களைப் பார்க்கும் போதெல்லாம் 'இவை கண்ணனின் அழகிய திருமேனி' என்றெண்ணி என் மனம் என்னை விட்டு ஆங்கே ஓடும் (49); பூவைப் பூ, காயாம் பூ, செங்கழுநீர்ப் பூ, கரு நெய்தல் பூ ஆகிய வற்றைப் பார்க்கும் போதெல்லாம் அவை எம்பெரு மானுடைய திருவுருவமே என்று கருதி என் உடலும் உயிரும் பூரிக்கின்றன (73); 'நின் அன்றி மற்று இலேன் கண்டாய் - எனது உயிர்க்கு ஓர் சொல் நன்றி ஆகும் துணை (77); 'என் நெஞ்சே! எப்போதும், கை கழலா நேமியான் நம்மேல் வினை கடிவான் மொய் கழலே ஏத்த முயல் (87) என்ற பாசுரங்களில் ஆழ்வாரது அன்பு ஆறாய்ப் பெருகியோடு வதைக் காணலாம்.

பெரிய திருவந்தாதியில் ஆறாய்ப் பெருகியோடிய காதல் திருவாய்மொழியில் கடலாய் விரிந்து பெருகுகின்றது.

ஊரவர் கவ்வை எருவிட்டு
அன்னைசொல் நீர்படுத்து
ஈரநெல் வித்தி முளைத்த
நெஞ்சப் பெருஞ்செய்யுள்
பேரமர் காதல் கடல்
புரைய விளைவித்த
காரமர் மேனிநங் கண்ணன்
தோழி! கடியனே (5.3:4)

[கவ்வை - பழமொழி; நீர் படுத்து - நீரைப் பாய்ச்சி; ஈரம் நெல் - ஆசையாகிய நெல்; செய் - வயல்; பேரமர் - பெரிய ஊர்ப் பூசல்; கார் அமர் - கார் கால மேகத்தின் நிறம் பொருந்திய; கடியனே - கடியனோ (கடியனல்லன்]

இது பிரிவற்றாமை மேலிட்டால் தலைமகள் காதல் கைமிக்கு மடலூரத் துணிதலை நுவல்வது. எம்பெருமான் இப்பராங்குச நாயகிக்கு காதலை விளைவித்த விவரம் இப்பாசுரத்தில் விரிவாகச் சொல்லப் பெறுகின்றது. ஊர் மக்கள் சொல்லும் பழிமொழியையே காதலுக்கு எருவாக இட்டான் எம் பெருமான். ஊரார் பழிசொல்வதைக் கொண்டே இவள் பகவான்மீது கொண்ட காதலை அன்னை அறிந்து இத வசனங்கள் சொல்ல ஆரம்பித்தாள்; இந்த வசனம் தண்ணீர் பாய்ச்சினபடியாயிற்று. எருவானது அடியில் ஒருகாலே விட்டு விடுவது; நீர் மாறாமல் பாய்ச்சப்படுவது; இதனால் ஊரார் ஒருகால் பழி சொல்ல அன்னை உடனிருந்து எப்போதும் பொடிந்து கொண்டே இருக்க, காதல் பயிர் செழித்து வளர்வதாயிற்று. ஈரநெல் - அன்பாகிய நெல். இதனை விளைவித்தவன் எம்பெருமான். இங்கு 'முளைத்த' என்றதை 'முளைப்பித்த' என்றதாகக் கொள்ள வேண்டும் என்பது நம்பிள்ளையின் திருவுள்ளம். எருவும் இட்டு நீரும் பாய்ச்சினாலும் முளைக்குமிடத்து அவனருள் இன்றி

யமையாததாகையாலே இங்ஙனம் கொள்ளத் தகுதியுண்டு. 'நெஞ்சப் பெருஞ்செய்யுள்' : 'செய்' என்பது பயிர் விளையும் நிலம். பெருஞ் செய்யுள் என்று பெருமையையிட்டுச் சிறப்பித்ததற்கு நம்பிள்ளை அருளிச் செய்தது: ''சம்ச்லேஷ விச்லேசங்களாலே (கலவி பிரிவுகளாலே) புடைபடுத்தி நித்திய விபூதியோ பாதி பரப்புடையதாமபடி பெருக்கினா னாயிற்று'' என்பது. பேர் அமர் காதல் கடல் புரைய விளைவித்த : இங்குக் 'கடல் புரைய' என்றது, 'கடலின் மிகப் பெரிதால்' என்னா நின்றது. 'அதனில் பெரிய என் அவா' (10.10:10) என்று ஈசுவரன் தன்னை விளாக்குலை கொள்ளும்படியான காதல் என்னா நின்றது. ஆக 'பொய்ந்நின்ற ஞானம்' (திருவிருத். 1) தொடங்கி இவ்வளவும் வர விளைவித்துக் கொண்டே காரியம் இதுவாயிற்று.

கார் அமர் மேனி : அடியிலே எருவும் இட்டு நீரும் பாய்ச்சினாலும் மேலே மழை பெய்தல் இல்லையாகில் அப்பயிர் தலை குளிர்ந்து இராதே அன்றோ? காளமேகத் திருவுருவை காட்டிக் காட்டி இக்காதலை வளர்த்துக் கொண்டுபோனான் என்பது தோன்ற 'விளைவித்த கார்அமர் மேனி' என்றது.

ஆழ்வார் நாயகியின் காதல் கடலையும் விஞ்சி நிற்கின்றது. எம்பெருமான் உருவெளிப்பாட்டில் காணப்பெறுகின்றான். அவனிடம் செல்ல வேண்டும் என்று துடிக்கின்றாள்.

காலம் பெறஎன்னைக் காட்டுமின்கள்
　　காதல் கடலின் மிகப்பெரிதால்
நீல முகில்வண்ணத்து எம்பெருமான்
　　நிற்கும்முன் னேவந்தென் கைக்கும்எய்தான் (7.3.6)

[காலம்பெற - சீக்கிரமாக; முகில் வண்ணன் - மேக நிறம் படைத்தவன்]

இப்பாசுரம் தலைவி தென்திருப்பேரையில் சேரத் துணி தலைக் கூறுவது. தாய்மாரும் தோழிமாரும் தடுத்தும் பயன் இல்லை.

காலம் பெற என்னைக் காட்டுமின்கள் : ''எனக்கோ அபிநிவேசம் (அதிக ஆசை) மீதூர்ந்து நிற்கின்றது; எனக்கு இங்குத் தரிப்பு அரிது; வீணாக எதையும் சொல்லிப் போது போக்காமல் இப்போதே என்னைத் தென் திருப்பே ரெயிலிலே கொண்டு சென்று மகர நெடுங்குழைக் காதனைக் காட்டிச் சமாதானப்படுத்துங்கோள்'' என்கின்றாள். 'குடிக்குப் பரிகாரம் அன்றாகிலும் எனக்குப் பரிகாரம் இதல்லது இல்லை' என்பது நம்பிள்ளை ஈடு. ''அப்பெரு மாலை நான் காலதாமதமின்றிக் காணும்படி செய்யுங் கோள்'' என்றபடி. அதற்குக் காரணம் கூறுகின்றது. ''காதல் கடலின் மிகப் பெரிதால்'' என்று. கீழே ஐந்தாம் பத்தில் 'காதல் கடல் புரைய விளைவித்த காரமர் மேனி' (5.3:4) என்று தனது காதலைக்கடலோடொத்ததாகச் சொன்னாள்; இங்குக் கடலினும் விஞ்சியதாகச் சொல்லுகின்றாள்' இதற்குமேல் எட்டாம் பாசுரத்தில் (7.3:8) ''என் காதல் - மண்டிணி ஞாலமும் ஏழ்கடலும் நீள்விசும்பும் கழியப் பெரி தால்'' என்கின்றாள்; முடிவில் ''சூழ்ந்து அதனில் பெரிய என் அவா (10,10:10) என்று 'தத்துவத் திரயத்தையும் விளாக் குலை கொண்ட காதல்' என்கின்றது. ''இப்படிக் கனத்த காதலையுடைய நான் எங்ஙனம் பதறாது ஆற்றி யிருக்க முடியும்?'' என்கின்றாள் போலும்.

''நங்காய்! கடலின் மிகப் பெரிதாக வளர்கின்ற காதலை ஒருவாறு அடக்கி அளவுபடுத்த வேண்டாவோ? நாங்கள் சொல்லுகின்ற வார்த்தையைக் கேட்டு எங் களோடே ஒழுக வேண்டாவோ?'' என்று தாய்மாரும் தோழி மாரும் சொல்ல, ''நீலமுகில் வண்ணத் தெம்பெருமான் முன்னே வந்து நிற்கும்'' என்கின்றாள். ''அழகிய வடிவங்

கொண்டு அவன் முன்னே வந்து நிற்க, காதல் வளர்வதற்கு வழி உண்டாயிருந்ததே அல்லது அளவு படுகைக்கு வழி உண்டோ? அவன் முன்னே வந்து நின்றிலனாகில் நான் காதலை அடக்கி உங்கள் வார்த்தையைக் கேட்கமாட்டேனோ?'' என்கின்றாள்.

''நங்காய்! நீலமுகில் வண்ணன் உன் முன்னர் வந்து நின்றானாகில் அவனது கையைப் பிடித்துக் கொண்டு நீ அவன் பின்னே போகலாமல்லவா? 'காலம் பெற என்னைக் காட்டுமின்கள்' என்று சொல்லுவதென்?'' என்று தோழியர் கேட்க, 'என் கைக்கும் எய்தான்' என்கின்றாள். ''உருவெளிப் பாடேயல்லது வேறொன்றில்லையே; வார்த்தை சொல்லுதல், அணைத்தல் செய்யாமையே யன்று, என் கைக்கும் எட்டுகின்றிலன்; ஆகையால் சொல்லுகின்றேன்'' என் கின்றாள். ''எங்கே கொண்டு போய்க் காட்டச் சொல்லுகின்றாய்?'' என்று தோழியர் கேட்க, அதற்குப் பாசுரத்தின் பின் அடிகளில் விடை கூறுகின்றாள்.

> ஞாலத் தவன்வந்து வீற்றி ருந்த
> நான்மறை யாளரும் வேள்வி யோவா
> கோலச் செந்நெற்கள் கவரி வீசும்
> கூடு புனல்திருப் பேரெ யிற்கே (7.3:6)

''நெடுந்தூரம் சென்று காண வேண்டாமல் பரமபதத்துச் செல்வமெல்லாம் இங்கே தோற்றும்படி வீற்றிருக்கும் இடமன்றோ தென்திருப்பேரெயில்? அதுமட்டுமன்று. வேத வித்துக்களான பரம பாகவதர்களின் சமாராதனமும் நிரந்தரமாகச் செல்லும் இடம் அன்றோ? இவையொன்றும் இல்லையாகிலும் திவ்யதேசத்தின் நிலவளமும் நீர் வளமுமே கண்ணாரக் கண்டு கொண்டிருக்கப் போதுமே'' என்கின்றாள்.

கடலளவுக்கும் மேலே வளர்ந்த ஆழ்வாரின் 'பேரவா' அதற்கு மேலும் வளர்ந்து பெருகுகின்றது. இதனைக் காட்டுகின்றது பாசுரம்.

> கண்டது வேகொண்டெல் லாருங் கூடிய
> கார்க்கடல் வண்ணனோ டென் திறத்துக்
> கொண்டு அலர்தூற்றிற் றதுமுத லாக்
> கொண்டஎன் காதல் உரைக்கில் தோழி
> மண்திணி ஞால முமேழ் கடலும்
> நீள்வி சும்பும் கழியப் பெரிதால்
> தென்திரை சூழ்ந்தவன் வீற்றி ருந்த
> தென்திருப் பேரெயில் சேர்வன் சென்றே(7.3:8)

[கண்டதுவே - வெளியில் காணப்பெறும் என் மேனி நிறம் முதலானவை; கூடி - ஒன்று சேர்ந்து; என் திறத்து என்னைப்பற்றி; மண் திணி ஞாலம் - மண் செறிந்த பூமி; விசும்பு - ஆகாயம்; கழிய - விட]

"உங்கள் அலரினால் வளர்ந்த காதல் எப்படிப்பட்டதென்றால், அணுக்கள் செறிந்திருக்கின்ற இந்த உலகத்தையும் இதனைச் சூழ்ந்துள்ள ஏழு கடல்களையும் இவற்றையெல்லாம் தனக்குள் அடக்கிக் கொண்டிருக்கின்ற ஆகாயத்தையும்விட மிக மிகப் பெரியதாகும்" என்கின்றாள் ஆழ்வார் நாயகி. "இப்படிப்பட்ட ஆராக் காதல் பிணியைக் கொண்டு நான் எப்படி ஆற்றியிருப்பேன்? தென்திருப் பேரெயில் சென்று சேர்ந்து காதல் தீர அந்த எம்பெருமானை அநுபவித்துக் களிப்பேன்" என்கின்றாள்.

இந்த நிலையிலும் எம்பெருமான் அருள் பாலிக்கவில்லை. ஆகவே ஆழ்வாருடைய காதல் மேலும் மேலும் வளர்கின்றது. அநேக தத்துவத்தையே விழுங்கிய ஆழ்வாரின் காதல் அதனைவிடப் பெரியதும் அடுத்த தத்துவமும் ஆகிய

சேதநதத்துவத்தையும் விஞ்சும்படி வளர்கின்றது. இந்தப் பெரிய காதல் பெருக்கை சீவான்மா தாங்கிக் கொள்ள முடியாதபடி மிகச் சிறிதாகவுள்ளது. "ஆவியின் பரம் அல்ல வேட்கை" (10.3:2). அணு அளவினதான உயிர்ப் பொருளின் அளவன்று காதல். "என்தன், அளவன்றால் யானுடைய அன்பு" (இர. திருவந் 100) என்று பூதத்தார் கூறுவதுபோல, உயிரின் அளவு அன்று ஆயிற்றுக் காதல்.

இங்ஙனம் வளர்ந்த காதல் எம்பெருமானுடைய மிகப் பெரிய காதலில் மூழ்கிவிட்டதை அருளிச் செய்கின்றார் ஆழ்வார்.

> சூழ்ந்தகன் றாழ்ந்துயர்ந்த முடிவில்
> பெரும்பா ழேயோ!
> சூழ்ந்தத னில்பெரிய பரநன்
> மலர்ச்சோ தீயோ!
> சூழ்ந்தத னில்பெரிய சுடர்ஞான
> இன்ப மேயோ!
> சூழ்ந்தத னில்பெரிய என்அவா
> அறச்சூழ்ந் தாயே! (10.10:10)

இது, மூன்று தத்துவங்களையும் விளாக்குலை கொண்டிருக்கும் தம் அவாவானது சிறிதாம்படி, அதாவது தம்முடைய காதல் குளத்தின் அளவு என்னும்படி, கடல் போன்ற காதலோடே எம்பெருமான் வந்து கலந்தான் என்பதைத் தெரிவிக்கின்றது.

பெரிய பிராட்டியார் ஆணையிட்டுத் தடுத்து மிகப் பெரிய துன்பத்தோடே கூப்பிட்டு இவர் வேண்டிக்கொண்டபடியே எல்லாவற்றாலும் நிறைந்த எம்பெருமான் வந்து கலந்தருளினான். இது கண்டு 'என்னுடைய அபரிமிதமான விடாய் எல்லாம் தீரவந்து என்னோடே கலந்தாய்; என்னுடைய மனோரதமும் ஒருவாறு நிறைவேறப் பெற்றேன்' என்று பேரின்பம் பொலிய விண்ணப்பம் செய்கின்றார்.

ஆழ்வார் தம்முடைய அபிநிவேசம் பெரியவற்றிலும் பெரிது என்கைக்காக மூன்றடிகளில் தத்துவத்திரயத்தினுடைய பெருமையை அருளிச் செய்கின்றார். அசித்து என்ற தத்துவத்தினுடைய பெருமையைச் சொல்லுகின்றது முதலடி; சித்து என்ற தத்துவத்தினுடைய பெருமையைச் சொல்லுகின்றது இரண்டாம் அடி; ஈசுவரன் என்ற தத்துவத்தைச் சொல்லுகின்றது மூன்றாம் அடி. இப்படித் தத்துவத்திரயத்தை ஒன்றுக் கொன்று பெரிதாகச் சொல்லிக் கொண்டு போந்து இவற்றிற் காட்டிலும் பெரிது தம்முடைய அவா என்று ஈற்றடியில் அருளிச் செய்து, அது 'அவா அறச் சூழ்ந்தாயே' என்று தலைக் கட்டுகின்றார்.

இங்கு 'என் அவா அற' என்பதற்கு என்னுடைய அவா சிறிதென்னும்படி என்றுபொருள் கொள்ளுவது சிறக்கும். இது வரையில் ஆழ்வார் தம்முடைய அவாவே பெரிது என்றிருந்தார். இப்போது தம்மை அநுபவிக்கப் பதறிவந்த எம்பெருமானுடைய அவாவின் மிகுதியைப் பார்த்தவாறே மேற்கூறிய ''மூன்று தத்துவங்களையும் விளாக்குலை கொண்டு அவைகுளமாம்படி பெரிதான என்னுடைய காதலை அதனினும் பெரிய உன் காதலைக்காட்டி வந்து கலந்தாயே! என்னுடைய கூப்பீடும் ஒருபடி ஓவும்படிப் பண்ணிற்றே'' என்கின்றார். 'பரமபத நாதனை மடியிலே வைத்துக்கொண்டு மகிழ்ச்சியுற்றவராய்த் தழுவினார்'' என்கின்றபடியே, பெருமாள் காட்டில் நின்று மீண்டெழுந்தருளி பரதாழ்வானை மடியிலே வைத்து உச்சியை மோந்து உகந்து அணைத்தாற் போலே ஆயிற்று, இவருடைய விடாய் கெடும்படி கலந்தது.

**பாசுரங்களின் பயன்:** எம்பெருமானை ஆழ்வார் ஞானக் கண்ணாற் கண்டு சொல் மாலைகள் சொன்னார் கண்டு மகிழ்ந்ததன் பயன் சொல்மாலைகள் சொன்னதாகும் இந்தச் சொல் மாலைகளால் இரண்டு பயன்கள் விளைவனவாயின. ஒன்று: ஆழ்வாரின், 'பண்டை வினையாயின

பற்றோடு ஒழிந்தன" (9.4:9), இஃது ஆழ்வாரே கூறுவது. இஃது உடன் விளைந்த பயன்; தானாக ஒழிந்த பயன். அதுவும் அவனது திருவருளாலே ஏற்பட்ட பயன். இதனை ஆழ்வாரே 'பாட்டாய பல பாடி பழவினைகள் (சஞ்சிதம்) பற்றறுத்து' (10 6:2) என்று பின்னும் கூறுவதனாலும் அறியலாம். மற்றொன்று: அச்சொல் மாலைகள் அடியார்கள் செவியால் நுகரும் அமுதமாயின.

> கண்ட ஆற்றால் தனதே
> உலகென நின்றான் தன்னை
> வண்டமிழ் நூற்க நோற்றேன்
> அடியார்க்கு இன்ப மாரியே (4.5:10)

என்பது ஆழ்வாரின் திருவாக்கு. அடியார்கள் ஆழ்வாரின் சொல் மாலைகளாகிய பாசுரங்களைப் பாடிப் பாடி பகவதநுபவம் பெற்று, அப்பாசுரங்களின் பொருளை எண்ணி எண்ணி, அமுதம் உண்டாற்போல் இன்புற்று மகிழ்வர். இவ்வாழ்வார் பாசுரங்களை நம் போலியர் கற்றாலும் அவை தம் உள்ளத்தில் இன்ப வெள்ளப் பெருக்கெடுத்து ஓடச் செய்வதால் 'ஆரா அமுதக் கவியாயிரம்'[5] என்று சிறப்பித்துப் போற்றுவாராயினர்.

ஆழ்வாரின் அடக்கம்: இப்பாசுரங்கள் யாவற்றையும் ஆழ்வார் தம் ஆற்றலால் செய்ததாக எண்ணித் தன் முனைப்புக் கொள்ளவில்லை, எல்லாம் 'மயர்வற மதிநலம் அருளின' (1.1:4) இறையருளால் தம்மைக் கருவியாகக் கொண்டு நிகழ்ந்தன என்பதே ஆழ்வாரின் நினைவாக உள்ளது.

> என் நெஞ்சத்து உள்ளிருந்திங்கு
> இருந்தமிழ் நூல் இவைமொழிந்து

5. சட., அந். 45.

வல்நெஞ்சத்து இரணியனை
மார்புஇடந்த வாட்டாற்றான்

[வாட்டாற்றான் - திருவட்டாறு என்ற திருத்தலத்தில் எழுந்தருளியிருப்பவன்]

என்றும்,

பண்ணார் பாடல் இன்கவிகள்
யானாய்த் தன்னைத் தான்பாடி
'தென்னா' என்னும் என்அம்மான் (10.7:5)

என்றும் ஆழ்வாரே தம் திருவாக்கால் கூறுவதால் இதனை அறியலாம். திருவாய்மொழியில் ஒருபதிகம் (7.9) முழுவதி லும் இக்கருத்தினைப் பன்னிப் பன்னி உரைக்கின்றார் ஆழ்வார்,

ஆம்முதல் வன்இவன் என்றுதன் தேற்றி,என்
நாமுதல் வந்து புகுந்து நல்இன்கவி
தூமுதல் பத்தர்க்குத் தான்தன்னைச் சொன்ன என்
வாய்முதல் அப்பனை (7.9:3)

என்றும்,

என்சொல்லால் யான்சொன்ன
இன்கவி என்பித்துத்
தன்சொல்லால் தான்தன்னைக்
கீர்த்தித்த மாயன்(7.9 2)

என்றும் கூறுவதைக் காணலாம் 'என்னால் தன்னை, வன்கவி பாடும் வைகுந்த நாதனே' (7.9:6) என்று மீண்டும் இக் கருத்தினையே வலியுறுத்துவர். இறைவனைப்பற்றி மெய் யுணர்வு பெற்ற பெரியோர் யாவரும், எச்செயலும் இறைவன் திருவுள்ளப்படியே நிகழ்கின்றது என்பதாகவே எண்ணுவர். இங்ஙனம் இறைவன் தனக்கு அளித்த பெரும்பேற்றுக்குக் கைம்மாறாகத் தன் உயிரையே அவ் இறைவனுக்குக் காணிக்கை ஆக்கும் 'அதுவும் மற்று ஆங்கவன் தன்னது'

(7.9:10) என்று கூறி, அவ்வான்மாவும் அவனுடையதே என்று வற்புறுத்தி இம்மையிலும் மறுமையிலும் அவனுக்குச் செய்யக் கூடிய கைம்மாறு ஒன்றுமே இல்லை என்பதை 'எதுவும்' ஒன்றும் இல்லை செய்வது இங்கும் அங்கே' 7.9:10) என்று கூறி அமைவர். ஆகவே, இப்பாசுரங்களைத் 'தொண்டர்க் கமுதம்' என்றும் 'அடியார்க்கு இன்பமாரியே' என்றும் தாமே தம்மைக் கூறுவது எம்பெருமானைப் புகழ்வ தாகுமேயன்றி எவ்வாற்றானும் தம்மைத் தாமே புகழ்ந்து கொண்டதாகாது. இறைவனே இவர் உள்ளிருந்து அருளிய தால் நம்மாழ்வாரின் பிரபந்தங்களைத் 'தமிழ்மறை' (தனியன்) என்றும், 'யாழின் இசை வேதம்' என்றும் சொல்லத் தட்டில்லை. நம்மாழ்வாரையும் 'வேதம் தமிழ் செய்தமாறன்' என்று கூறுவதும் பொருந்தும்.

**ஆழ்வாரின் இறையநுபவம்:** நம்மாழ்வாரின் பாசுரங்களை ஆழ்ந்து கற்போர் அவரது பகவதநுபவம் இரண்டு வழிகளில் செல்வதைக் காணலாம். இவரிடம் ஞானம் தலை தூக்கி நிற்குங்கால் தாமான தன்மையில் (அஃதாவது ஆழ்வா ராகவே நின்று) இருந்து கொண்டு ஆண்டவனை அநுபவித்து அந்த அநுபவத்தைப் பாசுரங்களாக வெளியிட்டுள்ளார். திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழியில் 73 பதிகங்கள் இந்த அநுபவத்தைக் காட்டுபவை. பிரேமம் (காதல்) முறுகி மீதூர்ந்து நிற்குங்கால் பிராட்டியின் தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே பெண் பேச்சாகப் பாசுரங்களை வெளியிட்டுள்ளார். திருவிருத்தம், திருவாய்மொழியில் 27 பதிகங்கள் இந்த அநுபவத்தைக் காட்டுபவை. பின்னவற்றின் விளக்கத்தை ஐந்து இயல் களிலும்[6] முன்னவற்றின் விளக்கத்தை மூன்று இயல்களிலும்[7] கண்டு தெளியலாம்.

6. இயல் 7, 8, 9, 10, 11 காண்க.
7. இயல் 12, 14, 15 காண்க.

# 13. அர்த்த பஞ்சகம்

வீடு பேற்றை அடைய விரும்பும் சேதநன் அறிய வேண்டிய பொருள்கள் ஐந்தாகும். இவற்றை முமுட்சுப்படி 'அஞ்சர்த்தம்' (சூத்திரம், 23) என்று பேசும். இதனை வைணவ நூல்கள் 'அர்த்த பஞ்சக ஞானம்' என்று குறிப்பிடும். அர்த்த பஞ்சகம் என்பது (1) ஈசுவரனின் இயல்பு, (2) ஆன்மாவின் இயல்பு, (3) ஆன்மா அடையும் பயன், (4) அப்பயனை அடைதற்கு உபாயம், (வழி) (5) அப்பயனை அடைதற்குத் தடையாய் உள்ளவைகள் ஆகிய ஐந்தும் ஆகும்.[1] பராசரபட்டர் இந்த ஐந்து பொருள்களையும் இரத்தினச் சுருக்கமாக,

> **மிக்க இறை நிலையும்**
> **மெய்யாம் உயிர்நிலையும்**
> **தக்க நெறியும்**
> **தடையாகித்—தொக்கியலும்**
> **ஊழ்வினையும் வாழ்வினையும்**
> **ஓதும் குருகையர்கோன்**
> **யாழின்இசை வேதத்து**
> **இயல்**[2]

1. ஆ. ஹி. 211 காண்க (விளக்கம்)
2. திருவாய்மொழி தனியன் 16.

இதில் மிக்கஇறைநிலை என்பது ஈசுவர சொரூபம்; மெய்யாம் உயிர் நிலை என்பது, ஆன்ம சொரூபம்; தக்கநெறி என்பது உபாய சொரூபம்; தடையாகித் தொக்கியலும் ஊழ்வினை யும் என்பது, விரோதி சொரூபம்; வாழ்வினையும் என்பது, வீடு பேற்றின் தன்மை; ஆக, இத்தனியன் அர்த்த பஞ்சகத்தைக் கூறுவதாகின்றது.

இதனைச்சற்று விளக்கிக் கூறுவோம். ஸ்ரீமந் நாராயணனே அறப் பெரிய முதல்வன்; ஆன்மாவிற்குச் சொரூபம் அடியேன் என்பதே; சரணாகதி இறைவனைப் பெறுவதற்குரிய வழி; பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கமும் அழுக் குடம்பும் ஆகிய இவையே விரோதிகள்; ஒழிவில் காலமெல் லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்வதுவே பரம புருஷார்த்தம் என்னும் இவ்வைந்து பொருள்களுமே திருவாய்மொழியில் சொல்லப் பெறுகின்றன. இவற்றைத் தனித்தனியாக விளக்குவோம்.

1. ஈசுவரனின் இயல்பு : திருவாய்மொழியிலுள்ள 'உயர்வற' (1.1), 'திண்ணன் வீடு' (2.2), 'அணைவது'(2.8), 'ஒன்றும் தேவும்' (4.10) ஆகிய இந்த நான்கு திருவாய் மொழிகளும் எம்பெருமானுடைய சொரூபத்தை (Essential nature) விளக்குவன.

விளக்கம் : முதல் திருவாய் மொழியில் 'உயர்வற வுயர் நலமுடையவன்'(1) என்று தொடங்கி, 'உணர்முழுநலம் ..... மிகுநரை இலன்'(2), 'நிலன் இடை விசும்பிடையுருவினன் அருவினன்'(3), ஆம் அலை ஆயவை ஆய் நின் ற அவர்,(4) என்று கூறிக் கொண்டு போந்து, 'கரவிசும்பு எரிவளி நீர் நிலம் இவைமிசை, வரன் நவில் திறல் வலி அளிபொறை ஆய்நின்ற, பரன்'(11) என்று முடிக்கையாலே 'நாராயணனே பரம்பொருள்' என்கைக்காக நாராயண சப்தத்தின் பொருளை அருளிச் செய்கின்றார். நாராயண

என்னும் மொழியின் பொருள்—எல்லாரினும் மேம்பட்டிருத்தல், எல்லா நற்பண்புகட்கும் உறைவிடமாயிருத்தல், நித்திய விபூதி லீலா விபூதி என்ற இரண்டு விபூதிகட்கும் தலைவனா யிருத்தல் ஆகியவையாம். 'ஒன்றும் தேவும்' (4.10), 'திண்ணன் வீடு'(2.2) என்ற இரண்டு திருப்பதிகங்களும் முதல் திருவாய் மொழியின் (1.1) பொருளை விரித்துப் பேசுவன.

இரண்டாம் திருவாய்மொழியில் இப்பொருளுக்கு; அதாவது எல்லாரினும் மேம்பட்டிருத்தல் முதலான பொருளுக்கு, வாசகமான திருப்பெயரை 'வண்புகழ்நாரணன்' (1.2:10) என்று அருளிச் செய்கின்றார். பொருளை மட்டிலும் கூறின் அமையாதோ? மொழியையும் கூறல் வேண்டுமோ? இதற்கு விடை; வியாபக மந்திரங்களாகிய விஷ்ணு, வாசுதேவ மந்திரங்களும்[3] இப்பொருளையே அறிவிக்கின்றனவாயினும், நாராயணன் என்னும் திருப் பெயரே தம் திருவுள்ளத்தில் அறுதியிட்ட வாசகம் என்னும் ஆதாரம் தோற்ற 'செல்வ நாரணன்' (1.10:8), 'திருநாரணன்' (4.1:1), 'நாரணன் முழுவேழ் உலகுக்கும் நாதன்' (2.7:2) 'காராயின காளநன் மேனியினன் நாராயணன்' (9.3:1) 'திண்ணம் நாரணம்' (10.5:1) என்று ஆதரித்துக் கொண்டு போந்து 'வாழ்புகழ் நாரணன்' (10.9:1) என்று அர்ச்சிராதிகதி[4]யைப்பற்றிக் கூறுமிடத்தும் அருளிச் செய்து

3. வியாபகங்கள்- சில மந்திரங்கள் எல்லாப் பொருள்களிலும் நிறைந்துள்ள பகவானை விளக்கமாகத் தெரிவித்தலின், அவை வியாபகங்கள் எனப்படும். அவ்வியாபகங்கள்-சில மந்திரங்கள் ஈசுவரனுடைய அவதாரங்களில் அமைந்த குணங்கள், லீலைகள் முதலியவற்றுள் ஏதாவதொன்றைத் தெரிவித்தலின், அவை அவ்வியாபகங்கள் எனக் கூறப்பெறும். (மூமுட்சு—9)

4. அர்ச்சிராதி கதி - அர்ச்சிஸ் என்ற தெய்வத்தை முதலாகக் கொண்ட கதி. கதி-வழி.

முடித்தமையால் இதுவே வாசகம் என்ற உறுதிப்பாட்டை அருளிச் செய்தார்.

இனி, 'மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள்' (1.3:1)[5] என்று தொடங்கி 'திருவுடை அடிகள்' (1.3:8) என்றும், 'மையகண்ணாள் மலர்மேல் உறைவாள் உறை மார்பினன்' (4.5:2) என்றும், 'நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும் இன்பன்' (4.5 8) என்றும், 'கோலத்திருமா மகளொடு உன்னைக் கூடாதே' (6.3:9) என்றும் சொல்லிக் கொண்டு போந்து 'திருவாணை' (10.10:2) என்றும், 'கோல மலர்ப்பாவைக் கன்பாகிய என் அன்பே' (10.10:7) என்று முடிக்கையாலே திருமகள் கேள்வனான நாராயணனே பரம் பொருள் என்றும் அருளிச் செய்தார். இதனால் நம் ஆசாரியர் கள் (நாதமுனிகள் தொடக்கமாகவுள்ள பெருமக்கள்) இரகஸ்யத்தில் (அதாவது துவயத்தில்)[6] 'ஸ்ரீமத், ஸ்ரீமதே' என்ற இரண்டு பதங்களாலும் அருளிச் செய்து கொண்டு செல்லும் பொருளுக்கு அடி இவ்வாழ்வாரேயாவர் என்பது போதரும். இறைவனைப் பற்றுகின்ற காலத்தில் ''மலர் மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள்' என்று தொடங்கி போக வேளையிலே 'கோலமலர்ப் பாவைக் கன்பாகிய என் அன்பே' என்று சொல்லுகையாலே பற்றும் வேளையோடு போகம் வேளையோடு வேற்றுமையற ஒரு மிதுனமே

5. பரம்பொருளின் உயர்வற உயர்ந்த முதன்மைக்குக் காரணங்கள் பலவற்றுள் திருமகள் கேள்வனாக இருத்தலும் ஒரு காரணமாக இருத்தலின் அதனை அருளிச் செய்கின்றார் — 'மலர்மகள் விரும்பும்' என்றது முதல் 'பரம்பொருள் என்றும் அருளிச் செய்தார்' என்றது முடிய.

6. துவயம் :
ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம:!!
என்பது.

(இரண்டு) உத்தேசியம் (பலம்) என்னும் இடம் அருளிச் செய்தாராவர்: ஆக, இவ்வகையில் பரம்பொருளின் சொரூபம் அதாவது ஈசுவரனின் இயல்பு காட்டப் பெற்றது.

2. **ஆன்மாவின் இயல்பு :** திருவாய்மொழியிலுள்ள 'பயிலும் சுடரொளி' (7.3), 'ஏறாளும் இறையோனும்' (4.8) 'கண்கள் சிவந்து' (8.8), 'கருமாணிக்கம்' (8.9) என்ற நான்கு திருவாய்மொழிகளும் ஆன்மாவின் இயல்பினை விளக்குவன வாகும்.

**விளக்கம் :** 'உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்' (1.1:7) என்று சரீர ஆன்ம பாவனையைத்[7] தாம் சொல்லிப் பிறருக்கு உபதேசிக்கின்ற இடத்தில் 'உம்முயிர் வீடுடையானிடை' (1.2:1) என்று அந்தச் சரீர ஆன்மபாவனையையே உபதேசித்து, இந்தச் சரீர – ஆன்ம பாவனையால் பலிப்பது 'வேறு ஒருவர்க்குமின்றி இறைவனுக்கே அடிமையாக இருத்தல்'[8] என்னும் இடத்தை 'தனக்கேயாக எனைக் கொள்ளும் ஈதே' (2.9:4) என்றும், 'அடியேன் உள்ளான் உடல் உள்ளான்' (8.8:2) என்றும் சொல்லி இஃது அவனுக்கு அடிமை என்ற அளவிலே நிற்பது ஒன்றன்று, அவன் அடியார்க்கு அடிமை என்ற அளவிலும் சென்று சேர்தல் வேண்டும்; அப்பொழுதுதான் அவனுக்கு அடிமையாதலும் கைகூடும் என்னும் இடத்தைப் 'பயிலும் சுடர்ஒளி' (3.7), 'நெடுமாற்கு அடிமை' (8.10), என்னும் திருவாய் மொழிகளிலே பரக்க அருளிச் செய்து, 'அடியார்

7. இச்சரீரத்திற்கு ஆன்மா தாரகனாய் நியாமகனாய் சேஷியாய் இருப்பது போன்று இச்சரீர ஆன்மாக் களுக்கு இறைவன் தாரகனாய் நியாமகனாய்ச் சேஷியாய் இருப்பான். தாரகன் - தரித்துக் கொண் டிருப்பவன். நியாமகன் - ஏவுகின்றவன். சேஷி - தன் விருப்பப்படி விநியோகம் கொள்ளுகின்றவன்.
8. அநந்யார்ஹ சேஷத்துவம்.

கள் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ' (2.3:10) என்று பிரார்த்தித்து, பிரார்த்தித்தபடியே 'அடியாரோடு இருந்தமை' (10.9:11) என்று முடிப்பதனாலே பாகவதர் கட்கு அடிமைப்பட்டிருத்தலை எல்லையாகவுடைய பகவத் சேஷத்துவமே சொரூபம் என்பதனை அருளிச் செய்தார்.

3. **ஆன்மா அடையும் பலன்:** 'எம்மா வீடு' (2.9), 'ஒழிவில் காலம் எல்லாம்' (3.3), 'நெடுமாற்கு அடிமை (8.10), 'வேய்மரு' (10.3) என்ற நான்கு திருவாய்மொழி களும் ஆன்மா அடையும் பயனைப் பேசுவனவாக இருக்கும்.

**விளக்கம்:** 'தனக்கேயாக எனைக் கொள்ளும் ஈதே' (2.9:4)[9] என்று தொடங்கி 'வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்' (3.3:1) என்றும், 'பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட' (4.8:2) என்றும்' முகப்பே கூவிப் பணிகொள்ளாய் (8.5 : 7) என்றும் இப்படிகளாலே அடிமையே புருஷார்த்தம்[10] என்று அறுதியிட்டு, 'இவ் வடிமைதான் சாத்திரங்களால் விதிக்கப்பெற்றது என்று செய்வது அன்று, சொருபத்திற்கு (இயல்பிற்குத்) தக்கது என்றும் செய்வது அன்று, ஆசையாலே செய்யத்தக்கது' என்பதனைத் தெரிவிப்பதற்காக, முதலிலே உயர்வற உயர் நலம் உடையவன்' (1.1:1) என்று அடைவதற்குரிய குணங் களைச் சொல்லி 'சுவையன் திருவின் மணாளன்' (1.9:1) என்றும், 'தூய அமுதைப் பருகிப் பழகி' (1.7:3) என்றும் குணங்களோடு கூடிய பொருளினுடைய இனிமையையும் சொல்லி, 'அப்பொழுதைக்கப்பொழுது என் ஆராஅமுதம்' (2.5:4) என்றும், 'ஆராவமுதே' என்றும், (5.8 : 1) ஆராவமு

9. 'தனக்கேயாக' என்றது முதல் 'தொண்டே புருஷார்த்தம்' என்றது முடிய புருஷார்த்த சொருபத்தை அருளிச் செய்கின்றார்.
10. புருஷார்த்தம் - புருஷனால் வேண்டப்படுவது; பலம். புருஷன் - ஆன்மா; சரீரத்தில் வசிப்பவன் என்பது பொருள்.

தானாயோ' (10.10:5) என்றும் நாடோறும் புதிது புதிதாக இருக்கும் இந்த இனிமையின் தன்மையைச் சொல்லி, 'உதந்த பணிசெய்துன பாதம் பெற்றேன்' (10.8:10) என்று குணங்களை அநுபவித்தலாலுண்டாகும் பிரீதியினால் செய்யப்படும் கைங்கரியமே புருஷார்த்தம் என்னும் இடத்தைச் சொல்லி, இதுதான் உயிருள்ள அளவும் உள்ளதான புருஷார்த்தம் என்கைக்காக 'ஈதே இன்னம் வேண்டுவதெந்தாய்' (10.8:10) என்று முடிக்கையாலே பகவானுடைய குணங்களை அநுபவித்தலால் உண்டாகும் பிரீதியாலே செய்யப்படும் தொண்டே என்று புருஷார்த்தம் அருளிச் செய்தார்.

4. **பயனை அடைதற்குத் தடையாய் உள்ளவைகள் :** 'விடுமின் முற்றவும்' (1.2), 'சொன்னால் விரோதம் இது (3.9), 'ஒரு நாயகமாய்' (4.1), 'கொண்ட பெண்டிர்' (9.1) என்ற நான்கு திருவாய்மொழிகளும் பயனை அடைதற்கு இடைச் சுவரான தடைகளைப்பற்றிப் பேசுவன.

**விளக்கம் :** இரண்டாம் திருவாய்மொழியில் 'விடுமின் முற்றவும்' (1.2) என்று கட்டடங்கச் சொல்லி, அவற்றைமேல் மூன்று திருப்பதிகங்களால் விரித்து அருளிச் செய்கின்றார். 'சொன்னால் விரோதம்' (3.9) என்ற திருப்பதிகத்திலே பணியத்தகாதாரைப் பணிதல் விடத்தக்கது என்கின்றார்; 'ஒரு நாயகமாய்' (4.1) என்ற திருவாய்மொழியில் ஐசுவர்ய கைவல்யங்கள் விடத்தக்கன என்கின்றார். 'கொண்ட பெண்டிர்' (9.1) என்ற திருவாய்மொழியில் சரீரசம்பந்தம் காரணமாக வருபவை விடத்தக்கன என்கின்றார். இதுசரி, சாத்திரங்களால் விதிக்கப்பெற்ற ஐசுவரிய கைவல்யங்கள் புருஷார்த்தமாகத் தடை என்ன? என்று வினவலாம். ஐங் கருவி கண்ட இன்பமாகையாலும்[11] கைவல்யம்-தெரிவரிதாய் அளவிறந்து இருந்ததேயாகிலும் பகவானுடைய அநுபவத்தை நோக்கச் சிற்றின்பமாகையாலும் இவற்றைத்

11. திருவாய் 4.9:10

தியாச்சியம் (விடத்தக்கவை) என்றார். ஆக, இவற்றால் விரோதியின் தன்மை அருளிச் செய்யப்பெறுகின்றது.

தியாச்சியம் என்றால் விடுவதுதானே; விடுகின்றவகை அருளிச் செய்யவேண்டுமோ? ஆம்; அறிந்து கொள்ளத்தான் வேண்டும். விஷயங்களினின்றும் தான் கடக்க நின்று ஒழுக வேண்டுமோ? அல்லது விஷயங்களை அழிப்பித்து ஒழுக வேண்டுமோ? என்றால் இரண்டுமே கூடாது. கடக்க இருக்க வேண்டும் என்று நினைத்தால் லீலாவிபூதிக்கு அருகே செல்லுதல் வேண்டும்; அழிப்பித்து ஒழுக வேண்டும் என்றால் பகவானுடைய விபூதியை அழித்தலாகிவிடும். இனி, இரண்டும் ஒழிய பொருள்களின் அண்மையினின்றும் நீங்கி மனித நடமாட்டம் அற்ற காட்டில் வசித்தாலோ எனின்: அதுவும் ஆகாது. ஏன் எனில்; எல்லாவற்றையும் விட்ட ஆதிபரதனுக்கு[12] மானின் பக்கம் அன்பு ஏற்பட்டு ஞானக்கேடு உண்டாயிற்று. சௌபரி[13] என்பான் நீருக்குள்ளே மூழ்கிக் கிடந்தபோது அங்கே திரிகின்ற மீன்கள் சிலவற்றைக் கண்டு சிற்றின்பத்தில் அன்புள்ளவனானான்; ஆகையால் விடுகின்றவை இவை அல்ல. ஆயின் மற்று என்னோ எனின்:

> நீர்நுமது என்றிவை
> வேர்முதல் மாய்த்து, இறை
> சேர்மின் (திருவாய் 1.2 : 2)

என்று தேகத்தை ஆன்மா 'என்று' கருதும் அறிவையும், தேகத்தோடு சம்பந்தப்பட்டிருக்கின்ற பொருள்களில் 'எனது'

12. ஆதிபரதன்-இவன் ஐம்பொறிகளையும் அடக்கிய அருந்தவன். இவன் தான் வளர்த்த மான் பக்கம் வைத்த அன்பினால் தனது இறுதி காலத்து அந்த மானின் நினைவோடு உயிர்விட்டான். ஆதலால் அவன் மானின் பிறவி எடுக்க வேண்டி நேரிட்டது.
13. இவன் ஒரு முனிவன்.

என்ற அறிவையும் தவிர்த்தல் விடுகின்ற வகை என்று பிறர்க்கு உபதேசித்தார்.

யானே என்னை அறியகில்லாதே
யானே என்தனதே என்றிருந்தேன்
— திருவாய் (2.9 : 9)

என்று தாமும் சொல்லிப் போந்தார். ஆகவே, 'ஆசை இல்லாதவனுக்குத் தான் வசிக்கும் வீடே தவம் செய்வதற் குரிய வனமாம்'[14] என்று சொல்லப்பட்டது. ஆசை நீக்கியவனுக்குத் தான் இருந்த தேசமே தவம் செய்வதற்கு 'ஏகாந்தத் தலம்' என்பது போதரும். இதனைச் சனகராச னிடத்தும் குலசேகரப் பெருமாளிடத்தும்[15] காணலாம். ஆகவே புத்தித் தியாகமே தியாகம் என்பது தெளிவா கின்றது.

5. பயனை அடையும் வழிகள் :'நோற்ற நோன்பும்'(5.7), 'ஆராஅமுதே' (5.8), 'மானேய்நோக்கு' (5.9), பிறந்த வாறும்' (5.10) என்ற நான்கு திருவாய்மொழிகளும் எம்பெருமானை அடையும் வழிகளைக் (உபாயங்களைக்) கூறுவனவாக இருக்கும்.

விளக்கம் : புருஷார்த்தம் கைகூடுவதற்கு இரண்டு வழி கள் சொல்லப் பெறுகின்றன. அவை பக்தி, பிரபத்தி என்பன பத்தி மூன்று வருணத்தார் மேற்கொள்ளக் கூடியது; பிரபத்தி ஒரு கதியும் இல்லாத யாவரும் மேற்கொள்ளக்

14. இதிகாச சமுச்சயம்
15. சனகராசன் : மிதிலைமன்ன; சீதாப்பிராட்டியின் தமப்பன்; தத்துவஞானி. இருவகைப்பற்றுகளையும் அறவே விட்டவன். குலசேகரப் பெருமாள் : சேர மன்னனாயினும் பற்றறவர். 'பேயரே எனக்கு யாவரும் யானுமோர், பேயனே எவர்க்கும் இது பேசி என்' (பெரு.திரு. 3 : 8) 'ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ வானாளும் செல்வமும் மண்ணரசும்யான்வேண்டேன்' (ஷை 4 : 2) என்பன இவர்தம் திருவாக்குகள்.

கூடியது. நம்மாழ்வார் பிரபத்தியே தமது சித்தாந்தம் என்று உபதேசித்தார். பிரபத்தி[16] என்பது சரணாகதி தத்துவம். பிரபந்த ஜன கூடஸ்தர் என்று நம்மாழ்வாருக்கு ஒரு சிறப்புப் பெயர் உண்டு, பிரபத்தி நெறியை அநுட்டிக்கும் வைணவர்கள் யாவருக்கும் தலைவர் என்பது இதன் பொருள். ஆழ்வார் பிரபத்தி பண்ணியது அர்ச்சாவதாரத்திலேயே.[17]

இனி, இந்த நெறியை விளக்குவோம். 'நோற்ற நோன்பு இலேன்' (9.7 : 1) என்றும், 'ஆறு எனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்' (5.7 : 10) என்றும், 'உழலை யென்பின் பேய்ச்சி முலையோடவளை உயிருண்டான், கழல்களையே சரணாகக் கொண்ட' (5 8 : 11) என்றும், 'நாமங்கள் ஆயிரமுடைய நம் பெருமான் அடிமேல், சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன்' (5.9 : 11) என்றும், 'நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு' (5.10 : 11) என்றும் சொல்லிக் கொண்டு, 'ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலாது அறிகின்றிலேன்' (10.10 : 3) என்றும், 'நின் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே' (6.10 : 10) என்றும் முடித்தலால் திருவடிகளே உபாயம் என்று அருளி செய்தார்; இதனைப் பிறர்க்கு உபதேசிக்குமிடத்திலும், 'திருநாரணன் தாள் காலம்பெறச் சிந்தித்து உய்மினோ' (4. 1 :1) என்றார். மற்றும் 'ஆறெனக்கு நின்பாதமே' (5.7.10), 'கழல்களவையே' (5.8 : 11) என்றும், 'சரணே சரண் நமக்கு'

16. பிரபத்தி : பிர - சிறப்பு; பது - செல்லல், அடைதல், பிரபத்தி - சிறப்பாக அடைதல்; சிறப்பாவது, மனத்தால் அடைதல்; இது சரண் அடைதல் எனப் பொருள்படும்.
17. 'தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம்' (முத. திருவந் 44) என்ற பொய்கையார் பாசுரப்படி அன்பர்கள் எதை இறைவனது திருமேனியாகக் கொள்கின்றனரோ அதனையே இறைவன் தனக்கு வடிவமாகக் கொண்டுள்ள நிலைதான் அர்ச்சை என்பது.

(5.10 : 11) என்றும் போந்த பிரிநிலை ஏகாரத்தால், உபாயம் வேறொன்று இன்று; அத்திருவடிகளே எல்லாவற்றையும் தரவல்ல உபாயம் என்பதனையும் அருளிச் செய்தார். இப்படிப் பல இடங்களிலும் பிரபத்தி செய்தது அர்ச்சாவதாரத்திலேயாகும். 'பிறந்தவாறும்' (5.10.1) என்ற திருவாய்மொழி ஒன்றிலுமேயிறே அர்ச்சாவதாரத்திலே புகலப் புகுந்தது''[18] என்ற ஸ்ரீவசனபூஷண வாக்கியம் ஈண்டு அநுசந்திக்கத் தக்கது.

**உபாயத்திற்கு அதிகாரிகள்** : இனி, இந்த உபாயத்திற்கு அதிகாரிகள் யாவர் என்பதனையும் ஆழ்வார் பாசுரங்களாலேயே அறியலாம். 'மயர்வற மதிநலம் அருளினன்' (1.1 : 1) என்றவிடத்தில் 'எனக்கு அருளினன்' என்பதில் தம்மைக் காணாமையால் 'ஆகிஞ்சந்யத்தையே[19] முற்கொண்டு உபாயத்தை அறுதியிடும்போது 'நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்' (5.7 : 1) என்று மூன்று வருணத்தார் மட்டிலும் செய்யக் கூடிய வேறு உபாயங்களில் அநந்வயமுகத்தால்[20] ஆகிஞ்சந்யத்தைப் பேசி, பற்றுகிற நேரத்தில் 'புகலொன்று இல்லா அடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே' (6.10 : 10) என்று சொல்லி, போக வேளையில் தமக்கு உண்டானவை அடங்க எம்பெருமானுடைய திருவருளால் வந்தவை என்பதற்காக 'நீசனேன் நிறையொன்றுமிலேன்' (3.3 : 4) என்று கருந்தரையைப்[21] பேசி, 'ஒப்பில்லாத தீவினையேனை உய்யக் கொண்டு' (7.9 : 4) என்று முடிக்கின்றார். ஆதலின் பாவமே செய்து பாவிகளான ஆன்மாக்களும் சென்று சேரலாம் என்று

18. ஸ்ரீவச. பூஷண-38 (புருடோத்தம நாயுடு பதிப்பு)
19. ஆகிஞ்சந்யம்-வேறு உபாயமும் வேறு கதியும் இல்லாமை.
20. அநந்வயமுகம்-சம்பந்தம் இல்லாத தன்மை.
21. கருந்தரை-பாழ்நிலம்; 'ஒன்றும் இல்லாத இடம்'

தோற்றுகையாலே எல்லோரும் இந்த உபாயத்திற்கு, அதாவது பிரபத்திக்கு, அதிகாரிகள் ஆவர் என்பதைத் தெரிவிக்கின்றார்.

அதிகாரியைப் பெற்றாலும், உபாயம் சித்தம் ஆனாலும் பற்றுதல் இல்லாதபோது உய்வதற்குக் காரணம் ஆகாமை யாலே அப்பற்றுந்தன்மையை 'கழல்கள் அவையே சரணாகக் கொண்ட' (5.8 : 11) என்றும், சாங்க அநுட்டான வேளை யில், 'அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்' (6.10 : 10) என்றும் அருளிச் செய்தார். இங்ஙனம் பற்றுதல் கை கூடுவதும் இறைவன் அருளால்தான் நடைபெறும் என்பதை 'நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்' (5.7 : 10) என்றும், 'அதுவும் அவனது இன்னருளே' (8.8 : 8) என்றும் அருளிச் செய்தார். பற்றும் தலைவனது மனநிலையின் தன்மையினைக் 'களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்' (5.8 : 8) என்றும், 'நாடொறும் ஏக சிந்தை யினாய்' (5.10 : 11) என்றும் அருளிச் செய்தார். இவ் வுபாயத்தைப் பிறருக்கு உபதேசிக்கும் இடத்தில், 'மற்றொன் றில்லை சுருங்கச் சொன்னோம் மாநிலத் தெவ்வுயிர்க்கும் சிற்ற வேண்டா சிந்திப்பே அமையும்' (9.1 : 7) என்று உபாயத்தின் எளிதாம் தன்மையை அருளிச் செய்து, இப் பிரபத்தியை வகைப்படுத்தி அருளிச் செய்கிற இடத்தில் இப்பிரபத்தி பக்திக்கு அங்கமன்று; தானே இருந்து காரியத்தைச் செய்யவல்லது' என்பதை விளக்குவதற்காக 'சரணமாகும்' (9.10 : 5) என்று தொடங்கி 'மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்' என்று பேறு முடிய முழுதினையும் நடத்தும் என்று அருளிச் செய்தார். இவ் வுபாயத்தினையே உறுதியாக நம்பியிருப்பவருக்குக் காலங் கழிக்கும் வகை (பொழுதுபோக்கும் வகை) இருக்கும்படி என்? என்னில்; 'தொண்டர்க்கு அமுது உண்ணச் சொன் மாலைகள் சொன்னேன் அண்டத்தமரர் பெருமான்

அடியேனே. (9.4 : 9) என்பதனால் இத்திருவாய்மொழியே காலம் கழிக்கும் பொருளாக அமையும் என்று அருளிச் செய்தார்.

இங்ஙனம் உபாயத்தை மேற்கொண்டு இதுவே போது போக்காகத் திரியும் அதிகாரிக்குப் பலம்[22] யாது? எனின்: ஐம்பொறிகளையும் அடக்கல் முதலாகக் கைங்கரிய சித்தி முடிவாக இத்தனையும் உபாய பலம் என்பதனை அருளிச் செய்தார். உபாசகர்கள் இறைவனைப் பற்றுவதற்கு இழியும்போது ஐம்பொறிகளையும் அடக்கின நிலையில் இழிதல் வேண்டும். இந்தப் பிரபத்தி அதிகாரிக்கு ஐம்பொறிகளை அடக்குதலும் இவ்வுபாயத்தின் பலமாகும். இதனை, 'என்னைத் தீ மனம் கெடுத்தாய்' (2.7 : 8) என்றும், 'மருவித் தொழும் மனமே தந்தாய்' (2.7 : 7) என்றும் இவர்தாமே அருளிச் செய்திருப்பதனால், ஐம்பொறிகளை அடக்குதலும் அவன் திருவருளாலேயாகும் என்பது அறியப்படும்.

ஐம்பொறிகளை அடக்கின நிலையில் இறைவனுடைய அநுபவத்துக்கு உபகரணமான பக்தி முதலானவைகள் தமக்குத் தாமே உண்டாகின்றனவா? என்ற வினா எழுகின்றது. அதற்கு விடையாக ஆழ்வாரே "மயர்வற மதிநலம் அருளினதால்' பக்தியின் நிலையினை அடைந்த ஞானத்தையும் தானே தந்தான் என்று அருளிச் செய்து, பக்தி முதலானவைகள் தோன்றுதலும் அவன் திருவருளாலே என்பதனையும் அருளிச் செய்தார். ஆயினும், தோன்றிய பக்திக்கு வர்த்தகர் யார்? என்னில்: 'காதல் கடல் புரைய விளைவித்த, காரமர் மேனி நம் கண்ணன்' (5.8 : 4) என்பதனால் அவனே வர்த்தகன் என்பதனையும் அருளிச் செய்து, வளர்வதற்கு எல்லை 'அதனில் பெரிய என் அவா' (10 10 : 10)

22. மேலே கூறப்பட்ட அதிகாரிக்குப் பலன்—உபாசகர்க்கென்றும் ஈண்டுக் கூறப்படுவது பிரபந்நர்க்கு என்று அறிந்து தெளிக.

என்று காட்டி, அந்த அவா தத்துவத்திரயங்களையும்[23] (திரயம்-மூன்று) விளாக்குலை கொள்ளும்படி[24] பெருகின மையையும் 'என் அவா அறச் சூழ்ந்தாயே' (10.10 : 10) என்று தனது திருவாயாலே அருளிச் செய்கின்றார். இதனால் சரீர சம்பந்தத்தை அறுத்துத் தேச விசேஷத்திலே கொண்டு போய்த் தன் திருவடிகளில் சேர்ப்பித்துத் தலைக்கட்டினான் என்பதனையும் அருளிச் செய்கின்றார்.

ஆகவே, இந்த ஐம்பொருள்களும் அர்த்த பஞ்சகமும் திருவாய்மொழியால் சொல்லப்படுகின்றன; இவை அல்லாதவை ஆநுசங்கிக சித்தமாய் வந்தன[25] என்பதை அறிதல் வேண்டும். யாங்ஙனம் என்னில் பரம்பொருள் ஸ்ரீமந் நாராயணன் என்றும், அநந்யார்ஹசேஷத்துவமே,[26] சொரூபம் என்றும், இறைவனுடைய குணங்களை அநுபவிப்பதால் உண்டாகும் பிரீதியால் செய்யப்படும் கைங்கரியமே புருஷார்த்தம் என்றும், யான் எனது என்ற அகப்பற்று – புறப்பற்றுகளே விரோதி என்றும், அவை நீங்கு தற்கும் கைங்கரிய சித்திக்கும் சர்வ சுலபனான சர்வேசுவரனின் இணையடிகளே உபாயம் என்றும், ஐம்பொறிகளை அடக்கல் முதல் கைங்கரியம் முடிவாக வுள்ளவை அவ்வுபாயத்திற்குப் பலம் என்றும் விளக்கப் பெற்றன. வேதங்கள் இதிகாச புராணங்கள், மகாத் மாக்கள், முனிவர்கள் இவர்களின் கருத்துகள் இவற்றில்

23. தத்துவத்திரயம் — சித்து, அசித்து, ஈசுவரன் மூன்று தத்துவங்கள்
24. விளாக்குலை கொள்ளுதல் — தனக்குள் அடங்கும்படி செய்தல்.
25. 'ஆநுஷங்கிக சித்தமாய் வந்தன' என்றது இடையிலே வந்தவை என்றபடி,
26. அநந்யார்ஹசேஷத்துவம் - வேறொருவருக்கும் அல்லாமல் ஈசுவரன் ஒருவனுக்கே அடிமையா யிருத்தல்.

அடங்கியுள்ளன என்றும் இவையே திருவாய்மொழிக்கே வாக்கியார்த்தமாக அமைந்துள்ளன என்றும் பெரிய வங்கிபுரத்து நம்பியும் அருளிச் செய்வர்.

**கைங்கரியம் :** வைணவதத்துவத்தின் நவநீதம் போன்றிருப்பது கைங்கரியம்[27] ஆகும். வைகுந்தத்தில் பரமபத நாதனுக்குக் கைங்கரியம் புரிவதே வைணவர்கள் விரும்பும் வீடுபேற்றின் பயனாகும். நம்மாழ்வார் விரும்புவதும் இதுவேயாகும்.

> **ஒழிவில் காலமெல்லாம்**
> **உடனாய் மன்னி**
> **வழுஇலா அடிமை**
> **செய்ய வேண்டும்** (3.3:1)

என்பது அவர்தம் திருவாய்மொழி.

27. கிங்கரன் — வேலையாள், அடிமை. கிங்கரன் செய்வது கைங்கரியம்; அதாவது அடிமைத்தன்மை (Service).

# 14. தத்துவத் திரயம்

திருமாலை முழுமுதற் கடவுளாகக்கொண்டு பல உயரிய கொள்கைகள் அடங்கிய ஒரு பரந்த சமயமே வைணவ சமயம் ஆகும். இச்சமயத்தின் கொள்கைகளை தத்துவம், இதம், புருஷார்த்தம் என்று வகைப்படுத்திப் பேசுவர். நம் மாழ்வார் பிரபந்தங்களில் இம்மூன்று கொள்கைகளும் ஆங்காங்கே அமைந்து கிடக்கின்றன. ஆழ்வார் பாசுரங்கள் தோத்திர நோக்குடையனவாதலின் சாத்திர நூல்களில் இருப்பதுபோல் தத்துவங்கள் விரிவாகக் காணப் பெறுவதில்லை. இனி இச்சமயத்தின் கொள்கைகளை ஆழ்வார் பாசுரங்களின் அடிப்படையில் காண்போம்.

## 1. தத்துவம்

தத்துவங்கள் மூன்று. அவை சித்து, அசித்து, ஈசுவரன் என்பன. சித்து என்பது உயிர்களின் (ஆன்மாக்களின்) தொகுதி. அசித்து என்பது, மக்கள் விலங்கு முதலியவற்றின் உடம்பு முதலிய உலகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமான பிரகிருதியாகும்.; பிரகிருதியை மூலப்பகுதி என்பர். ஈசுவரன் என்பது, இறைவன். இவை மூன்றும் தத்துவத்திரயம் (திரயம் - மூன்று) என்ற பெயரால் வழங்கப் பெறுகின்றன,

சித்து : ஞானத்தின் இடமான ஆன்மாவே சித்து எனப்படும்; இது சேதநன் எனவும் வழங்கப்பெறும். தேகம்,

இந்திரியங்கள், மனம், பிராணன், ஞானம் இவற்றிற்கு வேறுபட்டது. அறிகின்ற தலைவனும், அறிவும், அறியப் பெறும் பொருளும் தானாக இருப்பது. அணுவின் அளவுடைய இந்த ஆன்மா ஆனந்த வடிவத்தைக் கொண்டது; என்றும் நிலைபெற்றிருப்பது. இஃது இதயத்தில் கட்டை விரல் வடிவில் குடி கொண்டிருப்பதாகச் சொல்லப்பெறும். இது கண் முதலிய இந்திரியங்கட்குத் தோற்றாது. மனத்தாலும் இதனை எண்ணிப் பார்க்க முடியாது. நம்மாழ்வாரும்,

**என்**
**ஊனில் உயிரில் உயர்வினில்**
**நின்ற ஒன்றை உணர்ந்தேனே** (8.8:4)

என்கின்றார். 'என் உடலிலும் உயிரிலும், ஞானத்திலும் வியாபித்திருக்கின்ற ஆன்மாவைத் தனக்கு உடலாக உடையவனை' என்பது இதன் பொருளாகும். மேலும் ஆழ்வார் இதனை,

**நின்ற ஒன்றை உணர்ந்தேனுக்கு**
**அதன்நுண் கேர்மை அதுஇதுஎன்று**
**ஒன்றும் ஒருவர்க்கு உணரலாகாது;**
**உணர்ந்தும், மேலும் காண்பரிது;**
**சென்று சென்று பரம்பரமாய்,**
**யாதும் இன்றித் தேய்ந்து அற்று,**
**நன்று.தீது என்று அறிவுஅரிதாய்,**
**நன்றாய் ஞானம் கடந்ததே** (8.8:5)

என்ற பாசுரத்தில் விளக்குவதையும் அறியலாம். ''எம் பெருமான் திருவருளால் நான் அறிந்த ஆன்மப் பொருள் வேறு ஒருவரும் அறியக் கூடியதன்று; அறிந்தாலும் கண் கூடாகக் காணக் கூடியதன்று'' என்கின்றார் ஆழ்வார்.

இதனை மேலும் விளக்குவது இன்றியமையாததா கின்றது. உடல், புலன்கள், மனம், பிராணன்,

இவற்றிலும் வேறுபட்டதாய், இவை அழிந்தாலும் கூட அழியாமல் இருந்து இவற்றை நியமிக் கின்றதுமாய், வேறுபட்ட சிறப்பினையுடையதுமான ஆன் மாவைக் குறிப்பதற்காக 'நின்ற ஒன்றை' என்று குறிப் பிட்டார். எம்பெருமான் தனக்குப் பிரகாரமாக (வழியாக) நின்று காட்டி கொடுக்கத் தான் உணர்ந்ததாகக் குறிப்பிடு கின்றார். 'உணர்ந்தேனுக்கு'—ஆராய்ந்தேனுக்கு என்ப தனால் இது பெறப்படுகின்றது. மேலும், இதுகாறும் ஆழ்வார் ஆன்ம சொருபத்தை உணராதிருந்து இப் போதுதான் உணரப் பெற்றார் என்பதையும் இது குறிப் பிடுவதாகக் கொள்ளலாம். 'உயர்வற உயர் நலமுடையவன்' (1.1.1) எம்பெருமானாகையால் அவனுடைய அநந்த கல்யாண குணங்களில் இழிந்து அவற்றை அநுபவித்த வராதலால் மின்மினிபோலே இருக்கின்ற ஆன்மசொருபத் தில் கண் வைத்தார் இலர். தவிர, ஞானம் கனிந்த பக்தி வழியாக ஞானம் அடைந்தவராதலால், ஆன்மாவைப் பற்றிச் சிந்திக்கவும் இவருக்கு நேரம் கிடைத்திலது என்றும் கருதலாம்.

இந்த ஆன்ம சொருபம் அவருக்கு எப்படி விளக்க மாயிற்று? அதன் வேறுபட்ட தனிச்சிறப்பை 'அதன் நுண்மை' என்ற சொற்றொடர் விளக்குகின்றது. அதன் சிறப்புத் தன்மையைச் சிறந்த ஞானியராலும் அறிய முடியாது. இஃது 'உணர்ந்தும் மேலும் காண்பரிது' என்ற சொற்றொடரால் குறிப்பிடப் பெறுகின்றது. இப்படி யிருக்க, ஆன்ம சொருபம் இவருக்கு எப்படி விளக்கம் அடைந்தது? எம்பெருமான் காட்டிக் கொடுக்கக் கண்ட தமக்குத் தெரிந்தபடியை விரித்துரைக்கின்றார் ஆழ்வார் பின்னிரண்டடிகளில்,

தைத்திரீய உபநிடதத்தில் முதலில் அன்னமயமும் அதற்கு அடுத்து மனோமயமும் சொல்லப் பெற்று அதற்கு

மேல்தான் ஆன்மா கூறப்பெறுகின்றது. 'சென்று சென்று பரம்பரமாய்' என்ற பகுதியில் இது தெரிவிக்கப் பெறுகின்றது. அதாவது ஒன்றுக்குமேல் ஒன்றாகச் செல்லுகின்ற வரிசையில் மேம்பட்டதென்பதை உணர்த்துகின்றது. அல்லது மற்றோர் உபநிடத வாக்கியப்படி உடலென்ன, புலன்களென்ன, மனம் என்ன, பிராணன் என்ன, புத்தி என்ன இவற்றைக் காட்டிலும் மேம்பட்டிருக்கின்ற நிலைமையைச் சொன்னதாகவும் கொள்ளலாம். இது போலவே, ஆன்மாவும் பிரகிருதி சம்பந்தப்பட்ட பொருள்களின் தன்மைகள் ஒன்றும் இல்லாமல் அவற்றோடு அறத்தேய்ந்து அற்று இருக்கும் என்று விளக்குகின்றார் ஆழ்வார். இது 'யாதும் இன்றித் தேய்ந்து அற்று' என்ற பாசுரப் பகுதி உணர்த்துகின்றது.

இதனை மேலும் தெளிவாக்குகின்றார் ஆழ்வார். உடல், உடலைக் காட்டிலும் புலன்கள், புலன்களைக் காட்டிலும் மனம், மனத்தைக் காட்டிலும் பிராணன் என்று ஒன்றுக்கு மேல் ஒன்று சிறப்புடையதாய் இருத்தல் போன்று, பிரகிருதி சம்பந்தப்பட்ட பொருள்களின் தன்மையில் நன்று என்றும் தீது என்றும் அறிய அரிதாய் இருக்கும். எடுத்துக்காட்டுகளால் இது மேலும் தெளிவு பெறும். நன்மலரையும் கரியையும் கையில் ஏந்திப் பார்க்கும்போது 'மலர் நன்று, கரி நன்றன்று' என்று அறிகின்றோம். இக்கருத்து 'நன்று தீதென்று அறிவரிதாய்' என்ற பாசுரப் பகுதியால் தெளிவாகின்றது. உடல் முதலியவை புலன்களின் சேர்க்கையாதலால் இயல்பாகவே வேறுபட்டதாகவுள்ள ஆன்மாவை அறிதல் அரிது; ஞானம் கடந்தது - புலன்களால் ஏற்பட்ட ஞானத்திற்கு எட்டவே எட்டாததாக இருக்கும்.

இந்த ஆன்மாவைப் பகுதிகளாகப் பிரிக்கவும் முடியாது; அவயவமும் இதற்கு இல்லை. வளர்தல், பகுத்தல், குறைதல், தேய்தல் முதலிய வேறுபாடுகள் இதற்கு இல்லை. இது கத்தியால் சேதித்தல், தீயால் எரித்தல், நீரால்

நனைத்தல், காற்று, வெயில் முதலியவற்றால் உலர்த்தல் போன்ற செய்கைகட்கு இலக்காகாது. இதனை இரணியன் பிரகலாதனைக் கொல்லுவதற்கு மேற்கொண்ட செயல்களும், பல்லவமன்னன் திருநாவுக்கரசரைக் கொல்லுவதற்கு மேற்கொண்ட செயல்களும் பயனற்றுப் போனமையால் தெளியலாம். அறிவு மயமாக இருக்கும் இந்த ஆன்மா அறிவுக்கு இருப்பிடமானது. இந்த அறிவு தர்மபூத ஞானம் என்று வழங்கப் பெறும். இதனால் ஆன்மா 'தர்மிபூத ஞானம்' என்ற வேறொரு பெயராலும் வழங்கப்பெறும். இந்தச் சீவான்மா தனக்கு எப்பொழுதும் தோன்றிக் கொண்டேயிருக்கும். தன்னைத் 'தான்' என்று அறியும் பொழுது தர்மபூத ஞானம் உதவ வேண்டும் என்பதில்லை. ஆனால், சீவான்மா தன்னைத் தவிர வேறு எந்தப் பொருளையும் தர்மபூத ஞானத்தால் மட்டிலுமே அறிய முடியும். தன் சொரூபத்தைத் தர்மபூத ஞானத்தைக் கொண்டும் அறியலாம்.

ஆன்மா இறைவன் ஏவியபடி நடப்பது. அவனால் தரிக்கப்பெற்று, அவனுக்கு அடிமையாக இருப்பது. நம்மாழ்வார் தமக்கே உரிய தனிமுறையில், "உறுவ தாவது...திருக்குருகூர் அதனுள் குறிய மாண்உரு ஆகிய நீள் குடக்கூத்தனுக்கு ஆள் செய்வதே" (4 10:10) என்று அருளிச் செய்வர்.[2] தொலைவில்லி மங்கலத்துத் திருவாய்மொழியை ஓதவல்லார் அடையும் பயனை,

செந்தமிழ் பத்தும்வல்லார்
அடிமைசெய் வார்திரு மாலுக்கே (6.5:12)

என்று கூறித் தலைக்கட்டுவர். மனம் வாக்குக் காயங்களால் தேவபிரானையே எல்லாவித உறவுகளாலும் கொண்ட

2. சித்துபற்றிய மேலும் விளக்கத்தை இந்த ஆசிரியரின் முத்திநெறி (பாரிநிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை - 600 108) என்ற நூலில் கண்டு தெளியலாம்.

ஆழ்வார் அருளிய இத்திருப்பதிகம்பற்றிய இத்திருவாய் மொழியை ஓதவல்லவர்கள் பெருமாளும் பிராட்டியுமான சேர்க்கையில் அடிமை செய்யப்பெறுவர் என்று பயன் உரைக்கின்றமையால் கைங்கரியமே ஒருவர் பெறும் பெரும் பேறாகின்றது என்பதை அறியலாம்.

**அசித்து** : இஃது அறிவில்லாத பொருள். இஃது அசேதநம் என்றும் வழங்கப்பெறும். இதனால் கிடைக்கக் கூடிய பலனை அநுபவிப்பவன் சேதநனே. அசித்து விகாரத் திற்கு, அஃதாவது ஒரு நிலையினின்றும் பிறிதொரு நிலையை அடைதற்கு இடமானது. இதில் ஞானத்திற்குச் சிறிதும் இடம் இல்லை. இது சுத்த சத்துவம், மிச்ர தத்துவம், சத்துவ சூனியம் என்று மூவகைப்படும்.

**சுத்த சத்துவம்** : ஆதல் அழிதல் இல்லாதது. என்றும் நிலை பெற்றிருப்பது. இஃது ஆனந்தத்தையும் ஞானத்தையும் உண்டாக்கக்கடவதாக இருக்கும் இயல்பினை யுடையது. இறைவனின் அநுபவத்தின் பொருட்டே உண்டான இச்சையாலே நித்திய விபூதியில் (பரமபதத்தில்) விமானம் கோபுரம் மண்டபம் உப்பரிக்கை முதலிய வடிவுடன் தோற்றம் கொள்ளும். தீ, கதிரவன் முதலிய ஒளியுள்ள பொருள்களும் மின்மினிக்கு ஒப்பாகும்படி அளவிறந்த ஒளிவடிவினைக் கொண்டது. இது நித்தியர் முத்தர் ஈசுவரன் இவர்களாலும் அளவிடற்கரியது. கண நேரத்திற்குக் கணநேரம் முன்பில்லாத வியப்பினை உண்டாக்க வல்லதாகவும் இருக்கும். நித்தியர், முத்தர், ஈசுவரன் இவர்கள் ஞானத்தால் தன்னை அறிய முடி யாதபடி பேரொளி விட்டுத் திகழும். ஆயினும், சம்சாரிகட்கு- பத்தர்கட்கு - அங்ஙனம் தோற்றாது. இந்த சுத்தசத்துவம் வைகுந்தத்திலிருந்து மேலே எல்லையின்றி எங்கும் பரவி நிற்கும் தன்மையுடையதாக இருக்கும்,

மிச்ரதத்துவம் : இதுவே மூலப்பிரகிருதி என்பது. இது சாத்துவிகம், இராஜசம், தாமசம் என்று மூன்று குணங்களை யுடையதாதலின் 'திரிகுணம்' என்ற பெயராலும் வழங்கும். இந்த முக்குணங்கள் சமமான நிலையில் உள்ளபோது பிரகிருதியின் விகாரங்கள் நாம ரூபபேத விசேடம் இல்லாமல் பிரமாணங்களால் காணக்கூடாதபடி அதிசூக்குமங்களாக இருக்கும் (இதுவே மகாப்பிரளய நிலை). இந்தக் குணங்கள் ஏற்றத்தாழ்வை அடையுங்கால் இந்தப் பிரகிருதி பலவித தத்துவங்களாக மாறி நாம ரூபபேத விசேடத்தையுடையன வாகும். இவை பிரமாணங்களால் காணக்கூடியவை. அசித்தின் மூன்று குணங்களும் சேர்ந்து கர்மவான்களான சம்சாரி, சேதநருடைய ஞானம் ஆனந்தம் இவற்றிற்கு மறைவை உண்டாக்கும். அதுவல்லாததனை அதுவாக நினைக்கும் விபரீத ஞானத்தையும் உண்டாக்கும். இன்னும் இம்மிச்ரதத்துவம் ஆதல் அழிதல் இல்லாதது. இஃது ஈசுவரனுடைய உலகப்படைப்பு முதலியவற்றிற்கு விளையாட்டுக் கருவியாக இருந்து ஏற்றத்தாழ்வுள்ள இடம் என்ற இடவேறுபாட்டாலும்; அழிவுக்காலம், படைப்புக் காலம் என்ற கால வேறுபாட்டாலும் சூக்கும விகாரங்களை யும் தூலவிகாரங்களையும் உண்டாக்கக் கடவது. இது விசித்திரமான படைப்பை உண்டாக்குவதால் 'மாயை' என்ற பெயரையும் பெற்றது.

இந்தமிச்ர தத்துவம் இருபத்து நான்கு வடிவங்களாக இருக்கும். இவற்றை ஆழ்வார்,

> பொங்கு ஐம்புலனும் பொறிஐந்தும்
> கருமேந்திரியம் ஐம்பூதம
> இங்கு இவ்வுயிரேய் பிரகிருதி
> மான்ஆங்காரம் மனங்களே (10.7 : 10)

என்று குறிப்பிடுவர். அதாவது சேதநரைப் பூரிக்கும்படி செய்யும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் ஆகிய புலன்கள் ஐந்தும்; மெய் வாய் கண் செவி மூக்கு ஆகிய பொறிகள்

ஐந்தும்; வாக்கு கால் கை வாய் உபத்தம் ஆகிய கருமேந்திரியங்கள் ஐந்தும்; மண் நீர் எரி கால் ஆகாயம் என்னும் பூதங்கள் ஐந்தும்; இந்த லீலா விபூதியிலுள்ள (இந்த உலகம்) ஆன்மாக்கள் பொருந்தியுள்ள மூலப்பிரகிருதி ஒன்றும்; மகத் (மான்) தத்துவம் ஒன்றும்; அகங்கார தத்துவம் ஒன்றும்; மனம் ஒன்றும் என்ற இருபத்து நான்காம். அசித்தின் இந்த இருபத்து நான்கு தத்துவங்களையும் கலந்துதான் ஈசுவரன் தானாகவும் நான்முகம் மூலமாகவும் இந்த அகிலத்தைப் படைக்கின்றான்.

**சத்துவ சூனியம்** : காலதத்துவம் என்றும் இது வழங்கப் பெறும். இஃது எங்கும் பரவி நிற்கும் ஒரே திரவியம். இதில் சத்துவம் முதலிய பிரகிருதியின் மூன்று குணங்களும் இல்லை. எதிர், நிகழ், கழிவு முதலிய விகாரங்களுக்கு இதுவே காரணம் ஆகும். நிமிடம் விநாடி, நாழிகை முதல் பரார்த்தம் வரையிலுள்ள பகுதிகள் எல்லாம் இதனுடையனவே. இஃது ஈசுவரப் படைப்பின் பரிணாமங்களுக்குக் காரணமாய் தோற்றம் ஈறுஅற்றதாய், அவனுடைய படைப்பு, அளிப்பு, அழிப்பு ஆகிய விளையாட்டிற்குக் கருவியாய் அவனுக்கு உடலாய்த் திகழும். வைகுந்தத்தில் முன் பின் என்ற அளவிற்குக் காலம் உளதேயாயினும் அதன் சம்பந்தமின்றி அனைத்தும் எம்பெருமானது சங்கற்பத்தால் மட்டிலும்நடப்பனவாகும்.

மேற்கூறிய சுத்தசத்துவம், மிச்ரதத்துவம் ஆகிய அசித்தின் இரண்டு பகுதிகளும் ஈசுவரனுக்கும், நித்தியர் முத்தர் பத்தர் என்ற மூன்றுவித ஆன்மாக்களுக்கும்[3]

3. நித்தியர்—ஒரு நாளும் சம்சார சம்பந்த உணர்வு இல்லாத அனந்தன் கருடன், பெரிய திருவடி, சேனை முதலியார் (விஷ்வக்சேனர்) தொடக்கமானவர்கள் இவர்கள். முத்தர் என்பவர் இவ்வுலகத்தளைகள் களையப் பெற்றுப் பரமபதத்தில் பகவதநுபவ கைங்கரிய போகரானவர்களாவர். பத்தர்—இவர்கள் துக்கபரம்பரைகளை அநுபவிக்கின்ற சம்சாரிகள்.

போக்கியமாயும், போகத்திற்கு உபகரணமாயும், போகத்தை அநுபவிக்கத்தக்க இடங்களாயும் இருக்கும்.

**சரீர-சரீரி பாவனை :** ஈசுவரனுக்கு அடிமையாகவுள்ள (சேஷமாகவுள்ள) ஆன்மா ஆன்மாவை விட்டுப் பிரிந்திராத உடலைப்போல் சேஷியான (ஆண்டான்) ஈசுவரனையொழியவும் தான் வேறாகக் காணப்பெறுதல் இல்லை. இந்த முறையில் ஒவ்வோர் ஆன்மாவும் ஈசுவரனின் உடலாக இருக்கும். இங்ஙனமே அசித்தின் மூன்றுபகுதிகளும் ஈசுவரனுக்கு உடலாகத் திகழ்கின்றன. அதாவது சேதநாசேதநங்கள் எம்பெருமானின் சரீரமாக அமைந்துள்ளன. இந்நிலையைச் **சரீர-சரீரி** பாவனை (உடல் - உயிர் உறவு) என்று வழங்கப்பெறும். இது,

**திடவிசும்பு எரிவளி**
**நீர்நிலம் இவைமிசைப்**
**படர்பொருள் முழுவதும்**
**ஆய்அவை அவைதொறும்**
**உடல்மிசை உயிரெனக்**
**கரந்தெங்கும் பரந்துளன் (1.1 : 7)**

என்ற பாசுரத்தில் விளக்கம் அடைகின்றது. உண்டான ஒவ்வொரு பொருளிலும் உடலில் உயிர் உறையுமாப்போலே மறைந்திருந்து எல்லாவற்றிலும் தனித்தனியே குறைவற வியாபித்திருப்பான் இறைவன். நம்முடைய உடலுக்கு ஆன்மாதான் தாரகமாய், நியாமகனாய், சேஷியாய் இருப்பதுபோல அந்த உடலான்மாக்களுக்கு எம்பெருமான் தான் தாரகமாய் நியாமகனாய் சேஷியாய் இருப்பான் என்றபடி. இதே கருத்து,

**நீர்ஆய் நிலன்ஆய் தீஆய்**
**காலாய் நெடுவானாய்**

**சீரார் சுடர்கள் இரண்டுஆய்**
**சிவனாய் அயன்ஆனாய் (6.9 : 11)**

என்ற இன்னொரு திருவாய்மொழியிலும் வந்துள்ளது.

**ஈசுவரன்** : ஸ்ரீமந் நாராயணனே சர்வேசுவரன். இவன் சத்தியம், ஞானம், ஆனந்தம் அனந்தம், அமலம்[4] இவற்றின் சொரூபமாக இருப்பவன். இடத்தாலும் காலத்தாலும் அளவிடப் பெறாதவன். 'அந்தமில் ஆதிபகவன்' (1.3. : 5) என்பர் நம்மாழ்வார். எங்கும் நிறைந்திருப்பவன். இதனை,

**கரவிசும்பு எரிவளி**
**நீர்நிலம் : இவைமிசை**
**வரன்நவில் திறல்வலி**
**அளிபொறை ஆய்நின்ற**
**பரன் (1.1 : 11)**

என்று காட்டுவர் ஆழ்வார். மேலும், 'உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்' (1.1 : 7) என்று விளக்குவர். மூன்றுவித சேதந அசேதந பரிணாம உருவமான வேறுபாட்டின் குறைகள் (விகார தோஷங்கள்) தட்டாதவன். அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு வகைப்பட்ட பலன்களையும் உயிர்கட்குத் தந்து அவற்றின் புகலிடமாக இருப்பவன்; தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன்.

**தனிமாப் புகழே எஞ்ஞான்றும்**
**நிற்கும் படியாய்த் தான்தோன்றி**
**முனிமாப் பிரம முதல்வித்தாய்**
**உலகம் மூன்றும் முளைப்பித்த**
**தனிமாத் தெய்வம் (8.10 : 7)**

4. **சத்தியம்**—எப்பொழுதும் மாறுபடாத தன்மை; **ஞானம்**—எப்பொழுதும் குறைவுபடாத ஞானம்; **அனந்தம்**—தேசம், காலம், பொருள் இவற்றால் அளவிட முடியாதபடி எவ்விடத்திலும் எக்காலத்திலும் எந்தப் பொருள் வடிவமாகவும் நிற்கும் தன்மை. **ஆனந்தம்** : ஆனந்த சொரூபனாய் நிற்றல் **அமலம்**—குற்றங்கள் இல்லாமை.

அவன் ஞானம் சக்தி பலம் ஐசுவரியம் வீரியம் தேஜஸ்[5] முதலிய மங்களகுணக் கூட்டங்களால் அலங்கரிக்கப் பெற்றவன். இவனிடம் இக்குணங்கள் ஆதல் அழிதல் இன்றி எப்பொழுதும் நிறைந்திருக்கும். இவற்றைத் தவிர வாத்சல்யம், சௌசில்யம், சௌலப்பியம் முதலிய எண்ணற்ற குணங்களையும் கொண்டவன் அவன். இவ்வுலகத்தினைப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றின் காரணபூதன். இதனை நம்மாழ்வார்,

**இவையும் அவையும் உவையும்**
**இவரும் அவரும் உவரும்**
**எவையும் எவரும் தன்னுளே**
**ஆகியும் ஆக்கியும் காக்கும்**
**அவையுள் தனிமுதல் எம்மான்** (1.9 : 1)

5. **ஞானம்** - எல்லாத் தேசங்களிலும், எல்லாக் காலங்களிலும் உள்ள எல்லாப் பொருள்களின் பண்பு பண்பிகளையும் ஒன்றொழியாமல் ஒரே காலத்தில் கண்கூடாய் நோக்குதல். **சக்தி** : உயிர்கள் யாவற்றையும் ஒரே காலத்தில் நடத்தும் சக்தி. **பலம்** : தன் சங்கற்பத்தினால் எல்லாப் பொருள்களையும் தரிக்கும் வன்மை. **ஐசுவரியம்** : எல்லாப் பொருள்களையும் நியமித்து நடத்தும் சாமர்த்தியம் **வீரியம்** : உலகப்பொருள்யாவற்றையும் உண்டாக்கித் தான் யாதொரு விகாரமுமின்றி இருத்தல்; தளர்ச்சியின்றி இருத்தலுமாம். **தேஜஸ்**; மற்ற எல்லாப் பொருள்களின் பிரகாசத்தை மறைக்கும தன்மை.

6. **வாத்சல்யம்** : கன்றினிடம் பசு இருக்கும் இருப்பு; அதாவது குற்றத்தையும் குணமாய்க் கொள்ளும் அன்பு. **சௌசீல்யம்** உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு புரையறக் கலக்கை. **சௌலப்பியம்** : எளியனாய் இருக்கும் இருப்பு. **சுவாமித்வம்** : உடையனாய் இருக்கும் இருப்பு **ஞானம்**: அறிவு. எல்லாப் பொருள்களையும் ஒரே காலத்தில் காணவல்ல அறிவு. **சக்தி** : சாமர்த்தியம்.

என்று போற்றியுரைப்பர், 'அழிப்போடு அளிப்பவன் தானே' (1-9-8) என்றும், 'காக்கும் இயல்பினன் கண்ணபிரான் (2.2.9) என்றும் மேலும் கூறுவர். சிறார் வீடுகட்டி அழிக்குமாப்போலே இம்முத்தொழில்களும் இவனுக்குத் தன் இச்சையால் உண்டாகும் விளையாட்டாகும். மேலும்' அசித்து மாறுபாடடைவதற்கும், உயிர்கள் தத்தம் வினைக் கேற்ப' உடல்களை அடைவதற்கும் இவனே காரணன்.

கருமமும் கரும பலனும்
ஆகிய காரணன் (3.5:10)

என்பர் ஆழ்வார். இந்த உலகிலுள்ள உயிர்களின் பக்தி மூலமும் பிரபத்திமூலமும் வீடு பேற்றினை அடைவதற்கு இவனே துணையாவான்.

சார்ந்த இருவல் வினைகளும்
சரித்து, மாயப் பற்றறுத்து,
தீர்த்து, தன்பால் மனம்வைக்கத்
திருத்தி, வீடு திருத்துவான் (1-5:10)

என்று விளக்குவார் ஆழ்வார்.

நித்திய விபூதியாகிய பரமபதத்தில் அவனுக்கென்று தனியான திவ்விய மங்கள விக்கிரகம் உண்டு. அவ்வுருவம் ஈடும் எடுப்பும் அற்ற பேரொளியினை உடையது; பேரழகும் வாய்ந்து கண்டாரை ஈர்ப்பது, 'பயிலும் சுடர் ஒளி மூர்த்தி

7. ஆகாமியம் - இப்பிறப்பில் செய்யப்பெறும் வினை; வருவினையின் தொகுதி; இஃது எதிர்வினை, வருவினை என்ற பெயராலும் வழங்கப் பெறும், பிராரத்தம்—இப்பிறப்பிற்கு முன்னைய பிறப்பில் அநுபவித்தற் கென்று அளந்து கொள்ளப்பெற்ற வினைத் தொகுதி; இஃது ஊழ்வினை, நுகர்வினை என்ற பெயர்களாலும் வழங்கப் பெறும், சஞ்சிதம்—எஞ்சிய வினைத் தொகுதி; இஃது அபூர்வம், பழவினை, தொல்வினை, கிடைவினை என்ற பெயர் களாலும் வழங்கும்.

பங்கயக் கண்ணன்' (3.7:1), 'மாசறு சோதி என் செய்யவாய் மணிக் குன்றம்' (5.3:1) என்ற ஆழ்வாரின் திருவாக்குகளைக் காண்க. இத்தகைய உருவம் யோகியரின் தியானத்திற்கு ஏற்றது.

நாகம் ஏறி நடுக்கடலுள்
துயின்ற நாரா யணனே!உன்
ஆகம் முற்றும் அகத்தடக்கி
ஆவி அல்லல் மாய்ந்ததே (4.3:3)

என்று ஆழ்வார் கூறுவதனால் அறியலாம். இந்த உருவத்துடன் அவன் பெரியபிராட்டியார், பூமிப்பிராட்டியார், நீளா தேவி ஆகியோர்க்கு நாயகனாக இருப்பவன். மேலும்,

முந்நீர் ஞாலம் படைத்த
எம்முகில் வண்ணன் (3.2:1)

என்பதால் இத்திவ்விய மங்கள உருவத்துடன் இருந்து கொண்டே இறைவன் படைத்தல் முதலிய செயல்களை மேற்கொள்வான் என்பது பெறப்படும்.

ஐந்து திருமேனிகள் : எம்பெருமானின் திருமேனி பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்ற ஐந்து நிலையில் இருக்கும். பரம் என்பது, பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் பரவாசுதேவனுடைய உருவம்,

கண்கள் சிவந்து பெரியவாய்
வாயும் சிவந்து கனிந்துள்ளே
வெண்பல் இலகுசுடர் இலகு
விலகு மகர குண்டலத்தன்
கொண்டல் வண்ணன் சுடர் முடியன்
நான்கு தோளன் குனிசார்ங்கன்
ஒண்சங்கு கதைவாள் ஆழியான்
ஒருவன் (8.8:1)

என்று இந்தத் திருமேனியைக் காட்டுவார் ஆழ்வார். வியூகம் என்பது, வாசுதேவன் சங்கர்ஷணன் பிரத்தியும்னன் அநிருத்தன் என்ற உருவங்கள்; இவை திருப்பாற்கடலில் இருப்பவை. இதனை,

> ஏக மூர்த்தி இருமூர்த்தி
> மூன்று மூர்த்தி பல மூர்த்தி
> ஆகி ஐந்து பூதமாய்
> இரண்டு சுடர்ஆய் அருவாகி
> நாகம் ஏறி நடுக்கடலுள்
> துயின்ற நாரா யணனே! (4. 3 : 3)

என்று காட்டுவார். இதனைத் திருமழிசை யாழ்வாரும் ஏக மூர்த்தி, மூன்று மூர்த்தி, நாலு மூர்த்தி' (திருச்சந்த. 17) என்று விளக்குவர். விபவம் என்பது, எண்ணற்ற அவதார மூர்த்திகள். 'ஆயர் கொழுந்தாய் அவரால் புடையுண்ணும் மாயப்பிரான்' (1. 7 : 3) என்பதால் கிருஷ்ணாவதாரத்தை யும், கொம்புபோல் சீதைபொருட்டு இலங்கை நகர், அம்பு எரி உய்த்தவர் (4. 2 : 8) என்பதால் இராமாவதாரத்தையும் இங்ஙனம் பிற அவதாரங்களையும் சுட்டுவார். அந்தர்யாமி என்பது, எல்லோருடைய இதய கமலத்தில் எழுந்தருளி யிருக்கும் நிலை. 'மாயன் என்நெஞ்சில் உள்ளான், மற்றும் எவர்க்கும் அதுவே' (1. 9 : 6) என்பதில் இந்நிலையைக் காணலாம். அர்ச்சை என்பது, திவ்விய தேசங்களில் திருமேனி கொண்டு எழுந்தருளியுள்ள நிலையும், மற்றும் பக்தர்களின் வேண்டுகோளின்படி அவரவர் விருப்பத்திற் கேற்றவாறு திருமேனி கொண்டு நிற்கும் நிலையும். 'முடிச்சோதியாய் உனது முகச் சோதி மலர்ந்ததுவோ? அடிச் சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?' (3. 1 : 1) என்று அழகரை நோக்கி ஆழ்வார் பேசுவதில் இந்நிலையைக் காணலாம்.

**கிளை வியூகங்கள் :** மேலே குறிப்பிட்ட நான்கு வியூகங்களும் ஒவ்வொன்றும் மும்மூன்றாகப் பன்னிரண்டு கிளை வியூகங்களாகப் பிரியும்.[8] வாசுதேவனிடத்துக் கேசவன், நாராயணன், மாதவன் என்ற கிளைகளும்; சங்கர்ஷணனிடம் கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன் என்பவைகளும்; பிரத்தியும்நனிடமிருந்து திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரன், வைகளும்; அநிருத்தனிடமிருந்து இருடிகேசன், பதுமநாபன் தாமோதரன் என்பவைகளும் தோன்றி அவ்வப்பெயர்களைப் பெறும். இவை யாவும் பன்னிருதிங்களின் தலைவர்களாக இருக்கும். இவற்றின் அறிகுறியாக வைணவர்கள் தம்உடலில் துவாதசமாகத் திருமண் காப்பிட்டுக் கொள்வர்.

## 2. இதம் (ஹிதம்)

வீடுபேற்றிற்குச் சாதனமாக அநுட்டிக்கப்பெறும் வழியே 'இதம்' என்பது, வைணவசமயத்தில் சித்தோபாயம், சாத்தியோபாயம் என்ற இருநெறிகள் பேசப் பெறுகின்றன. சித்தோபாயம் என்பது, நம்மால் செய்யப்பெற வேண்டியதாயன்றி முன்பேயுள்ள நெறி; இது சர்வேசுவரன். 'மகள் பாசுரங்களில்' சித்தோபாயம் சிறப்புற்று ஓங்கி நிற்பதைக் காணலாம். சாத்தியோபாயம் என்பது, நம்மால் மேற்கொள்ளப் பெறும் உபாயமாகும். இது பக்திநெறி என்றும், பிரபத்திநெறி என்றும் சாத்திரங்களில் இருவகையாகப் பேசப் பெறும்.

**பக்திநெறி :** இது கர்மயோகம், ஞானயோகம், பக்தி யோகம் என்ற மூன்று நிலைகளில் பயிற்சி யடைய வேண்டிய நெறி என்று கூறுவர். பக்திநெறியில் பல படிகள் உண்டு. இவற்றை எட்டு அங்கங்களாக முறைப்படுத்தி வகுத்துக் காட்டுவர். தவிர. பக்தி நிலையையும் பரபக்தி, பரஞானம்

8. திருவாய். 2.7 (பன்னிருதிரு நாமப் பாட்டு), தே. பி. பன்னிரு நாமம் 280 - 291. காண்க.

பரமபக்தி என்று மூன்று பிரிவுகளாக வேறு பகுத்துக் காட்டும் மரபும் உண்டு. இந்த மூன்று நிலைகட்கும் முறையே பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகிய மூன்று ஆழ்வார் பெரு மக்கள் எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றனர்.

பிரபத்திநெறி: பக்தி வழியை எல்லோரும் பின்பற்ற இயலாது. இதற்குப் பதிலாக எல்லோரும், எல்லா நிலை யினரும் மேற்கொள்ள எளிதாக இருப்பது 'பிரபத்தி' எனப் படும் 'சரணாகதி' நெறியாகும். பாகவத மரபுப்படி இந் நெறியே ஆன்மா சம்சாரத்தினின்றும் விடுதலை பெறு வதற்குரிய செந்நெறியாகும். ஆழ்வார்கள் பக்தி நெறியை ஆங்காங்குக் குறிப்பிட்டிருந்தாலும் அவர்கள் அதிகமாக வலியுறுத்துவது இந்நெறியினையேயாகும். இஃது 'அர்த்த பஞ்சகம்' என்ற இயலிலும் விளக்கப் பெற்றுள்ளது.

'அகலகில்லேன் இறையும்' என்று
அலர்மேல் மங்கை உறைமார்பா!
நிகர்இல் புகழாய்! உலகம்மூன்று
உடையாய்! என்னை ஆள்வானே!
நிகர்இல் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகல்ஒன்று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே
(6. 10: 10)

என்ற பாசுரத்தில் நம்மாழ்வார் இந்நெறியினைக்கூறுவதைக் காணலாம். இந்தப் பாசுரத்தில் 'நிகரில் புகழாய்' என்பதனால் வாத்சல்யத்தையும், 'உலகம் மூன்றுடையாய்' என்பதனால் சுவாமித்துவத்தையும் 'என்னை ஆள்வானே' என்பதனால் சௌசீல்யத்தையும், 'திருவேங்கடத்தானே' என்பதனால் சௌலப்பியத்தையும் தெரிவிப்பதாக நம் ஆசாரியப் பெருமக்கள் தெளிவாக விளக்கியுள்ளனர். ஈண்டுக் குறிப்பிட்ட 'சௌலப்பியத்திற்கு எல்லை நிலம் அர்ச்சாவ

தாரம்,[9] என்று முமுட்சுப்படி குறிப்பிடும். இதனால்தான் நம்மாழ்வார் திருவேங்கடமுடையான் திருவடிகளில் சரணம் அடைகின்றார். ஆழ்வார்கள் பலவிடங்களிலும், பிரபத்தி பண்ணியது அர்ச்சாவதாரத்திலே'[10] என்று ஸ்ரீவசன பூஷணமும் பேசும். பிரபத்தியின் முழு விவரங்களையும் ஸ்ரீவசன பூஷணத்திலும்[11] முமுட்சுப்படியிலும்[12] விவரமாகக் காணலாம்.

### 3. புருஷார்த்தம்

இஃது ஆன்மா அடைய வேண்டிய குறிக்கோள் நிலையைக் குறிப்பிடுவது. அஃதாவது 'நலமந்தம் இல்லதோர் நாடு' புகுவது. இந்த நாட்டை வள்ளுவர் பெருமான் 'வான் என்னும் வைப்பு' (குறள் - 25) - எல்லா உலகத்திலும் மேம்பட்ட வீட்டுலகம்; 'வானோர்க்கு உயர்ந்த உலகம்' (குறள் - 346)-தேவர்களாலும் அடைய முடியாத வீட்டுலகம்; 'வானம்' (குறள் - 353) - வீட்டுலகம் என்றெல்லாம் விளக்குவர். நம்மாழ்வார் இவ்வுலகை 'வைகுந்தம்' (1. 2: 11; 2. 5: 11; 4. 4: 11; 5. 10: 11), 'இலங்குவான்' (3. 8: 11), '(பொன்னுலகு' (6. 7: 11) என்று குறிப்பிடுவர். இதுவே பரமபதம் ஆகும். முக்தி நிலையை அடைந்த ஆன்மா இங்கு எம்பெருமானுக்கு அடிமை செய்து (கைங்கரியம் செய்து) அநுபவிக்கின்றது.

> தொண்டே செய்து
> என்றும் தொழுது வழியொழுக
> பண்டே பரமன்
> பணித்த பணிவகையே (10. 4: 9)

9. முமுட்சு-139
10. ஸ்ரீவச. பூஷ. 38
11. ஸ்ரீவச. பூஷ முதல் பிரகரணம் (புருஷகார வைபவமும் உபாயவைபவமும்) இரண்டாம் பிரகரணம் (உபாயம்) என்பவற்றில் காண்க.
12. முமுட்சுப்படி—துவயம். சூத்திரங்கள் 123-140.

# 15. மந்திரங்கள்

முத்தியை அடைய விரும்புகின்றவன் திருமந்திரம், துவையம், சரம சுலோகம் என்ற மூன்று மந்திரங்களையும் அறிந்து கொள்ளுதல் வேண்டும். ஆழ்வாருடைய திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்ற பிரபந்தங்கள் நான்கும் இந்த மூன்று இரகசியங்களோடு சேர்ந்தனவாகச் சொல்லப் பெறும்[1].

திருமந்திரம்: 'ஓம் நமோ நாராயணாய' என்பது திருமந்திரம். இது ஓம் + நம: + நாராயணாய என்று மூன்று பதங்களாய், எட்டு எழுத்தாய்[2] இருக்கும். மூன்று பதமும் மூன்று பொருளைச் சொல்லும். அதாவது, பிரணவம். சேதநனுடைய சேஷத்துவத்தையும் (அடிமைத்தன்மையையும்), நமஸ்ஸு ஈசுவர பாரதந்திரியத்தையும் (ஈசுவரனுக்கு வசப்பட்டிருத்தல்), நாராயணாய சேதநன் ஈசுவரனுக்குப் புரிய வேண்டிய கைங்கரியத்தையும்[3] (தொண்டையும்) தெரிவிப்பனவாகும்.

முதற்பதமாகிய பிரணவம் அ+உ+ம என்றும் பிரியும். இங்ஙனம் பிரிந்திருக்கும் நிலையில் அகாரம் - பகவானையும்

1. ஆசா. ஹிரு. 208. அடுத்த சூத்திரத்தில், (சூத் - 209) இதன் விளக்கம் தரப் பெறுகின்றது. இந்த விளக்கம் தான் இதன்கீழ்த் தரப்பெறுகின்றது.
2. 'ஓம்' என்னும் பதம் ஓர் எழுத்து; 'நம' என்னும் பதம் இரண்டு எழுத்து; நாராயணாய என்னும் பதம் ஐந்தெழுத்து.

அதில் ஏறி மறைந்திருக்கும் நான்காம் வேற்றுமை (லுப்த சதுர்த்தி) சேஷத்துவத்தையும், உகாரம் அந்த சேஷத்துவத்தின் அநந்யார்ஹத்துவத்தையும் (மற்றவருக்கில்லாமல் ஈசுவரனுக்கே உரித்தாயிருத்தல்) தெரிவிக்கும். சேர்ந்திருக்கும் நிலையைச் 'சம்ஹிதாகாரம்' என்றும், பிரிந்திருக்கும் நிலையை 'அசம்ஹிதாகாரம்' என்றும் சொல்லுவர்.[4] ஆகவே இம்மந்திரத்தை அநுசந்திக்கும் போது அடியிற் கண்டவாறு பொருள்படும்.

அ—சகல ஜகத் காரண பூதனாய், எல்லாவற்றையும் காப்பவனாய், பெரியபிராட்டியாருக்குக் கணவனாய், எல்லாவற்றுக்கும் தலைவனாய், அநந்த கல்யாண குணங்களை யுடைய எம்பெருமான்.

ஆய —(லுப் தசதுர்த்தி) - பொருட்டு

ம — அடிமைத் தன்மையை அநுட்டிப்பவனாய் தேகத்தைப் பார்க்கிலும் பரனாய், அணுவாய், நித்தியனாய், ஞாநானந்தமான அடியேன் சேஷபூதன் (அடிமைத் தன்மையுடையவன்)

உ— பிறருக்குச் சேஷபூதன் அல்லன்.

நம —எனக்கு நானும் சுதந்திரன் அல்லன்: எம்பெருமானுக்கே வசப்பட்டிருப்பவன் (பரதந்திரன்). எனக்கு எம்பெருமானே உபாயமும், உபேயமும். நான் பாகவதர் வரையிலும் சேஷபூதனாய், பரதந்திரனாய் இருப்பவன்.

நாராயண —எல்லாவற்றுக்கும் ஆதாரமாய், எங்கும் அந்தர்யாமியாய், எங்கும்நிறைந்திருப்பனவாய், எல்லோர்க்கும்

3. கிங்கான் - வேலையாள். கிங்கரன் செய்வது கைங்கரியம், அதாவது, தொண்டு.
4. இந்த விளக்கத்தைப பெரியவாச்சான் பிள்ளை அருளிய 'நிகமனப் படி' யிலும் காணலாம்.

எளியனாய், எல்லோக்கும் உபேயமாய், எல்லா உறவும் உடையவனாய், பெரிய பிராட்டியாரோடு சேர்ந்திருப்பவனான எம்பெருமானுடைய முக உல்லாசத்தின்

ஆய — பொருட்டு; 'இந்தக் கைங்கரியம் நான் பண்ணுகின்றேன், இந்தக் கைங்கரியம் என்னுடையது.' என்ற அகங்கார மமகாரம் இன்றி, எல்லா இடத்திலும் எல்லாக் காலத்திலும், எல்லா நிலைகளிலும் பண்ணும் எல்லாவிதத் தொண்டுகளையும் செய்வதாகக் கருணை காட்டும்படிப் பிராத்திக்கின்றேன்.

இந்தத் திருமந்திரத்தின் பொருள் நம்மாழ்வாரின் பிரபந்தங்களில் பொதிந்து கிடக்கின்றன. இதனை விளக்குவேன். திருமந்திரத்தின் 'ஓம்' 'நமோ' என்பவற்றின் பொருள் திருவிருத்தத்திலும், 'நாராயணாய' என்ற பதத்தின் பொருள் திருவாசிரியத்திலும் கூறப்பெற்றுள்ளன. 'உயிரளிப்பான், எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய். (திருவிருத். 1) என்றதனால் பிரணவத்தின் முதல் எழுத்தான அகாரத்தில் 'அவரட்சணே' என்ற தாதுவின் பொருளான இறைவனுடைய காக்குந் தன்மையைக் கூறினராவர்.

'மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே' (ஷை - 1) என்றதனால் அவனால் பாதுகாக்கப்படும் பொருளாய் அகாரத்தில் ஏறிக் கழிந்த 'ஆய' என்ற நான்காம் வேற்றுமையாலும் (லுப்தசதுர்த்தி) பிரணவத்தின் இரண்டாம் எழுத்தான 'உகாரத்தாலும்' சொல்லுகிற படியே வேறொருவருக்கும் ஆகாது அவனுக்கே அடிமையாய், சரீரத்தின் வேறு பட்டதாய், ஞான ஆனந்த வடிவமாகவுள்ள, மூன்றாம் எழுத்தான 'மகாரத்தில்' சொல்லப்பெறுகின்ற ஆன்ம சொரூபத்தைச் சொல்லினராவர்.

பிரணவத்தில் அகாரத்தின்மேல் ஏறிக் கழிந்த நான்காம் வேற்றுமை (லுப்த சதுர்த்தி) இலக்கண விதிப்

படி கொடைப் பொருளில் வந்ததாய், ஒரு தைத்திரேய உபநிடத வாக்கியத்தின்படி பிரணவத்திற்கு ஆன்மாவைக் கொடுத்தல் என்பதும் பொருளாகையாலே விரோதி பலத்தாலே கலங்கின நிலையில் 'அடியேன் அடி ஆவி அடைக் கலம்' (ஷை - 85) என்று அந்த ஆன்ம சமர்ப்பணத்தையும் அருளிச் செய்தாராவர்.

பிரணவத்தில் சொல்லப் பெற்ற பகவான் ஒருவனுக்கே அடிமை (அநந்யார்ஹத்துவம்) என்னுமது அவன் அடியார் களுக்கு அடிமை என்னும் அளவும் செல்லும் என்று 'நம:' என்றதன் பொருளாற்றலால் கூறப்படுகின்ற அவன் அடியார்களுக்கு அடிமை என்னுமதனை 'திருமால் திருப் பேர் வல்லார் அடிக்கண்ணி சூடிய மாறன்' (ஷை- 100) என்பதனால் தெரிவித்தவராவர்.

'பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக் குடம்பும்' (திருவிருத்.1), 'யாதானும் ஓர் ஆக்கையில்புக்கு அங்கு ஆப்புண்டும் ஆப்பவிழ்ந்தும்' (ஷை - 95) என்ற திருப் பாசுரங்களால் 'நம:' பதத்தில் ஆறாம் வேற்றுமையை இறுதியில் உடைய மகாரத்தால் சொல்லப்பெற்ற அகங்கார (நான்) மமகாரங்களாகின்ற (எனது) ஆன்மாவல்லாத தேகத்தில் ஆத்ம உணர்ச்சி முதலாகிய அறியாமையையும் அவற்றின் காரியமாய் வருகின்ற தேவமனித முதலிய பிறப்பு களாலாய சரீர சம்பந்தத்தையும் கூறினாராவர். 'அழுந்தார் பிறப்பாம், பொல்லா அருவினை மாயவன் சேற்று அள்ளல் பொய்ந் நிலத்தே' (ஷை-100) என்ற திருப்பாசுரத்தால் அவற்றின் மறுதலையைக் காட்டும் சொல்லான 'ந' என்ப தனால் சொல்லப்பட்ட அவித்தை முதலாக இவ்வுலக வாழ்க்கையாகின்ற சேறு ஈறாகவுள்ள விரோதிகள் நீங்குதலைச்சொன்னவராவர். ஆகவே, ஆன்ம சொருபத்தை யும் விரோதி நீக்கத்தையும் சொல்லுகின்ற திருவிருத்தம்,

திருமந்திரத்தில் 'ஓம்' 'நம :' என்னும் முதல் இரண்டு பதங்களின் பொருள்களோடு சேர்ந்திருக்கும் என்பது தெளிவாயிற்று.

திருவாசிரியத்தில் 'தாமரை உந்தித் தனிப் பெருநாயக! (திருவாசிரியம் -1) என்று தொடங்கி 'எம்பெருமாயன்' (ஷை-7) என்று அதை முடிப்பதால் திருமந்திரத்தில் 'நாராயண' பதத்தால் சொல்லப்படுகின்ற நித்திய விபூதியாகின்ற பரமபதம், லீலாவிபூதியாகின்ற இவ்வுலகம் ஆகிய இருவகைப்பட்ட உலகங்களோடுகூடின, நம்மால் அடையப்படும் பரம்பொருளையும், 'தனிமாத் தெய்வத்து அடியார்க்கு இனிநாம் ஆளாகவே, இசையும் கொல்' (ஷை-3) என்றும், 'ஊழிதோறு ஊழி ஓவாது வாழிய என்று, யாம் தொழ இசையுங்கொல்'(ஷை-4) என்றும் அந்த 'நாராயண'பதத்தில் நான்காம் வேற்றுமையின் பொருளான கைங்கரியமாகின்ற பயனையும் சொல்லுவதால் பரம்பொருள், பரம்பொருளுக்குச் செய்யப்படுகின்ற கைங்கரியம் என்ற இரண்டையும் சொல்லுகிற திருவாசிரியப் பகுதியாலும் உருபிடைச் சொல்லாலும் அவ்விரண்டையும் சொல்லுகின்ற மூன்றாம் பதமான 'நாராயண'பதத்தோடு சேர்ந்திருக்கும்' என்பது தெளிவாகின்றதன்றோ? ஆக திருவிருத்தம், திருவாசிரியம் என்ற இரண்டு பிரபந்தங்களும் திருமந்திரத்தின் பொருளை நுவல்வனவாக இருக்கும் என்பது தெளியப்படும்.

**துவயம் : இந்த மந்திரம்,**
**ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்தியே!**
**ஸ்ரீமதே நாராயணாய நம :!**

என்பது இதில் முதல்வாக்கியத்தால் 'பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈசுவரனுடைய இரண்டு திருவடிகளையும் உபாயமாகப் பற்றுகின்றேன்' என்னும் பொருளும், இரண்டாவது வாக்கியத்தால் 'பெரியபிராட்டியாரும்

ஈசுவரனுமான சேர்த்தியில் என்றும் கைங்கரியத்தைப் புரிவேனாக' என்னும் பொருளும், ஆக இரண்டு பொருள் களையும் தெரிவிப்பதால் இம்மந்திரம் துவையம் (இரண்டு) என்ற திருநாமத்தைப் பெற்றது. இதனால் முதல்வாக்கியம் உபாயத்தையும் இரண்டாவது வாக்கியம் பலனையும் வெளியிடுகின்றன என்று சுருக்கமாக உரைக்கலாம்.

இவ்வாக்கியங்களில் முதலாவதில் ஸ்ரீ+மத்+நாராயண +சரணௌ+சரணம்+பிரபத்தியே என்ற ஆறுபதங்களும் பதினைந்து எழுத்துகளும்; இரண்டாவதில் ஸ்ரீமதே+ நாராயண + ஆய+நம; என்னும் நான்குபதங்களும் பத்து எழுத்துகளும் உள்ளன. இந்தப் பத்துப் பதங்களும் பத்துப் பொருள்களைத் தருவனவாக இருக்கும்.

ஸ்ரீ—சகலசேதநர்களால் அடையப்பட்டு எம்பெருமானை அடைந்திருக்கும் புருஷகார பூதையான பெரிய பிராட்டியாரோடு.

மத் —நித்திய யோகமுடைய

நாராயண—வாத்சல்ய, சுவாமித்துவ, சௌசில்ய, சௌலப் பிய, ஞான, சக்தி பிராப்தி, பூர்த்திகளாகின்ற கல்யாண குணவிசிட்டனான் எம்பெருமானுடைய

சரணௌ—உபயாந்தரத்தைச் சகியாததாய், பிராப்தமாய், போக்கியமாயிருக்கும் திருவடித் தாமரைகளையே

சரணம்—உபாயமாய்

பிரபத்தியே —உபாயாந்தர இரட்சகாந்தர சூனியனான அடியேன் ஆச்ரயிக்கின்றேன்.

நம : — அநிஷ்டமான, தேகாந்திர, சுவர்க்க, நரக, கைவல்யங் கள் வராமல் இருக்கும் பொருட்டு அவற்றிற்கு ஏதுவான அவிச்சை, கர்ம வாசனா ருசி, பிரக்ருதி சம்பந்தங்கள் நசித்து, 'இந்தக் கைங்கரியத்தை நான் செய்கின்றேன்,

'இந்தக் கைங்கரியம் என்னுடையது, இஃது எனக்குப் போக்கியமாயுள்ளது' என்கின்ற அகங்கார, மமகாரம் முற்றிலும் இல்லாததாய்

ஸ்ரீமதே—பிராப்ய பூதையாய், கைங்கரியத்திற்கு விஷய பூதையாய், சமஸ்த கல்யாண குணாத்மகனாய், சர்வ சேஷியான பெருமானுடைய முக உல்லாசத்தின்.

நாராயண—சௌந்தர்ய சம்மந்தமான திவ்விய மங்கள விக்ரக விசிட்டனாய், சமஸ்த கல்யாண குணாத்மகனாய், சர்வ சேஷியான எம்பெருமானுடைய முக உல்லாசத்தின்.

ஆய்—பொருட்டு. பரம்பதம் தொடங்கி சர்வதேசங்களிலும் சர்வவித கைங்கர்யங்களைப் பண்ணும்படி கருணை காட்டருளப் பிரார்த்தித்து முடித்துக் கொள்வதற்கு (உபாயமாக ஆச்ரயிக்கின்றேன் என்பதோடு அந்வயம்)

அஃதாவது, இந்த இரண்டு வாக்கியங்களும் பத்து அர்த்தங்களைச் சொல்லுகின்றன. அவை திருமகள் கேள்வனாக இருத்தல், 2, நாராயணனாக இருத்தல், 3. எல்லா உலகங்கட்கும் புகலிடமான நாராயணனுடைய இரண்டு திருவடிகள், 4. அத்திருவடிகளே உபாயமாக இருத்தல், 5. அத்திருவடிகளைப் பற்றிய ஆன்மாவினுள்ள வேண்டு தலை உள்ளடக்கியுள்ள துணிவு, 6. திருமகள் அவனுடைய நாயகன் இவர்களுடைய நித்திய சம்பந்தம், 7. கைங்கரியத் திற்கு எதிர்த்தலையான சர்வேசுவரனுடைய எல்லை இல்லாத இனிமை, 8. எல்லாப் பொருள்கட்கும் தலைவனாக இருத்தல் 9. நித்திய கைங்கரியம், 10. கைங் கரியத்திற்குத் தடைகளாகவுள்ள அனைத்தும் நீங்குதலல் ஆகிய அர்த்தவிசேடங்கள்.

திருவாய்மொழியில் துவயத்தின் பொருள் விளக்கப் பெறுகின்றது. இதன் முதல் மூன்று பத்துகளால் இரண்டாம் வாக்கியத்தின் பொருள் விவரிக்கப் பெறுகின்றது. மேல்

மூன்று பத்துகளால் முதல் வாக்கியத்தின் பொருள் விளக்கப் பெறுகின்றது; மேல் மூன்று பத்துகளால் உபாயத்திற்குத் தகுதியான குணங்களும், ஆன்மாவிலும் ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களிலும் தமக்கு நசையற்றபடியும் அவனோடு தமக்கு உண்டான நிருபாதிக சம்பந்தத்தமும் தெளிவிக்கப்பெறுகின்றன. பத்தாம் பத்தால் தாம் வேண்டினபடியே பெற்றமை சொல்லித் தலைக்கட்டப் பெறுகின்றது. இவற்றைத் தனித்தனியே நோக்குவோம்.

முதல்பத்து : 'உயர்வற உயர்நலமுடையவன் அயர்வறும் அமரர்கள் அதிபதியவனவன் - துயரறு சுடரடி தொழுதெழு என்மனனே' (1.1:1) என்றதனால் மங்களம் பொருந்திய எல்லா நற்குணங்களையும் உருவமாக உடையவனாய் வானவர்கட்கு இனியனானவன் திருவடிகளில் தொண்டு செய்தலே பேறு என்று உறுதி செய்து கூறிய பொருளுக்கும் இனி, கூறப்புகும் பொருளுக்கும் பிரமாணம் 'உளன் சுடர் மிகு சுருதியுள்' (1.1 : 7) என்றதனால் குற்றங்களற்ற சுருதியே பிரமாணம் என்றும், இத்தன்மைகளையுடையவர் யார் என்ன, 'வண்புகழ் நாரணன்' (1.2:10) என்றும் 'திருவுடையடிகள்' (1.3:8)என்றும், 'செல்வநாரணன்'(1.10:8) என்றும் சிறப்புற ஓதி, 'தொழுது எழு என் மனனே' (1.1:1) என்று தொடங்கி 'அயர்ப்பிலன் அலற்றுவன், தழுவுவன் வணங்குவன் அமர்ந்தே' (1.3:10) என்றதனால் முக்கரணங்களாலும் அடிமை செய்து தலைக்கட்டுகையாலே பகவானுக்குச் செய்யும் கைங்கரியமே புருஷார்த்தம் என்று அறுதியிடுகின்றார். அதாவது 'தொழுது எழு' (1.1:1) என்று தொடங்கி 'சொல் பணிசெய் ஆயிரம்' (1.10:11) என்று இப்பத்தினை முடிப்பதாலே 'பகவானுக்குச் செய்யும் கைங்கரியமே புருஷார்த்தம் என்று அறுதியிட்டார்' என்பது தெளிவாகின்றது.

**இரண்டாம் பத்து :** இந்தக் கைங்கரியத்திற்கு விரோதியாகிய உலகத் தொடர்பின் சம்பந்தத்தையும் கழித்து[5] 'ஒளிக் கொண்ட சோதியுமாய் உடன் கூடுவது என்று கொலோ?' (2.3:10) என்றதனால் தாமும் வேண்டிக் கொண்டு 'நலமந்தம் இல்லதோர் நாடு புகுவீர்' (2 8:4) என்றதனால் பிறர்க்கு உபதேசிக்கையாலே 'இவர்க்குப் பரமபதத்திலே நோக்காயிருந்தது' என்று நினைந்து இறைவன் பரமபதத்தைக் கொடுக்கப்புக, 'எம்மா வீட்டுத் திறமும் செப்பம் (2.9:1) என்றதனால் 'எனக்கு அதில் ஒரு நிர்ப்பந்தம் இல்லை' என்றும், 'தனக்கேயாக எனைக் கொள்ளும் ஈதே' (2.9:4) என்றதனால் 'அவனுக்கேயாய் இருக்கும் இருப்பே எனக்கு வேண்டுவது' என்றும் இப் புருஷார்த்தத்தை அறுதியிடுகின்றார்.

**மூன்றாம் பத்து :** இவர்க்குக் கைங்கர்யத்திலுண்டான ருசியையும் விரைவையும் கண்ட இறைவன்[6] கைங்கரியத்திற்கு ஏகாந்தமான திருமலையில்[7] நிலையைக் காட்டிக் கொடுக்கக் கண்டு 'வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்' (3.3:1) என்று பாரித்து, பாரித்த படியே பாகவதர்களுக்கு அடிமையளவாக வாசிகமாக அடிமைசெய்து தலைக் காட்டுகின்றார்.[8] ஆக, முதல் மூன்று பத்துகளால் துவயத்

5. திருவாய் 2 3:10. 'களிப்பும் கவர்வும் அற்றுப் பிறப்பும் பிணி மூப்பு இறப்பு அற்று' என்றதனைத் திருவுள்ளத்தே கொண்டு என்க.
6. 'ஈதே யான் உன்னைக் கொள்வது எஞ்ஞான்றும்; என், மைதோய் சோதி மணிவண்ண! எந்தாய்' (2.9:2) என்ற பாசுரத்தைத் திருவுளத்தில் கொண்டு இவ்வாறு கூறினார்.
7. 'கிளரொளியிளமை' (2.10), 'ஒழிவில் காலமெல்லாம்' (3.3) என்ற திருப்பதிகங்களைத் திருவுள்ளத்தில் கொண்டு இங்ஙனம் கூறினார்,
8. 'பயிலும் சுடர் ஒளி மூர்த்தியை' (3.7) என்ற திருப்பதிகத்தைத் திருவுளத்தே கொண்டு இவ்வாறு கூறினார்.

தின் பின்வாக்கியமாகிய, 'ஸ்ரீமதே நாராயணாய நம!' என்னும் வாக்கியத்தின் முதலிரண்டு பதங்களின் பொருளை முதற் பத்தாலும், 'நம:' என்னும் மூன்றாம் பதத்தின் பொருளை இரண்டாம் பத்தாலும் அருளிச் செய்தார் எனவும். முதலிரண்டு பத்துகளில் கூறப்பெற்ற இறை வனுக்குச் செய்யும் கைங்கரியம் அவனுடைய 'அடியார்க்கு அடிமை' என்ற அளவில் சேர வேண்டும் என்று அறுதியிட்டு. அங்ஙனம் அறுதியிட்டதற்குத் தகுதியாகத் தமது அநுட்டானத்தையும் மூன்றாம் பத்தால் அருளிச் செய்தார் எனவும் தெளிய முடிகின்றது.

**நான்காம் பத்து** : இப்புருஷார்த்தத்திற்கு உபாயம் 'திருநாரணன் தாள்' (4.1:1) என்றும், விரோதி 'குடி மன்னும் என் சுவர்க்கம்' (4.:1:9), எல்லாம் விட்ட இறுகலிறப்பு' (4.1:10) என்பனவற்றால் ஐசுவரிய கைவல்ய விரோதி என்றும் பிறர்க்கு உபதேசித்து. 'ஐங்கருவிகண்ட இன்பம் தெரிவரிய அளவிலாச் சிற்றின்பம்' (49.10) என்று தாமும் சொல்லிப் போந்தார்.

**ஐந்தாம் பத்து** : விரும்பியவற்றை அடைவதற்கும், விருப்பமில்லாதவற்றை நீக்குவதற்கும் 'ஆறு எனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்' (5.7:10) என்றதனால் இறைவன் தன் திருவடிகளையே உபாயமாகத் தந்தார் என்கின்றார்.

**ஆறாம் பத்து** :அவன் தந்த உபாயத்தைச் சேர்ப்பாரை முன்னிட்டுப்[9] பெரிய பிராட்டியார் புருஷகாரமாக 'அலர்

9. 'சேர்ப்பாரை முன்னிட்டு' என்றது வைகல் பூங் கழிவாய்' (6.1) 'பொன்னுலகாளீரோ' (6.8) என்ற இரண்டு திருப்பதிகங்களில் தூது விடுகின்ற முகத்தால் ஆசாரியனை முன்னிட்டுக் கூறு கின்றார் என்பதை அறிக.

மேல் மங்கை உறைமார்பா! உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்' (6.10:10) என்றதனால் ஏற்றுக் கொண்டார். ஆக, இம் மூன்று பத்துகளாலும் துவயத்தின் முன்வாக்கியமாகிய 'ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே!' என்பதன் பொருள் கூறப்பெறுகின்றது. 'ஸ்ரீமத்', 'நாராயண சரணௌ' என்ற இதன் முதலிரண்டு பதங்களின் பொருளை நான்காம் பத்தாலும், 'சரணம் பிரபத்யே' என்னும் மூன்றாம் பதத்தின் பொருளை ஐந்தாம் பத்தாலும், அருளிச் செய்தார் எனவும், அங்ஙனம் அருளிச் செய்தவாறே, ஆசாரியனை முன்னிட்டுப் பெரியபிராட்டியார் புருஷகாரமாக இறைவனைப் பற்றும் தம்முடைய அநுட்டானத்தை ஆறாம் பத்தால் அருளிச் செய்தார் எனவும் தெளியலாம்.

ஏழாம்பத்து : இங்ஙனம் சித்தோபாயத்தை[10] ஏற்றுக் கொண்டிருந்தும் அது சடக்கெனப் பலியாமையால் துயருற்றவராய்[11] 'கடல் ஞாலம் காக்கின்ற மின்னு நேமியினாய்!' (7.1:2) என்று தொடங்கி உபாயத்திற்கு உபயோகப்படும் குணங்களைச் சொல்லிக் கூப்பிட, 'கூராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால், வாராய்' (6.9:1) என்று இவர் ஆசைப் பட்டபடியே 'வெள்ளைச் சுரிசங்கொடு ஆழியேந்தி' (7.3:1) வந்து காட்சி அளித்தான்; அளித்த இது, மானச அநுபவ மாத்திரமேயாய்ப் புறச்சேர்க்கைக்குக் கிடையாமையாலே பிரிந்தபடியை அருளிச் செய்கின்றார். 'பாமருமூவுலகும்

10. சித்தோபாயம் : - சித்தமாக இருக்கும் உபாயம்; அதாவது, இறைவன்.

11. 'உண்ணிலாவிய' (7.1) என்னும் திருப்பதிகத்தை நோக்கி இவ்வாறு கூறினார்.

படைத்த' (7.6), 'ஏழையர் ஆவி உண்ணும்' (7.9) என்னும் திருப்பதிகங்களை நோக்கிப் பிரிந்தபடியை அருளிச் செய்தார் எனத் தெளியலாம்.[12]

எட்டாம் பத்து : மேலே கிடைத்த மானசக் காட்சி வெளியில் புறக்கண்களாலும் காண இவர் விரும்பியவாறு கிடைக்காமையால் 'உமருகந்துகந்த உருவம் நின்உருவமாகி உன்தனக் கன்பரானார், அவருகந்தமர்ந்த செய்கை உன்மாயை' (8.1:4) என்கின்றபடி அடியார்க்கு அதீனப்பட்ட சொரூபம் ஸ்திதி முதலானவைகளை யுடையவன்[13] நமக்குத் தன்னைக் காட்டி மறைக்கைக்குக் காரணம் - ஆன்மாவிலும் ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களிலும் ஏதேனும் நசை உண்டாக வேண்டும் என்று ஐயங்கொண்டு அவற்றில். நசை அற்றபடியை[14] அருளிச் செய்தார்.

ஒன்பதாம் பத்து : 'ஓராயிரமாய் உலகேழ் அளிக்கும்' (9.3) என்ற திருப்பதிகத்தின் நோக்காக 'நீர் என்றிய ஐயங்கொண்டு படுகிறீர் இப்படி?' என்று தன்னுடைய நிருபாதிக சம்பந்தத்தையும் காட்டி, 'நான் நாராயணன்; எல்லா ஆற்றல்களோடும் கூடினவன்: உம்முடைய விருப்பம் அனைத்தையும் முடிக்கின்றோம்' என்று அருளிச் செய்ய, 'சீலம் எல்லையிலான்' (9.3:11) என்று அவனுடைய சில குணங்களில் ஆழங்கால் படுகின்றார்.

பத்தாம்பத்து : ஆழ்வாருடைய ஆற்றாமையைக் கண்டு 'திருமோகூரிலே தங்கு வேட்டையாக வந்து தங்கி (தான்

12. 'ஆழியெழச்சங்கும் வில்லும் எழ' (7.4கற், பார்,) இராமனை அல்லால் மற்றும் கற்பரோ' (7.5) என்னும் திருப்பதிகங்களில் கூறப்படும் அநுபவத்தை நோக்கி இவ்வாறு கூறினார்.
13. 'மனக்கோள் நினக் கெனவடிவு வேறிலையே' (பரிபாடல் 4-55) என்ற பகுதியுடன் ஒப்பு நோக்குக.
14. 'உங்களோடு எங்களிடை இல்லை' (8.2:7) என்றதனை நோக்கி இங்ஙனம் அருளிச் செய்தார்.

தாமரைத் தடமணி வயல் திருமோகூர்' (10.1:1) என்ற திருப்பதிகத்தைத் திருவுள்ளம்பற்றி) இவர்க்கு அர்ச்சிராதி கதியையும்[15] ('வானேறு வழிப்படி' என்பர் தேசிகன்[16] காட்டிக்கொடுத்து இவர் வேண்டிக் கொண்டபடியே, என் அவாவறச் சூழ்ந்தாயே' (10.10:10) என்று இவர் திருவாயாலே அருளிச் செய்யும்படி பேற்றினை அளித்த படியை அருளிச் செய்கின்றார். 'அவா அற்று, வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன்' (10.10:11) என்றதும் காண்க.[17]

**சரமசுலோகம்:** பாரதத்தை ஐந்தாம் வேதம் எனப் புகழ்ந்து பேசுவர். இது கடல்போல் பரந்த பெருங்காப்பியம். இதில் பார்த்தன் தன் உறவினர்களும் ஆசாரியர்களும் தனக்குப் பகையாய் நிற்பதைக் கண்டு நிலைகுலைந்து போர் செய்ய மறுக்கின்றான். அப்போது தேர்த்தட்டிலிருந்து கொண்டு கண்ணன் கீதோபதேசம் செய்து பிரபத்தி வழியை வலியுறுத்துகின்றான். அதன் 18ஆம் இயலில் 66-ஆம் சுலோகம் பிரபத்தி வழியைக் கூறுவது. இதனை வைணவர் கள் அப்படியே ஏற்றுக் கொண்டு மூன்றாவது மந்திர மாக்கினர். இதுவே சரமசுலோகம்.

**சர்வதர்மாந் பரித்யஜ்ய**
**மாமேகம் சரணம் வ்ரஜ!**
**அகப்த்வ சர்வபாபேப்யோ**
**மோட்ச யிஷ்யாமி மாசுச: ||**

15. அரச்சிஸ் என்ற தெய்வத்தை முதலாக வுடைய வழி. இஃது அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டிற்குச் செல்லும் வழியாகும். இது 'சூழ்விசும்பு அணிமுகில் தூரியம் முழங்கின' (10.9.1) என்ற திருப்பதிகத்தைத் திருவுளம் பற்றிக் கூறியது.
16. தே.பி 130) 'பரமபத சோபனம்'—காண்க).
17. துவையத்தின் விளக்கத்தை 'ஆன்மிகமும் அறிவியலும்' (பாரி நிலையம் 184 பிரகாசம் சாலை, சென்னை-600108) என்ற நூலிலும் பக் 261-265 காண்க.

என்பதுவே இது. இது இரண்டு வாக்கியமாகப் பதினொரு பதமாய் முப்பத்திரண்டு எழுத்துகளாக இருக்கும். இதன் விரிவை முமுட்சுப்படி, தேசிகப் பிரபந்தம் என்ற பனுவல் களில் கண்டு தெளியலாம்.

இந்த மந்திரத்திலும் இரண்டு வாக்கியங்கள் உள்ளன. முதல் வாக்கியத்தில் சர்வதர்மாந் + பரித்யஜ்ய + மாம் + ஏகம் + சரணம் + வ்ரஜ என்ற ஆறு பதங்களும்;இரண்டாம் வாக்கியத்தில் அகம் + த்வா + சர்வபாபேப்ய + மோட்ச யிஷ்யாமி + மாசுச : என்ற ஐந்து பதங்களும் இரண்டு வாக்கியங்களிலும் முப்பத்திரண்டு எழுத்துகளும் உள்ளன.

இனி, இப்பதினொரு பதங்களின் பொருளைக் காண்போம்.

சர்வதர்மாந் : சுருதி சுமிருதி சோதிதங்களாய் யோக்கியதையை உண்டு பண்ணும் நித்திய நைமித்திகங் களோடு கூடிய கர்ம, ஞான, பக்தி, யோகங்களாகிற உபாயங்களை

பரித்யஜ்ய : முத்துச் சிப்பியில் ரஜதபுத்தி பண்ணு வாரைப் போலவும், விபரீத திசாகமநம் பண்ணுவாரைப் போலவும், அநுபாயங்களில் உபாயபுத்தி பண்ணினோம் என்கின்ற புத்தி விசேடத்தோடும், ருசி வாசனைகளோடும், நாணத்தோடும் கூடியவனாய் மீண்டும் அவற்றில் (உபாயங் களில்) தொடர்பு ஏற்படாத வண்ணம் அறவே விட்டு, நித்திய நைமித்தியங்களை மாத்திரம் கைங்கரிய ருபமாகச் செய்து கொண்டு ஸ்வபர விநாச ஹேதுவாய் ஸ்வ ருபாய புருஷார்த்தங்களுக்கு ஹாநியான நிஷித்த கிருத்தியங்களைச் செய்யாமல்

மாம் ; வாத்சல்ய, சுவாமித்துவ, சௌசீல்ய, சௌலப்பிய கணவிசிஷ்டனான என்னை,

ஏகம்—யே, நீ செய்யும் ஸ்வீகாரத்தில் உபாய பாவனை பண்ணாமல்

சரணம்—உபாயமாய்

வ்ரஜ : நம்பு; (மனத்தால் உறுதியாகப் பற்று)

அகம்—எல்லாம் அறிந்தவனாய், எல்லா ஆற்றல்களையுடையனாய், பிராப்தனான நான்

த்வா—அறியாதவனாய், சக்தியற்றவனாய், அடையமுடியாதவனாய், என்னையே உபாயமாய் நம்பியிருக்கும் உன்னை

சர்வபாபேப்ய—என்னை யடைவதற்கு இடையூறுகளான அவிச்சை, கர்மம், வாசனை, ருசி ப்ரக்ருதி சம்பந்தங்களிலிருந்து

மோட்சயிஷ்யாமி—உன் பாவங்கள் நீங்குவதற்கு நானும் யாதொரு முயற்சியும் செய்யவேண்டா. அவை அகல நீயும் முயல வேண்டா. உனக்கு என்னிடமுள்ள சம்பந்தத்தால் அவை தாமாகவே உன்னைவிட்டு விலகிப் போகும்.

மாசுச:—நீ சோகிக்க வேண்டிய அவசியமில்லை என்று சாரத்தியம் நடத்தின கண்ணன் அருளிச் செய்த சரம சுலோகத்தை அநுசந்திக்கின்றேன்.[17]

இதனை ஆழ்வார் விளக்குதலைக் காண்போம். 'நெறி காட்டி நீக்குதியோ' (பெரி.திருவந்-6) என்றதனால் 'வேறு உபாயங்களைக் காட்டி என்னை அகற்றப் பார்க்கின்றாயோ' என்பதனால் சரம சுலோகத்தில் எல்லாத் தர்மங்களையும் முற்றவும் விட்டு[18] என்கின்ற இறைவனை யொழிந்த

17. பத்து பதங்களின் பொருளை இவ்வாசிரியரின் முத்திநெறி (பாரி நிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை-600108) — பக்கங்கள் 303-367 காண்க. மற்றும் தே.பி. 315-325. கண்டுதெளிக
18. கீதை-18:66

உபாயங்களை நீக்குதலைச் சொன்னவராவர். 'வெம்கோட்டு ஏறு ஏழ் உடனே, கொன்றானை மனத்துக் கொண்டு (மேற்படி—48) என்றதனால் சரமசுலோகத்தில் ''மாமேகம் சரணம் வ்ரஜ''—''என்னையே சரணமாகப் பற்று' என்கின்ற' மனத்தால் பற்றுதலாகின்ற சரணமடைதலைத் தெரிவித்தவ ராவர். 'சிரார், மனத்தலைவன் துன்பத்தை மாற்றினேன்—வானோர், இனத்தலைவன் கண்ணனால் யான்' (மேற்படி-25) என்றும், 'எம்மிறையார் தந்த அருள் என்னும் தண்டால் அடித்து-வல்வினையைக் காணும் மலையும் புகக்கடிவான்' (மேற்படி-26) என்று வரும் திருப்பாசுரங்களால், சரம சுலோகத்தில் ''அகம் த்வா சர்வபாபேப்யோ மோட்ச இஷ்யாமி''—'நான் உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவிக்கின்றேன்' என்று உபாயமாக இருக்கின்ற கண்ண பிரான் எல்லாப் பாவங்களினின்றும் விடுவித்தலைத் தெரிவித்தவராவர். 'வானோ மறிகடலோ' (மேற்படி-54) என்று தொடங்கி 'வன்துயரை மருங்கு கண்டிலமால்' (மேற்படி-54) என்று பாவங்களானவை போன இடம் தெரியாதபடி ''நானும் வேண்டா நீயும் வேண்டா, அவை தன்னடைவே விட்டுப்போம்' என்கின்ற 'இஷ்யாமி' என்கின்ற 'ணிச்சின்'[19] பொருளைக் கூறினாராவர். 'அடர்பொன் முடியானை' (மேற்படி-70) என்று தொடங்கி 'யாதாகில்? யாதே இனி' என்று இனி, கர்மம் இருந்து என்? நசித்து என் யாதானால் நமக்கு என்வரும்?' என்றதனால் ''மாசுச :—'துக்கப்படாதே' என்ற பதத்தால் போதருகின்ற பாரம் அற்றிருத்தலைச் சொல்லுகையாலே, உபாயத்தைச் சொல்லுகின்ற பெரிய திருவந்தாதி சரமச் சுலோகத்தோடே சேரும் என்பதாயிற்று.

19. 'மோட்சஷ்யாமி' என்னும் வினைச்சொல்லில் 'இஷ்யாமி' என்ற பகுதியை 'ணிச்சு' என வட மொழியாளர் கூறுவர்.

# பின்னிணைப்பு—1

## பயன்பட்ட நூல்கள்

### (அ) தமிழ் நூல்கள்

அண்ணங்கராசாரிய சுவாமிகள் பி.ப: நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்—திவ்வியார்த்த தீபிகை (கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம்.)

அரங்கநாத முதலியார் ஆ: ஸ்ரீவைணவம் (சுவர்ணவிலாஸ், 13, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-600 005)

இளங்கோவடிகள் : சிலப்பதிகாரம் வேங்கடசாமி நாட்டார் உரை—(கழக வெளியீடு)

கிருஷ்ணவேணி அம்மையார்· எஸ். செம்பொருள் (திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருப்பதி-517 501)

கம்பர் : கம்பராமாயணம் (வை. மு. கோ உரை), திருவல்லிக்கேணி, சென்னை-600005.

சிராமதேசிகாசாரியார், வ.ந: ஸ்ரீதேசிகப் பிரபந்தம் (உரை)-(ஒப்பிலியப்பன் சந்நிதி, திருநாகேசுவரம் அஞ்சல், தஞ்சை மாவட்டம்)

சுந்தர ராமாநுச சுவாமிகள்—தத்துவத்திரயம்-விளக்க உரை (வேலூர், வைணவ சித்தாந்த மகாசங்கம், வேலூர், 1951)

சுப்புரெட்டியார், ந. முத்திநெறி (1982), பாரி நிலையம், சென்னை-600 108.

சுப்புரெட்டியார், ந. சில நோக்கில் நாலாயிரம் (1983), பாரி நிலையம்.

சுப்புரெட்டியார், ந: ஆன்மிகமும் அறிவியலும் (1985), (பாரி நிலையம், சென்னை-600 108)

சுப்புரெட்டியார், ந: மலைநாட்டுத் திருப்பதிகள் (1971) (எஸ். ஆர். சுப்பிரமணியபிள்ளை, 6, பிலிப்ஸ் தெரு, சென்னை-600 001)

சுப்புரெட்டியார், ந: பாண்டிநாட்டுத் திருப்பதிகள் (1977) (எஸ்.ஆர். சுப்பிரமணியபிள்ளை 6, பிலிப்ஸ் தெரு, சென்னை-600001)

சுப்புரெட்டியார், ந சோழநாட்டுத் திருப்பதிகள்—பகுதி 1,2 பாரி நிலையம், சென்னை-600 108)

சுப்புரெட்டியார், ந. வடநாட்டுத் திருப்பதிகள் (1980) (எஸ். ஆர். சுப்பிரமணியபிள்ளை, 6, பிலிப்ஸ் தெரு, சென்னை 600 001)

புருடோத்தம நாயுடு, பு.ரா: ஆசாரிய ஹிருதயம் மணவாள மாமுனிகள் வியாக்கியானத் தமிழாக்கம பகுதிகள் 1,2 (1965) சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை-600 005)

புருடோத்தம நாயுடு, பு ரா: ஸ்ரீவசன பூஷணம் மணவாள மாமுனிகள் வியாக்கியானத் தமிழாக்கம் (1970) (தி.கி நாராயணசாமி நாயுடு, 2,சீதாராம் நகர், கடலூர்-1)

புருடோத்தம நாயுடு, பு.ரா. திருவாய்மொழி—ஈட்டின் தமிழாக்கம்—(10 தொகுதிகள்) (சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை-600 005)

மதுரைக் கல்லூரி: அன்றும் இன்றும் (இளங்கலை யியல் அறிவியல் (1982).

வரதராசன், மு: தமிழ் இலக்கிய வரலாறு—ஐந்தாம் பதிப்பு. (1983)—சாகித்திய அகாதெமி, சென்னை-600 018)

வேங்கடசாமி ரெட்டியார், கி: நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் (பதிப்பு.) திருவேங்கடத்தான் திருமன்றம், 19-B, பெருமாள் முதலித் தெரு, இராயப்பேட்டை, சென்னை-600 014)

வேங்கடசாமி ரெட்டியார், கி: திருவிருத்தம் உரை (திருவேங்கடத்தான் திருமன்றம், சென்னை-600 014)

(ஆ) ஆங்கில நூல்கள்

Hudson, W H. An Introduction to the Study of Literature (1946)

Subbu Reddiar, N Religion and philosophy of Nalayira Divya Prabandham, with special Referance to Nammalvar (Sri Venkateswara University, Tirupati-2.) 1977.

Subbu Reddiar, N. Collected Papers (Paari Nilayam)

# பின்னிணைப்பு—2

## நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்த திவ்விய தேசங்கள்

| தலம் | பதிகம், பாசுரம் | தொகை | பக் |
|---|---|---|---|
| சிரீவரமங்கலம் (பா.நா) | 5.7 | 11 | 75 |
| சிரீவைகுண்டம் (பா.நா) | 9.5;4,8 | 2 | 62 |
| திருஅரங்கம் (சோ.நா) | திருவிருத் 1, 7.2 | 13 | 22 |
| திருஅனந்தபுரம் (ம.நா) | 10.2 | 11 | 87 |
| திருக்கடித்தானம் (ம.நா) | 8 6 | 11 | 95 |
| திருக்கண்ணபுரம் (சோ.நா) | 9.10 | 11 | 40 |
| திருக்காட்கரை (ம.நா) | 9.6 | 11 | 109 |
| திருக்குடந்தை (சோழ.நா) | 5.8;8.2:6;10.9:7 | 11 | 28 |
| திருக்குருகூர் (பா.நா) | 4.10 | 11 | 1,52 |
| திருக்குளந்தை (பா.நா) | 8.2:4 | 1 | 65 |
| திருக்குறுங்குடி (பா.நா) | 1.10 9; 3.9:2; 5.5. | 13 | 2,77 |
| திருக்கோளூர் (பா.நா) | 6.7. | 11 | 56 |
| திருச்செங்குன்றூர் (ம.நா) | 8.4. | 11 | 93 |

| | | | |
|---|---|---|---|
| திருநாடு | திருவிருத். 75<br>பெரி.திருவந் 18 (1)<br>3.10:5; 4.4:1; 5.3:9,<br>6 9:5; 8.2:8; 9.8:7;<br>10.7:3 | 9 | 149 |
| திருநாவாய் (ம.நா) | 9.8 | 11 | 116 |
| திருப்பாற்கடல் (வ நா) | திருவிருத் 79<br>பெரி.திருவந். 34, 77<br>2.5:7; 2 6:5; 2.7 (13);<br>3.6:3; 3.7.1; 4 3:3; 5.3:7;<br>6 9:5; 8.1:8; 8.2:8; 8.5:4;<br>8.7:10; 10.7:8; 10.9:1<br>to 7 | 35 | 142 |
| திருப்புலியூர் (ம.நா) | 8.9 | 11 | 105 |
| திருப்புளிங்குடி (பா.நா) | 8.3:5; 9.2 | 12 | 17 |
| திருப்பேர் நகர் (சோ.நா) | 10 8 | 11 | 34 |
| திருப்பேரெயில் (பா.நா) | 7.3 | 11 | 59 |
| திருமாலிருஞ்சோலை (பா.நா) | 2.10; 3.2;<br>10.7 10.8:1, 6 | 35 | 49 |
| திருமூழிக்களம் (ம.நா) | 9.7 | 11 | 113 |
| திருமோகூர் (பா.நா) | 10.1 | 11 | 47 |
| திருவண்பரிசாரம் (ம.நா) | 8.3:7 | 1 | 82 |
| திருவண்வண்டூர் (ம.நா) | 6.1 | 11 | 101 |
| திருவல்லவாழ் (ம.நா) | 5.9 | 11 | 98 |

| | | | |
|---|---|---|---|
| திருவாட்டாறு (ம.நா) | 10.6 | 11 | 85 |
| திருவாறன்விளை (ம நா) | 7.10 | 11 | 90 |
| திருவிண்ணகர் (சோ.நா) | 6.4 | 11 | 31 |
| திருவெஃகா (தொ.நா) | திருவிருத்-26 | 1 | 127 |
| திருவேங்கடம் (வ.நா) | திருவிருத். 8, 15, 31, 50. 60, 67. 81 பெரி திருவந் 68 1.8:3; 2.6; 9,10; 2.7:11; 3.3:1; 3 5:8; 4. :11; 6.6:11; 6.9:5; 6.10; 8.2:1; 9.3:8; 10.5:6; 10.7:8 | | |
| துவரை | | 35 | 120 |
| (வ.நா) | 5.3:6 | 1 | 134 |
| தொலைவில்லி மங்கலம் (பா.நா) | 6.5 | 11 | 72 |
| வடமதுரை (வ.நா) | 7.10:1; 8.5:9; 9.1:3–11 (9) | 11 | 137 |
| வரகுணமங்கை (பா.நா) | 9.2:4 | 1 | 65 |

| நாடு | திருப்பதிகள் | பாசுரங்கள் |
|---|---|---|
| சோழநாடு | 5 | 59 |
| பாண்டிநாடு | 12 | 130 |
| மலைநாடு | 12 | 122 |
| தொண்டைநாடு | 1 | 1 |
| வடநாடு | 3 | 47 |
| திருப்பாற்கடல் | 1 | 35 |
| திருநாடு | 1 | 9 |
| மொத்தம் | 35 | 403 |

# பின்னிணைப்பு—3

## 108 வைணவத் திருத்தலங்கள்

ஈரிருப தாம்சோழம்; ஈரொன்ப தாம்பாண்டி;
ஓர்பதின்மூன் றாம்மலைநாடு: ஓரிரண்டாம்—சீர்நடுநாடு
ஆறோர்(டு) ஈரெட்டுத்தொண்டை அவ்வடநாடு
ஆறிரண்டு
கூறுதிரு நாடாகக் கொள்[1]

—பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்

## சோழநாட்டுத் திருப்பதிகள்-40

கடல்கிழக்குத் தெற்குக் கரைபொறு வெள்ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம்—வடதிசையில்
ஏணாட்டுப் பெண்ணை இருபத்து நாற்காதம்
சோணாட்டுக் கெல்லை எனச் சொல்[2]

1. திருவரங்கம்
2. திருவுறையூர்
3. திருத்தஞ்சை
4. திருவன்பில்
5. திருக்கரம்பனூர்
6. திருவெள்ளறை
7. திருப்புள்ளம் பூதங்குடி
8. திருப்பேர்நகர்
9. திருஆதனூர்
10. திருவழுந்தூர்
11. திருச்சிறுபுலியூர்
12. திருச்சேறை
13. திருத்தலைச் சங்க நாண்மதியம்
14. திருக்குடந்தை
15. திருக்கண்டியூர்
16. திருவிண்ணகர்
17. திருக்கண்ணபுரம்
18. திருவாலி
19. திருநாகை
20. திருநறையூர்
21. திருநந்திபுர விண்ணகரம்
22. திருவிந்தளூர்
23. திருச்சித்திரகூடம்
24. திருக்காழிச் சீராம விண்ணகரம்
25. திருக்கூடலூர்
26. திருக்கண்ணமங்கை
27. திருக்கண்ணங்குடி
28. திருக்கவித்தலம்

1. நூற். திருப். அந்.6.
2. ஒரு பழம் பாடல்.

29. திருவெள்ளியங்குடி
30. திருமணிமாடக் கோயில்
31. திருவைகுந்த விண்ணகரம்
32. திருஅரிமேய விண்ணகரம்
33. திருத்தேவனார்தொகை
34. திருவண் புருடோத்தமம்
35. திருசெம்பொன் செங்கோயில்
36. திருத்தெற்றியம்பலம்
37. திருமணிக்கூடம்
38. திருக்காவளம்பாடி
39. திருவெள்ளக்குளம்
40. திருபார்த்தன் பள்ளி

## பாண்டிநாட்டுத் திருப்பதிகள் - 18

வெள்ளா றதுவடக்காம் மேற்குப் பெருவெளியாம்
தெள்ளார் புனற்கன்னி தெற்காகும் — உள்ளாரா
வாண்ட வடகிழக்காம் ஐம்பத் தறுகாதம்
பாண்டிநாட் டெல்லைப் பதி.[3]

1. திருமாலிருஞ்சோலை மலை
2. திருக்கோட்டியூர்
3. திருமெய்யம்
4. திருபுல்லாணி
5. திருதண்காலூர்
6. திருமோகூர்
7. திருகூடல்
8. ஸ்ரீவில்லிபுத்தூர்
9. திருக்குருகூர்
10. திருதொலைவில்லி மங்கலம்
11. ஸ்ரீவரமங்கை
12. திருதென்திருப்பேரை
13. ஸ்ரீவைகுண்டம்
14. திருபுளியங்குடி
15. திருவரகுணமங்கை
16. திருகுளந்தை
17. திருகுறுங்குடி
18. திருகோளூர்

## மலைநாட்டுத் திருப்பதிகள் - 13

வடக்குத் திசைப்பழநி வான்கீழ் தென்காசி
குடக்குத் திசைக்கோழிக் கூடாம் — கடற்கரையின்
ஓரமோ தெற்காகும் உள்ளெண் பதின்காதம்
சேரநாட் டெல்லையெனச் செப்பு[4]

1. திருவனந்தபுரம்
2. திருவண்பரிசாரம்
3. திருகாட்கரை
4. திருமூழிக்களம்

3. ஒரு பழம் பாடல்
4. ஒரு பழம் பாடல்

5. குட்டநாட்டுத் திருப்புலியூர்
6. திருச்செங்குன்றூர்
7. திருநாவாய
8. திருவல்லவாழ்
9. திருவண்வண்டூர்
10. திருவாட்டாறு
11. திருவித்துவக்கோடு
12. திருகடித்தானம்
13. திருவாறன்விளை

## நடுநாட்டுத் திருப்பதிகள்-2

1. திருவயிந்திபுரம்
2. திருகோவலூர்

## தொண்டைநாட்டுத் திருப்பதிகள்-22

மேற்குப் பவளமலை வேங்கடம் கேர்வடக்காம்
ஆர்க்கும் உவரி அணிகிழக்குப்—பார்க்குளுயர்
தெற்குப் பினாகி திகழிரு பதின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு

1. திருக்கச்சி (அத்திகிரி)
2. திருஅட்டபுயகரம்
3. திருதண்கா
4. திருவேளுக்கை
5. திருபாடகம்
6. திருநீரகம்
7. திருநிலாத்துண்டம்
8. திருவூரகம்
9. திருவெஃகா
10. திருகாரகம்
11. திருகார்வானம்
12. திருகள்வனூர்
13. திருபவளவண்ணம்
14. திருபரமேச்சுர விண்ணகரம்
15. திருபுட்குழி
16. திருநின்றவூர்
17. திருஎவ்வுளூர்
18. திருநீர்மலை
19. திருஇடஎந்தை
20. திருக்கடல்மல்லை
21. திருஅல்லிக்கேணி
22. திருகடிகை

## வடநாட்டுத் திருப்பதிகள்-12

1. திருவேங்கடம்
2. திருசிங்கவேழ்குன்றம்
3. திருஅயோத்தி
4. திருநைமிசாரணியம்
5. திருசாளக்கிராமம்
6. திருவதரியாச்சிரமம்
7. திருகங்கைக்கரைக் கண்டம்
8. திருப்பிரிதி
9. திருவடமதுரை
10. திருதுவாரகை
11. திருவாய்ப்பாடி
12. திருப்பாற்கடல்

## திருநாட்டுத் திருப்பதி - 1

1. *திருநாடு : இதுவே வைகுந்தம். திருமாலின் ஐவகை நிலைகளுள் பரத்துவம் விளங்கும் தானம்.*

**மண்ணில் அரங்கமுதல் வைகுந்த நாடளவும்**
**எண்ணும் திருப்பதிநூற் றெட்டினையும் – நண்ணுவார்**
**கற்பார் துதிப்பார் கருதுவார் கேட்டிருப்பார்**
**பொற்பாதம் என்தலைமேல் பூ**

**- பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்**

*குறிப்பு : இந்த நூற்றெட்டுத் திருப்பதிகளைப் பேராசிரியர் டாக்டர் ரெட்டியார் குடும்பத்துடன் சேவித்து மலைநாட்டுத் திருப்பதிகள், தொண்டைநாட்டுத் திருப்பதிகள், பாண்டிநாட்டுத் திருப்பதிகள், வடநாட்டுத் திருப்பதிகள், சோழநாட்டுத் திருப்பதிகள்—பகுதி 1, சோழநாட்டுத் திருப்பதிகள்—பகுதி 2 என்ற ஆறு நூல்களை வெளியிட்டுள்ளார். இவற்றில் திருப்பதிகட்குச் செல்லும் வழி, திருப்பதிகளில் தங்கும் வசதிகள், ஆழ்வார் பாசுரங்களின் அநுபவம் முதலியவை விளக்கப் பெற்றுள்ளன. திருத்தலப் பயணிகட்கும் ஆழ்வார் பாசுரங்களை அநுபவிக்க விரும்புபவர்கட்கும் பயன்படும் நூல்கள் இவை. இவை பாரிநிலையம், (184, பிரகாசம் சாலை, சென்னை-600108) என்ற இடத்தில் கிடைக்கும்.*

## பேராசிரியர்
## டாக்டர் ந. சுப்பு ரெட்டியாரின் நூல்கள்

**ஆசிரியம்**

1. தமிழ் பயிற்றும் முறை
2. கவிதை பயிற்றும் முறை
3. அறிவியல் பயிற்றும் முறை
4. கல்வி உளவியல் கோட்பாடுகள்
5. யுனஸ்கோ : அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்

**இலக்கியம் :**

6. கவிஞன் உள்ளம்
7. காலமும் கவிஞர்களும்
8. காதல் ஓவியங்கள்
9. அறிவுக்கு விருந்து
10. முத்தொள்ளாயிர விளக்கம் (பதிப்பு)
11. பரணிப் பொழிவுகள்
12. அறிவியல் தமிழ்
13. திருக்குறள் கருத்தரங்கு மலர்1974 பதிப்பு
14. கம்பனில் மக்கள் குரல்
15. காந்தியடிகள் நெஞ்சுவிடு தூது (பதிப்பு)
16. திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்
17. தமிழ் இலக்கியங்களில் (அறம்-நீதி-முறைமை)

**சமயம், தத்துவம் :**

**(அ) விளக்க நூல்கள் :**

18. முத்திநெறி (தமிழக அரசு பரிசு பெற்றது)
19. சிலநோக்கில் நாலாயிரம்
20. வைணவமும் தமிழும்
21. சைவசமய விளக்கு
22. ஆன்மிகமும் அறிவியலும்
23. வைணவ உரைவளம் (ஐதிகம், இதிகாசம், சம்வாதம்)
24. கவியன் குரல்
25. கீதைக் குறள் (பதிப்பு)
26. கண்ணன் எழில் காட்டும் கவிதைப் பொழில் (பதிப்பு)
27. ஆண்டாள் பாவையும் அழகு தமிழும் (பதிப்பு)
28. கீதைப் பொழிவுகள் (பதிப்பு)
29. கண்ணன் துதி (பதிப்பு)
30. இராமர் தோத்திரம் (பதிப்பு)

**(ஆ) திருத்தலப் பயண நூல்கள் :**

31. மலைநாட்டுத் திருப்பதிகள்
32. தொண்டைநாட்டுத் திருப்பதிகள்
33. பாண்டிநாட்டுத் திருப்பதிகள்
34. வடநாட்டுத் திருப்பதிகள்
35. சோழநாட்டுத் திருப்பதிகள்-முதற்பகுதி (த.அ.ப. பெற்றது)
36. சோழநாட்டுத்திருப்பதிகள்-இரண்டாம்பகுதி(ஷை)
37. தம்பிரான் தோழர்
38. நாவுக்கரசர்
39. ஞானசம்பந்தர்
40. மாணிக்கவாசகர்

திறனாய்வு :

41. பாட்டுத் திறன்
42. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை
43. கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்
44. அகத்திணைக் கொள்கைகள்
45. புதுக்கவிதை-போக்கும் நோக்கும்
46. கண்ணன் பாட்டுத் திறன்
47. பாஞ்சாலி சபதம்-ஒரு நோக்கு
48. பாரதியம் (த.அ.ப. பெற்றது)
49. குயில்பாட்டு-ஒரு மதிப்பீடு
50. உயிர் தந்த உத்தமன் (பதிப்பு)
51. ஆழ்வார்கள் ஆரா அமுது
52. விட்டு சித்தன் விரித்த தமிழ்
53. சடகோபர் செந்தமிழ்
54. பரகாலன் பசுந்தமிழ்

வரலாறு, தன் வரலாறு :

55. நினைவுக் குமிழிகள்-முதற் பகுதி
56. நினைவுக் குமிழிகள்-இரண்டாம் பகுதி
57. நினைவுக் குமிழிகள்-மூன்றாம் பகுதி
58. நினைவுக் குமிழிகள்-நான்காம் பகுதி
59. நினைவுக் குமிழிகள்-ஐந்தாம் பகுதி
60. வேமனர்
61. குரஜாட
62. மேகானி
63. சி.ஆர். ரெட்டி
64. தாயுமான அடிகள்
65. பட்டினத்தடிகள்
66. வடலூர் வள்ளல்
67. பிரதிவாதி பயங்கரம்
68. மலரும் நினைவுகள்

**அறிவியல் :**

69. மானிட உடல்
70. அணுவின் ஆக்கம்
71. இளைஞர் வானொலி
72. இளைஞர் தொலைக்காட்சி
73. அதிசய மின்னணு
74. தமது உடல் (த. அ. ப. பெற்றது)
75. இராக்கெட்டுகள் (த. அ. ப. பெற்றது)
76. அம்புலிப் பயணம்
77. தொலை உலகச் செலவு
78. அணுக்கரு பௌதிகம் (செ. பல்கலைக் கழகப் பரிசு பெற்றது)
79. இல்லற நெறி
80. வாழையடி வாழை
81. அறிவியல் விருந்து (தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு பெற்றது)
82. வானமண்டலக் காட்சி

**ஆராய்ச்சி :**

83. கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி
84. வடவேங்கடமும் திருவேங்கடமும்
85. Religion and Philosophy of Nalayiram with Special Reference to Nammalvar
86. Studies in Arts and Sciences : (61st Birth Day Commemoration Volume)
87. Collected Papers.

# பிழை—திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 9 | 17 | மதுரைகவி | மதுரகவி |
| 10 | 23 | அதியச | அதிசய |
| 12 | 13 | சிலிர்ப்பு | சிலிர்ப்ப |
| 18 | 8 | அவனையே | அவளையே |
| 25 | 25 | பூதையான் | பூதையான |
| 31 | 11-12 | பெறுகின்றன | பெறுகின்றது |
| 40 | 2 | கப்பக்குடத்தான் | அப்பக்குடத்தான் |
| 44 | 1 | கணிகித்து | கணிசித்து |
| 49 | 22 | கட்டுரை-85 | கட்டுரை-15 |
| 92 | 10 | பாங்காயிருப்ப தொடு | பாங்காயிருப்ப தொரு |
| 116 | அ.கு.1 | திருநாவாய | திருநாவாய் |
| 139 | 11 | காச; | காசு |
| 188 | 26 | ஒமுங்குமுறை | ஒழுங்கு முறை |
| 205 | 12 | குமுறாம் | குமுறும் |
| 217 | 14 | இடையூடின்றிப் | இடையீடின்றிப் |
| 240 | 11 | இம்ந்தாள் | இழந்தாள் |
| 247 | 27 | (          ) | (பெரு.திரு. 2 : 3) |
| 259 | 30 | கூட்டிவைப்பர் | கூட்டிவைப்பர்; |
| 274 | 16 | எகுத்துக் | எடுத்துக் |
| 281 | 15 | கண்ணபிரன் | கண்ணபிரான் |
| 283 | 8 | பிராப்பிய திற்குத் | பிராப்பியத் திற்குத் |
| 287 | 6 | பெரியா முதலியார் | பெரிய முதலியார் |
| 300 | 8 | ஒத்துச் | ஓத்துச் |
| 301 | அ.கு.1 | மகாராஜா | மகாராஜர் |
| 371 | அ.கு. 11 | தளச்ர்சியின்றி | தளர்ச்சியின்றி |
| 379 | அ.கு. 1 | கிங்கான் | கிங்கரன் |
| 390 | அ.கு.1 | அரச்கிஸ் | அர்ச்கிஸ் |
| | அ.கு.6 | சோபனம் | சோபானம் |

## இந்நூலாசிரியரைப் பற்றி....



பிறப்பு : 27-8-1916

73-அகவையைக் கடக்கும் இந்த நூலாசிரியர் பி.எஸ். சி., எல்.டி., வித்துவான், பி. ஏ., எம்.ஏ., பிஎச்.டி., பட்டங்கள் பெற்றவர். ஒன்பதாண்டுகள் துறையூர் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியராகவும், (1941-1950)-பத்து ஆண்டுகள் காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ் பேராசிரியராகவும் (1950-60), பதினேழு ஆண்டுகள் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராகவும், பேராசிரியராகவும் (1960—77) பணியாற்றி ஓய்வு பெற்றவர். 1978 - இல் சென்னையில் குடியேறி பதினைந்து மாதங்கள் (1978-பிப்ரவரி - 1979 - ஜுன்) கலைக் களஞ்சியத் தலைமைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றியவர். நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தில் நம்மாழ்வார் தத்துவத்தை ஆராய்ந்து டாக்டர் (பி.எச்.டி) பட்டம் பெற்றவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் பல ஆய்வுக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டவர். பெரும்பாலும் இவை நூல்வடிவம் பெற்றன; பெற்றும் வருகின்றன. தவிர ஆசிரியம் (5), இலக்கியம் (12), சமயம் (25), திறனாய்வு (12), அறிவியல் (14), ஆராய்ச்சி (5), வாழ்க்கை வரலாறு (14)-என்று 87 நூல்களின் ஆசிரியர். இவர்தம் அறிவியல் நூல்களில் இரண்டும், சமய நூல்களில் மூன்றும், திறனாய்வு நூல்களில் ஒன்றும் தமிழக அரசு பரிசுகளும்; அறிவியல் நூல்களில் ஒன்று சென்னைப் பல்கலைக் கழகப் பரிசும், ஒன்று தமிழ் வளர்ச்சிக்கழகப் பரிசும் - ஆக எட்டு நூல்கள் பரிசுகள் பெற்றவை. இவர்தம் அறிவியல் பணியைப் பாராட்டி குன்றக்குடி திருவண்ணாமலை ஆதினம் 'அருங்கலைக்கோன்' என்ற விருதையும் பண்ணுருட்டி வைணவ சபை இவரது சமயப் பணியைப் பாராட்டி 'ஸ்ரீசடகோபன் பொன்னடி' என்ற விருதையும், தமிழக அரசு திரு. வி. க. விருதையும் வழங்கிச் சிறப்பித்தன. இனிமை, எளிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச் சிறப்புகளாகும்.

MK Color Process, Madras-14 Phone : 848311
Design by P. N. Anandan